# பதிப்புரை

உலக மக்களில் ஆறில் ஒரு பகுதியினரின் தலை விதியை நிர்ணயிக்கும் லட்சியமாகத் திகழ்கின்றன, லெனினின் வார்த்தைகள்.

"லெனின் எங்கள் குரு. சோவியத் மக்களாகிய நாங்கள் அவரது சிஷ்யர்கள்" என்றார் ஸ்டாலின். ரஷ்யப் புரட்சியின் தந்தையான லெனின் வாழ்க்கையை அவரோடு பழகி அவரது அரசியல் போராட்டங்களில் பங்கு கொண்டவரான டேவிட் ஷூப் என்பவர் எழுதி யுள்ள நூலின் தமிழாக்கமே இந்த நூல்.

ஸ்ரீ. டேவிட் ஷூப் ரஷ்யாவில் பிறந்தவர். 1903-ல் லெனின் தலைமை தாங்கிய சமூக ஜனநாயக கட்சியின் அங்கத்தினராக இருந்தவர். புரட்சியில் பங்கு கொண் டதற்காக 1906-ல் கைது செய்யப்பட்டு ஸைபீரியா வுக்கு நாடு கடத்தப்பட்டவர். லெனின், டிராட்ஸ்கி, புகாரின் போன்ற புரட்சி தலைவர்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தவர்.

லெனின் வாழ்க்கையை புதிய கோணத்திலிருந்து எழுதியுள்ளார்.

லெனின் ஆரம்பகால வாழ்க்கையில் ஆரம்பித்து, ரஷ்ய புரட்சியுடன் பின்னிக்கிடந்த அவரது வாழ்க்கை யையும் அவரது லட்சியங்களையும் விளக்குகிறது இந்த நூல்.

லெனினைப்பற்றிய சிறந்த நூல் என்று பல நாட்டு அறிஞர்களால் போற்றப்படும். இதை தமிழ் மக்கள் முன் சமர்ப்பிக்கிறோம்.

பதிப்பாசிரியர்.

# முன்னுரை

## கசப்பான அனுபவம்

**வி**ளாடிமீர் உலியானேவ் பயந்துபோய், மேல்மூச்சு வாங்கப் பள்ளிக்கூடத்திலிருந்து ஓடிவந்தான்.

"என்னடா, இப்படி ஓடிவருகிருய் ?" என்று பரபரப்புடன் கேட்டாள் அவன் தாய்.

"நம்ம அலெக்ஸாண்டர் இல்லே, அவனைக் கைது செய்துவிட்டார்கள்" என்ருன் சிறுவன் மூச்சுத் திணற.

"மேரியா அலெக்ஸாண்ட்ரோவ்னு தள்ளாடினுள்; கீழே விழாமல் மேசையைப் பிடித்துக் கொண்டாள். "அலெக்ஸாண்டரைக் கைது செய்துவிட்டார்களா ? எதற்காக ?" என்று கேட்டாள் ஆச்சரியத்துடன்.

"மன்னரைக் கொல்லச் சதி செய்தானும் ! அப்படிக் குற்றம் சாட்டியிருக்கிருர்கள்."

"உனக்கு யார் சொன்னுர்கள் ?"

"காஷ்காடமோவா சொன்னுள். என்னை வகுப்பை விட்டு வெளியேறிவிடச் சொன்னுள்; பீட்டர்ஸ்பர்க்கில் உள்ள அவள் தங்கையின் நண்பரிடமிருந்து வந்த கடிதத்தைக் கூட எனக்குக் காட்டினுள்."

அடுத்த ரயிலில் தலைநகருக்குப் புறப்பட மேரியா அலெக்ஸாண்ட்ரோவ்னு தயாரானுள். ஆனுல் தான் தனியாகப் பிரயாணம் செய்யவேண்டியிருக்குமென்று அவள் நினைக்கவில்லை.

ஸிம்பிர்ஸ்கில் உலியனேவ் குடும்பம் மிகவும் கௌரவமானது. அவள் கணவன் இலியா நிகொலாயேவிச் ஒரு வருஷத்திற்கு முன்புதான் இறந்தார், அவர் சர்க்காரின் முக்கிய

ஆலோசகராக இருந்தவர். பென்ஸாவிலும் நிஷ்னி நோவ் கராடிலும் கணித ஆசிரியராகவும் பௌதிக சாஸ்திர ஆசிரிய ராகவும் இருந்திருக்கிருர். விளாடிமீர் பிறப்பதற்குச் சில மாதங்களுக்கு முன்புதான் அவர் அந்த மாகாணம் முழுவ தற்கும் பள்ளிக்கூட இன்ஸ்பெக்டராக நியமிக்கப்பட்டார். ஆனுல் இப்பொழுது மேரியா அலெக்ஸாண்ட்ரோவ்ன கண்ட பலன் ஏமாற்றம்தான், அரசியல் கைதியின் தாயுடன் யாரும் தொடர்புகொள்ளமாட்டார்கள். ஆகையால் அவள் தன்னந் தனியாகத்தான் தலைநகருக்குச் செல்லவேண்டி இருந்தது.

மந்தமான அந்த நெடும் பிரயாணத்தில் தேசத் துரோகக் குற்றம்சாட்டப்பட்டிருந்த தன் மகனைப்பற்றிச் சிந் தித்துக்கொண்டே போனுள் அவள். அலெக்ஸாண்டருக்கு வயது இருபத்தொன்று. அவளுடைய ஆறு குழந்தைகளில் மூத்தவன் அவன். விளாடிமீர் அவனைத் தன் தெய்வமாகவே பாவித்தான். வெளிப்பார்வைக்கு மென்மையான சுபாவம் படைத்தவனுகத்தான் தோன்றினுன் அலெக்ஸாண்டர்; ஆனுல் கொள்கைகளைப் பொறுத்தவரையில் அவன் பிடிவா தக்காரன் என்பது தாய்க்குத் தெரியும். மிகவும் நிதானமாக வும் ஜாக்கிரதையாகவும் அவன் நடந்துகொள்வான். புரட்சி இயக்கத்தில் சேர்வதற்கு முன்முல் தன்னைத்தானே நிச்சயப் படுத்திக்கொள்ள விரும்பினுன். "வைத்தியத்தைப்பற்றியே ஒன்றும் அறியாதவன், நோயாளிக்குச் சிகிச்சை செய்ய முற்படுவது கேலிக்கூத்து மட்டுமல்ல அயோக்கியத்தனமும் கூட. அப்படியிருக்க சமூக நோய்களின் காரணத்தைப் புரிந்துகொள்ளாமல் அவற்றைக் குணப்படுத்தக் கிளம்புவது எவ்வளவு பெரிய அபத்தம், அயோக்கியத்தனம்?" என்று ஒரு வருஷத்திற்கு முன்புதான் அவன் சொன்னுன்.

அப்பொழுது அலெக்ஸாண்டரின் கவனத்தைக் கவர்ந் திருந்தது பிராணி சாஸ்திரம்தான். இது சம்பந்தமாக

அவன் ஒரு பரிசுக் கட்டுரை எழுதியிருந்தான். இயற்கை சாஸ்திரத்தில் அவன் இவ்வளவு அக்கறை காட்டியதைக் கண்டு விளாடிமீர்கூட ஏமாந்து விட்டான். "அலெக்ஸாண்டர் புரட்சிக்காரனுக இருக்கவே முடியாது; சென்ற கோடையில் தன் நேரம் முழுவதையும் மண் புழுக்கள்பற்றி ஆராய்வதிலேயே கழித்தான்; புரட்சிக்காரன் மண்புழுக்களை பற்றி ஆராய்வதில் இவ்வளவு காலத்தைச் செலவிட முடியாது" என்று அவன் தன் நண்பர்களிடம் சொல்லிக் கொண்டிருந்தான்.

ஆனுல் சில மாதங்களுக்குள் அந்த "விஞ்ஞானி" வெடி குண்டுகள் தயாரிக்கத் தொடங்கிவிட்டான். "மக்கள் விருப்பம்" என்ற புரட்சிக் கட்சியில் அவன் அங்கத்தினன். செயிண்ட் பீட்டர்ஸ்பர்க்கில் பயங்கரவாத மாணவர்களின் கோஷ்டி ஒன்றுக்குத் தலைவன். அவன் அறையில் நடந்த ரகசியக்கூட்டங்களில், மூன்ருவது அலெக்ஸாண்டர் ஜார் மன்னனை 1887-ம் வருஷம் மார்ச் மாதம் முதல் தேதியன்று கொலை செய்ய ரகசிய திட்டம் வகுத்தனர். மூன்ருவது அலெக்ஸாண்டரின் தந்தையாகிய இரண்டாவது அலெக்ஸாண்டர் கொலையுண்டது ஆறு வருஷங்களுக்கு முன் இதே தினத்தில்தான்.

மன்னர் இறந்தவுடனே வெளியிடுவதற்காக ஒரு பிரகடனத்தையும் உலியானேவ் தயாரித்திருந்தான். "ரஷியா தேசத்தில் ஜீவன் ததும்புகிறது. அதன் மக்களின் உள்ளங்களில் சத்தியம் அழிந்துவிடவில்லை, 1887-ம் வருஷம்——ம் தேதி மூன்ருவது அலெக்ஸாண்டர் ஜார் மன்னன் கொல்லப்பட்டான்—" என்று அந்தப் பிரகடனம் ஆரம்பமாகிறது.

ஆனுல் மன்னர் தம் கோடை கால மாளிகைக்குப் போக திட்டமிடுவதாகத்தெரிந்தபின் அவரைக்கொலைசெய்ய நிர்ணயித்த தேதியையும் மாற்றினர். ஸெயிண்ட் இஸாக்ஸ்

கோயிலுக்கு அருகே கொலைகாரர்கள் மன்னருக்காகக் காத்திருந்தனர். ஆனால் மன்னர் வரவில்லை. சதிகாரர்கள் மாலையில் இருட்டிய பின் தங்கள் தலைமைக் காரியாலயத்திற்குத் திரும்பினர். பிப்ரவரி 28-ம் தேதியன்று மன்னர் நெவ்ஸ்கி சாலை வழியே செல்லப்போவதாக உலியானேவுக்குத் தகவல் கிடைத்தது. மறுபடியும் பயங்கரவாதிகள் தயாராக இருந்தனர். ஆனால் மன்னரின் வண்டி வரவில்லை. அரசனைக் கொல்லச் சதி நடப்பதாகச் சந்தேகித்த ரகசியப் போலீசார் குளிர்கால மாளிகையிலேயே தங்கியிருக்குமாறு மன்னருக்கு யோசனை கூறினர். சில மணி நேரத்திற்குப் பின் பயங்கரவாதிகள் ஒரு சிற்றுண்டிச் சாலையில் கூடினர். அவர்களில் ஒருவனாகிய ஆண்ட்ரியூஷ்கின்னை ரகசியப்போலீஸார் சில தினங்களாகவே கண்காணித்து வந்தனர். அவர்கள் அவனைத் தொடர்ந்து சென்று அந்தச் சிற்றுண்டிசாலையில் அவனையும் அவன் சகாக்களையும் பிடித்துவிட்டனர்.

உலியானேவும் அவன் சகா லுகாஷேவிச்சும் நாள் முழுதும் தங்கள் சகாக்களுக்காகக் காத்திருந்து விட்டுக் காரியாலயத்திற்குத் திரும்பினர். அங்கு போலீசார் அவர்களுக்காகக் காத்திருந்தனர். உலியானேவிடமிருந்து ஒரு சங்கேதமொழிப்புத்தகத்தையும், பயங்கரவாதிகள் பலரின் விலாசங்களையும் போலீசார் கைப்பற்றினர்.

அடுத்த சில தினங்களுக்குள் நூற்றுக்கணக்கானவர்கள் கைதியாயினர். பயங்கரவாதிகளில் ஒருவனைப் போலீஸார் சித்திரவதை செய்து சங்கேத பாஷையின் பொருளை அறிந்துகொண்டுவிட்டனர். அலெக்ஸாண்டர் உலியானேவ் உட்படப் பதினைந்து பேரை அவர்கள் பொறுக்கியெடுத்து விசாரணைக்குக் கொண்டுவந்தனர். மன்னரைக் கொலை செய்யச் சதிசெய்ததாக அவர்கள்மீது குற்றச்சாட்டு.

மகன் கைதாகி ஏழு தினங்களுக்குப் பின் மேரியா அலெக்ஸாண்ட்ரோவ்னு ஸெயிண்ட் பீட்டர்ஸ்பர்க் போய்ச்

சேர்ந்தாள். தன் மகனைச் சந்திக்க அவள் வாரக்கணக்கில் முயன்றுப்பார்த்தாள். ஆனால் முடியவில்லை. கடைசியில் நம்பிக்கை இழந்து மன்னருக்கே ஒரு கடிதம் எழுதினாள். அதன் ஓரத்தில் மன்னர் ஒரு குறிப்பு எழுதினார், "மகனை இவள் சந்திப்பது நல்லதென்றே தோன்றுகிறது. தன் தவப் புதல்வனின் லக்ஷணத்தை அவளே பார்க்கட்டுமே!" என்று எழுதியிருந்தார்.

அலெக்ஸாண்டர் தன் தாயைக் கண்டபோது அவளை அணைத்துக்கொண்டு அழுதான். தன்னை மன்னித்துவிடுமாறு மன்றாடினான், ஆனால் தன் முதல் விசுவாஸம் புரட்சி இயக்கத்தில்தான் என்பதையும் கூறிவிட்டான். நாட்டின் விடுதலைக்காகப் போராடுவதைத் தவிர தனக்கு வேறு வழியில்லை என்றான்.

"ஆனால் நீ இந்த விடுதலையை அடைய முயற்சிக்கும் வழி இவ்வளவு பயங்கரமாக இருக்கிறதே!" என்றாள் அன்னை.

"வேறு வழி இல்லை அம்மா" என்று பதிலளித்தான் அலெக்ஸாண்டர்.

பூர்வாங்க விசாரணையில் உலியானேவ் பேசவே மறுத்துவிட்டான். ஆனால் தன் சகாக்களில் பெரும்பாலோரின் உயிருக்கு ஆபத்து நேர்ந்திருக்கிறது என்பதை அறிந்ததும், முக்கிய பொறுப்பைத் தன்மீதே ஏற்றுக்கொள்ளத் தீர்மானித்தான்.

அலெக்ஸாண்டர் தனக்குத்தானே வக்கீலாகி வாதித்தான். அது ஒரு விசித்திரமான வாதம், தன் நண்பர்களின் உயிரைக் காப்பாற்றுவதற்காக, செய்யாத குற்றங்களையெல்லாம்தான் செய்ததாக ஒப்புக்கொண்டான்,

தன் வாதத்தின் கடைசியில் அவன் சொன்னான்: துன்பப்படும் ரஷிய மக்கள் விடுதலை பெற உதவுவதே என்

லக்ஷியம். நாட்டில் பேச்சுச் சுதந்திரமில்லை. மக்களின் க்ஷேமத்திற்காகவும் அறிவு வளர்ச்சிக்காகவும் சட்ட பூர்வமாகப் பாடுபட வழி இல்லை. ஆகவே இந்தக் கொடுங்கோல் ஆட்சியில் கடைசியாகக் கையாளக்கூடிய கருவி பயங்கர வாதம் ஒன்றுதான், அநீதியைச் சகியாத ஒருவன் பயங்கரச் செயல்களில்தான் இறங்கவேண்டியிருக்கிறது. சர்க்காரின் பலாத்காரத்திற்கு நாம் கொடுக்கும் பதில் பயங்கரச் செயல்கள்தான். ஏதேச்சாதிகார ஆட்சியை மக்களுக்கு அரசியல் உரிமை அளிக்கும்படிச் செய்ய இது ஒன்றே வழி'' என்று கர்ஜித்தான் உலியானேவ்.

தன்னைப்பற்றியும் தன் சகாக்களைப்பற்றியும் அவன் குறிப்பிட்டு, "பொது நன்மைக்காக உயிரை விடுவதைவிட உயர்ந்த மரணம் வேறு ஒன்றுமில்லை'' என்றான்.

அலெக்ஸாண்டர் உலியானேவுக்குத் தூக்குதண்டனை விதித்தனர், மன்னனின் கருணையைக் கோருமாறு அவன் தாய் அவனிடம் மன்றாடினாள். அவன் சகாக்களில் சிலர் அவ்விதமே கோரி மன்னிப்புப் பெற்றனர். ஆனால் அலெக்ஸாண்டர் மன்னிப்புக் கோர மறுத்துவிட்டான்.

1887 மே மாதம் 8-ந் தேதி அதிகாலையில் அலெக்ஸாண்டரும் அவன் சகாக்கள் நால்வரும் ஷ்லூஸல்பர்க் கோட்டையில் தூக்கிலிடப்பட்டனர்.

இந்தச் செய்தியைத் தாங்கிய பத்திரிகைகள் ஸிம்பிர்ஸ்கில் விளாடிமீருக்குக் கிடைத்தவுடன் அவன் பத்திரிகையை வீசி எறிந்துவிட்டு, "அவர்கள் அதற்குப் பதில் பலி கொடுக்கவேண்டும்; அதற்கு வேண்டியதை செய்கிறேன்'' என்று சபதமிட்டான்.

"யார்பதில் பலி கொடுக்கும்படிச் செய்யப்போகிறாய்?'' என்று அருகிலிருந்த மேரியா ஸாவெங்கோ கேட்டாள்.

"உனக்கு ஏன் அந்தக் கவலை? அது எனக்குத் தெரியும்" என்று பதிலளித்தான் விளாடிமீர்.

அந்த விளாடிமீர் உலியானோவ்தான் பிற்காலத்திய லெனின் என்பதை உலகம் அறிந்தது.

## 1. புரட்சியின் வித்து

கொலையின்மூலம் சுதந்தரம் அடையலாமென்று கனவுகண்டு உயிர்நீத்த லட்சியவாதியும், மற்றொரு லட்சியத்தை அடைய இன்னும் ஆக்கமான முறையை அனுஷ்டித்த அவன் சகோதரன் விளாடிமீரும் ஒரே மூலத்திலிருந்துதான் உணர்ச்சி பெற்றனர். லட்சியப் புரட்சியின் தனி வழியில் வந்தவர்கள்தான் அவர்கள் இருவருமே. அதில் பெருந்தன்மையும்–அற்பத்தனமும்–நேர்மையும், குற்றமும் அன்பும்–துவேஷமும் கலந்திருந்தன.

அலெக்ஸாண்டர் தூக்கு மரத்தில் மாண்டபொழுதே அவன் தம்பியின் விதியை நிர்ணயிக்கும் கருத்துகள் உருவாகிவிட்டன. ரஷியப் புரட்சி இயக்கம் நெப்போலியன் சகாப்தத்திலேயே ஆரம்பமாகிவிட்டது. அப்பொழுது பிரெஞ்சுப் புரட்சிக் கருத்துக்களுடன் ரஷிய அதிகார்ரிகள் திரும்பி வந்திருந்தனர். முதலில் மனமறிந்து புரட்சிக்காரர்களாக இருந்தவர்கள் ராணுவ அதிகாரிகள்தான். முதல் புரட்சி நடவடிக்கை எடுத்தவர்கள் டிசம்பர் வாதிகள் என்ற சிறு ராணுவ கோஷ்டியினரே. முதல் அலெக்ஸாண்டர் மன்னன் இறந்தபொழுது பட்டத்து இளவரசன் நிகொலஸைப் பட்டத்திற்கு வரவொட்டாமல் தடுத்து, அவனுடைய சகோதரன் கான்ஸ்டாண்டைனுக்குப் பட்டம் கட்ட முயன்றதுதான், எதேச்சாதிகார ஆட்சியை எதிர்த்துஇவர்கள் எடுத்த முதல் நடவடிக்கை.

1825, டிசம்பர் 26–ம் தேதி நிகொலஸ் சிம்மாசனமேறிய சமயத்தில் ராணுவத்தில் ஒரு பகுதியினர் அவனுக்கு விசு

வாஸம் தெரிவிக்க மறுத்துவிட்டனர். கான்ஸ்டாண்டைன் தான் சட்ட பூர்வமான சக்ரவர்த்தியென்று அவர்கள் அறிவித்து, ரஷியாவுக்கு ஓர் அரசியல் சட்டம் வகுக்குமாறு கோரினர். அவர்களுடன் சமாதானம் பேச நிகொலஸ் அனுப்பிய தூது கோஷ்டியை நோக்கி அவர்கள் சுட்டனர். இதற்கிடையில் ஜனங்களும் புரட்சிக்காரர்களின் பக்கம் சேரத் தொடங்கினர். புரட்சி இயக்கம் வலுவடைவதற்குள் புரட்சிக்காரர்கள்மீது பீரங்கிப் பிரயோகம் செய்யுமாறு நிகொலஸ் உத்தரவிட்டான். டிசம்பர் வாதிகள் ஓட நேர்ந்தது. தெருக்களில் பலர் செத்தும் காயமடைந்தும் வீழ்ந்தனர். அவர்களுடைய தலைவர்களில் ஐந்துபேர் தூக்கி லிடப்பட்டனர், முப்பத்தோரு பேருக்கு நீண்டகாலக் கடுங் காவல் தண்டனை விதிக்கப்பட்டது. மற்றவர்கள் சைபீரியா வுக்கு நாடு கடத்தப்பட்டனர்.

மேற்கு ஐரோப்பாவில் பல நூற்றாண்டுகளாக மன் னர்களுடன் நிலப் பிரபுக்களும், பின்னர் மத்தியதர வகுப்பினரும் போராடினர். ஆனால் ரஷியாவில் கொடுங் கோல் ஆட்சிதான் மேன்மேலும் ஓங்கி வந்தது.

குடியானவர்களை அடக்கியாண்ட அவர்களுக்கு எதிராக மக்களுக்கிடையே துவேஷம் குமுறிக் கொண்டிருந்தது. இதன் விளைவாக பத்தொன்பதாம் நூற்றாண்டின் ஆரம் பத்தில் ரஷியா இரண்டாகப் பிளவுண்டு கிடந்தது. ஒருபுறம் அதிகார வர்க்கம், பிரபுக்கள் ஆகியவர்களுடன் கூடிய மன்ன னின் கொடுங்கோல் ஆட்சி, மறுபக்கம் அடக்கு முறைக்கு ஆட்பட்டிருந்த கோடிக் கணக்கான குடியானவர்கள்.

1830-ல் நடந்த பிரெஞ்சுப் புரட்சி, புரட்சிக் கருத்துக் களுக்குப் புதுத்துயிரூட்டியது, ரகசியக் கூட்டங்கள் கூடி, அரசியல், இலக்கிய, சமூகப் பிரச்னைகள்பற்றி விவாதித்தன. பெரிய மனிதர்கள், பேராசிரியர்கள், எழுத்தாளர்கள், மாணவர் கள் இவர்கள்தான் இவற்றின் முன்னோடிகள். அலெக்ஸாண்

டர் ஹெர்ஸன் இவர்களுடைய ஆதர்ச புருஷன். நிலப் பிரபுத்துவத்தையும் யதேச்சாதிகார ஆட்சியையும் ஒழிக்க வேண்டுமென்பதே ஹெர்ஸனுக்கும் அவர் சகாக்களுக்கும் விருப்பம். நடுத்தர வகுப்பினர் உயர்வதை இவர்கள் வரவேற்கவில்லை. இவர்களில் பெரும்பாலோர் வர்த்தக வர்க்கத்தையும் முதலாளித்துவத்தையும் எதிர்த்தனர். ரஷிய ஜனநாயகச் சிந்தனை சோஷலிஸத்தில் ஆழ்ந்திருந்தது.

ஆரம்பகாலப் புரட்சிக்காரர்கள் போரியர், ஸெய்ன்ட் ஸைமன் முதலிய பிரெஞ்சு சோஷலிஸ்டுகளைத் தங்கள் ஆசார்யர்களாகக் கொண்டனர். படித்த நிலப் பிரபுக்கள் மன்னரை ஆதரித்தனர்.

பயெலின்கி என்பவர் 1847-ல் எழுதிய ஒரு கட்டுரையில், "மக்கள் உருளைக் கிழங்குக்கு ஆசைப்படுகின்றனர். ஆனால் அரசியல் சட்டத்திற்கு ஒருவரும் ஆசைப்படுவதில்லை, ஒன்றும் செய்யச் சக்தியற்ற, படித்த நகர வாசிகள்தான் இதை விரும்புகின்றனர்'' என்று குறிப்பிட்டார்.

1848-ம் வருஷத்திய ஐரோப்பிய புரட்சிகளை இந்த அறிவாளிகள் மிகுந்த நம்பிக்கையுடன் வரவேற்றனர். ஆனால் பின்னால் ஏற்பட்ட வீழ்ச்சி மத்தியதர வகுப்பினர் மீது இன்னும் அதிக ஆத்திரத்தை ஏற்படுத்தியது. ரஷியாவில் தொழிலாளர் வர்க்கம் இல்லாததாலும், ஒவ்வொரு விவசாயிக்கும் விவசாயக் கமிட்டி நிலம் தேடிக்கொடுத்துவிடுவதாலும் இங்கு புரட்சி நடப்பதே சாத்தியமில்லை'' என்று ஜெர்மன் அறிஞர் ஒருவர் எழுதினர். ஆனால் ஹெர்ஸன் இதற்கு நேர்மாறான கருத்துக்கொண்டிருந்தார். ரஷிய முதலாளித்துவத்தின் பலவீனத்தினாலும், விவசாயக் கமிட்டிகள் இருப்பதாலும் மற்ற இடங்களைவிட ரஷியாவில் புரட்சி ஏற்படுவது சுலபமென்று அவர் கருதினர். "மேற்கே பல குழப்பங்களின் மூலம் ஏற்படக்கூடியது, ரஷ்யாவில் இப்பொழுது

உள்ள நிலைமையிலேயே ஏற்பட முடியும்'' என்று அவர் நினைத்தார்.

இந்தப் புதிய அரசியல் சிந்தனையின் வளர்ச்சியால் தணிக்கைகளும் அடக்கு முறைகளும் கடுமையாயின. தணிக்கை அதிகாரிகளுக்கு அதிருப்தி ஏற்படுத்தியதற்காக 1852ல் டர்ஜனேவைக் கைது செய்தனர். ஓர் இலக்கியக் குழுவைச் சேர்ந்த அத்தனை பேரும் மரண தண்டனை பெற்றனர். இரவில் கூடி, போரியரின் சித்தாந்தங்களை ஆராய்ந்ததுதான் அவர்கள் செய்த குற்றம். டாஸ்டாவ்ஸ்கியும் அவர்களில் ஒருவர். மரணதண்டனை நிறைவேறவிருந்த கடைசி நிமிஷத்தில் அது குறைக்கப்பட்டு, சைபீரியாவில் நீண்டகாலக் கடுங்காவல் தண்டனையாக மாறியது.

முதல் நிகோலஸ் 1855-ல் இறந்தபொழுது உடனடியாக மாறுதல் எதுவும் ஏற்படவில்லை. ஆனால் கிரிமியா யுத்தத்தில் ரஷியா தோற்றபின், இரண்டாவது அலெக்ஸாண்டர் மன்னர், இடைவிடாத கிளர்ச்சிகளுக்குப் பணிந்து ஜமீன்களை ஒழிப்பதற்கான உத்தரவைத் தயாரிக்க ஒரு கமிட்டியை நியமித்தார். சீர்திருத்தத்தை நோக்கித் திரும்புவது போல் தோன்றிய இந்த நிலைமையைக் கண்டு உறசாக மடைந்த பத்திரிகைகள் எல்லா அரசியல் பிரச்னைகளைப் பற்றியும் விவாதிக்கத் தொடங்கின.

1861-ல் மன்னர் பிறப்பித்த ஜமீன் ஒழிப்புச் சட்டம் ஏமாற்றமளிப்பதாக இருந்தது. நிலம் இலவசமாகக் கிடைக்குமென்று விவசாயிகள் எதிர்ப்பார்த்துக் கொண்டிருந்தனர். ஆனல் நிலங்களைச் சீக்கிரத்தில் மீட்க முடியாத அளவுக்கு அவர்களுடைய அடமானங்களும் வரிகளும் அதிகமாக இருந்தன. இவ்வளவு சிக்கல்களுடன் கூடிய சுதந்திரத்தை அளித்தவர் ஜார் மன்னனே என்பதை அவர்களால் உணர முடியவில்லை. நிலப் பிரபுக்களைச் சபித்து தங்கள் அதிருப்தியைக் கலகங்களின் மூலமும் நாச வேலை

கள் மூலமும் வெளிக் காட்டினர். இதற்கு பதி லளிக்கும் முறையில் கிராமங்களுக்கு தண்டப் படைகளை சர்க்கார் அனுப்பியது.

இதற்கிடையில், மிதவாதக் கொள்கை அனுஷ்டித்துவந்த பத்திரிகைகள் புரட்சிகரமாக எழுதத் தொடங்கின. சட்ட விரோதமான துண்டுப்பிரசுரங்கள் பல வெளியாயின. சர்க்கார் தன் விவசாயக் கொள்கையின் மூலம் புதிய *புகாச்செவ்* குழப்பத்தை தூண்டுவதாக இந்தத் துண்டுப் பிரசுரங்களில் ஒன்று குற்றம் சாட்டியது, அதிகாரத்தை ஏற்கப் ''படித்தவர் வர்க்கம்'' அழைக்கப்பட்டது. அப்படி அவர்கள் செய்யத் தவறினல் புரட்சி செய்யுமாறு மக்களை ''தேச பக்தர்கள்'' அழைக்க நேருமென்று அந்தப் பிரசுரம் கூறியது. ரஷியா வில் ஜனநாயக ஆட்சியை ஏற்படுத்த அரசியல் நிர்ணய சபை கூட்ட வேண்டுமென்று மற்ருெரு துண்டுப் பிரசுரம் கூறியது. பொதுஜன அதிருப்தியின் மூலகாரணத்தைப் போக்காவிட்டால் 1863-க்குள் ரஷ்யாவில் புரட்சி வந்து விடும் என்று வேருெரு பிரசுரம் கூறியது.

அதே வருஷம் கோடை காலத்தில் ''இளந் தலை முறைக்கு'' என்று வெளியிடப்பட்ட ஒரு பிரகடனம் ''மேற்கு ஐரோப்பாவில் சோஷலிஸம் தோற்றதானது ரஷியாவைப் பொறுத்தவரையில் எதையும் நிரூபிக்கவில்லை'' என்று வாதித்தது, ''மேற்கு ஐரோப்பாவின் நிலைக்கு மாருக ரஷியாவில் விவசாயக் கமிட்டிகள் இருக்கின்றன. 10,000 வருஷத்திற்குப் போதுமான நிலமும் இருக்கிறது. தடைப் பட்ட மக்கள் நாம். இதில்தான் உள்ளது நம் விமோசனம். சரித்திரத்தில் ஒரு புதிய விதியை வகுத்துக் கொண்டுவர நாம் விதிக்கப்பட்டிருப்பதாக நம்புகிருேம். ஐரோப்பாவின் உளுத்துப்போன கருத்துக்களைக் காப்பியடிக்க நாம் விரும்ப வில்லை'' என்று கூறிற்று.

புரட்சி செய்யத் தூண்டும் பிரசுரங்கள் 1862-ல் வெளி வந்தன. ஆயுதம் எடுத்துக் கலகம் செய்யும் படியும் சுதந்திரத்தின் விரோதிகளை தயை தாக்ஷண்யமின்றி ஒழிக்கும்படியும் ஒரு பிரசுரம் கேட்டுக் கொண்டது. இதன் ஆசிரியர் ஸெய்ச்னெவிஸ்கி.

''எதிர் காலத்தின் கொடியை—மகத்தான செங்கொடியைப் பறக்கவிட்டு, குளிர்கால அரண்மனையைக் கைப்பற்ற நாம் முன்னேறும்காலம் சீக்கிரத்திலேயேவரும். மன்னர் குடும்பத்தை ஒழிப்பதோடு இந்த விவகாரம் முடிந்து விடலாம்; அல்லது மன்னரைக் காப்பாற்ற அவரை ஆதரிக்கும் கட்சி முழுவதுமே திரண்டு எழக்கூடும். அப்படி எழுந்தால், ''கோடரியை வீசுங்கள்'' என்ற கோஷத்தை நாம் எழுப்புவோம்; மன்னர் கட்சி இப்பொழுது நம் விஷயத்தில் எவ்வளவு இரக்கமற்று நடந்து கொள்ளுகிறதோ அதே போல் நாமும் அவர்களை இரக்கமின்றி அழிக்க வேண்டும்.

''அந்த சமயம் வரும்பொழுது நம்மை ஆதரிக்காதவர்களெல்லாம் நமது விரோதிகள் என்பது நினைவிருக்கட்டும்! புரட்சிக்கட்சி, மிகக் குறுகிய காலத்திற்குள் புது சமுதாயத்திற்கு அஸ்திவாரம் அமைக்க வேண்டும். அதற்கு அதிகாரம் குவிந்துள்ள தற்போதைய ஸ்தாபன அமைப்பு நீடிக்க வேண்டும், இந்த ஸ்தாபனம் சர்வாதிகார முறையில் அதிகாரத்தைக் கைப்பற்ற வேண்டும். தேசீய அசெம்பிளித் தேர்தலை சர்க்காரே வழிகாட்டி நடத்த வேண்டும். தற்போதைய ஆட்சியை ஆதரிப்பவர்கள் பின்னர் உயிருடன் இருந்தாலும் அவர்களில் யாரும் தேசீய அசெம்பிளிக்கு வரமுடியாதபடி சர்க்கார் பார்த்துக்கொள்ள வேண்டும்'' என்று அந்தப் பிரகடனம் கூறியது.

இதுபோன்ற பலாத்காரப் பிரகடனங்களை ஹெர்ஸன் கண்டித்தார். இவை, ஆளும் வர்க்கத்திற்கும் பணக்காரர்களுக்குமிடையில் உள்ள பிணைப்பை பலப்படுத்தி இன்னும்

கடுமையான அடக்கு முறைகளை அனுஷ்டிக்கத் தூண்டுகின்றன என்பது அவர் கருத்து. உண்மையிலேயே இத்தகைய பிரசுரங்கள் வெளிவந்த பின் அரசியல் அடக்கு முறைகள் அதிகரிக்கத்தான் செய்தன. பெருவாரியானவர்கள் கைது செய்யவும் பட்டனர்.

மன்னரின் ஆலோசகர்கள், அவருடைய பயத்தைப் பயன் படுத்திக்கொண்டு, ஒன்றன்பின் ஒன்ருகப் பிற் போக்குச் சட்டங்களை இயற்றினர். புதிய கல்வி மந்திரி உயர்தரப் பள்ளிகளின் பாட திட்டத்தை மாற்றினுர். மாண வர்களிடையே வேவு பார்க்கும் முறை புகுந்தது.

ஆர்ப்பாட்டங்களில் மாணவர்கள் மறுபடியும் பங்கு கொண்டனர், கடுமையான தண்டனைகள் உடனுக்குடன் அளிக்கப்பட்டன. பலர் பள்ளிக்கூடங்களிலிருந்து விலக்கப் பட்டு சைபீரியாவுக்குநாடு கடத்தப்பட்டனர்.

மைக்கேல் பாகுனின் என்ற புதிய தலைவர் ஒருவர் தோன் றினுர். இவர் ஒரு பிரபு: பீரங்கிப் படையில் அதிகாரியாக இருந் தவர். முன்னேற்றத்திற்கு முதல் படியாக, மதத்தை மறுப்பது அவசியமென்று அவர் கருதினுர். பரம்பரைச் சொத் துரிமையை ஒழிக்க வேண்டுமென்று அவர் பிரசாரம் செய் தார். நிலங்களை விவசாயிகளின் குழுக்களுக்கும், தொழிற் சாலைகளைத் தொழிலாளர் சங்கங்களிடமும் மாற்ற வேண்டு வேண்டுமென்ருர். பெண்களுக்குச் சமத்துவம் அளித்து, விவாகம், குடும்பமுறை முதலியவற்றை ஒழித்து எல்லா குழந்தைகளுக்கும் இலவசக் கல்வி போதிக்க வேண்டு மென்ருர், சர்க்காரே ஒழிக்கப்பட வேண்டுமென்பதுதான் இவருடைய வாதங்களின் ஆதாரசுருதி. புதிய சமுதாயத்தை நிர்மாணிப்பதற்கு முன்னுல் ஏற்கெனவே உள்ள சமுதாய அமைப்பு அடியோடு அழிய வேண்டுமென்று அவர் கருதினுர்.

அவருக்கு ஸெர்கிநெசீவ் என்பவன் பிரதம சிஷ்யன். அவன் ஒரு மதகுருவின் மகன். புரட்சிக் கருத்தை தீவிரமாக்க ஆதரித்தான். புரட்சி செய்வதற்காக 1869-ல் அவன் மாஸ் கோவில் ஒரு சங்கம் அமைத்தான். சங்கத்திற்கு ஆதரவு பெற மோசடி, பலாத்காரம், கொலை முதலிய எதைச் செய்வ தற்கும் அவன் தயங்கவில்லை.

1869-ல் மாணவர் கலவரத்தில் சம்பந்தப்பட்ட நெசீவ் ஸ்விட்ஜர்லாந்துக்கு ஓடிவிட்டான். அங்கிருந்து. தன் ஸ்தாபனத்தில் சேருமாறு ரஷிய மாணவருக்கு ஒரு வேண்டு கோள் விடுத்தான். இங்குதான் பாகுனின் அவனுக்கு நண்ப ரானுர். அவனுடைய சீரிய ஒழுக்கமும் வெறியும் அவர் மனத்தைக் கவர்ந்தன. அவன் பாகுனினுடன் சேர்ந்து "மக் கள் நீதி" என்ற பத்திரிகையை நடத்தினுன். மன்னரை மாத்திரமின்றி மிதவாத எழுத்தாளர்களையும் பத்திரிகைக் காரர்களையும் அது கடுமையாகத் தாக்கியது. அதில் அவர் கள் பின்வருமாறு எழுதினுர்கள். "புரட்சிக்காரன் என்பவன் நாசத்திற்கு தயாரானவன், அவனுக்கென்று தனிப்பட்ட நலன்கள், விவகாரங்கள், உணர்ச்சிகள், பந்தங்கள், சொத்து முதலிய எதுவுமே கிடையாது; அவனுக்கென்று ஒரு பெயர் கூட இல்லை. இதயமும் ஆத்மாவும் பேச்சில் மட்டுமின்றி, செயலிலும் இல்லை. சமூகத்துடனும் நாகரிக உலகத்துட னும் அவன் தன்னுடைய தொடர்புகள் யாவற்றையும் அறுத்துக்கொண்டவனுவான். அவன் சமூகத்தின் இரக்க மற்ற விரோதி. அதில் அவன் வாழ்கிருனென்ருல் அதை அழிக்கும் ஒரே நோக்கத்துடன்தான் வாழ்கிருன். புரட்சி யின் வெற்றிக்கு ஆதரவு அளிக்கக்கூடிய செயல் எல்லாம் அவனுக்கு தர்மமே. அதற்கு இடையூறு செய்யும் மற்ற எதுவும் அதர்மம். மென்மை, சந்தோஷம், அன்பு முதலி யவை அவன் சுபாவத்திற்கு புறம்பானவை!" என்று அவர் கள் எழுதினுர்கள்.

நெசீவை, உலகப் புரட்சிச் சங்கத்தின் ரஷியக் கிளைக்கு தலைவரென்று அத்தாட்சி அளித்து பாகுனின் ஒரு அறிக்கை வெளியிட்டார். நெசீவ் இந்த அத்தாட்சிப் பத்திரத்துடன் ரஷியாவுக்குச் சென்று அங்கத்தினர்கள் சேர்த்தான்.

இவானேவ் என்ற மாணவன் ஓர் உளவாளியென்று கூறி அவனைக் கொலை செய்யுமாறு தன் சகாக்களைத் தூண்டினான் நெசீவ்.

இவானேவின் கொலை நெசீவின் ரகசிய ஸ்தாபனத்தை அம்பலப்படுத்திவிட்டது. இதன் விளைவாகச் சுமார் 300 பேர் கைதியாயினர். நெசீவ் மீண்டும் ஸ்விட்ஸர்லாந்துக்கு ஓடி விட்டான், அங்கிருந்துகொண்டு பிரகடனங்கள் வெளி யிட்டுவந்தான். அவன் அனுஷ்டித்த முறைகளை டாஸ் டாவ்ஸ்கி, என்ற பேராசிரியர் தம்முடைய "பொஸஸ்டு" என்ற நாவலில் விவரித்திருக்கிறார். இந்த முறைகளினால் கடைசியில் பாகுனின் உள்பட அவனைப் பின்பற்றுபவர்கள் எல்லோருமே பலியாகிவிட்டனர்.

நெசீவைப்பற்றி பாகுனின் எழுதும்பொழுது, "நான் சந்தித்தவர்களுக்குள் நெசீவ் மிகவும் திறமை வாய்ந்தவர் தான். லட்சியம் என்று கருதும் ஒரு விஷயத்திற்குச் சேவை செய்ய வேண்டிய அவசியம் ஏற்படும்பொழுது, மற்றவர்கள் விஷயத்தில் எவ்வளவு தயை தாட்சண்யமின்றி நடந்து கொள்கிறாரோ அதேபோல் தம்விஷயத்திலும் நடந்து கொள் கிறார்; மிகவும் அபாயகரமானவர். அவருடன் சகவாசம் செய்வது பிராணனுக்கே ஆபத்தாக முடிந்தாலும் முடியும். அவர் அனுஷ்டிக்கும் முறைகள் வெறுக்கத் தக்கவை. வேலை செய்யக்கூடிய ஒரு ஸ்தாபனத்தை ஏற்படுத்த மாக்யவில்லியின் சித்தாந்தத்தையும், 'உடலுக்கு பலாத்காரம் ஆத்மாவுக்குப் பொய்கள்' என்ற ஜெஸுயிட் சூத்திரத்தை யும் அனுஷ்டிக்க வேண்டுமென்ற முடிவுக்கு அவர் வந்து விட்டார்.

"தேர்ந்தெடுத்த தலைவர்களைத் தவிர மற்றெல்லா அங்கத்தினர்களும் அந்தத் தலைவர்களின் கைப்பாவைகள்போல் குருட்டுத்தனமாக இயங்கவேண்டும். இந்த அங்கத்தினர்களை ஏமாற்றலாம்; கொள்ளையடிக்கலாம்; அவசியமானால் கொலையும் செய்யலாம். சதிகளில் பீரங்கிகளுக்கு வெறும் இரையாகப் பயன்பட வேண்டியவர்களே இவர்கள். லட்சியத்திற்காக அவர் உங்கள்மீது, உங்கள் விருப்பத்திற்கு மாறாகக்கூடப் பூரண ஆதிக்கம் செலுத்த அனுமதிக்க வேண்டும். நாங்களெல்லாம் ஒன்று சேர்ந்து அவருடைய முறைகளை அம்பலப்படுத்திய பொழுது 'ஆமாம், அதுதான் எங்களுடைய முறை; அதை ஏற்காதவர்களை எங்கள் விரோதிகளாகக் கருதுகிறோம், எங்களுடன் சேர்ந்து கடைசிவரை வராதவர்களை ஏமாற்றி, இழிவுபடுத்துவது எங்கள் கடமையென்று கருதுகிறோம்' என்று கூறினார்" என்கிறார் பாகுனின்.

இவானேவின் கொலைக்காக நெசிவ் தன் நாட்டிற்குத் திருப்பி அனுப்பப்பட்டான். அவனுக்கு 20 வருஷக் கடுங்காவல் தண்டனை கிடைத்தது. 1883-ம் வருஷம் அவன் செயிண்ட்பீட்டர் செயிண்ட்பால் கோட்டையில் மாண்டான்.

ஸ்விட்ஜர்லாந்தில் இருந்த மற்றொரு முக்கியஸ்தர் பீட்டர் லாவ்ரோவ் என்பவர். இவர் செயிண்ட் பீட்டர்ஸ் பர்க்கில் பேராசிரியராக இருந்தவர். பாமர மக்களுக்குப் படிப்படியாகக் கல்வி புகட்டுவதில் நம்பிக்கை கொண்டவர்.

"ரஷிய சமூகத்தை மாற்றி அமைப்பதை, ரஷியமக்களுக்காக மாத்திரமின்றி, அவர்களைக் கொண்டே அதை அடைய வேண்டும். ஆனால் ஜனங்கள் இதற்குத் தயாராக இல்லை. ஆகையால் நம் கருத்துக்கள் வெற்றி பெறுவதற்குத் தக்க ஏற்பாடு செய்யவேண்டும்; ஒரு குறிப்பிட்ட சமயத்தில் என்ன சாத்தியம் என்பதை நன்றாக அறிந்திருக்க வேண்டும்" என்று அவர் எழுதினார்.

"சோஷலிஸம் என்ற தர்ம லட்சியத்தை அடைவதற்கு வேண்டிய அறிவைப் பாமர மக்களுக்குப் புகட்டுவதே அறிவாளிகளின் கடமை" என்று லாவ்ரோவ் கருதினர்.

ரஷிய மக்களிடம் மறைந்து கிடக்கும் ஆத்திரத்தைக் கிளப்பிவிடுவது ஒன்றுதான் புரட்சிக்கு நிச்சயமான வழி யென்று பாகுனின் கருதினர். இவர்கள் இருவருமே, மக்களிடம் செல்லுமாறு இளைஞர்களைக் கேட்டுக் கொண்டனர்.

ரஷியாவில் பல வருஷங்கள் சிறைவாசம் செய்தபின் 1874-ல் ஸ்விட்ஜர்லாந்துக்கு வந்த பீட்டர் ட்காசேவும் இதேபோன்ற கருத்துக்கள் கொண்டவரே. புரட்சிகரமான ஒரு சிறு பான்மையின் சர்வாதிகாரத்தில் நம்பிக்கை கொண் டவர். அதிகாரத்தை பலாத்காரத்தின் மூலம் கைப்பற்று வதை ஆதரித்தார். சமூகப் புரட்சிக்குப்பின் ஏற்படும் விவ சாயியின் சொர்க்கத்தைக் கீழ்க்கண்டவாறு சித்திரித்தார் அவர் :

"விவசாயி சுகமாகவும் ஆனந்தமாகவும் வாழ்வான்; அவனுடைய பணப்பை தங்க நாணயங்களால் நிறைந்திருக் கும்; அவனுடைய ஆடுமாடுகளும் கோழிகளும் எண்ணற்ற வையாக இருக்கும்; வயிறு புடைக்கத் தின்னவும் குடிக்க வும் செய்வான்; இஷ்டப்பட்ட போதுதான் வேலை செய் வான். ஒருவரும் அவனை நிர்ப்பந்திக்க மாட்டார்கள்..." என்று அவர் வர்ணித்தார்.

ஜனங்களின் பேராசையைக் கிளப்பி, புரட்சியை துரி தப்படுத்தக் கூடாதென்று கூறி இக்கட்டுரையை லாவ்ரோவ் அச்சிட மறுத்துவிட்டார்.

"கலகம் செய்யுமாறு மக்களை அழைக்கப் புரட்சிக் காரனுக்கு எப்பொழுதுமே உரிமை உண்டு" என்று ட்கா சேவ் 1875-ல் எழுதினர். "ஜனங்கள் எப்பொழுதும்

புரட்சிக்குத் தயாராயிருப்பதாக அவன் கருதவேண்டும். எதேச்சாதிகாரத்தினுல் நசுக்கப்படும் எல்லா மக்களும் புரட்சி செய்ய எப்பொழுதும் தயாராக இருக்கின்றனர்...''

''அதிகாரத்தைக் கைப்பற்றும் ஒரே முறையின் மூலம் தான் புரட்சி செய்ய முடியும். சர்க்காரைக் கவிழ்த்து, பிற்போக்கு (கன்ஸர்வெடிவ்) பிரபுத்வ ஆட்சியைப் புரட்சி கரமான ஆட்சியாக மாற்றுவதுதான் உடனடியாகச் செய்ய வேண்டிய அவசர வேலை'' என்று எழுதினுர் அவர்.

சிறுபான்மை கோஷ்டியின் சர்வாதிகாரத்தை அடி யோடு ஒதுக்கித் தள்ளிவிட்டார் லாவ்ரோவ். ''அதிக அதி காரம் இருந்தால் நல்லவர்கள்கூடக் கெட்டுப் போகின்றனர் என்பதைச் சரித்திரம் நிரூபிக்கிறது. மக்களுக்கு நன்மை செய்ய நினைத்த சிறந்த தலைவர்கள் கூடத் தோற்றுப்போய் விட்டார்கள். எந்தச் சர்வாதிகாரமும் தன்னைச் சுற்றி பல வந்தமாகப் பாதுகாப்புச் சாதனங்களை அமைத்துக்கொள்ள வேண்டும். அவர்களின் கைப்பாவையாக இவை இயங்க வேண்டும். எந்தச் சர்வாதிகாரமும், தன்னுடைய பிற் போக்கு எதிரிகளை மாத்திரமின்றி, தன் கருத்தை ஒப்புக் கொள்ளாதவர்களையும் அடக்கத்தான் செய்யும். சர்வாதி காரம் நிலைத்துவிட்டால். அது தன் அதிகாரத்தைப் பாது காத்துக் கொள்வதிலும், போட்டியாளர்கள் அதைப் பறித் துக் கொள்ளாமல் பார்த்துக் கொள்வதிலும்தான் அதிக கவனம் செலுத்துமேயன்றி, அந்த அதிகாரத்தைக் கொண்டு லட்சியத்தை அடைவதில் அவ்வளவு கவனம் செலுத்தாது'' என்று அவர் எழுதினுர்.

ஹெர்ஸனின் கருத்தைத்தான் அவர் பிரதிபலித்தார். ''பூரண குடியரசு சுதந்திரம், பூரண ஜனநாயக சமத்துவம் ஆகியவற்றின் கீழ்தான் சமூக முன்னேற்றம் சாத்தியம். சோஷலிஸத்திற்குக் கொண்டுபோகாத குடியரசு சுத்தப் பைத்தியக்காரத்தனமாகத் தோன்றுகிறது. அரசியல் சுதந்திர

மில்லாத சோஷலிஸம் சீர்கெட்டு சர்வாதிகாரக் கம்யூனிஸமாகிவிடும்'' என்று ஹெர்ஸன் பல வருஷங்களுக்கு முன்பே எழுதினர்.

வெளிநாடு சென்றிருந்த புரட்சிக்காரர்களின் செல்வாக்கைக் குறைக்கும் பொருட்டு, வெளி நாடுகளில் இருந்த மாணவர்களையெல்லாம் 1874 ஜனவரிக்குள் ரஷியாவுக்குத் திரும்புமாறு சர்க்கார் உத்திரவிட்டனர். பெரும்பாலான மாணவர்கள் இந்த உத்தரவை ஏற்றனர். சோஷலிஸக் கருத்தை ரஷிய மக்களிடையே பிரசாரம் செய்ய இதை ஒரு சிறந்த சந்தர்ப்பமென்று கருதி இந்த உத்தரவை வரவேற்றனர்.

1876-ல், பாகுனின் செல்வாக்கின்கீழ்ப் புரட்சிக்காரர்கள், ''நிலமும் சுதந்திரமும்'' என்ற ஸ்தாபனத்தை ஆரம்பித்தனர். விவசாயிகளிடையே கலகங்களையும் ஒத்துழையாமையையும், தொழிலாளர்களிடையே வேலைநிறுத்தங்களையும் தூண்டிவிட்டு, 'கீழிருந்து' சமூகப் புரட்சிசெய்வது இந்த ஸ்தாபனத்தின் வேலைத்திட்டம். புரட்சியை நடத்தப் போராட்டப் படைகள் அமைக்கப்பட்டன.

1879-ல் பயங்கரச் செயல்களுக்கு ஏற்பாடு செய்ய ஒரு கமிட்டி அமைக்கப்பட்ட பொழுது, ''நிலமும் சுதந்திரமும்'' ஸ்தாபனத்தில் பிளவு ஏற்பட்டது. ஜார்ஜ் ப்ளகனேவ் தலைமையில் ஒரு சிறு கோஷ்டி, பயங்கர இயக்கத்தை ஏற்க மறுத்தது, இந்தக் கோஷ்டி, ''கருங்காலி'' என்று அழைக்கப்பட்டது. பெரிய கோஷ்டி தனக்கு ''மக்கள் கருத்து'' என்று பெயரிட்டுக் கொண்டது.

விவசாயிகள், சோஷலிஸத்தை பலமாக ஆதரிப்பதாக இரு கோஷ்டியினருமே கருதினர். ஆலைத் தொழிலாளர்தான் புரட்சி செய்ய முடியுமென்ற மார்க்ஸீயக் கருத்துக்குமாறாக, ரஷியாவில் விவசாயிகளும் அதையே செய்ய முடியுமென்று அவர்கள் நம்பினர்.

ஆனால் சிறிது காலம் வரை சோஷலிஸத்தை அடைய முடியாதென்று "மக்கள் கருத்து" கோஷ்டியினர் நினைத்தனர். ஜமீன்களைப் பறிமுதல் செய்து, விவசாயிகளுக்கு நிலத்தைக் கொடுப்பதும், சிவில் உரிமைகளை ஏற்படுத்துவதும்தான் உடனடியான லட்சியம். அரசியல் நிர்ணய சபை கூடி, ரஷிய மக்களுக்குப் பிடித்த ஆட்சிமுறையை ஏற்படுத்திக் கொள்ளும் வரை இடைக்கால சர்க்கார் ஆட்சி நடத்த வேண்டுமென்று கட்சி கருதியது. எதேச்சாதிகார ஆட்சியில் ஜனநாயக சுதந்திரத்தை அடைவதற்கு சரியான வழி அரசியல் கொலை ஒன்றுதானென்று அது நம்பியது.

1881 மார்ச் மாதம் 13-ம் தேதி ஞாயிற்றுக்கிழமை இரண்டாவது அலெக்ஸாண்டர் மன்னர் கொலையுண்டார்.

இந்தக் கொலை, புதிதாகப் பட்டத்திற்கு வந்த மூன்றுவது அலெக்ஸாண்டரை பீதியடையச் செய்திருக்குமென்று பயங்கரவாதிகள் நினைத்திருப்பார்களானால் அந்த நம்பிக்கை சீக்கிரத்திலேயே தகர்ந்து தவிடுபொடி யாகியிருக்கும். அதே தினத்தில் மூன்றுவது அலெக்ஸாண்டர் வெளியிட்ட பிரகடனத்தில் பீதி தொனிக்கவில்லை. "எமது மகத்தான துக்கத்திற்கிடையில், கடவுள் ஆணை கேட்கிறது. கடவுளின் வழியிலும், அதிகாரத்தின் சத்தியிலும், உண்மையிலும் நம்பிக்கை வைக்குமாறு கடவுளின் குரல் கட்டளையிடுகிறது" என்று மன்னரின் பிரகடனம் கூறியது.

கொலையில் சம்பந்தப்பட்ட ஐவர் தூக்கில் மாண்டனர். கட்சித் தலைவர்களில் பெரும்பாலானவர்களுக்கு நீண்டகால சிறை தண்டனையும், ஸைபீரியாவுக்கு நாடு கடத்தல் தண்டனையும் கிடைத்தன. கோட்டையின் இருட்டறைகளில் பலர் அடைத்து வைக்கப்பட்டனர். அங்கேயே சிலர் இறந்தனர். மற்றவர்களுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது,

ஆனால் "மக்கள் கருத்து" கட்சி பயங்கரச் செயல்களில் நம்பிக்கை கொண்டிருந்த போதிலும் பாகுனின், நெசீவ் ட்காசேவ் இவர்களை ஆதரிக்கவில்லை.

வேராபிக்னர் 1918-ல், ஒரு கட்டுரையில் பின்வருமாறு கூறினர்: "எங்களில் யாரும் ஜாகோபியரல்ல. ஒரு சிறுபான்மைக் கூட்டத்தின் விருப்பத்தைப் பெரும்பான்மை மக்கள் மீது திணிக்க நாங்கள் விரும்பவில்லை. புரட்சிகரமான சமூக, பொருளாதார, அரசியல் மாறுதல்களை உத்தரவுகளின் மூலம் நடத்தவேண்டுமென்று நாங்கள் விரும்பவில்லை. புரட்சிக் கட்சியின் கருத்துக்கு நேர் விரோதமான எந்த விஷயத்தையாவது மக்கள் ஆதரிக்கின்றனரென்ருல், அதற்காக இக் கட்சி பலாத்காரத்தில் இறங்கித் தன் கருத்தை அவர்கள்மீது திணிக்காது; அமைதியான முறையில் தன் கருத்தைப் பிரசாரம் செய்து வருவதோடு நிறுத்திக்கொள்ளும்..." என்று அவர் எழுதினர்.

கோட்டையின் இருட்டறைகளில் அடைப்பட்டுக் கிடந்தவர்கள், 1882 ஜூனில் ரஷிய மக்களுக்கு ஒரு செய்தி அனுப்பினர். "வாழ்பவர்களுக்கு, மாண்டவர்கள் அனுப்பும் செய்தி" என்பது அதன் தலைப்பு. பலாத்காரத்தையும் ரத்தம் சிந்துவதையும் அதில் அவர்கள் கண்டித்திருந்தனர். "சகோதர சகோதரிகளே! எங்கள் கல்லறைகளிலிருந்து இந்தச் செய்தியை உங்களுக்கு அனுப்புகிறேம். இதுவே எங்கள் கடைசிச் செய்தியாகவும் சாஸனமாகவும் இருக்கக் கூடும். நமக்கு வெற்றி கிடைக்கும் தினத்தன்று, நம் பகைவர்களுக்குக் கொடுமைகள் புரிந்து புரட்சியின் புனிதத் தன்மையைக் கெடுத்து விடாதீர்கள். நாங்கள் அனுபவிக்கும் துன்பம் ரஷியச் சுதந்திரத்திற்கு அளிக்கப்படும் விலையாக மட்டுமின்றி, இன்னும் அழகான மனிதத்தன்மை நிறைந்த சமூகத்தை ஏற்படுத்தவும் பயன்படுமாக. தாய் நாட்டிற்குத் தலைவணங்குகிறேம்; மனிதஜாதி முழுவதற்குமே வணக்கம்-

செலுத்துகிறேம்'' என்று அவர்கள் அச்செய்தியில் எழுதி யிருந்தனர்.

''மக்கள் கருத்து'' கட்சித் தலைமை அழிந்தபின் சில புரட்சிக்காரர்கள் தப்பி வெளிநாடு சென்றனர். ஜார்ஜ் ப்ளகனேவ், பால் ஆக்ஸல்ராட், வேரா ஸாஸுலிச், லியோடாச் முதலியவர்கள் தப்பிச் சென்றவர்களில் சிலர். ''தொழிலாளர் விமோசனக் குழு'' என்ற ஸ்தாபனத்தை இவர்கள் 1883–ல் ஆரம்பித்தனர். மார்க்ஸீயத்தை ரஷியா வில் பரப்புவது இந்தக் குழுவின் லட்சியம். தொழிலாளர் கலகத்தின் மூலமோ அல்லது சிறு கோஷ்டிக் கலகத்தின் மூலமோ ரஷியா சோஷலிஸத்தை அடைய முடியாது என்பது இவர்கள் கருத்து.

வர்க்க உணர்ச்சிபெற்ற, கட்டுப்பாடான தொழிலாளர் களின் ஆதரவு இருந்தால்தான் சோஷலிஸத்திற்கான போராட்டம் வெற்றிபெற முடியுமென்று இந்த ஸ்தாப னத்தார் நம்பினர். இறுதி லட்சியமாகிய சோஷலிஸ சமு தாயத்தை அடைவதற்கு அரசியல் சுதந்திரம்தான் முதல்படி யென்று கருதினர். மார்க்ஸீய வாதிகளின் தலைவராக ப்ளக னேவ்விளங்கினர். அவருடைய யோசனைப்படி முதல் சமூக ஜனநாயக வட்டங்கள் அமைக்கப்பட்டன.

ஆனால் ரஷியா முழுவதிலும் இளைஞர் புரட்சி ஸ்தாப னங்கள் விரவி இருந்தன. அவை ''மக்கள் கருத்து'' கட்சி யைப் புதுப்பிக்க முயன்றன. அலெக்ஸாண்டர் உலியனேவ் தலைமையில் வேலை செய்து வந்த பயங்கரவாதிகள் கோஷ்டி யும் இந்த கோஷ்டிகளில் ஒன்றுதான்.

செயிண்ட் பீட்டர்ஸ்பர்க் பயங்கரவாதிகள் கோஷ் டிக்கு உலியனேவ் ஒரு வேலைத் திட்டத்தை வகுத்தார். ''குறைந்தபட்ச சுதந்திரம்கூட இல்லாமலிருப்பதால்தான் பயங்கரச் செயல்கள் நடக்கின்றன. இந்தக் குறைந்தபட்ச சுதந்திரத்தைச் சர்க்கார் வழங்கினுல் அவை நின்றுவிடும்

என்பது எங்கள் பூரண நம்பிக்கை'' என்று அந்த திட்டம் கூறியது.

குறைந்தபட்சச் சுதந்திரத்தை மன்னர் வழங்கமாட்டார் என்று தெரிந்தபின் அலெக்ஸாண்டர் உலியனேவ் பயங்கர வாதியாக மாறி, இறுதியில் தூக்குமேடை ஏறினர். அவருடைய தம்பி விளாடிமீர் பயங்கரப் பாதையைப் பின்பற்றவில்லை. இதற்குப் பதில் மார்க்ஸிஸத்தை தழுவினர். அவர் மார்க்ஸீயக் கருத்துக்களைப் பின்பற்றிய போதிலும் அவர் மனம் புரட்சி இயக்கப் பாதையிலேயே சென்றது. லெனின் மார்க்ஸீய சித்தாந்தத்தில் ஒரு வார்த்தைகூடப் படிப்பதற்கு முன்னாலேயே, ஹெர்ஸென், லாவ்ரோவ் ஆகியவர்களின் காருண்ய உபதேசங்களிலும், பயங்கரச் சம்பவங்களிலும் மனம் செலுத்தியிருந்தார்.

இந்தச் சிந்தனைப் போக்கினால் சரித்திரத்தில் வேறு எந்த இயக்கத்திற்கும் இல்லாத உன்னத லட்சியமும் தியாகமும் தோன்றின. நெசீவ் போன்றவர்கள் பிரசாரம் செய்து வந்த அழிப்பு சித்தாந்தம் இன்னமும் சோதித்துப் பார்க்கப் படவில்லை.

இந்த ஞான தூதர்கள் மனித விடுதலையைப்பற்றி நினைத்தனர். தனிப்பட்ட முறையில் இவர்கள் பயங்கரச் செயல்களில் ஈடுபட்டபோதுகூட தங்கள் செயல்களுக்கு தார்மிக நியாயம் காட்ட முயன்றனர். தங்கள் உண்மை நோக்கத்தை அவர்கள் மறைக்கவில்லை. மற்றவர்களை பலியிடாமல் தாங்களே உயிரைத் தியாகம்செய்ய முன்வந்தனர்.

ஆனால் நெசீவும் அவருடைய சகாக்களும் மோசடி, பொய், கொலை முதலியவற்றை ஆதரித்தனர். ரஷிய மக்களை தங்கள் லட்சியத்தை அடைவதற்கான சாதனமாகவே கருதினர். ஆட்சியற்ற ஒரு லட்சிய சமுதாயமோ அல்லது ஒரு சிறுபான்மைக் கூட்டத்தின் பயங்கர சர்வாதிகார ஆட்சியோ ஏற்படுமென்று அவர்கள் எதிர்பார்த்தனர்.

ஆரம்பகாலப் புரட்சி கோஷ்டிகளில் இந்த இருசாராரும் இருந்தனர். ஆனால் லெனினின் சகோதரர் தூக்கிலிடப்பட்ட போது ரஷியப் புரட்சி இயக்கத்தில் கருணை ஆதிக்கம் செலுத்தியது. "அரசியல் சுதந்திரத்தைக் கைவிடும் சோஷலிஸம் அழிந்து சர்வாதிகாரக் கம்யூனிஸமாகிவிடும்" என்ற ஹெர்ஸனின் சித்தாந்தம் உண்மையென ஏற்றுக்கொள்ளப் பட்டது. நெசீவின் கருத்துக்கள் நிரந்தரமாகக் குழிதோண்டிப் புதைக்கப்பட்டு விட்டதாகவே தோன்றியது. இவை புத்துயிர்பெற்று, ரஷியாவிலும், உலகத்திலும் முக்கிய ஸ்தானம் வகிக்குமென்பதை அப்பொழுது டாஸ்டாவ்ஸ்கியைத் தவிர வேறு யாரும் அறியவில்லை.

## 2. இளமை

விளாடிமீர் இலிச் உலியனேவ் வோல்கா நதிக்கரையில் உள்ள ஸிம்பிர்ஸ்க் என்ற இடத்தில் 1870-ம் வருஷம், ஏப்ரல் 22-ந் தேதி பிறந்தார். அவருடைய தாய் மேரியா அலெக்ஸாண்ட்ரோவ்னா, அலெக்ஸாண்டர் பிளாங்க் என்ற டாக்டரின் மகள். அலெக்ஸாண்டர் பிளாங்க் ஸெய்ண்ட் பீட்டர்ஸ் பர்க்கில் தாம் வேலை செய்துவந்த ஆஸ்பத்திரியை விட்டுவிட்டு காஸான் மாகாணத்தில் கோகுஷ்கினோ என்ற இடத்திற்கு குடியேறினர்.

மேரியா அலெக்ஸாண்ட்ரோவ்னா, இலியா உலியனேவ் என்பவரை 1863-ம் வருஷத்தில் மணந்துகொண்டு பென்ஸாவில் அவருடன் வாழ்க்கை நடத்தத் தொடங்கினர். இலியா மிகவும் மன உறுதி படைத்தவர். தம்மிடம் வேலை செய்பவர்களிடம் மிகவும்கண்டிப்பாக இருப்பார். அரசியலில் பழைமையை ஆதரிக்கும் கன்ஸர்வேடிவ் ரஷிய வைதிகக் கிறிஸ்தவமதத்தில் தீவிரப்பற்றுக் கொண்டவர். அவர்கள் ஆறுகுழந்தைகளைப் பெற்றெடுத்தனர் 1866-ல் அவர்களுக்கு முதல் குழந்தையான அலெக்ஸாண்டர் பிறந்தான்; வீட்டில்

அவனை ஸாஷா என்று செல்லப் பெயரிட்டு அழைத்தனர். 1869 செப்டம்பரில் இலியா மாகாணப்பள்ளி இன்ஸ்பெக்டராக நியமிக்கப்பட்டார். ஸிம்பிர்ஸ்கில் அவர்கள் ஒரு வீட்டை வாடகைக்கு எடுத்துக்கொண்டு வசிக்கத் தொடங்கினர். அடுத்த வஸந்த காலத்தில் விளாடிமீர் பிறந்தான்.

விளாடிமீரை "குட்டி வோலோட்யா" என்று செல்லமாக அழைத்தார்கள். அவன் திடமான சரீரமும், சுறுசுறுப்பும், ஜீவன் ததும்பும் கண்களும் படைத்தவன். அவன் தங்கை ஒல்கா நடக்கத் தொடங்கியபோதுதான் அவனும் நடக்கக் கற்றுக்கொண்டான். ஒல்கா அவனுக்கு விளையாட்டுத்தோழி; அலெக்ஸாண்டர் அவன் போற்றிய வீரன்.

விளாடிமீர் தன் பாடங்களைக் கசடறக் கற்றுத் தேர்ந்தான். அவன் வியாஸங்கள் எழுதிய விதம் பற்றி அவன் தம்பி திமித்ரி கூறுவதைக் கேட்டால் விளாடிமீர் படிப்பில் எவ்வளவு தீவிர கவனம் செலுத்தினான் என்பது விளங்கும். "...முதலில் ஒரு துண்டுக் காகிதத்தை எடுத்து தான் எழுத வேண்டிய விஷயத்தைப்பற்றிய குறிப்புக்களை எழுதிக் கொள்வான். மற்றொரு காகிதத்தை எடுத்து இரண்டாக மடித்து ஒரு பக்கத்தில் தன் குறிப்புக்களை அடிப்படையாக கொண்டு வியாஸத்தின் முதல்--நகலை எழுதுவான். பிறகு அதில் புதிதாகச் சேர்க்க வேண்டிய விஷயங்கள் தோன்றினால் அவற்றையும். வியாஸத்திற்கான விஷயம் கிடைத்த இடங்களையும் மற்ற பகுதியில் குறிப்பான்......"

இளமையிலேயே இவ்விதம் ஒழுங்காக வேலை செய்ய அவனுக்கு இருந்த சக்தி அவனுடைய பிற்கால வாழ்க்கையின் ஒரு முக்கியமான அம்சத்தை எடுத்துக் காட்டுகிறது.

உலியனேவ் குடும்பத்தார் பெரிய பணக்காரர்களில்லாவிட்டாலும் அவர்களுடைய வாழ்க்கை, சிறு பிரபுக்களின் வாழ்க்கையோடு ஒப்பிடக்கூடியதாகவே இருந்தது. பதவி

காரணமாக இலியா நிகோலியேவிச் அந்த கோஷ்டியிலேயே சேர்க்கப்பட்டார். அவர் உயிர் நீத்தபோது விளாடிமீருக்கு வயது பதினாறு. அவருடைய மரணம், அந்தக் குடும்பத்திற்கு ஏற்பட்ட முதல் அதிர்ச்சி. பிறகு ஒரு வருஷத்திற்கெல்லாம் அலெக்ஸாண்டர் பரிதாபமாக மரணமடைந்தான். ஆனால் மேரியா அலெக்ஸாண்ட்ரோவ்னு மனஉறுதி படைத்தவள். அதனால் குடும்பம் கட்டுகுலையாமலே இருந்தது.

அலெக்ஸாண்டர் மரணமடைந்த ஒரு மாதத்திற்கெல்லாம் ஸிம்பிர்ஸ்க் உடற்பயிற்சிப் பள்ளியில் பட்டம்பெற்று வெளிவந்தான் விளாடிமீர். பள்ளியின் சிறந்த மாணவன் என்பதற்காக அவன் தங்கப்பதக்கமும் பெற்ருன்.

ஆனால் அவன், மரணதண்டனை பெற்ற ஒரு பயங்கரவாதியின் தம்பியாகையால் கஸான் பல்கலைக் கழகத்தில் அவனுக்கு இடம் கிடைப்பது சந்தேகமாக இருந்தது. அவனை சர்வகலாசாலையில் சேர்ப்பதற்குக் காரணமாக இருந்தவர் அலெக்ஸாண்டர் கெரென்ஸ்கி என்பவர்தான் என்பது விதியின் விளையாட்டுக்களில் ஒன்று. ஏனெனில் பிற்காலத்தில் அவர் அமைத்த இடைக்கால சர்க்காரைத்தான் 1917-ல் விளாடிமீர் கவிழ்க்க வேண்டியதாயிற்று.

பியோடார் கெரென்ஸ்கி ஸிம்பிர்ஸ்க் உடற்பயிற்சிப் பள்ளியின் டைரக்டராக இருந்தது மாத்திரமன்றி, அவரைத் தம் குடும்பத்தின் காவலராகவும் (கார்டியன்) நியமித்து இலியா நிகொலயேவிச் உயில் எழுதி வைத்திருந்தார்.

"உலியனேவ் பள்ளிக்கூடத்திலும் சரி, வெளியிலும் சரி தன் ஆசிரியர்களுக்கு அதிருப்தி ஏற்படும்படி நடந்து கொண்டதேயில்லை" என்று பியோடார் கெரென்ஸ்கி எழுதியிருக்கிருர். "அவனுடைய மனப்பண்பும் தார்மிக போதனையும் ஜாக்கிரதையாக கவனித்துக் கொள்ளப்பட்டிருக்கின்றன. மதமும் கட்டுப்பாடும் இந்த வளர்ப்பின் அடிப்படை

களாகும். அவனுடைய அற்புதமான ஒழுக்கத்தில் இவற்றின் புலனைக் காணலாம்" என்றூர் அவர்.

இதைப்பற்றி விளாடிமீர் (லெனின்) அப்பொழுது என்ன நினைத்தாரென்று தெரியவில்லை. ஆனல் பிற்காலத்தில் கடவுள் நம்பிக்கையை அவர் எப்பொழுது இழந்தார் என்ற போல்ஷ்விக் கட்சியின் கேள்வித்தாளுக்கு அவர் பதிலளிக்கையில் கடவுள் நம்பிக்கையைத் தாம் பதினறுவது வயதிலேயே விட்டு விட்டதாகக் கூறியிருக்கிறூர்.

1887 இலையுதிர் காலத்தில் கஸான் சர்வகலாசாலையில் விளாடிமீர் சேர்ந்தவுடனேயே மாணவர் குழப்பங்களில் சம்பந்தப்பட்டுவிட்டார். சிறிது தாராளக்கொள்கை கொண்டிருந்த ஆசிரியர்கள் வேலையிலிருந்து விலக்கப்பட்டனர். அரசியலில் சம்பந்தப்பட்டதாகச் சந்தேகப்பட்ட மாணவர்கள் நாடு கடத்தப்பட்டனர். இந்த நடவடிக்கைகளினுல் மாணவர்களின் கிளர்ச்சி மேலும் பலப்படவே செய்தது. 1887 டிசம்பர் 4-ம் தேதி மாணவர்கள்கூடி, தங்கள் கோரிக்கைகள் அடங்கிய ஒரு மகஜரை சர்வகலாசாலைத் தலைவரிடம் சமர்ப்பித்தனர். அவர்களின் முன்னணியில் நின்றிருந்த விளாடிமீரும் மற்றும் நாற்பது மாணவர்களும் அன்றிரவே கைது செய்யப்பட்டு, கல்லூரியிலிருந்து விலக்கப்பட்டனர்.

அவருடைய தாயாரின் வேண்டுகோளுக் கிணங்க அவர் கோகுஷ்கினே எஸ்டேட்டில் போலீஸ் கண் காணிப்பின் கீழ் வசித்துவர அனுமதிக்கப்பட்டார். இதைப்பற்றி விளாடிமீர் விசேஷமாக வருத்தப்படவில்லை, வீட்டில் புத்தகங்கள் நிறைந்திருந்தன. பனிச்சறுக்கல் விளையாட்டும், வேட்டையாடுவதும் அவரது பொழுதுபோக்கு.

அந்த வருஷம் இலையுதிர் காலத்தில் விளாடிமீர் மீண்டும் கஸானில் வசிக்க அனுமதிக்கப்பட்டார். ஆனல் சர்வகலா சாலையில் மறுபடியும் சேர அனுமதிகோரி அவர் போட்ட

மனு நிராகரிக்கப்பட்டுவிட்டது. பின்னர் அவருடைய குடும்பத்தார் இரண்டடுக்கு மாடி வீட்டுக்கு குடிபோனார்கள். இங்கு அதிகப்படியாக இருந்த ஒரு சமையலறை அவர் படிக்கும் அறையாகமாறியது. தமது பதினெட்டாவது வயதில் இந்தச் சமையல் அறையில்தான் அவர் கார்ல் மார்க்ஸின் சித்தாந்தத்தைப் படிக்கத் தொடங்கினார்.

அடுத்த வருஷம் அவருடைய குடும்பம் ஸமாராவுக்குச் சென்றது. அங்கு சிறிய மார்க்ஸிய கோஷ்டி ஒன்றை அவர் கூட்டினார். இதற்கிடையில் அவரை மறுபடியும், கல்லூரியில் சேர்க்க அவருடைய தாயார் மீண்டும் மீண்டும் முயற்சி செய்து பார்த்தார். இந்த மனு பற்றிக் கஸான் ஜில்லா கல்வி அதிகாரியின் யோசனையைக் கேட்டார்கள். இதற்கு பாதகமாக அவர் பதிலளித்து விட்டார்.

பிறகு மேரியா அலெக்ஸாண்ட்ரோவ்ன தன் மகன் விவகாரத்தை செயிண்ட் பீட்டர்ஸ்பர்க்கின் கல்வி இலாகா கவனத்துக்குக் கொண்டுபோனாள். அவளுடைய விடா முயற்சியின் விளைவாக, செயிண்ட் பீட்டர்ஸ்பர்க் சர்வ கலா சாலையில் விளாடிமீர் சட்டப் பரீட்சைக்குப் படிக்க அனுமதிக்கப்பட்டார்.

தலைநகருக்குப் போவதற்கு முந்தின கோடை காலத்தில் விளாடிமீர் தீவிரமாகப் படித்தார்.

1891-ல் அவர் சட்டப்பரீக்ஷையில் முதல்தரத்தில் தேரி வக்கீல் தொழிலைத் தொடங்கினார், ஆனால், தலைநகரில் படித்துக்கொண்டிருந்த அவர் தங்கை ஓல்கா டைபாய்டு ஜுரத்தினால் இறந்துவிட்டதால், பரீக்ஷையில் தாம் முதல் தரமாகத் தேரிய மகிழ்ச்சியை அவரால் அனுபவிக்க முடியவில்லை.

அவருடைய தாயின் விருப்பத்திற்கிணங்க அவர் ஸமாராவுக்குத் திரும்பி, வக்கீல் தொழிலை ஆரம்பிப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்தார். ஆனால் அவர் ஆரம்பித்த மார்க்ஸிஸ்ட் சங்க நடவடிக்கைகளை கவனிப்பதற்குத்தான்

அவருக்கு நேரம் சரியாக இருந்தது. அவருடைய தங்கைகளான் அன்ன, மேரியா, தம்பி திமித்ரி இவர்கள்தான் அவருடைய உண்மையான முதல் சிஷ்யர்கள்.

திமித்ரியும், மேரியாவும் அவர்களுடைய காலஞ் சென்ற அண்ணன் அலெக்ஸாண்டரைப் போன்ற ஜாடையுள்ளவர்கள். ஆழ்ந்த கண்களும், விசாலமான நெற்றியும், வெளிறிய நிறமும் உள்ளவர்கள். பார்ப்பதற்கு அழகாக இருப்பார்கள் விளாடிமீரின் சிறிய மூக்கு தடித்திருக்கும். கன்னத்து எலும்புகள் உயர்ந்திருக்கும் அறிவு நிறைந்த கூரியகண்களைத் தவிர, பார்ப்பதற்குச் சாதுபோலவே இருப்பார். இருபத்தோராவது வயதிலேயே அவர் தலை வழுக்கை விழ ஆரம்பித்துவிட்டது.

1892-ம் வருஷ ஆரம்பத்தில் ஸமாரா மாகாணத்தில் கடும் பஞ்சம் ஏற்பட்டது. விவசாயிகள் உணவு தேடிக் கொண்டு நகரங்களுக்கு வந்தபோது அவர்களுக்கு உதவி செய்ய பிரமுகர்களின் கமிட்டி ஒன்று அமைக்கப்பட்டது. அந்த சமயத்தில் விளாடிமீர் எதிர் பாராத முறையில் நடந்து கொண்டார்.

"இந்தப் பஞ்சத்திற்கு சமூக அமைப்புத்தான் காரணம். இந்த அமைப்பு நீடிக்கும் வரையில் பஞ்சங்களைத் தவிர்க்க முடியாது. சமூகஅமைப்பு மாறினல்தான் பஞ்சத்தைஒழிக்க முடியும். இந்த ரீதியில் பஞ்சம் தவிர்க்க முடியாததாக இருப்பதால் பஞ்சம் இன்று முக்கியமான, முற்போக்கான வேலையைச் செய்து வருகிறது......

"சமூகம் எனப்படுவது, பட்டினி கிடப்பவர்களுக்கு உதவ முன் வருவதன் காரணத்தைப் புரிந்துகொள்வது கஷ்டமில்லை. பஞ்சம் பெரிய கலகங்களை ஏற்படுத்தி நடுத்தர வகுப்பையே அழித்துவிடுவதாகப் பயமுறுத்துகிறது. ஆகையால் பஞ்சத்தின் கொடுமையைக் குறைக்கப் பணக்காரர்கள் முயற்சி செய்வது இயற்கையே. பட்டினிகிடப்பவர்களுக்கு

உணவளிப்பதென்பது, நம் அறிவாளி வகுப்பிற்கே இயற்கையான போலி மனப்பான்மையைக் காட்டுகிறது" என்றார் லெனின்.

லெனின் முதல் முறையாக தம் உண்மை குரலை எழுப்பி விட்டார்.

1893-ம் வருஷம் இலையுதிர் காலம் விளாடிமீர் உலியனேவ், செயிண்ட் பீட்டர்ஸ்பர்க் சென்று "எல்டர்ஸ்" ("பெரியோர்") என்ற ரகசிய சமூக ஜனநாயக ஸ்தாபனத்தில் சேர்ந்தார். தொழில் துறையில் ரஷியாவில் மகத்தான விழிப்பு ஏற்பட்ட காலத்தில் அவர் வந்தார். விவசாயிகள், கூட்டங் கூட்டமாக நகரங்களுக்கு வந்து தொழிற்சாலைகளில் வேலை நாடினர். சமூக ஜனநாயக வாதிகள் தொழிலாளர்களின் சிறு கோஷ்டிகளிடையே பிரசாரம் செய்து கம்யூனிஸ்ட் கோட்பாடுகளை போதித்து வந்தனர். இப்பிரசாரம் ஒரளவு உயர்ந்த தரத்தில் இருந்ததால், இந்த கோஷ்டிகள் மக்களிடமிருந்து விலகியே இருந்தன.

பிரசார விவாத அரங்குகளில் தேரியவர்கள் தகராறுகளில் சிக்கிக்கொள்ள வேண்டாமென்று உத்தரவு வந்தது. வேலை நிறுத்தங்களிலோ மற்ற தொழிலாளர் தகராறுகளிலோ அவர்கள் கலந்து கொள்வதேயில்லை.

குறிப்பிட்ட சிலரிடம் மட்டும் பிரசாரம் செய்வதை விட்டுப் பெருத்த அளவில் பிரசாரம் செய்யுமாறு உலியனேவ் உடனே யோசனை கூறினார். பழைய மனப்பான்மை படைத்தவர்கள் அவர் யோசனையை எதிர்த்தனர். ஆனால் அவருடைய ஆதரவாளர்கள் 1895-ம் வருஷத்திற்குள் பெருத்த அளவில் தொழிலாளர் கிளர்ச்சி நடத்துவதை ஆதரிக்கத் தொடங்கிவிட்டனர்.

"பெரியோர்" கோஷ்டிக்கு உலியனேவ் தலைவரானார். ஸெயிண்ட் பீட்டர்ஸ்பர்க் தொழிற்சாலை ஒன்றின் தொழிலாளருக்காக முதல் பிரகடனத்தை அவர் வரைந்தார்.

மார்க்ஸீய வாத எழுத்துக்கள் ஆரம்பத்தில் அதிகார வர்க்கத்திற்குப் பிடிக்காமலில்லை. "இது ஒரு சிறு கும்பல்; இன்னும் ஐம்பது வருஷத்திற்கு இவர்களால் ஒன்றும் செய்ய முடியாது" என்று போலீஸ் தலைவர் ஸ்வோவி யான்ஸ்கி கூறினர். பயங்கரவாத ஸ்தாபனமாகிய "மக்கள் விருப்ப" கட்சியைப் பற்றித்தான் அதிகாரவர்க்கம் நடுங்கிக் கொண்டிருந்தது. இந்த ஸ்தாபனத்தை எதிர்க்க, மன்னரின் ரகசிய போலீஸைவிட மார்க்ஸிஸ்ட்டுகள் அதிக உதவி செய்ய முடியுமென்று அதிகாரிகள் நினைத்தனர். தவிர மார்க்ஸிஸ்ட்டுகளின் எழுத்துக்களில் சிந்தனையும் சாஸ்தி ரீய வாதங்களும்தான் நிறைந்திருந்தன. அவற்றில் ஆழ்ந் திருந்த புரட்சிக் கருத்துக்கள் அபாயகரமாகத் தோன்ற வில்லை. இந்த சமயத்தில் தணிக்கையாளரின் அனுமதியுடன் அத்தகைய இரு பிரசுரங்கள் வெளியிடப்பட்டன. ஒன்று ப்ளகனேவ் எழுதியது; மற்றொன்று ஸ்ட்ருவே எழுதியது.

1894-ம் வருஷ கிறிஸ்மஸ் தினத்தன்று ஸெய்ண்ட் பீட்டர்ஸ்பர்கில் நடந்த ஒரு கூட்டத்தில் இந்த இரு புத்த கங்களையும் பற்றி உலியனேவ் ஒரு கட்டுரையை படித்தார். ப்ளகனேவின் நூலுக்கு அவர் பக்தியுடன் பாராட்டுதலைப் பொழிந்தார். ஆனல் ஸ்ட்ருவே, வைதிக மார்க்ஸிஸத்தி லிருந்து விலகி எழுதியிருந்ததை அவர் வன்மையாகக் கண் டித்தார். சமூக ஜனநாயக ஸ்தாபனத்தில் ஆரம்ப காலத்தி லேயே சேர்ந்திருந்த அலெக்ஸாண்டர் பொட்ரஸோவ் என் பவர் உலியனேவுடன் முதல் முறையாகப் பேசியது இந்தக் கூட்டத்தில்தான்.

பிறகு பல வருஷங்களுக்குப் பின் பொட்ரஸோவ் எழுதிய ஒரு கட்டுரையில் பின் வருமாறு குறிப்பிட்டிருந் தார்: "உலியனேவின் விமரிசனத்தின் வேகமும் கடுமையும் இப்பொழுதுகூட எனக்கு நன்ருக நினைவிருக்கிறது. அவர் ஒரு பெருஞ் சக்தியின் பிரதிநிதியென்றே எனக்குத் தோன்

றியது. கன்னங்களின் பகுதியைத் தவிர அவர் தலையின் மற்றப் பகுதி முழுவதும் வழுக்கை விழுந்திருந்தது; சிறி தாக சிவந்த தாடி வைத்திருந்தார். அவருடைய ஒன்றரைக் கண்கள் புருவங்களுக்கடியிலிருந்து கூர்ந்து பார்க்கும்'' என்று பொட்ரஸோவ் எழுதினார். உலியனேவை, அவருடைய இருபத்து நான்காவது வயதிலேயே அனைவரும் கிழவன் என்று அழைக்கத் தொடங்கிவிட்டனர்.

அவர் சக்திக்கு மீறி வேலை செய்ததால் 1895-ம் வருஷ ஆரம்பத்தில் அவருக்குக் கடுமையான நிமோனியா ஜுரம் கண்டது. ஏப்ரலில் அவர் சிகிச்சைக்காக வெளிநாடு சென்றார். இந்த சமயத்தில் ரஷிய மார்க்ஸிஸத்தின் ஸ்தாபகர்களென்று சொல்லக்கூடிய ப்ளகனேவையும் ஆக்ஸல் ராடையும், மற்ற வெளிநாட்டு சோஷலிஸ்ட் தலைவர்களையும் நேரில் சந்திக்க அவருக்குச் சந்தர்ப்பம் கிடைத்தது. கார்ல் மார்க்ஸின் மாப்பிள்ளையான பால் லாபர்கை அவர் பாரிஸில் சந்தித்தார்.

ப்ளகனேவும் உலியனேவும் 1895-ம் வருஷத்தில் ஜினீவாவில் சந்தித்த பொழுது ப்ளகனேவ் குருவாகவும், உலியனேவ் சிஷ்யராகவும் இருந்தனர்.

ப்ளகனேவ் மனிதத்தன்மை நிறைந்தவர். வேதாந்தியின் உள்ளம் படைத்தவர். இருந்தபோதிலும் எழுத்தின் சக்தியோடு அவர் திருப்தி கொள்ளாமல் அரசியல் தலைவராகவும் ஆனார்; ஆனால் கர்மவாதியின் நிர்தாட்சண்யம் அவருக்குப் பிடிக்காததால் மீண்டும் எழுத்துத் துறைக்கே திரும்பிவிட்டார்.

இலக்கியத்தைப் பற்றியோ கலைகளைப் பற்றியோ பேச்சு எழும்போது லெனினுக்கு அதில் அக்கரை ஏற்படாததை ப்ளகனேவ் கண்டார். அரசியல் வரும்பொழுது அவர் அடியோடு மாறிவிடுவார். இதில் அவருடைய ஒவ்வொரு பேச்சிலும் ஆழ்ந்த சிந்தனை ஒளிவீசும். அவர் வெளியிடும்

கருத்துக்கள் வாழ்க்கையின் அனுபவத்திலிருந்து பிறந்தவை என்று தோன்றும். அவருடைய வாழ்க்கையில் அனுபவம் அதிகமில்லை யென்றாலும் புரட்சி வேலைக்கு அது போதும்.

கட்சிக்குத் தேவையான தலைவனைக் கண்டு பிடித்து விட்டதாக ப்ளெகனேவ் கருதினார். "மக்கள் விருப்ப"க் கட்சியின் மாபெருந் தலைவரான அலெக்ஸாண்டர் மிகெய்லோவை உலியனேவ் ஞாபகப் படுத்துவதாக அவருக்குத் தோன்றியது. மிகெய்லோவைப் போலவே உலியனேவும் ஸ்தாபன அமைப்பு வேலைகளில் இணையற்ற திறமை காட்டினார். இருந்தாலும், ஒரே லட்சியத்தில் நம்பிக்கை கொண்டிருந்த அந்த இருவரும் வெவ்வேறு பாஷை பேசியதாக பொட்ரஸோவ் கருதினார்.

உலியனேவ் ஜினிவாவிலிருந்து கிளம்பி, ஆக்ஸல்ராடைக் காண்பதற்காக ஜூரிச்சுக்குச் சென்றார். அவரை ப்ளெகனேவ் அறிமுகப்படுத்தியிருந்தார். ஆக்ஸல்ராடுக்கு அவரைப்பற்றி அதிகமாக ஒன்றும் தெரியாதாகையால் பேச்சு தாராளமாக ஓடவில்லை. மார்க்ஸிஸத்தைப்பற்றிச் சமீபத்தில் வெளியாகியிருந்த கட்டுரைத் தொகுதி ஒன்றை அவரிடம் உலியனேவ் கொடுத்தார்.

அதிலிருந்த ஒரே கட்டுரை ஆக்ஸல்ராடின் மனத்தைக் கவர்ந்து விட்டது. அதை எழுதியவர் சுய சிந்தனையும் சக்தி வாய்ந்த மனமும் படைத்தவர் என்பதை அது வெளிப்படுத்தியது. ஆனால் தாராள வாதிகள் விஷயத்தில் கட்டுரையின் ஆசிரியர் காட்டிய துவேஷம் அவருக்குக் கவலையூட்டியது. கட்டுரை ஆசிரியரின் பெயர் "கே. டுலின்" என்று குறிப்பிட்டிருந்தது.

"யார் இந்த டுலின் ?" என்று ஆக்ஸல்ராட் கேட்டார்.

"அது என் புனைபெயர்" என்றார் உலியனேவ்.

இதைத் தொடர்ந்து ரஸமான விவாதம் நடந்தது. "ரஷியத் தொழிலாளர்களின் உடனடியான பிரச்னைகளும், சமூகத்தில் உள்ள மற்ற முற்போக்குச் சக்திகளின் பிரச்னைகளும் ஒன்றேயென்று நாங்கள் கருதுகிறோம். ரஷியாவில் தொழிலாளர்களும் தாராள வாதிகளும் நிறைவேற்ற வேண்டிய பொறுப்பு ஒன்றே. அது எதேச்சாதிகாரத்தை ஒழிப்பதாகும்" என்றார் ஆக்ஸல்ராட்.

உலியனேவ் புன்முறுவல் செய்துவிட்டு, "ப்ளெகனேவும் இதையேதான் சொன்னார். அவர் தம் கருத்தை உருவகமாகச் சொன்னார். 'நீங்கள் தாராளவாதிகள் பக்கம் முதுகைத் திருப்பிக் கொள்கிறீர்கள், நாங்கள் முகத்தைத் திருப்பிக் கொள்கிறோம்' என்றார்" என்று உலியனேவ் பதிலளித்தார்.

ஒரு வாரகாலத்தில் பெரும் பகுதியை இந்த விவாதத்திலேயே கழித்தார்கள். தாம் திருப்தியடைந்து விட்டதாக உலியனேவ் இறுதியில் அறிவித்தார். இந்தமுதல் சம்பாஷணை ஆக்ஸல்ராடின் மனத்தில் நன்கு பதிந்துவிட்டது. மார்க்ஸிய தத்துவத்தையும் நன்றாகப் புரிந்துகொண்டு, ஸ்தாபன வேலைகளையும் செய்யும் திறமை படைத்தவர்கள் இதுவரை அந்த இயக்கத்தில் இல்லை.

"அத்தகைய மனிதன் இப்பொழுது நமக்குக் கிடைத்துவிட்டான். அவன்தான் உலியனேவ்" என்று ஆக்ஸல்ராட் அறிவித்தார்.

1895 செப்டம்பரில் உலியனேவ் ரஷியாவுக்கு திரும்பினார்.

ஸெயிண்ட் பீட்டர்ஸ்பர்க்கில் ஜூலியஸ் மார்ட்டோவ் என்பவருடன் உலியனேவுக்குப் பரிச்சயம் ஏற்பட்டது. பிற்காலத்தில் இவர்தான் உலியனேவின் முக்கிய அரசியல் எதிரியாகிவிட்டார். மார்ட்டோவ் செயிண்ட் பீட்டர்ஸ்பர்க் கல்லூரியில் படித்தார். அங்குதான் அவர் புரட்சிக்காரராக

வும் மார்க்ஸீய வாதியாகவும் ஆனார். புரட்சி ஆர்பாட்டங்களில் கலந்துகொண்டதற்காகப் பிற்காலத்தில் அவர் கல்லூரியிலிருந்து விலக்கப்பட்டார். தலைநகரிலிருந்து பலவருஷங்கள் அவர் நாடுகடத்தப்பட்டிருந்ததால் வில்னவில் தொழிலாளர் இயக்கத்தை பலப்படுத்துவதில் முக்கிய பங்கு கொண்டிருந்தார்; இந்த இரு இளைஞர்களும் பொதுப் புத்தகசாலையில் சந்திப்பார்கள். ரகசியப் போலீசார் அவர்களை வெகு ஜாக்கிரதையாகக் கண்காணித்து வருவார்கள். "உன்னதமான ஒருவன், தன் வளர்ச்சியில், மற்றவர்களுக்கு உபதேசிப்பதைவிடத் தான் மேன்மேலும் கற்க விரும்பும் மனோநிலையில் அப்பொழுது உலியனேவ் இருந்தார்" என்று மார்ட்டோவ் எழுதுகிறார்.

அந்தவருஷம் பனிக்காலத்திலும் இலையுதிர் காலத்திலும் உலியனேவை ரகசியப் போலீசார் வெகு ஜாக்கிரதையாகக் கண்காணித்தனர். ஏதாவது கோளாறு ஏற்படக்கூடுமென்று அவர் எதிர்பார்த்தார். தாம் கைது செய்யப்பட்டால் செயிண்ட்பீட்டர்ஸ்பர்குக்குத் தாயார் வரவேண்டாமென்று தங்கை அன்னவிடம் அவர் சொல்லியிருந்தார். அலெக்ஸாண்டரைப்பற்றிய சோகநினைவுகளைத்தானே சிறைச்சாலை மீண்டும் ஏற்படுத்தும்.

ரகசியப் போலீசாரின் "கண்ணமூச்சி" பலமாதங்கள் நீடித்தது. இருந்தும் உலியனேவ் என்ன செய்து வந்தார், யார் யார் அவருடன் ஒத்துழைத்தனர் என்ற விவரங்களைத் தெளிவாகக் கண்டு பிடிக்க அவர்களால் முடியவில்லை. ரகசியப் போலீசார் மற்றொரு தந்திரத்தைக் கையாண்டனர். உண்மையில் ஸ்தாபனத்தில் ஒரு துரோகி இருக்கத்தான் இருந்தான். சில ரூபிள் காசுகளைக் கண்டவுடன் ரகசியங்களை அவன் கொட்டிவிட்டான். 1895 டிசம்பர் 20-ம் தேதி உலியனேவும் மார்ட்டோவும் கைது செய்யப்பட்டனர்.

அவர்கள் பிரசுரிக்க திட்டமிட்டிருந்த பத்திரிகையின் முதல் பிரதியின் 'ப்ரூப்கள்' கைப்பற்றப்பட்டன

## 3. சிறையும் சைபீரியாவும்

ஸெயின்ட்பீட்டர்ஸ்பர்க் சிறை விதிகள் அதிகக் கடுமையாக இல்லை. கைதிகளை உறவினர்கள் வாரத்தில் இரண்டுமுறை வந்து பார்க்கலாம். இந்தச் சந்திப்பின்போது கூச்சல் அதிகமாக இருக்குமாகையால், அவர்கள் எதைப் பற்றிப் பேசினாலும் அவர்களுடன் இருக்கும் காவற்காரர்களின் காதில் விழாது. உறவினர்கள் வாரத்தில் பல முறை தின் பண்டங்களையும் புத்தகங்களையும் கொண்டு வந்து கைதிகளுக்குக் கொடுக்க அனுமதிக்கப் பட்டனர். படிப்பதற்காகக் கொண்டுவரப்படும் பிரசுரங்கள் சரிவரச் சோதிக்கப் படுவதில்லை. ஆகையால் கைதிகள் வெளி உலக அரசியல் விவகாரங்களை நன்ருகத் தெரிந்து கொள்ள முடிந்தது.

உலியனேவ் தடுத்தும் மேரியா அலெக்ஸாண்ட்ரோவ்ன அதைப் பொருட்படுத்தாமல் அடிக்கடி சிறைக்கு வந்து அவரைச் சந்திப்பாள். சிறை விதிகள் அனுமதிக்கும் போதெல்லாம் அன்னவையும் அவள் தன்னுடன் அழைத்து வருவாள். அதிகாரிகளின் கவனத்தைக் கவராத வகையில் ஒரு சங்கேத பாஷையில் எழுதும் முறையை அன்னவுக்கு உலியனேவ் சொல்லிக் கொடுத்தார். இதன் மூலமும், வேறு முறைகளின் மூலமும் வெளியில் இருந்த கட்சித் தோழர்களுடன் உலியனேவ் ஜரூராகக் கடிதப் போக்கு வரத்து நடத்தி வந்தார்.

அவர் கைதியான பின் பல் வேறு சமூக ஜனநாயக கோஷ்டிகளும் ஒன்று சேர்ந்து தொழிலாளர் விடுதலைக் என்ற ஸ்தாபனத்தை அமைத்தன. சிறையிலிருப்பவர்கள் உண்மையில் சமூக ஜனநாயகத் தலைவர்களல்ல என்று சர்க்

கார் நினைக்கும்படிச் செய்வதே இதன் நோக்கம். ஆனால் இது வெற்றி பெறவில்லை. ஒரு மாதத்திற்குப்பின் பொட்ர ஸோவ் உள்பட இந்த ஸ்தாபனத்தின் அங்கத்தினர்கள் பலர் கைது செய்யப்பட்டனர். ஆனால் புது ஆட்கள் அவர் களுடைய ஸ்தானத்திற்கு வந்து, புரட்சிப் பிரசாரத்தைத் தொடர்ந்து நடத்தினர்.

உலியனேவ் சிறையிலிருந்தபோதே, லீகின் தலைவராக ஏற்றுக் கொள்ளப்பட்டார்; அதன் நடவடக்கைகள் பல வற்றை அவர் நடத்தி வந்தார்.

வேலை நிறுத்தங்களைப் பற்றி 1896-ல் அவர் ஒரு சிறு புத்தகம் எழுதினர். 35,000 பஞ்சாலைத் தொழிலாளர்களின் வேலை நிறுத்தத்தைப் பற்றி இது சிறந்த பிரசாரமாக அமைந் தது. "ரஷியாவில் முதலாளித்துவத்தின் வளர்ச்சி" என்ற பெரிய நூலையும் எழுதத் தொடங்கினர். இதற்காகப் பொரு ளாதாரம் பற்றிக் கிடைத்த நூல்களை யெல்லாம் படித்தார்.

பதினறு மாதங்களுக்குப்பின் அவர் ஸெயிண்ட் பீட் டர்ஸ் பர்க் சிறையிலிருந்து வெளி வந்தபோது உடலின் எடைதான் சிறிது குறைந்திருந்ததே தவிர, ஆரோக்கியம் மிகச்செம்மையாக இருந்தது. அந்தக் காலம் வீணாகிவிட வில்லை.

விடுதலையானபின் அவர் நாடு கடத்தப்பட்டு, கிழக்கு ஸைபீரியாவில் உள்ள ஷுஷென்ஸ்கோ கிராமத்திற்கு அனுப்பப்பட்டார். 1897-ம் வருஷம் மே மாதத்தில் அவர் அங்கு போய்ச் சேர்ந்தார். சர்க்காரிடமிருந்து அவருக்கு மாதம் ஏழு ரூபிள், நாற்பது கொபெக் அலவன்ஸாகக் கிடைத்து வந்தது. வாடகை, சாப்பாடு, சலவைச் செலவு களுக்கு இது போதும்.

உலியனேவுக்கு ஸைபீரியா வாழ்க்கை சகிக்க முடியா ததாகத் தோன்றவில்லை. அவர்வாழ்க்கை அமைதியாக இருந்

தது. ஆரோக்யமாகவும் இருந்தது. வேட்டையாடுதல் மீன் பிடித்தல், நீந்துதல் ஆகியவை அவருக்கு மிகவும் பிடித்தமான பொழுதுபோக்குகள். இந்தக் கட்டாயத் தனி வாழ்க்கை படிப்பதற்கும், எழுதுவதற்கும் மிகவும் சௌகரி மாக இருந்தது. மாலையில் அலுத்திருக்கும்போது பக்கத்து வீட்டு விவசாயியின் கித்தார் வாத்தியத்தை வாசிப்பார். பத்திரிகைகள் இல்லாததால் முதலில் சிறிது கஷ்டமாக இருந்ததே தவிர, மற்ற நாகரிக வசதி எதுவும் குறையவில்லை வீட்டுக்கு எழுதிய கடிதங்களில் அவர் திருப்தியாக இருப் பது தெரிந்தது.

எளிய ஆகாரம்—நிரம்பப் பாலும் இறைச்சியும் கிடைத் தது. ஒரு ஆட்டை வெட்டினால் ஒரு வாரத்திற்குப் போது மான மாமிசம் கிடைக்கும்.

அந்தக் கிராமத்திலுள்ள எளியமக்கள் அவரை மிகவும் நேசித்தனர். ஒரு நாள் நடந்த சம்பவத்தை ஸாவெர்ட்கின் என்ற விவசாயி வர்ணித்திருக்கிறார். அன்று ஸாவெர்ட்கின் உலியனேவுடன் தேநீர் அருந்திக்கொண்டிருந்தார். போலீஸ் உடையணிந்த சிலர் ஜன்னலுக்கெதிரே வட்டமிட்டுக் கொண்டிருப்பது தெரிந்தது. உடனே மூவர் வீட்டுக்குள் பிரவேசித்து, "உலியனேவ் படிக்கும் அறை எது?" என்று திமிராகக் கேட்டனர்.

"புத்தகங்களும் காகிதங்களும் குவிந்து கிடந்த மேஜையை உலியனேவ் காட்டினார். சோதனையும், குறுக்கு விசாரணையும் நடந்தன. ஆனால் சில நிமிஷங்களுக்குள் நிலைமை தலைகீழாக மாறிவிட்டது. அவர்கள் மீது உலிய னேவ் அதிகாரம் செலுத்தத் தொடங்கிவிட்டார்"

1898-ல் நாடெஸ்டா க்ருப்ஸ்காயா ஷுஷென்ஸ்கோ வுக்கு வந்து சேர்ந்தாள். ஸெயிண்ட்பீட்டர்ஸ்பர்க்கில் தொழிலாளர்களுக்கான இரவுப் பள்ளிக்கூடத்தில் ஆசிரியை

யாக இருந்தபோது உலியனேவைச் சந்தித்திருக்கிருள். அவர்கள் நெருங்கிய நண்பர்களாகி விட்டனர். உலியனேவ் சிறையிலிருந்தபோது அவர்களுக்கிடையே கடிதப் போக்கு வரத்து நடந்துவந்தது. க்ருப்ஸ்காயாவை உபாவுக்கு பிரஷ்டம் செய்தபோது தன்னை ஷுஷென்ஸ்கோவுக்கு மாற்றுமாறு அவள் கேட்டுக்கொண்டாள். இதற்காக, உலியனேவுக்கும் தனக்கும் கல்யாணம் நிச்சயமாகியிருப்ப தாகக்கூட அவள் சொன்னுள்.

உலியனேவுக்கு அவள் லட்சியத்தோழியாகவும் காரிய தரிசியாகவும் விளங்கினுள். அவருடைய வேலைகளுக்காக அவள் தன்னைப் பூரணமாக அர்ப்பணித்துக் கொண்டு விட்டாள். அவர்களுடைய மணவாழ்க்கை ஆயுள் முழுதும் சௌஜன்யமாக நீடித்தது.

அவர்களுடைய புதிய தாம்பத்ய வாழ்க்கை விசித்திர மாக இருந்தது. ஸிட்னி வெப்பும், பியட்ரிஸ் வெப்பும் எழு திய "தொழிற் சங்க இயக்கத்தின் தத்துவமும் நடை முறை யும்" என்ற நூலை மொழிபெயர்ப்பதில் காலை நேரம் கழியும். பிற்பகலில் இரண்டு மணி நேரம், "ரஷியாவில் முதலாளித் துவத்தின்வளர்ச்சி" என்ற நூலைப் பார்த்து நகல் எழுதுவார் கள்.-இது 1899-ல் 'வ்ளாடிமீர் இலின்' என்ற புனைப்பெயரில் பிரசுரமாயிற்று. இதன்விளைவாக, மார்க்ஸீயதத்துவஆராய்ச்சி யாளர் என்ற ரீதியில் உலியனேவின் அந்தஸ்து உயர்ந்தது.

ஞாயிற்றுக் கிழமைகளில் சட்டத் தகவல் ஸ்தாபனம் ஒன்றை அவர் நடத்தி வந்தார். இதன் விளைவாகப் பெரிய வக்கீலெனப் பிரசித்தி யடைந்தார். தங்கச் சுரங்கத் தொழிலாளி ஒருவர், தன் முதலாளி மீது தொடுத்திருந்த வழக்கில் வெற்றிபெற அவர் உதவி செய்ததால் அவரது பெருமை எங்கும் பரவியது.

நாடுகடத்தப்பட்ட அரசியல் வாதிகளுக்கு லெனின் வீடு தலைமைக் காரியாலயமாக ஆகிவிட்டது. பத்திரிகை

களும் புத்தகங்களும் பரிமாறிக் கொள்ளப்பட்டன. கூட்டங்கள்தடை செய்யப் பட்டிருந்த போதிலும் ஏதாவது ஒரு சாக்கில் மகாநாடுகள் நடத்தப் பட்டன.

வாரத்தில் இருமுறை தபால் வரும்; ஏராளமான கடிதங்களும் பத்திரிகைகளும் புத்தகங்களும் வரும். லெனின் தங்கை அன்னுவும், ஸெயிண்ட் பீட்டர்ஸ்பர்க்கிலிருந்து மற்றும் பல நண்பர்களும் அடிக்கடி கடிதங்கள் எழுதி வந்தனர். துருக்கான்ஸ்கிலிருந்த மார்ட்டோ விடமிருந்தும், ஓர்லோவில் இருந்த பொட்ரஸோவிடமிருந்தும் ஷுஷென்ஸ்கோ அருகிலேயே வசித்துவந்த, பிரஷ்டம் செய்யப்பட்ட மற்ற சகாக்களிடமிருந்தும் கடிதங்கள்வரும். ரஷியாவில் நடந்த சம்பவங்கள் பற்றியும் எதிர் கால திட்டங்கள் பற்றியும் அவர்கள் எழுதினர்கள்.

"பிரஷ்டம் செய்யப்பட்ட சமூக ஜனநாயக வாதிகளின் மூல புருஷனுக வ்ளாடிமீர் இலிச் விளங்கினர்" என்று அவருடைய பழைய நண்பராகிய இஸட். கிருஷிஸானேவ்ஸ்காயா என்பவர் எழுதுகிறர். "சுறுசுறுப்பும் மகிழ்ச்சியும் நிறைந்த அவருடைய வாழ்க்கை முறை எங்கள் எல்லோருக்குமே உணர்ச்சியூட்டியது; சோம்பேறித் தனம் வந்து விடாமல் தடுத்தது."

"அவருடைய செல்வாக்கின் கீழ் வந்தவர்களுக்கு மந்தமோ, சோம்பேறித் தனமோ, சலிப்போ ஏற்படாது. ஒவ்வொருவரும் எதிர் காலத்திற்குத் தங்களைத் தயார் செய்து கொள்வதில் தீவிரமாக முனைந்திருந்தனர். ஒவ்வொருவரும் விழிப்புடனும் மகிழ்ச்சியுடனுமிருந்தனர்" என்று அவர் எழுதியிருக்கிறர்.

தம்முடைய வாழ்க்கையின் கடைசி வருஷத்தில் உலியனேவ் ஒரு பெரிய திட்டம் போட்டார். "செய்ய வேண்டுவதென்ன?" "ஒரு தோழருக்கு கடிதம்" என்ற பிரசுரங்களில் இந்தத் திட்டத்தை அவர் விளக்கியிருக்கிறர்.

சமூக ஜனநாயகப் பத்திரிகை ஒன்றை ரஷியாவுக்கு வெளியே பிரசுரிக்க அவர் உத்தேசித்தார். அதை ரகசியமாக ரஷியாவுக்கு அனுப்பி, ரஷியா முழுவதிலும் மார்க்ஸீய அரசியல் நடவடிக்கைகளை நடத்த விரும்பினர். இது பற்றி கிருஷிஷானேவ்ஸ்கியுடன் அவர் பல தடவைகள் பேசியிருக்கிறார். மார்ட்டோவுக்கும் பொட்ரஸோவுக்கும் இது பற்றிக் கடிதங்கள் எழுதினர். தம்முடைய பிரஷ்ட வாழ்க்கைக் காலம் முடிந்த பின் வெளி நாடு செல்வது பற்றி நண்பர்களுடன் கலந்தாலோசித்தார்.

உலியனேவ் ஸைபீரியாவிலிருந்து புறப்படுவதற்குப் பல மாதங்களுக்கு முன்பே, கவலையூட்டும் செய்திகள் பொட்ரஸோவிடமிருந்து அவருக்கு கிடைத்தன. ஸெயிண்ட் பீட்டர்ஸ்பர்க்கில் சட்டபூர்வமான மார்க்ஸிஸ்டுகள் நடத்தி வந்த பத்திரிகையில், மார்க்ஸிஸத்தின் புரட்சி அம்சங்கள் சிலவற்றை மறுத்து பீட்டர் ஸ்ட்ருவ் என்பவரும், பேராசிரியர் டுகன்பரனேஸ்கி என்பவரும் கட்டுரைகள் எழுதி வந்தனர். பிரபல ஜெர்மன் சமூக ஜனநாயக வாதியான எட்வர்டு பர்ண்ஸ்டீனும், மார்க்ஸீய தத்துவத்தையும் அனுஷ்டான முறையையும் மாற்ற வேண்டுமென்று எழுதியிருந்தார். இவைபற்றி உலியனேவ் பெரிதும் கவலைப்பட்டார். இவர்கள் மீது அவர் உடனே போர் தொடுத்து விட்டார்.

பொட்ரஸோவ், மார்ட்டோவ் ஆகியவர்களின் நாடு கடத்தல் காலமும் அப்பொழுது தான் முடிவடைந்தது. தங்கள் எதிர்கால இயக்கம்பற்றி இவர்கள் மூவரும் ஒன்று சேர்ந்து திட்டமிட்டனர். உலியனேவும் பொட்ரஸோவும் மேற்கு ஐரோப்பாவிற்குப் புறப்படுவதற்கு முன் புஸ்கோவுக்குச் செல்வதென்று தற்காலிகமாக முடிவு செய்யப்பட்டது.

செய்ய வேண்டிய மிகப் பெரிய வேலை, ஸ்தாபன அமைப்புதான். "நம்முடைய புரட்சி ஸ்தாபனத்தையும்

கட்டுப் பாட்டையும் சீர்திருத்தி, சதி முறைகளை ஒழுங்கு படுத்துவது மிக மிக முக்கியம். இந்த விஷயத்தில் பழைய ரஷியப் புரட்சிக் கட்சிகளை விட நாம் பிற்பட்ட நிலையில் இருக்கிறோமென்பதை பகிரங்கமாக ஒப்புக் கொள் ளத்தான் வேண்டும். அவற்றை விட அதிகமாக நாம் முன்னேறி அவற்றை அழிப்பதற்கான எல்லாவித முயற்சி யும் செய்தாக வேண்டும்" என்று உலியனோவ் எழுதினார்.

நாடு கடத்தல் தண்டனைக் காலம் முடிவடைந்து வந் தது. அதற்கு முன்னதாகவே அவர், "ரஷிய சமூக ஜன நாயக வாதிகளின் லட்சியம்" என்ற நூலை எழுதி, என். லெனின் என்ற பெயருடன் ஸ்விட்ஸர்லாந்தில் பிரசுரித் தார். லெனின் என்ற பெயரை அவர் உபயோகித்தது இது தான் முதல் தடவை. தேசப்பிரஷ்ட காலத்தில் அவர் வசித்த இடத்திற்கருகே ஓடும் "லெனா" என்ற நதியின் பெயரிலிருந்து அவர் இந்தப் பெயரை வைத்துக்கொண்டார்.

அவர் ஊர் திரும்புவதற்காக நீண்ட பிரயாணம் 1900, மார்ச்சில் ஆரம்பமாயிற்று.

அவர்கள் உபாவில் தங்கினர். அங்கு கட்சித் தோழர் களின் பாதுகாப்பில் தம் மனைவியை லெனின் ஒப்படைத் த்தார். பிறகு புஸ்கோவுக்குத் தனியாகச் சென்றார். மனைவி புஸ்கோவில் தம்முடன் வந்து இருக்க அனுமதிக்குமாறு போலீஸ் அதிகாரிகளை அவர் கேட்டு கொண்டார். ஆனால் அந்தக் கோரிக்கையைப் போலீசார் நிராகரித்து விட்டனர். ஆனால் மாஸ்கோவில் அவருடைய தாயுடன் அவர் ஒரு வாரம் தங்கியிருப்பதற்கு மாத்திரம் அனுமதிக்கப் பட்டது. அந்த வருஷக் கடைசி வரையில் அவர் உபாவுக்குச் சென்று மனைவியைச் சந்திக்க முடியவில்லை.

லெனின் இல்லாமலிருந்த சமயத்தில் சமூக ஜனநாயக இயக்கத்தின் வேகம் கணிசமாக அதிகரித்தது. ஸெயின்ட் பீட்டர்ஸ்பர்க்கிலும் மற்ற நகரங்களிலும் நடந்த வேலை

நிறுத்தத்தைக் கண்ட ''பொருளாதார வாதிகள்'' என்ற ஒரு புதிய கோஷ்டியார், ''தொழிலாளர்கள் புரட்சி நடவடிக்கைகளை விட்டுத் தங்கள் பொருளாதார உயர்வுக்காகப் போராடினுல் அதிகப் பலன் கிடைக்கும்'' என்று வாதித்தனர். சம்பள உயர்வு, நேரக் குறைப்பு, வேலை நிலைமையில் அபிவிருத்தி முதலியவற்றைச் சமூக ஜனநாயக வாதிகள் ஆதரிக்கவேண்டு மென்று அவர்கள் கோரினர். ''அரசியல் தலைமையை ஏற்படுத்துவது மித வாத அறிவாளிகளின் வேலை; தொழிலாளர்களுக்குத் தனியாக ஒரு கட்சி வேண்டியதில்லை. எதேச்சாதிகாரத்தை எதிர்த்துப் போராடும் மத்தியதரவகுப்புக்கு ஆதரவாக இருப்பது ஒன்று தான் அவர்கள் வேலை'' என்று கூட அந்தப் பொருளாதார வாதிகள் கூறினர்.

1897-ல் ரஷியப்போலந்திலும், லிதுவேனியாவிலும் இருந்த யூதர் சமூக ஜனநாயக ரகசிய கோஷ்டிகள் வில்னுவில் ஒரு மகாநாடு கூட்டி, ''பொதுயூதத் தொழிலாளர் ஸ்தாபனத்தை'' அமைத்தனர். இந்த ஸ்தாபனம் ''பண்ட்'' என்று அழைக்கப் பட்டது. ரஷியாவில் முதல் முறையாகப் பெரிய அளவில் அமைக்கப்பட்ட சமூக ஜனநாயக ஸ்தாபனம் இதுவே, இதில் முக்கியமாக அங்கம் வகித்தவர்கள் ஆலைத் தொழிலாளிகளும் கைத்தொழிலாளர்களுமேயாவர்.

அகில ரஷிய சமூகஜனநாயக ஸ்தாபனங்களின் முதல் மகாநாடு 1898-ல் மின்ஸ்கில் நடை பெற்றது. ரஷிய ஸ்தாபனத்திலிருந்து ஆறு பிரதிநிதிகளும், ''பண்ட்'' ஸ்தாபனத்திலிருந்து மூன்று பிரதிநிதிகளும் இந்த மகாநாட்டிற்கு வந்திருந்தனர். ரஷிய சமூக ஜனநாயகத் தொழிற்கட்சி அந்த மகாநாட்டில் அமைக்கப்பட்டது. மூவர் அடங்கிய மத்தியக் கமிட்டியை மகாநாடு தேர்ந்தெடுத்து, சமூக ஜனநாயக லட்சியங்களை விளக்கும் பிரகடனத்தையும் வெளியிட்டது.

மக்கள் விருப்பக் கட்சியின் புரட்சிக் கருத்துக்களே இதில் அடங்கியிருக்கின்றன.

தனித்தனியாக வேலை செய்து வந்த ஸ்தாபனங்களை மின்ஸ்க் மகாநாடு ஒன்று சேர்த்தது. பிறகு ஆறு மாதத்திற்கெல்லாம் மற்றொரு மகாநாடு நடப்பதாக இருந்தது. ஆனால் மின்ஸ்க் மகாநாட்டில் கலந்து கொண்ட பிரதிநிதிகள் கைது செய்யப்பட்டு நாடு கடத்தப் பட்டனர்.

அதே வருஷத்தில் பொருளாதார வாதிகள் "தொழிலாளர் நலன்" என்ற ஸ்தாபனத்தை ஆரம்பித்தனர். சமூக ஜனநாயக ஸ்தாபனங்கள் தங்கள் மார்க்ஸீயப் பிரசாரத்தை குறைத்துக் கொண்டு, வேலை நிறுத்தம், செய்யும் உரிமை பேச்சுச் சுதந்திரம், பத்திரிகைச் சுதந்திரம், கூட்டம் கூடும் சுதந்திரம் ஆகியவற்றிற்காகப் போராட வேண்டுமென்று இந்தப் புதிய ஸ்தாபனம் வற்புறுத்தியது. இந்த கோஷ்டியை சைபீரியாவிலிருந்தே எதிர்த்து வந்த லெனின் இப்பொழுது அதன் மீது பூரண தாக்குதலைத் தொடங்கினார்.

1900, மே மாதத்தில் லெனின், மார்ட்டோவ், பொட்ரஸோவ், முதலான மார்க்ஸிஸ்டுகள், வெளிநாட்டில் தங்கள் பத்திரிகையைப் பிரசுரிப்பதற்கான இறுதி ஏற்பாடுகள் பற்றி ஆலோசிக்க புஸ்கோவில் ரகசியமாகக் கூடினர். மார்க்ஸீயத்திலிருந்து மாறுபட்ட பொருளாதார வாதிகளையும் மற்றவர்களையும் எதிர்த்துப் போராடுவது அப்பத்திரிகையின் முதல் வேலை. அப்பத்திரிகைக்கு "இஸ்க்ரா (தீப்பொறி) என்று பெயரிடுவதென்று முடிவு செய்தனர். இதற்கு ப்ளெகனேவின் ஆதரவைத் தேட லெனினையும் பொட்ரஸோவையும் வெளிநாட்டுக்கு அனுப்புவதென்று தீர்மானிக்கப் பட்டது.

பின்னர் சிறிது காலத்திற்கெல்லாம் லெனின் தம் நாட்டு எல்லையைக் கடந்து ஜெர்மனிக்குச் சென்றார். அடுத்த படியாக பொட்ரஸோவ் ஸ்விட்ஸர்லாந்தில் ப்ளெக

னேவையும் ஆக்ஸல்ராடையும் சந்தித்துப் பேசிவிட்டு லெனினுடன் போய்ச் சேர்ந்து கொண்டார். பத்திரிகையை ரகசியமாக அச்சிடுவதற்கான வசதியை செய்து கொடுக்க ஜெர்மன் சமூக ஜனநாயகக் கட்சி ஒப்புக் கொண்டது. க்ளாரா ஸெட்கின், அடால்ப்ரான் ஆகியவர்களின் உதவி பொட்ரஸோவுக்குக் கிடைத்தது. பத்திரிகையை லீப்ஸிக்கில் அச்சிட அவர்கள் ஏற்பாடு செய்தனர். ஆசிரியர் குழுவினர் மூனிக்கில் வசிப்பதென முடிவாயிற்று.

கடைசியாக ஒரு மகாநாடு ஜினிவாவில் கூடி, புதிதாக தோன்றவிருந்த புரட்சிப் பத்திரிகை பற்றி ஓர் அறிக்கை வெளியிட்டது. கட்சிச் சக்திகள் எல்லாவற்றையும் தன்னோடு சேர்த்துக் கொள்வது பத்திரிகையின் முதல் நோக்கமென்றும், பத்திரிகைப் பிரதிகளை ரகசியமாக வினியோகிப்பவர்கள் கட்சிக் கிளைகளிடையே தொடர்பை ஏற்படுத்துபவர்களாகவும் இருந்து வரவேண்டுமென்றும், சந்தர்ப்பவாதிகளையும் ஸ்திரபுத்தியில்லாதவர்களையும் எதிர்த்து தாட்சண்யமில்லாமல் போராடவேண்டுமென்றும் அந்த அறிக்கை கூறியது.

"தீப்பொறி" பற்றிக் கொள்ளத் தயாராக இருந்தது.

## 4. போல்ஷ்விஸத்தின் தோற்றம்

"இஸ்க்ரா" பத்திரிகையின் முதல் இதழ் 1900 டிசம்பர், 21-ம் தேதி லீப்ஸிக்கிலிருந்து வெளி வந்தது. அதை ரகசியமாக எடுத்துச் சென்று வினியோகிப்பதற்கு வசதியாக அது மெல்லிய காகிதத்தில் சிறு எழுத்துக்களில் அச்சிடப்பட்டிருந்தது. பத்திரிகைப் பிரதிகள் கப்பலில் ஜெர்மனிக்கு அனுப்பப் பட்டன. அங்கு ஜெர்மன் ஜனநாயகக் கட்சியின் பத்திரிகையான "வோர் வேர்ட்ஸ்" காரியாலயத்தில் இவற்றைச் சிறு கட்டுகளாகக் கட்டி, பார்ஸல்

பெட்டிகளில் மறைத்து வைத்து, எல்லையோரத்தில் உள்ள நகரங்களுக்கு அனுப்புவார்கள். கள்ளக் கடத்தலையே தொழிலாகக் கொண்டவர்கள் அங்கிருந்து இவற்றை ரஷியாவுக்குள் கொண்டு போய், "இஸ்க்ரா" பத்திரிகையின் ஏஜெண்டுகளிடம் ஒப்படைப்பார்கள். பத்திரிகைப் பிரதிகளை எடுத்துச் சென்றவர்களில் பலர் கைது செய்யப்பட்டு ஸைபீரியாவுக்கு அனுப்பப் பட்டனர்.

"இஸ்க்ரா" பத்திரிகை, ஆரம்பம் முதலே வெறும் புரட்சிப் பத்திரிகையாக மட்டும் இருக்கவில்லை. ரஷிய சமூக ஜனநாயக இயக்கத்தின் ஊற்றுக் கண்களில் ஒன்றாகவே அது ஆகிவிட்டது. நாடெங்குமிருந்த கட்சிக் கமிட்டிகளுக்கு அதன் காரியாலயத்திலிருந்து உத்தரவு பறக்கும். அதில் வெளியான கருத்துக்கள், கட்சி ஊழியர்களின் போராட்ட திட்டங்களாக அமைந்தன. "இஸ்க்ரா" பத்திரிகை இவ்விதம் தன் கருத்துக்களைப் பரப்பி மாற்றுக் கருத்துக்களை ஒழித்து வந்தது.

"நம் கட்சி பலமாக அமைக்கப் பட்டிருந்தால் ஒரு சாதாரண வேலை நிறுத்தமே பெரிய அரசியல் ஆர்பாட்டமாகி, ஆட்சியாளரை வெற்றி கொள்ளக் கூடியதாகிவிடும்; ஓரிடத்தில் மூளும் கலகம் எங்கும் பரவி வெற்றிகரமான புரட்சியாகி விடக்கூடும்" என்று அப்பத்திரிகையின் முதல் இதழில் லெனின் எழுதினார்.

அந்த "பலம் பொருந்திய கட்சியை" அமைப்பது தான் லெனினின் லட்சியம். பத்திரிகையை நடத்தும் பொறுப்பில் பெரும்பகுதியை மார்ட்டோவ், பொட்ரஸோவ், ஸாஸுலிச் ஆகியவர்களிடம் விட்டு விட்டு, பத்திரிகை ரஷியாவில் ஏற்படுத்தி வந்த விளைவுகளை லெனின் கவனித்து வந்தார். அங்கு "இஸ்க்ரா" ஆதரவாளர்கள் பொருளாதார வாதிகளையும் மற்ற கோஷ்டிகளையும் எதிர்த்துப் போராடி வந்தனர். அரசியலுக்காகத் தனிப்பட்ட பயங்கரச் செயல்கள் புரிவதை

"இஸ்க்ரா" பலமாக எதிர்த்து வந்தது. "மக்கள் விருப்பம்" ஸ்தாபன சம்பிரதாயத்தில் வளர்ந்தவர்கள், அரசியல் கொலைகளை விடும்படிச் செய்வது கஷ்டமாகத்தான் இருந்தது.

மாற்றுக் கருத்துக்களை எதிர்த்துப் போராடுவதற்காக "இஸ்க்ரா" ஏஜெண்டுகள், நாடெங்கிலும் தொழிலாளர், மாணவர்கள் ஆகியோரிடையே தீவிரப் பிரசாரமும் கிளர்ச்சியும் ஆரம்பித்தனர். பிரசாரத்திற்கும் கிளர்ச்சிக்குமிடையே உள்ள வித்தியாசத்தை லெனின் பின்வருமாறு விளக்கினார். பிரசாரகன் பல கருத்துக்களை ஒன்று திரட்டிக் கொடுக்க வேண்டும். சாதாரண மக்களால் புரிந்து கொள்ள முடியாத படி, சிலர் மட்டுமே புரிந்து கொள்ளுமாறு அவ்வளவு கருத்துக்களை வெளியிட வேண்டும்.

"ஆனால் கிளர்ச்சிக்காரன், நம் முன் உள்ள பிரச்னைகளில் நன்றாகத் தெரிந்த ஏதாவது ஒன்றைப் பொறுக்கி எடுத்து அதில் கவனம் செலுத்த வேண்டும். மக்களிடையே கருத்தை மட்டும் ஊட்ட அவன் முயற்சி செய்ய வேண்டும். அநீதிக் கெதிராக மக்களிடையே அதிருப்தியையும் துவேஷத்தையும் கிளப்பி விட்டு, இந்த முறண்பாட்டுக்குப் பூரண விளக்கம் கூறும் பொறுப்பைப் பிரசாரகர்களிடம் விட்டு விடவேண்டும்" என்றார் லெனின்.

சந்தர்ப்பம் கிடைக்கும் போதெல்லாம் "இஸ்க்ரா" ஏஜெண்டுகள் பத்திரிகைகளையும் துண்டுப் பிரசுரங்களையும் வினியோகித்தனர். சமூக ஜனநாயகக் கட்சிக்கமிட்டிகள் முன் நின்று அடிக்கடி வேலை நிறுத்தங்கள் நடத்தின. வட்டங்கள் என்ற சிறு ரகசிய கோஷ்டிகளிடையே தீவிரப்பிரசாரம் நடத்தப்பட்டது.

ஆனால் முறையாக வேலை செய்வது சாத்தியமாக இல்லை பத்திரமான இடம் கிடைப்பது கஷ்டமாக இருந்தது. இயக்கத்தில் ஈடுபட்டவர்கள் அடிக்கடி கைது செய்யப்பட்டனர்.

பிரசாரம் செய்வதில் அபாயம் இருந்தது. தவிர பிரசாரத்திற்குப் படித்தவர்கள் கிடைக்கவில்லை. ஒருவர் கைதாகி விட்டால், அவர் ஸ்தானத்தை ஏற்க மற்றொருவர் இருக்க மாட்டார். ஆகவே அக்கோஷ்டி சீர்குலைந்துவிடும். இந்த வட்டங்களுக்கான பாட திட்டம் ஆறு முதல் பத்து பிரசங்கங்களுக்குள் முடிவடையும். ஆனால் இந்த திட்டம் பூர்த்தியானதேயில்லை. பல சந்தர்ப்பங்களில் அங்கத்தினர்களுக்கு "இஸ்க்ரா" பத்திரிகையைப் படித்துக் காட்டுவதுதான் பிரசங்கமாக இருக்கும். பிரசாரகர்கள் விவாதிப்பதற்கான விஷயம் ஒவ்வொரு இதழிலும் நிரம்ப வெளிவரும். இவற்றைக்கேட்கும் ஊழியர்களும் இவற்றில் ஆர்வம் கொண்டு, அவற்றைத் தங்கள் நண்பர்களுக்குப் படித்துக் காட்டுவார்கள். பத்திரிகை படிக்க முடியாத அளவுக்குக் கசங்கிப் போகும் வரையில் கைமாறும்.

பல முறைகளில் கிளர்ச்சி நடத்தப்பட்டு வந்தது. சில சமயங்களில், பயிற்சி பெற்ற ஊழியர் ஒருவர், சர்க்கார் பத்திரிகையைப் படித்துக்காட்டி அதோடு தம் சொந்த விமரிசனத்தையும் சேர்த்துச் சொல்லுவார். அதே சமயத்தில். தம் பிரசங்கத்தைக் கேட்பவர்களில் சிறிது நம்பிக்கையூட்டுபவர்களையும் கவனித்துக்கொள்வார். இவர்களை அவர் தம்முடன் அழைத்துச் சென்று தற்காலப் பிரச்னைகள் பற்றிய "சட்டபூர்வமான" புத்தகங்களைக் கொடுத்துப் படிக்கச் சொல்லுவார். அதில் அவர்கள் அக்கறை காட்டினால் பிறகு அவர்களுக்கு ரகசியப் பிரசுரங்களைக் கொடுப்பார். பயிற்சிக் காலம் முடிந்த பின் அவர்கள் கட்சி அங்கத்தினர்களாகச் சேர்த்துக் கொள்ளப் படுவார்கள்.

இஸ்க்ரா துண்டுப் பிரசுரங்கள் தொழிற்சாலைகளில் மாத்திரமின்றி ராணுவப் பாசறைகளிலும் வினியோகிக்கப்பட்டன; தபால் மூலமும் அனுப்பப்பட்டன. பெரிய நகரங்களில் அவை தெருக்களில் இறைக்கப்பட்டிருக்கும். சிறிய

நகரங்களிலும் கிராமங்களிலும் அவை சுவர்களில் ஒட்டப் பட்டிருக்கும்.

இந்தப் பத்திரிகைப் போர், மாஸ்கோ, ஸெய்ண்ட் பீட்டர்ஸ்பர்க், கார்க்கோவ், கீவ், ஒடெஸா முதலிய நகரங் களின் நாடகக் கொட்டகைகளில்தான் மிகவும் பிரமிக்கத் தக்கதாக இருக்கும், கட்சி ஊழியர்கள் கோஷ்டி கோஷ்டி யாக காலரிகளில் உட்கார்ந்து கீழே உட்கார்ந்திருந்த ஜனங் களின் மீது துண்டுப் பிரசுரங்களைப் பொழிவார்கள்.

'இஸ்க்ரா' ஏஜெண்டுகள் புரட்சியையே தொழிலாகக் கொண்டவர்களாக ஆகி வந்ததுதான் குறிப்பிடத்தக்க அம்சம். இவர்களுடைய புரட்சி வேலையின் முக்கியத்து வத்தை வற்புறுத்துவதற்காக லெனினே இவர்களை ஏஜெண் டுகள் என்று குறிப்பிட்டிருக்கிறார்.

லெனின் தம் பெயரைப் பதிவு செய்து கொள்ளாமல் மெயெர் என்ற மாற்றுப் பெயருடன், மூனிக்கில், சமூக ஜனநாயக வாதியான ஸெலூன்காரர் ஒருவர் கொடுத்த அறை யில் வசித்துவரத் தொடங்கினர்.

புரட்சி வேலைகளில் அவர் மூழ்கியிருந்த போதிலும் ரஷியாவிலிருந்த தம் குடும்பத்தை மறந்துவிடவில்லை, 1901 பிப்ரவரி 1-ம் தேதி அவர் பின் வருமாறு கடிதம் எழுதினர்.

"அன்புள்ள அம்மா,

கார்னிவல் விழா சிலதினங்களுக்கு முன்பு தான் முடி வடைந்தது. வெளிநாட்டில் ஒரு கார்னிவலின் கடைசிநாள் விழாவை நான்பார்த்தது இதுதான் முதல்தடவை. முகமூடி அணிந்தவர்களின் ஊர்வலம், தெருவில் போவோர் வருவோர் மீதெல்லாம் வர்ணப் பொடி வீச்சு. சிறு காற்றாடிகள் எல்லாமாகச் சேர்ந்து ஒரே கோலாகலமாக இருந்தது......

"நாத்யாவின் தேசப் பிரஷ்ட காலம் சீக்கிரத்திலேயே முடிவடையும். அவளுக்கு பாஸ் போர்ட் வழங்குமாறு

கோரி சீக்கிரத்திலேயே மனுப்போடுகிறேன். மனியாஷா, ஒரு பெட்டி நிப்புகளை அவளிடம் கொடுத்து அனுப்பினால் சௌகரியமாக இருக்கும். இங்கு நல்ல நிப்புகள் கிடைப்பதே யில்லை. ஜெக்குகளும் ஜெர்மானியரும் அற்பர்கள். இங்கிலீஷ் நிப்புகள் இங்கு வரக் கூடாதாம். இவர்களுடைய சொந்தச் சரக்குகள்தான் கிடைக்கின்றன. இவை ஒன்றுக்கும் உப யோகமில்லை......" என்று லெனில் தம் கடிதம் ஒன்றில் எழுதியிருக்கிறார்.

க்ருப்ஸ்காயாவுக்குத்தான் நாத்யா என்று பெயர். அவளு டைய தேசப் பிரஷ்ட காலம் அனேகமாக முடிவடைந்து விட்டது.

அவள் மேற்கு ஐரோப்பாவுக்கு வந்தவுடன் லெனினைக் கண்டுபிடிப்பதற்காகப் பல நகரங்களில் சுற்றி அலையவேண்டி யிருந்தது. அவள் பிரேக் வந்து சேர்ந்தாள். தான் வரப் போவதாக முன் கூட்டியே தந்தி அனுப்பியிருந்தாள். ஆனால் அவளை வரவேற்க ஒருவரும் வரவில்லை. லெனின் என்ன மாற்றுப் பெயருடன் எங்கே வாழ்ந்து வந்தாரென்பது தெரிய வில்லை. மாட்ராஸெக் என்ற பெயர் வைத்திருப்பாரென்று நினைத்து அந்தப்பெயர் உள்ளவரின் விலாசத்தைத் தேடிக் கொண்டுசென்றாள். அங்கு ஒரு ஸெக் ஸ்திரீ வந்து கதவைத் திறந்தாள். மாட்ராஸெக்கைத் தாம் பார்க்க வேண்டு மென்று அவள் சொன்னபோது, ஒரு தொழிலாளி வந்து தான் மாட்ராஸெக் என்று அறிவித்தான். க்ருப்ஸ்காயா திகைப்படைந்து, "என் கணவர் மாட்ராஸெக்கைப் பார்க்க வேண்டும்" என்றாள். இதன் பொருளை அவன் புரிந்து கொண்டு விட்டான். "ஓ! நீங்கள் ஹெர்ரிட் மெயரின் மனைவி என்று நினைக்கிறேன். அவர் மூனிக்கில் வசிக்கிறார்," என்று பதிலளித்தான்.

க்ருப்ஸ்காயா அங்கிருந்து மூனிக்குக்குப் புறப்பட்டாள். அங்கு ரிட்மெயர் இருக்கும் விலாஸத்தைக் கேட்டுக்

கொண்டு போனுள். ஒரு பீர்கடையில் ஒரு தடியன் அவள் எதிரே வந்து நின்று தான் தான் ரிட்மெயர் என்ருன். "இல்லே, என் கணவர் ரிட்மெயரைக் கேட்கிறேன்" என்ருள். இந்த சங்கடத்திற்கு முடிவே இல்லே போல் தோன்றியது, அவளுக்கு, கடைசியில் ரிட்மெயரின் மனேவி வந்து, க்ரூப்ஸ்காயா யாரென்பதைக் கண்டு பிடித்தாள். "இவர் ஹெர் மெயரின் மனேவியாகத்தான் இருக்க வேண்டும். அவர் தான் தம் மனேவி ஸைபீரியாவிலிருந்து வரப்போவதாகச் சொல்லிக் கொண்டிருந்தார். நான் உங்களே அவரிடம் அழைத்துக் கொண்டு போகிறேன்" என்று சொல்லி க்ரூப்ஸ் காயாவை அந்த வீட்டின் தோட்டத்திற்கு அழைத்துச் சென்ருள். அங்கு லெனின், அவர் தங்கை அன்ன, யார்ட் டோவ் ஆகியவர்கள் உட்கார்ந்திருந்தனர்.

ஒரு தொழிலாளி வசித்துவந்த மூன்று அறை வீட்டில் அவர்கள் குடியேறினர். இரண்டு அறைகளில் அந்தத் தொழிலாளியின் குடும்பம் வசித்து வந்தது. மற்ருேர் அறையை லெனின் தம் படுக்கை அறையாகவும். சமையலறையாகவும் படிக்கும் அறையாகவும் உபயோகித்து வந்தார்.

ஒரு மாதத்திற்குப் பின் அவர்கள் மூனிக்கில் ஷாயிங் பகுதியில் மூன்று அறைகள் கொண்ட ஒரு வீட்டில் குடியேறினர்.

1901 ஆகஸ்ட் 2-ம் தேதி, லெனினின் தாயாருக்கு க்ரூப்ஸ்காயா எழுதிய கடிதத்தில் இப்பொழுதெல்லாம் வோலோட்யா (லெனின்) வெகு ஜாக்கிரதையாக வேலே செய்து வருவதாகக் கூறியிருக்கிருள். "அவர் ஏதாவது வேலேயில் மூழ்கி விட்டால் அவருடைய சுபாவமே அற்புதமாக இருக்கிறது. தூக்கமின்மை நோய் அவருக்கு இப்பொழுது இல்லே. நல்ல ஆரோக்கியமாக இருக்கிருர். ஜலதோஷத்தின் சாயல்கூட இப்பொழுது அவரிடம் காணப்படவில்லே. சுறுசுறுப்புப் பெறுவதற்காக தினமும் பச்சைத்

தண்ணீரினல் உடம்பைத் துடைத்துக்கொள்ளுகிருர். இதைத்தவிர அனேகமாக பிரதிதினமும் நாங்கள் ஸ்நானம் செய்யச் செல்கிருேம்" என்று அவள் தன் கடிதத்தில் எழுதியிருக்கிருள்.

ஆனல் அடுத்த வஸந்த காலத்திலேயே அவர்கள் மறுபடியும் அங்கிருந்து கிளம்பவேண்டியதாகிவிட்டது. லீப்ஸிக்கில் இருந்த அச்சுக்கூடத்தை விட்டுவிட்டனர். மூனிக் அச்சுக் கூடத்தின் புதிய முதலாளி 'இஸ்க்ரா' பத்திரிகையை அச்சிட்டுக் கொடுக்க மறுத்துவிட்டான். இதில் அபாயம் அதிகமிருந்தது. தங்கள் நடவடிக்கைகளை ஸ்விட்ஜர்லாந்துக்கு மாற்றலாமென்று ப்ளெகனேவும் ஆக்ஸல்ராடும் கூறினர். ஆனல் பெரும்பாலானவர்கள் லண்டனுக்கு மாற்றுவதை ஆதரித்தனர்.

லெனினும் க்ரூப்ஸ்காயாவும் 1902 ஏப்ரலில் லண்டனில் போய் இறங்கினர். அப்பொழுது கடுமையான மூடுபனி கொட்டிக் கொண்டிருந்தது.

தங்களுடைய ஆங்கில ஞானத்திற்கும், இங்கிலாந்தில் பேசப்பட்ட ஆங்கிலத்திற்கும் சம்பந்தமில்லையென்பதை லெனினும் க்ரூப்ஸ்காயாவும் சீக்கிரத்திலேயே தெரிந்து கொண்டு விட்டனர். தமக்கே உரிய உற்சாகத்துடன் லெனின் ஆங்கிலம் கற்கத் தொடங்கினர். இரு ஆங்கில ஆசிரியர்களை நியமித்து. அவர்களுக்கு ரஷிய மொழி கற்றுக் கொடுத்து விட்டுத் தாம் ஆங்கிலம் கற்ருர். இதனல் அவர் சீக்கிரத்திலேயே நல்ல ஆங்கில ஞானம் பெற்றுவிட்டார்.

அவருடைய ஆராய்ச்சி வேலைகளுக்கு பிரிட்டிஷ் மியூஸிய புத்தகசாலை பெரிய நிதிபோல் பயன்பட்டது. இவருக்கு முன் கார்ல் மார்க்ஸும் இதை இப்படித்தான் பயன் படுத்திக் கொண்டார்.

லெனின் லண்டனில் இருந்தபோதுதான் ட்ராட்ஸ்கியை முதல் முறையாகச் சந்தித்தார். 'இஸ்க்ரா' உற்சாகி

ஒருவர் ஸைபீரியாவிலிருந்து தப்பி வந்திருப்பதாக ஸமாரா வில் இருந்த நண்பர்கள் ஏற்கெனவே அவருக்கு எழுதியிருந் தனர். அவரை "இளங்கழுகு" என்று அவர்கள் வர்ணித் திருந்தனர். அவருடைய சக்தி வாய்ந்த எழுத்தின் விளைவாக, "பேனு" என்ற பெயரும் அவருக்கு இடப்பட்டிருந்தது.

ட்ராட்ஸ்கியே ஒரு நாள் அவர்கள் இருந்த இடத்திற்குச் சென்று கதவைப் பலமாகத் தட்டினுர். "கதவைத் தட்டிய சப்தத்திலிருந்தே யாரோவிருந்தாளிதான் வந்திருக்கிருரென்று தெரிந்து கொண்டு வேகமாகக் கீழே இறங்கிச் சென்றேன். வந்திருந்தவர் ட்ராட்ஸ்கி. அவரை எங்கள் அறைக்கு அழைத்துச் சென்றேன், வ்ளாடிமீர் இல்லிச் (லெனின்) அப்பொழுதுதான் தூக்கத்திலிருந்து விழித்துக் கொண் டார். ஆனுல் படுக்கையை விட்டு எழுந்திருக்கவில்லை" என்று அந்த சம்பவத்தைப் பற்றி விவரித்திருக்கிருர் க்ரூப்ஸ் காயா.

அவர் "இளங் கழுகு" என்றெல்லாம் உற்சாகமாக வர்ணிக்கப்பட்டிருந்ததால் அவரை வ்ளாடிமீர் இல்லிச் நுணுக்கமாக ஆராய்ந்தார், அவருக்குத் திருப்தி ஏற்பட்ட தாகத் தோன்றியது. ஏனெனின் பின்னர் அவர்கள் இருவரும் ஒன்ருகவே உலாவச் செல்வார்கள்; நிரம்ப விவாதிப் பார்கள். தவிர, ரஷியாவுக்குத் திரும்புமாறு ட்ராட்ஸ்கி அழைக்கப்பட்டபோது, வெளிநாட்டிலேயே இருந்து கட்சி விஷயங்களை அறிந்து கொள்ளுமாறும், 'இஸ்க்ரா' பத்திரி கையை நடத்துவதில் உதவி செய்யுமாறும் லெனின் அவரை கேட்டுக் கொண்டார், ஆசிரியர் குழாத்தைச் சேர்ந்த மற்ற வர்களுடன் ட்ராட்ஸ்கிக்கும் பரிந்து கொண்டு கடுமையாகப் போராடினுர்.

ட்ராட்ஸ்கியை ப்ளெகனேவ் சந்தேகித்தார். லெனின், மார்ட்டோவ், பொட்ரஸோவ் முதலிய இளைஞர்களின் சகாவாக அவரைக் கருதினுர். ட்ராட்ஸ்கியின் கட்டுரைகளை

ப்ளெகனேவுக்கு லெனின் அனுப்பியபோது, அவற்றின் பாணி தமக்குப் பிடிக்கவில்லையென்று ப்ளெகனேவ் பதில் அளித்தார். இதற்கு லெனின், "பாணிஎன்பது பழக்கத்தினுல் வருவது. விஷயங்களைக் கற்றுக்கொள்ள இவர் தகுதியுள்ள வர்தான்; நமக்கு மிகவும் உபயோகமாக இருப்பார்" என்று பதிலளித்தார். 1903-ல் ட்ராட்ஸ்கியின் பயிற்சிக் காலம் முடிவடைந்ததாக லெனின் கருதினர். அவரையும் ஆசிரியர் குழாத்தில் சேர்த்துக் கொள்ள லெனின் பிரேரித்தார்.

வாழ்நாள் முழுதும் புரட்சிக்காக உழைப்பதையே கடமையாகக் கொண்ட ஒரு கோஷ்டியை 'இஸ்க்ரா' பத்திரிகை சிருஷ்டித்து விட்டது.

ரஷியாவில் இருந்த சமூக ஜனநாயகக் கட்சிக் கமிட்டி களில் பெரும்பாலானவை 1902-ம் வருஷமுடிவுக்குள் 'இஸ்க்ரா' அன்பர் கோஷ்டிகளுடன் ஐக்கியமாகி விட்டன. நாட்டில் ஏற்பட்டிருந்த சமூகமாறுதல் வேகம் இதை துரிதப்படுத்தியது. தொழிலாளர் வேலை நிறுத்தங் களைத் தொடர்ந்து மாணவர் வேலை நிறுத்தங்கள், தெருக் களில் ஆர்பாட்டங்கள்; குடியானவர் கலகங்கள் முதலியவை நடந்தன. 1903-ல் மாணவர்களிடையேயும் குடியானவர் களிடையேயும் குழப்பம் அதிகரித்தது.

இதற்கிடையில், "செய்ய வேண்டுவது என்ன?" என்ற நூலை லெனின் பிரசுரித்தார். கட்சி அறிவாளிகளுக்கும் ஊழியர்களுக்குமிடையே இருக்க வேண்டிய உறவு, புரட்சி மனப்பான்மை கொண்ட பிரமுகர்களுக்கும், அரசியல் அறிவுபெருத பாமரமக்களுக்கு மிடையே இருக்கவேண்டிய உறவு முதலியவைபற்றிய தம் கருத்துக்களை லெனின் அதில் வெளியிட்டிருந்தார், அவரைப் பின்பற்றியவர்களுக்கு இப் புத்தகம் வேதமாக ஆகிவிட்டது. புரட்சியையே தொழிலாகக் கொண்டவர்கள் அனுஷ்டிக்க வேண்டிய சித்தாந்தம் இதில் முதல் முறையாகத் தெளிவு படுத்தப்பட்டிருந்தது.

லெனின் தமது நூலில், "தொழிலாளர் வர்க்கம் தன் சொந்த முயற்சியின் மூலம் தொழிற் சங்க உணர்வைமட்டும் தான்—அதாவது முதலாளியை எதிர்த்துப் போராடுதல், தொழிலாளர் நலனுக்கான சட்டங்களை இயற்றுமாறு சர்க்காரை நிர்ப்பந்தித்தல் முதலியவை அவசியமென்று அறியும் உணர்வை மட்டும்தான் அடைய முடியும்; ஆனால் சோஷலிஸ சித்தாந்தமோ வெனில்; பணக்காரர்களும் அறிவாளிகளும் உருவாக்கிய தத்துவ, சரித்திர, பொருளாதார சித்தாந்தங்களின் விளைவாகும்" என்று குறிப்பிட்டிருக்கிறார்.

"நவீன சாஸ்திரீய சோஷலிஸத்தின் சிருஷ்டிகர்த்தாக்களான மார்க்ஸ், எங்கெல்ஸ் ஆகியவர்களின் பிறப்பைக் கவனித்தால், அவர்களே நடுத்தர (பூர்ஷ்வா) வர்க்கத்தைச் சேர்ந்தவர்களென்பது விளங்கும். இதே போலத்தான் ரஷியாவிலும் தொழிலாளர் வர்க்கத்தின் மானஸிக முயற்சி இல்லாமலே சமூக ஜனநாயகக் கருத்து உருவாயிற்று. சோஷலிஸ்ட் அறிவாளிகளுடைய கருத்து வளர்ச்சியின் இயற்கையான விளைவு இது. தொழிலாளர் வர்க்கத்தை பூர்ஷ்வா செல்வாக்கிலிருந்து விடுவித்து சோஷலிஸத்திற்கு மாற்ற புரட்சி அறிவாளிகளால்—புரட்சியையே தொழிலாகக் கொண்டவர்களால்தான் முடியும்" என்கிறார் லெனின்.

இக்காலத்தில் முழு நேரப் புரட்சிக்காரர்களின் ஸ்தாபனத்தையும் அவர் உருவாக்க வந்தார்.

மார்க்ஸீயப் பாதையிலிருந்து இவ்விதம் விலகியதால், 1903-ல் ஏற்படவிருந்த பிளவுக்கும் வித்து ஊன்றப்பட்டு விட்டது. லெனின் பழையபடி கோஷ்டி மனப்பான்மைக்குத் திரும்பி வருவதாக பொட்ரஸோவும் மார்ட்டோவும் கருதினர். ஆனால் லெனினுக்குத் தம் சகாக்களின் புரட்சி குணத்திலேயே சந்தேகம் ஏற்பட்டது. 'இஸ்க்ரா' ஆசிரியர் குழுவிலேயே தகராறுகள் ஏற்பட்டு வந்தன. லெனின் எழுதும் முறையை ப்ளெகனேவினால் சகிக்க முடியவில்லை.

ப்ளெகனேவ் தமது வாக்கியங்களை அழகாக எடை போட்டு எழுதுவார். லெனின், ஜனங்களின் செயல்களை மாற்றுவதற்காக மட்டுமே எழுதினர். விவாதங்களின் போதும் இப்படியே இருக்கும். படித்தவர்கள் அடங்கிய நாகரிக கூட்டங்களில் ப்ளெகனேவுக்கெதிரே லெனின் நிற்க முடியாது. ஆனல் பாமரமக்களைக் "கட்சி அறிஞர்கள்" தான் சாதாரண கோஷங்களைத் திருப்பித்திருப்பிச் சொல்லிக் கிளறி விட்டனர். லெனின் இயற்கையான அரசியல் தலைவர் அவருடைய எதிரிகள் அவ்விதமில்லை.

ஸ்ட்ருவ் மார்க்ஸிஸ்டுகளைத் துறந்து தாராளவாதிகள் கோஷ்டியில் சேர்ந்தபொழுது, அவரை "துரோகி" என்று வர்ணித்து 'இஸ்க்ரா'வில் லெனின் எழுதினர். "இப்படி எழுதலாமா? இதைப் படிக்கும் ஊழியர்கள் அவரைக் கொலை செய்துவிடமாட்டார்களா?" என்று அப்பொழுது லெனினின் நெருங்கிய நண்பராக இருந்த தக்தரேவ் கேட்டார்.

"அவன் சாகத்தான் தகுதியுள்ளவன்" என்று லெனின் அமைதியாக பதிலளித்தார். இது 1903–ல் நடந்தது. தக்தரேவுக்கு லெனினையோ அவருடைய சமூக ஜனநாயகக் கட்சி சகாக்களையோ பிடிக்கவில்லை. அவர் உபயோகித்த கடுமையானபாஷை வெறும்சொல்வன்மையாகவே கருதப்பட்டது.

'இஸ்க்ரா' பத்திரிகையின் ஆசிரியர்களுக்குள் பெரும் அபிப்பிராயபேதம் 1902–ல் ஆரம்பமாயிற்று. அப்பொழுது கட்சி வேலை திட்டம் லெனினுக்கோ, மார்ட்டோவுக்கோ, ஆக்ஸல் ராடுக்கோ திருப்தியளிக்கவில்லை.

பாட்டாளிகளின் சர்வாதிகாரத்திற்காகவே கட்சி போராடுகிறதென்பதை அறிவிக்க வேண்டுமென லெனின் வற்புறுத்தினர்.

புரட்சியில் கீழ்–மத்தியதரவகுப்பினர் முக்கிய ஸ்தானம் வகிப்பார்களென்று ப்ளெகனேவ் கூறினர். மார்ட்டோவும் பொட்ரஸோவும் லெனினை அரைமனத்துடன் ஆதரித்தனர்.

மார்ட்டோவ், ஸாஸுலிச், தியோடார்டான் ஆகியவர்கள் புதிய சமரச ஒப்பந்தம் ஒன்றைத் தயாரித்தனர். இது இறுதியில் ஏற்றுக் கொள்ளப்பட்ட போதிலும் லெனினுக்குத் திருப்தியளிக்கவில்லை.

பின்னர் புதிய கருத்து வேற்றுமைகள் ஏற்பட்டன. லண்டனில் இருந்த 'இஸ்க்ரா' காரியாலயத்திற்கும்,ஸ்விட்ஜர்லாந்தில் இருந்த ப்ளெகனேவ், ஆக்ஸல்ராட் தலைமைக் காரியாலத்திற்கு மிடையில் வேற்றுமை விரிவடைந்து கடைசியாக 1903-ல் 'இஸ்க்ரா'காரியாலயம் ஜினிவாவுக்கு மாற்றப்பட்டது. கருத்து வேற்றுமைக்கிடமான விஷயங்கள், லெனின், ப்ளெகனேவ். மார்ட்டோவ், பொட்ரஸோவ், ஸாஸுலிச், ஆக்ஸல்ராட் ஆகிய ஆறுபேர் அடங்கிய போர்டினிடம் சமர்ப்பிக்கப்பட வேண்டுமென்று ஏற்பாடாயிற்று. இதில் அடிக்கடி லெனின், மார்ட்டோவ், பொட்ரஸோவ் ஆகிய மூவர் ஒரு கட்சியாகவும், மற்ற மூன்று பழைய சமூக ஜனநாயக வாதிகள் ஒரு கட்சியாகவும் இருந்ததால் நெருக்கடி ஏற்பட்டது.

லெனின் 1903-ல் இங்கிலாந்தைவிட்டு வெளியேறி, ஜினீவாவில் தொழிலாளர் வாழ்ந்துவந்த பகுதியாகிய ஸெகிரான் என்ற இடத்தில் ஒரு சிறிய வீட்டில் குடியேறினர். இப்பொழுது 'இஸ்க்ரா'வுக்குள்ளேயே சண்டை வலுவடைந்து வந்தது. லெனினை ஆதரித்து வந்த பொட்ரஸோவே, அவருடன் சேர்ந்து வேலை செய்வது அசாத்தியமென்று கூறினர். "உலகத்தை லெனின் இரண்டே பிரிவாகத்தான் பிரிக்கிறர். ஒரு பிரிவு தன்னை ஆதரிப்பதாகவும் மற்றொரு பிரிவு எதிர்ப்பதாகவும் அவர் கருதுகிறர். இவை தவிர உலகத்தில் நடு நிலையான இடம் இருப்பதாகவே அவர் நினைக்கவில்லை" என்று அவர் கருதினர்.

போராட்டமே தங்களைச் சூழ்ந்து கொண்டிருந்த போதிலும், லெனினுடன் தினசரி ஏற்படும் தகராறுகளின்

நீண்டகால விளைவுகளை மற்ற ஆசிரியர்கள் உணரவில்லை. இவற்றைக் குடும்பச் சண்டைகளாகவே அவர்கள் பாவித்தனர். தம் சொற்படி நடக்கும் போட்டி ஸ்தாபனம் ஒன்றை அமைக்க லெனின் விரும்பினரென்று அவர்கள் சந்தேகிக்க வில்லை. உண்மையில் லெனின் அதைத்தான் செய்ய ஆரம்பித்திருந்தார். இந்தப் போட்டி ஸ்தாபனம்தான் கம்யூனிஸ்ட் கட்சியின் கரு. அந்தக்காலத்திலேயே லெனின் தமக்கு அடங்கி நடப்பவர்களை மட்டும்தான் தம்மோடு வைத்திருந்தார்.

லெனின் ஸ்தாபன அமைப்பில் வல்லவர். கட்டுப்பாட்டை நிலை நாட்டுவதில் அபார வல்லமை படைத்தவர். லெனின் நிருவிய ஸ்தாபனத்தில் ராணுவ கட்டுப்பாடுபோன்ற கட்டுப்பாடு நிலவியது. "புரட்சிகரமான சிறு பான்மையினரின் கட்சி இது. தக்க சமயத்தில் அதிகாரத்தைக் கைப்பற்றுவதே இதன் நோக்கம்" என்று பொட்ரஸோவ் கூறினர்.

"பாமரமக்கள், புரட்சியையே தொழிலாகக் கொண்டவர்களின் கைக் கருவிகளே" என்பது லெனினின் சிந்தாந்தம். இதைப் பிரத்யட்சமாக அமல் நடத்த ஏற்பட்டதுதான் அவருடைய கட்சி.

இதனுல் கலகம் விளைவிப்பது தவிர்க்க முடியாததாக ஆகிவிட்டது. இதற்குக் களம் 1902-ல் தயாராயிற்று. அப்பொழுது 'இஸ்க்ரா'வின் முயற்சியால் கட்சி மகாநாடு ஒன்றைக் கூட்ட ரஷியாவுக்குள்ளேயே ஒரு கமிட்டி அமைக்கப்பட்டது. லெனின் கலத்துகொள்ளவிருந்த முதல் மகாநாடு இதுதான்.

1903-ம் வருஷம் கோடைகாலத்தில் ரஷியாவின் பல்வேறு பருதிகளிலிருந்தும் பிரதிநிதிகள் வந்து ஜினீவாவில் கூடத்தொடங்கினர். முதலில்வந்த பிரதிநிதிகளில் ஷாட்மனும் ஒருவர். இவர் செய்ண்ட்பீட்டர்ஸ்பர்க் தொழி-

லாளி. ரஷியாவிலிருந்து வெளியேறிய தலைவர்களுடன் நெருங்கிய தொடர்பு கொள்ளும் அரிய வாய்ப்பு இவருக்குக் கிடைத்திருந்தது.

லெனினைத்தாம் முதலில் சந்தித்தது பற்றி ஷாட்மன் பின் வருமாறு எழுதியிருக்கிறார். "அந்தக் கூட்டத்தில் என்ன நடந்ததென்பது எனக்கு நினைவில்லை. ஆனால் அவருடைய முதல் பிரசங்கத்தைக் கேட்டவுடனேயே நான் அவர் பக்கம் சேர்ந்து விட்டேனென்பது மாத்திரம் நன்றாக ஞாபகமிருக்கிறது. அவர் பேசியபாணி அவ்வளவு எளிமையாகவும் தெளிவாகவும், திருப்தியூட்டுவதாகவும் இருந்தது

"ப்ளெகனேவ் பேசியபொழுது அவருடைய பேச்சின் அழகை நான் ரசித்தேன் ஆனால் எதிர்த்துப்பேச லெனின் எழுந்த பொழுதெல்லாம் நான் அவரையே ஆதரித்தேன். காரணம் என்ன ? அது எனக்கே தெரியவில்லை. இது என் விஷயத்தில் மாத்திரம் இப்படியில்லை. என் போன்ற மற்றத் தொழிலாளர்களும் இப்படியே உணர்ந்தனர்."

லெனினுக்கும் ப்ளெகனேவுக்கு மிடையில் வேற்றுமைகள் இருந்தபோதிலும் பூர்வாங்கப் பேச்சுக்களில் பிரதிநிதிகளுக்கிடையே கணிசமான ஒற்றுமை இருப்பதாகத் தோன்றியது. மகாநாடு அமைதியாக முடிவடையுமென்று எதிர்பார்க்கப் பட்டது. பிரதிநிதிகள் இந்த நம்பிக்கையுடன்தான் ஜினிவாவிலிருந்து பிரஸ்ஸல்ஸுக்குச் சென்றனர். மகாநாடு 1903 ஜூலை 30-ம் தேதி பிரஸ்ஸல்ஸில் ஆரம்பமாயிற்று.

பந்தோபஸ்துக்காக மகாநாடு அடிக்கடி இடம்மாறி நடைபெற்றது. பிரஸ்ஸல்ஸில் தொழிற்சங்க மண்டபங்களில் மகாநாடு நடந்தது. கட்சியின் வேலைத்திட்டம் பற்றிக் காரசாரமான விவாதம் நடந்தது. 24 மணி நேரத்திற்குள் நகரை விட்டு வெளியேறுமாறு நாலு பிரதிநிதிகளைப் போலீசார் எச்சரித்திருந்தனர். எல்லாப் பிரதிநிதிகளின் நடவடிக்-

கைகளையுமே போலீஸார் கூர்ந்து கவனித்து வந்தனர். மகாநாட்டை லண்டனுக்கு மாற்றுவதென்று தீர்மானிக்கப்பட்டது.

பிரதிநிதிகள் லண்டன் வந்து சேர்ந்த மறுநாள் காலை மகாநாடு ஆரம்பமாயிற்று. மகாநாட்டிற்கு வந்திருந்த 43 பிரதிநிதிகளில் 3 அல்லது 4 பேர்தான் தொழிலாளர்கள். மற்றவர்கள் புரட்சியையே தொழிலாகக் கொண்டவர்கள். இவர்களிடம் மொத்தம் 51 வோட்டுகள் இருந்தன, இவர்கள் இஸ்க்ரா கோஷ்டி, யூதசோஷலிஸ்ட் பண்ட், பொருளாதார வாதிகள் என்று மூன்று பிரிவுகளாகப் பிரிந்தனர். இவர்களுக்கிடையில் வேற்றுமைகள் அதிகமிருந்தன. பந்தம் அதிகமில்லாத சம்மேளனம் அமைக்கப்பட வேண்டுமென்று பண்ட் கருதியது. இஸ்க்ரா கோஷ்டியின் கருத்துக்குப் பணிய பொருளாதார வாதிகள் விரும்பவில்லை.

உறுதியான ஸ்தாபனத்தை அமைக்கும்திட்டம் வெற்றி பெற வேண்டுமானல் அது ஆரம்ப முதலே கட்டுப்பாட்டை எவ்வளவுதூரம் அமல் நடத்தமுடியும் என்பதைப் பொறுத்திருக்கிறதென்பதை லெனின் அறிந்தார். ஆகையால் 'இஸ்க்ரா' கோஷ்டியினர் மட்டும் அடங்கிய ஒரு குழு அமைக்க அவர் ஒரு பிரேரணையை கொண்டுவந்தார். அதில் ப்ளெகனேவ் தலைவர், லெனினும் பாவ்லோவிச்க்ராஸிகோவும் உப தலைவர்கள். இதை மார்ட்டோவ் எதிர்த்தும் லெனின் வெற்றி பெற்றார். லெனின்–மார்ட்டோவ் போராட்டத்திற்கு இதுதான் ஆரம்பம்.

கட்சியில் 'இஸ்க்ரா' வின் ஆதிக்கத்தை எதிர்தவர்களை எச்சரிப்பதே இதன் நோக்கமென்று பின்னர் லெனின் ஒப்புக்கொண்டார்.

கட்சி அங்கத்தினர்கள் சம்பந்தமான விதிகளைத் தயாரிப்பதில் மார்ட்டோவிடம் லெனின் தோற்றார். கட்சி வேலைத் திட்டத்தை ஏற்பதுடன், கட்சி ஸ்தாபனங்களில் ஏதாவது

ஒன்றில் தீவிரமாக ஒத்துழைப்பவர்கள் மட்டுமே அங்கத்தினர்களாகச் சேர்த்துக் கொள்ளப்படவேண்டுமென்று லெனின் கருதினர். "கட்சி வேலை திட்டத்தை ஏற்றுக் கொண்டு, அதன் ஸ்தாபனங்களின் ஏதாவது ஒன்றின் ஆதரவின்கீழ் சொந்த முறையில் ஒத்துழைக்கும் அனைவரும் கட்சி அங்கத்தினர்களாகச் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்" என்று மார்ட்டோவ் கூறினர்.

வார்த்தையில்தான் இவற்றுக்கிடையே வித்தியாசமென்று பலர் நினைத்தனர். ஆனல் இந்த வார்த்தை வேற்றுமையினல்தான் சமூக ஜனநாயகக்கட்சி பிற்காலத்தில் "போல்ஷ்விக்" கட்சி என்றும் "மென்ஷ்விக்" கட்சி என்றும் ஒன்று சேரமுடியாதபடி பிரிந்துவிட்டது. "மார்ட்டோவின் தவறு தேசத் துரோகத்திற்கு ஒப்பானது. எதேச்சாதிகார ஆட்சி கவிழ்க்கப்பட்டபின் பூர்ஷ்வா ஜனநாயக அமைப்புக்குள்ளேயே போராடுவது தான் அதன் நோக்கம்" என்று இந்த வேற்றுமை பற்றி, 1937-ம் வருஷத்தில் உத்தியோக பூர்வமாக வியாக்கியானம் செய்யப்பட்டது. மென்ஷ்விக்குகள்பூர்ஷ்வா ஜனநாயக அமைப்புக்குள்ளேயே போராட விரும்புவதாக 1903-லேயே சொல்லியிருந்தால் அவர்கள் ஆத்திரமடைந்திருப்பார்கள். உண்மையில் லெனின் கூறியவற்றையேதான் அவர்களும் சொல்லி வந்தார்கள். ஆனல் 1903-முதல் 1917வரை நெருக்கடியான சமயங்களில் அவர்களுடைய பேச்சுக்கும் செயலுக்குமிடையே சம்பந்தமில்லாமலிருந்தது. அவர்களுடைய சித்தாந்தம் எதுவாயிருந்த போதிலும் அவர்கள் சோஷலிஸத்திற்காக "பூர்ஷ்வா" ஜனநாயகத்தை பலியிடத்தயாராக இல்லை. சொல்லுக்கும் செயலுக்குமிடையே இருந்த இந்த முரண்பாடுதான் இவர்களுடைய பலவீனம்.

அங்கத்தினர்கள் பற்றிய ஷரத்தில் மார்ட்டோவ் சிறிது அதிக வோட்டுக்கள் பெற்று வெற்றி பெற்ற போதிலும்

மற்றெல்லா முக்கியமான விஷயங்களிலும் லெனின்தான் வெற்றி பெற்ருர். அவருடைய வெற்றிகளுக்கு முக்கிய காரணம் ப்ளெகனேவ்தான்.

1903–ல் லெனினை ஆதரித்த பெரும்பான்மை கோஷ்டி "போல்ஷ்விக்குள்" (பெரும்பான்மையினர்) என்றும். மார்ட்டோவை ஆதிரித்தவர்கள் "மென்ஷ்விக்குகள்" (சிறு பான்மையினர்) என்றும் அழைக்கப்பட்டனர்.

உறுதியானகட்சி அமைக்கும் விஷயத்தில் ப்ளெகனேவ் லெனினை ஆதரித்தார். தனித்தனியே வேலை செய்துவந்த கட்சிப்பிரிவுகளைக் கலைத்து அவற்றின் அங்கத்தினர்களை ஒரே கட்சியில் சேர்க்க வேண்டுமென்று மகாநாடு தீர்மானித்தது. இந்தத் தீர்மானம் நிறைவேறிய பின் பண்ட் கோஷ்டியும் மற்றும் சில கோஷ்டிகளும் மகாநாட்டிலிருந்து வெளியேறின. இதன் பின் இஸ்க்ரா கோஷ்டி பூரணமாக ஆதிக்கம் செலுத்த முடிந்தது. ஆனல், கருத்து வேற்றுமை கொண்டவர்கள் விலகியதால் ஒற்றுமை ஏற்பட்டுவிடவில்லை மார்ட்டோவுக்கும் லெனினுக்குமிடையே போராட்டம் நீடித்தது ; ப்ளெகனேவ் லெனினை ஆதரித்தார்.

'இஸ்க்ரா' ஆசிரியர் குழுவை மூன்று பேராகக் குறைக்கவேண்டுமென்று லெனின் ஒரு பிரேரணை கொண்டு வந்து வெற்றிபெற்ருர். லெனின், ப்ளெகனேவ், மார்ட்டோவ் ஆகிய மூவரும் அந்தக்குழுவில் இருக்க வேண்டுமென்று அவருடைய பிரேரணை கூறியது. "மார்ட்டோவ் ஆதரவாளர்களான ஆக்ஸல்ராட், பொட்ரஸோவ், ஸாஸுலிச் ஆகியவர்கள் குழுவிலிருந்து விடுபட்டுப்போய் விடுவார்கள்; மூவர் அடங்கிய குழுவில்தாம் ஆதிக்கம் செலுத்தலாம்" என்று லெனின் கருதினுர்.

ப்ளெகனேவ் நிகழ்த்திய ஒரு முக்கியமான பிரசங்கம் லெனின் நம்பிக்கையை ஊர்ஜிதம் செய்தது. லெனின் வற்புறுத்தியதன் பேரில் "பாட்டாளி சர்வாதிகாரம் என்பதில்,

பட்டாளிவர்க்கத்திற்கு நேரடியாகவோ மறைமுகமாகவோ அபாயம் விளைவிக்கும் சக்திகளை ஒடுக்குவதும் சேரும்" என்று அவர் நகல் விதிகளில் ஏற்கெனவே எழுதியிருந்தார்.

ப்ளெகனேவ், தாம் லண்டனில் நிகழ்த்திய பிரசங்கம் பற்றித் தம் கடைசிக் காலத்தில் வருத்தப்பட்டிருக்கிறார். மகாநாடு முடிந்த சில வாரங்களுக்குள்ளாகவே, லெனினுக்கு தாம் அளித்த ஆதரவை ப்ளெகனேவ் வாபஸ்பெறத் தொடங்கினர். அவருடைய பிரசங்கத்திற்கு வேறு விதமான பொருள் கூற மார்ட்டோவ் முயற்சித்தார். "ப்ளெகனேவின் சொற்கள் சில பிரதிநிதிகளிடையே ஆத்திரமூட்டியது.

"பாட்டாளி வர்க்கம் தன் வெற்றியை பலப்படுத்திக் கொள்வதற்காக இத்தகைய முறைகளை அனுஷ்டிக்க வேண்டிய நிலைமை ஏற்படுமானல் அது வருந்தத்தக்கதே' என்று ப்ளெகனேவ் சொல்லியிருந்தால் இதைத் தவிர்த்திருக்கலாம்" என்று மார்ட்டோவ் கூறினர்.

சுதந்திரத்தை நசுக்கும் சொற்களைக் கலைக்க இது ஒரு தைரியமான முயற்சி. ஆனல் அவருடைய பின்யோசனைக்காக ப்ளெகனேவ் பரிகாச நன்றி செலுத்தினர்.

பிற்காலத்தில் லெனினிஸத்திற்கு ப்ளெகனேவின் பிரசங்கமே காரணமென்று எடுத்துக் காட்டப்பட்டது. ஜனநாயகபூர்வமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பார்லிமெண்டைக் கலைப்பது பேச்சளவில்தான் சாத்தியம் என்று தாம் கூறியதாகவும், இது அவசியமென்றே தவிர்க்க முடியாததென்றே தாம் சொல்லவில்லையென்றும் அவர் சமாதானம் சொன்னர். இது வெறும் நொண்டிச் சமாதானமே. மகாநாட்டில் அவர் லெனினை திடமாக ஆதரித்தார் என்பதற்கும், பிறகுதான் அவர் மனம் மாறி மார்ட்டோவ் பக்கம் சேர்ந்தார் என்பதற்கும் தஸ்தாவேஜுகள் தெளிவாகி உள்ளன.

ஒற்றுமையாக ஆரம்பித்த மகாநாடு குழப்பத்தில் முடிந்தது. கடைசிக் கூட்டம் முடிந்த மறுநாள் காலை மார்ட்டோவும் அவருடைய சகாக்களும் பார்ரிஸுக்குப் புறப்பட்டனர்; லெனினும் அவர் சகாக்களும் ஜினிவாவுக்குப் புறப்பட்டனர். இரு கோஷ்டியினருக்கு மிடையில் முகாலோவனம் கூட இல்லை.

மூவர் அடங்கிய 'இஸ்க்ரா' ஆசிரியர் குழாத்தில் இருக்க மார்ட்டோவ் மறுத்துவிட்டார். ஆக்ஸல்ராட், பொட்ரஸோவ், ஸாஸுலிச் ஆகியவர்கள் மீது தெரிவிக்கப்பட்ட அவநம்பிக்கையை அவர் ஏற்க மறுத்தார்.

சிறிது காலத்திற்குப்பின் ஜினிவாவில் மற்றொரு கூட்டம் நடைபெற்றது. இதனால் வேற்றுமை அதிகரிக்கத்தான் செய்தது. ப்ளெகனேவ் இன்னமும் லெனினையே ஆதரித்து நின்றார். இஸ்க்ராவில் ஆதிக்கம் செலுத்த லெனின் முயற்சிக்கிறாரென்று அவரை நம்பவைக்க மார்ட்டோவ் முயன்றும் பலனில்லை, ஜினீவாவில் லெனினை எதிர்த்துப் போராடுவதில் மார்ட்டோவுடன் ட்ராட்ஸ்கியும் சேர்ந்து கொண்டார். 'இஸ்க்ரா' ஆசிரியர் குழுவுக்கு ஆக்ஸல்ராட் பொட்ரெஸோவ், மார்ட்டோவ், ஸாஸுலிச் ஆகியவர்களைத் திருப்பி அழைத்து அதைப் பழைய அடிப்படையில் மாற்றி அமைக்குமாறு ப்ளெகனேவ் யோசனை கூறியபோது, லெனின் அதை ஏற்கமறுத்து விட்டார். ஒற்றுமை ஏற்படுத்த இதைத்தவிர வேறு வழி இல்லையென்று ப்ளெகனேவ் வற்புறுத்திச் சொன்னபோது, லெனின் தமது ராஜிநாமாக்கடிதத்தை அவரிடம் கொடுத்தார்.

"மென்ஷவிக்குகளுடன் சேர்ந்து வேலை செய்வது அசாத்தியம் என்பதை நீங்களே உணர்வீர்கள் என்பது நிச்சயம். இஸ்க்ரா ஆசிரியர் பதவியிலிருந்து நான் ராஜிநாமா செய்கிறேன். எதிர்காலச்சம்பவங்களுக்கு நீங்கள் தான் பொறுப்பு" என்று அவர் தம் ராஜிநாமாக் கடிதத்தில் எழுதியிருந்தார்.

பழைய சமூக ஜனநாயகக் கட்சித் தோழர்களுடன் சேர்ந்து வேலை செய்யாமல் பிரிவது லெனினுக்குக் கஷ்டமாகத்தான் இருந்தது. தற்காலிகமாகத் தாம் தனித்து நிற்க வேண்டியிருக்குமென்பதையும், தம்கருத்துகளின் வெற்றிக்கான பிரசாரயுத்தம் நடத்த சரியான சாதனம் இல்லாமல் போய்விடுமென்பதையும் அவர் அறியாமலில்லை.

லெனினின் செயலை அவருடைய பழைய சகாக்கள் கண்டித்தனர். சர்வாதிகாரி, பிடிவாதக்காரன், குறுகிய நோக்கு உடையவன் என்றெல்லாம் நிந்தித்தனர். "சாண் ஏறி முழம் சறுக்கிய கதை" என்ற தலைப்புடன் லெனினே 1904-ல் எழுதிய பிரசுரத்தில் உள்ள வசை மொழிகளை எடுத்துக் காட்டினர்.

ட்ராட்ஸ்கிதான் லெனினை அதிகக் கடுமையாகத் தாக்கினர். "சாண் ஏறி முழம் சறுக்கிய கதை"க்கு அவர் பதிலளிக்கையில், லெனின் பதவிக்கு வந்தால், சர்வதேசப் பாட்டாளி இயக்கம் முழுவதையுமே மிதவாத இயக்கம் என்று அவர் குற்றம் சாட்டுவார். மார்க்ஸின் சிங்கத்தலை முதலில் உருளும்" என்று எழுதினர். "பாட்டாளி சர்வாதிகாரத்தைப் பற்றி லெனின் சொல்லும்போது, பாட்டாளிகள் மீது செலுத்தும் சர்வாதிகாரத்தையே குறிப்பிடுகிருர்" என்று எழுதினர்.

இச்சண்டை குடும்பச் சண்டை நிலையைக் கடந்துவிட்டது. ஆரம்பத்தில் இருந்த கருத்து வேற்றுமை லெனினுக்கும் மென்ஷ்விக்குகளுக்கு மிடையில் பெரிய பிளவாக முற்றிவிட்டது.

பலமாதப் பதவிப் போட்டியின் விளைவாக, லெனின், ஸெகிரானில் இருந்த தம் வீட்டுக்குத் திரும்பியதும் நரம்புத் தளர்ச்சிக்கு பலியாகும் நிலையில் இருந்தார். கோடை காலத்

திற்குள் அவருடைய நரம்புகள் அடியோடு சீர் குலைந்து விட்டன. தொல்லைகளை யெல்லாம் அவர் மறக்கும் பொருட்டு, ஜனங்கள் இருக்குமிடத்திலிருந்து அவரை எவ்வளவு தூரம் முடியுமோ அவ்வளவு தூரத்திற்கு அழைத்துச் செல்ல க்ருப்ஸ்காயா விரும்பினர். ஸ்விட்ஜர் லாந்தின் கிராமாந்தரங்களிடையே அவர்கள் சுமார் ஒரு மாத காலம் சுற்றித்திரிந்தனர். "வோலோட்யாவும் நானும் அரசியலைப் பற்றிப் பேசுவதில்லை யென்று ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கிறோம்" என்று அவர் லெனினின் தாய்க்கு 1904, ஜூலை 2-ம் தேதி எழுதினர். "நாங்கள் ஒரு நாளைக்குப் பத்துமணி நேரம் தூங்குகிறோம், நீந்துகிறோம், நடக்கிறோம். வோலோட்யா பத்திரிகைகளைக் கூடச் சரியாகப் படிப்பதில்லை" என்று அவர் எழுதினர்.

லெனின் ஜினீவாவுக்கு திரும்பினர். மார்க்ஸீய எழுத்தாளரான ஏ. ஏ. போக்டனேவ் என்பவர் போல்ஷ்விக் கட்சியில் சேரத் தீர்மானித்திருந்தது அவருக்கு மிகுந்த உற்சாகத்தை அளித்தது. அத்தகைய ஒரு மேதை லெனினுக்குத் தேவையாக இருந்தது. ஆகஸ்ட் மாதத்தை அவர்கள் புதிய திட்டம் வகுப்பதில் கழித்தனர்.

போக்டனேவின் தொடர்பினல் லெனின் பல இளம் மார்க்ஸீய எழுத்தாளர்களை ஒன்றுதிரட்டி, 'இஸ்க்ரா'வுக்குப் போட்டியாக ஒரு புதிய பத்திரிகை ஆரம்பிக்க முயன்ருர். 'இஸ்க்ரா' பத்திரிகை இப்பொழுது அசைக்க முடியாதபடி மென்ஷ்விக்குகளிடம் இருந்தது.

அந்த வருஷம் இளையுதிர் காலத்தில் இருபத்திரண்டு போல்ஷ்விக்குகளை லெனின் ஜினீவாவில் கூட்டி, தம் இறுதி திட்டத்தை விளக்கினர். லெபெஷின்ஸ்கி, ஆல்மின்ஸ்கி, லுனகார்ஸ்க்கி, வோரோவ்ஸ்கி முதலியவர்கள் இந்த கோஷ்டியில் இருந்தனர்.

"புதிய பத்திரிகை ரஷியத் தொழிலாளர் இயக்கத்திற்கு உண்மைப் பிரதிநிதியாக இருக்கும்" என்று லெனின் கூறினர்.

அதன் முதல் இதழ் 1904 டிசம்பரில் வெளிவந்தது. "விப்ரியாட்" (முற்போக்கு) என்று அதற்குப் பெயரிடப்பட்டிருந்தது. பிறகு அதன் பெயர் 'ப்ராலடேரி' (பாட்டாளி) என்று மாற்றப்பட்டது. போக்டனேவ், லுனகார்ஸ்கி, ஒல்மின்ஸ்கி, வேரோவ்ஸ்கி ஆகியவர்கள் ஆசிரியக்குழுவில் லெனின் அதிகாரத்திற்கு அடங்கி வேலைசெய்து வந்தனர்.

புதிய பத்திரிகை வந்ததில் லெனினுக்கு மீண்டும் உற்சாகம் பிறந்தது. புதிய பத்திரிகாலயத்தில் நிலவிய சூழ்நிலை "இஸ்க்ரா' பத்திரிகாலயச் சூழ்நிலையிலிருந்து முற்றிலும் மாறுபட்டிருந்தது. சண்டைக்கும் கூச்சலுக்கும் பதிலாக பூர்ண அமைதியும் நல்லுணர்ச்சியும் நிலவியது. பத்திரிகையின் முதல் பிரதி தயாரானவுடன் லெனின் கண்களில் புத்தொளி பிறந்தது. அவருடைய நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்கள் அவரைச் சுற்றியிருந்தனர்.

லெனின் நம்பிக்கைக்கு வேறு சில முக்கியமான காரணங்களும் இருந்தன. 1904 பிப்ரவரியில் ஸார் (ரஷிய மன்னர்) சர்க்கார் ஜப்பான்மீது முட்டாள்தனமாகப் போர் தொடுத்தது, இதில் ரஷியாவுக்குத் தோல்வியாகக் கிடைத்து வந்தது. அதோடு உள்நாட்டுக் கலகங்களும் நடந்தன. 1905 ஜனவரியில் போர்ட் ஆர்தரை ஜப்பானியர் கைப்பற்றினர்.

"வெட்கக்கேடான இந்தத் தோல்விகள் ரஷிய மக்களுடையதல்ல; அதிகாரவர்க்கத்தினுடையதே" என்று லெனின் கூறினர். "அதிகாரவர்க்கத்தின் தோல்வியால் மக்கள் லாபமே அடைந்தனர். போர்ட் ஆர்தரின் வீழ்ச்சி, ஸார் ஆட்சியின் வீழ்ச்சிக்கு ஆரம்பமே" என்றார் அவர்.

பல தலைமுறையாகப் புரட்சி வாதிகள் ஊன்றிய வித்துக்கள் முதல் முதலாகப் பலனளிக்கும் நிலையிலிருந்தன. ரஷியா புரட்சியின் எல்லையில் நின்றது.

1905-ல் நடந்த பெருங் கலகங்களின்போது லெனினுக்கு வயது முப்பத்திநாலுதான். அதற்குள்ளாகவே அவருக்குப் புரட்சியில் பத்துவருஷ அனுபவம் ஏற்பட்டிருந்தது. சதித் திட்டங்கள், சிறைவாசம், சைபீரியா வாழ்க்கை, அயல் நாட்டில் அரசியல் அக்ஞாதவாசம் எல்லாவற்றையும் அனுபவித்து விட்டார்.

நாலு வருஷ வெளிநாட்டு வாழ்க்கை அவர் மனோபாவத்தை மாற்றிவிடவில்லை. அந்நிய மொழிகளைக் கற்றார். ஆனால் அவருடைய மனப்பான்மை மாத்திரம் ரஷிய மனப்பான்மையாகவே இருந்தது.

அவருடைய அரசியல் கருத்து உறுதியாக உரம்பெற்று விட்டது. அவருக்கு ஐரோப்பியப் பயிற்சியும் மார்க்ஸீயக் கருத்துக்களும் இருந்தபோதிலும் அவருடைய சித்தாந்தம் ரஷியப் புரட்சிச் சர்வாதிகாரத்திற்கும், தாம் உபதேசிக்க வேண்டிய உபதேசம் ஒன்று உண்டு என்ற உணர்ச்சிக்கும் உட்பட்டிருந்தது.

பழைய சமூக ஜனநாயகக் கட்சிச் சகாக்களுக்கு அவர் சர்வாதிகாரியாகக் காட்சியளித்தார். உறுதியான கட்சி அமைக்கவேண்டுமென்ற கருத்தை எதிர்த்த அவர்களுடைய பூர்ஷ்வா மனப்பான்மையை லெனின் வெறுத்தார். புரட்சியில் தார்மிக அம்சத்தைப் பற்றியே அவர்கள் நினைத்துக் கொண்டிருந்தது அவருக்குப் பிடிக்கவில்லை.

அவருக்கு உள்ளூர சந்தேகங்கள் இருந்தபோதிலும் அவற்றை அவர் வெளியிடவில்லை. எழுத்துக்களில் பிடிவாதம் அதிகரித்தது. கருத்து வேற்றுமைகளை அவரால் சகிக்க முடியவில்லை. பல அடிப்படையான பிரச்னைகளில்

அவர் . தம் கருத்துக்களை மாற்றிக்கொள்ள நேர்ந்தபொழுது அவற்றை ராஜதந்திர மாறுதல்களென்று அவர் வர்ணித்தார். ஆனால் அவருடைய எதிரிகள் அற்ப விஷயங்களில் மாறினால் கூட அவர்களை சந்தர்ப்ப வாதிகளென்றும் தேசத்துரோகிக ளென்றும் வசைகூறினர்.

அவருடைய கோஷ்டியாருக்கு அவரிடம் குருட்டு பக்தியும் விசுவாஸமும் இருந்து வந்தது. அப்பொழுது அவர்கள் அவரைத் "தலைவர்" என்று அழைக்கவில்லை. ஆனால் தம் சகாக்களிடமிருந்து ஒதுங்கிவிட்டார்.

தாம் எதிர்காலச் சர்வாதிகாரியாகப்போவதை அப் பொழுது லெனின் அறிந்திருந்தாரா என்பது நிச்சயமாகத் தெரியவில்லை. பதவி கைக்கு வரும்வரையில் அதை அவர் அவ்வளவு தெளிவாகச் சொல்லவில்லை. ஆனால் பின்னர் அவர் தம் மனத்தை ஒளிவு மறைவின்றி வெளிப்படுத்தி விட்டார்.

"வர்க்கங்களைக் கட்சிகள் நடத்துகின்றன; கட்சிகள், 'தலைவர்கள்' தலைவர்கள் என்று சொல்லப்படும் தனி நபர்க ளால் நடத்தப்படுகின்றன ... இதுதான் அரிச்சுவடி. சில சமயங்களில் ஒரு வர்க்கத்தின் அபிலாஷைகள் ஒரு சர்வாதி காரியால் பூர்த்தி செய்யப்படுகின்றன. சோவியத் சோஷ லிஸ்ட் ஜனநாயகம் தனி நபர் ஆட்சிக்கும் சர்வாதிகாரத்திற் கும் முரணானதல்ல. தனி நபர் ஆட்சிதான் தேவை. ஒரு தனி மனிதனின் சர்வாதிகாரம் அங்கீகரிக்கப் படவேண் டும். சம உரிமைகள் பற்றிய பேச்செல்லாம் "கவைக்கு உதவாப் பேச்சுகள்" என்று 1904-ம் வருஷத்தில் லெனின் எழுதினார்.

ஜினீவா மகாநாட்டில் லெனின் இது போன்ற வார்த் தைகளை உபயோகிக்கா விட்டாலும் புரட்சியைப் பற்றி அவருடைய பொதுவான போக்கு தெளிவாகவே தெரிந்தது.

உதாரணமாக, 1903 ஜூலையில், கீவில் நடந்த தெருச் சண்டையின் நுணுக்கங்களில் லெனின் காட்டிய அக்கரை வாலண்டினோவுக்கு ஆச்சரிய மூட்டியது. அவருடைய பிரமிப்பைக் கண்ட லெனின் பின்வருமாறு பதிலளித்தார். "போராட்டத்தை அரசியல் உருவக அளவில் நடத்தும் நிலைமாறி, பிரத்யக்ஷமாகவே நடத்தும் நிலை வந்துவிட்டது. ஆர்பாட்டக்காரர்கள் செங்கொடியைப் பறக்க விட்டு, 'எதேச்சாதிகாரம், ஒழிக' என்று கூச்சலிட்டுக்கலையும் காலம் மலையேறி விட்டது. எதேச்சாதிகாரத்தையும் அதன் ஆதரவாளர்களையும் நேரடியாகத் தாக்கி, உடலளவிலும் அவற்றை அழிக்க வேண்டிய காலம் வந்து விட்டது. இப்பொழுது-தேவைப்படுவது அறிவாளியின் வாதப் பிரதிவாதங்களல்ல: கன்னத்தைக் கிழிக்கும் பாட்டாளியின் அடியே. அது எப்படி என்பதை நாம் அறிய வேண்டும்" என்று லெனின் பதிலளித்தார்.

இந்தக் கருத்தை ஆயுதமாகக் கொண்டு அவர் ரஷியப் போர் முனைக்குத் திரும்ப ஆயத்தமானார்,

## 5. முதல் புரட்சி

சமூக ஜன நாயகக் கட்சியில் போராட்டம் நடந்து கொண்டிருக்கையில், புதிய கட்சி ஒன்று தோன்றி ரஷிய மக்களிடையே புதுக்கருத்துக்களைப் பரப்பி வந்தது. இது தான் சோஷலிஸ்ட் புரட்சிக்கட்சி, ஆறுமுறை சிறை சென்று இருபது வருஷத்திற்கு அதிகமாக சைபீரியாவில் வாசம் செய்த காதரீன் ப்ரெஷோவ்ஸ்கி, மாஸ்கோ லக்ஷாதிபதி ஒருவரின் குமாரரான மைக்கேல் கோட்ஸ், பிற்போக்கு மந்திரிகளையும் கவர்னர்களையும் கொலை செய்த கோஷ்டியின் தலைவரான கிரிகரி கெர்ஷுனி, விக்டர் செர்னேவ் ஆகியவர்களும், பழைய மக்கள் கருத்துக்கட்சியைச் சேர்ந்த பலரும் இப்புதிய கட்சியின் தலைவர்களாக இருந்தனர், சோஷலிஸ்ட்

புரட்சி நடவடிக்கையில் பயங்கரச் செயல்கள் பிரமிப்பூட்டும் அம்சமாக இருந்தன. ஆனால் அவை அதிக முக்கியத்தும் வாய்ந்தவையாக இல்லை.

சோஷலிஸ்ட் புரட்சிக் கட்சியினர் மார்க்ஸீயசித்தாந்தத்தில் அதிக நம்பிக்கை வைக்கவில்லை. சமூகப் பிரச்னைகளை அடிப்படையிலிருந்து தீர்க்க வேண்டுமென்பது அவர்களுடைய பொதுக் கருத்து, அதனால் தான் அவர்கள் மக்களுக்கும், உற்பத்தியாளர், உபயோகிப்போரின் ஒத்துழைப்பு ஆகியவற்றிற்கும் அதிகமுக்கியத்துவம் அளித்தனர். நடக்க வேண்டியிருந்த புரட்சி தேசியத் தன்மை வாய்ந்ததாகவும், தொழிலாளர், விவசாயிகள், அறிவாளிகள் ஆகியவர்களின் அபிலாஷைகளை வெளியிடுவதாகவும் இருக்க வேண்டியிருந்தது. பாட்டாளி வர்க்கத்தை மாத்திரம் புண்யப் பிறவியாகக் கருதாமல் மாணவர்கள் ஆசிரியர்கள் விவசாயிகள், விஞ்ஞானிகள், எழுத்தாளர்கள் முதலிய அனைவருமே, ஜனநாயக சமூகத்தில் சமமான முக்கியத்துவம் வாய்ந்தவர்களாகக் கருதப்பட்டார்கள். அறிவு வேலைக்கு அவர்கள் அதிக முக்கியத்துவம் அளித்து, அறிவுச் சுதந்திரத்திற்காக அவர்கள் போராடினர். புதிய கட்சி சுதந்திரத்தை லட்சியமாகவும், அதை அடையும் சாதனமாகவும் கருதியது, அறிவுச் சுதந்திரமில்லாமல் நிர்மாணிக்கப்படும் சோஷலிஸம் மனித சமூகத்தையே கொட்டடியில் அடைப்பது போலாகும். சோஷலிஸத்தை அடைய ரஷியா முற்றிலும் தயாராக இல்லை யென்றாலும், சோஷலிஸக் கொள்கைப்படி உற்பத்தியையும் சமூக அமைப்பு முழுவதையுமே மாற்றி அமைப்பதுதான் அவர்களுடைய இறுதி லட்சியம். நிலம் எந்தத் தனி நபருக்கும் சொந்தமல்ல என்ற ரஷிய விவசாயிகளின் வழக்கமான கருத்துப்படி, நிலத்தை உடனடியாக தேசிய மயமாக்க வேண்டுமென்று சோஷலிஸ்ட் புரட்சி இயக்கம் வற்புறுத்தியது.

கிராம சமூகம் சோஷலிஸத்திற்குப் பயன்படுமென்ற சோஷலிஸ்ட் புரட்சி வாதிகளின் கருத்தை மார்க்ஸீய கோஷ்டியார் ஏற்கவில்லை. ஆனல் விவசாயிகள் புரட்சிக்கு ஒரு முக்கியமான சக்தி என்று பழைய கட்சினர் உறுதியாக நம்பினர். கிராம சமூகம் பிற்போக்கானதாக இருந்தாலும் அங்கு வர்க்கப்போராட்டம் ஏற்கெனவே தோன்றி விட்டதாக அவர்கள் கருதினர்.

சோஷலிஸ்ட் புரட்சிக்காரர்களின் தனிப்பட்ட பயங்கரச் செயல்களை மார்க்ஸீய வாதிகள் கண்டித்தனர். இச் செயல்கள், ஒரு தனி வீரனின் சக்தியே விடுதலை வாங்கித்தர முடியும்' என்ற உணர்ச்சியைப் பாமர மக்களுக்கு ஏற்படுத்தி அவர்களது உணர்ச்சியைத் தூங்கச் செய்து விடுமென்று மார்க்ஸீய வாதிகள் நினைத்தனர்.

பொதுவாக சோஷலிஸ்ட் புரட்சிக்காரர்கள் சமூக ஜனநாயக வாதிகளைக் காட்டிலும் அதிகம் உணர்ச்சி வசப்பட்டவர்களாவும், சாகஸக்காரர்களாகவும் இருந்தனர்.

ரஷிய அரசியல் சிந்தனையைச் சோஷலிஸம் முற்றிலும் ஆக்கிரமித்துக் கொண்டுவிடவில்லை. மிதவாதிகளும் அரசியல் செயலுக்காக ஒன்று சேரத் தொடங்கினர். 1894-ல் இரண்டாவது நிகொலஸ் பட்டத்திற்கு வந்தபோது, மக்கள் விருப்பத்திற்கு மன்னர் செவி சாய்ப்பாரென்று நம்புவதாக ட்வெர் மாகாணசபை கூறியது. இந்தச் சாதாரண கோரிக்கையே அச் சபையின் பகற்கனவென்று மன்னர் கூறினர்.

திருச் சபையின் பிரதிநிதியான போபேடோனேஸ்ட் ஸேவுக்கு, அவர் இஷ்டப்படிக் கொள்கைகளை வகுக்கப் பூரண அதிகாரம் அளிக்கப்பட்டிருந்தது. அவர் மாகாண சபைகளின் மீது பாய்ந்தார். மத, இனச் சிறு பான்மையினரைத் துன்புறுத்தினர். இவருடைய விவேகத்தில் மன்னர்

நம்பிக்கை வைத்து, அரசியல் வானில் சூழ்ந்து வந்த அபாய மேகங்களைப் பொருட்படுத்தாமலிருந்து விட்டார்.

"மன்னருக்கு அரசாங்க விவகாரங்களில் அறிவோ அனுபவமோ இல்லை. குறிப்பாக ஒழுக்க பலமில்லை" என்று அரசாங்கக் காரியதரிசியும், சாம்ராஜ்யக் கவுன்சில் அங்கத்தினருமான ஏ. ஏ. போலோவ்ட்ஸெவ் கூறினர். யாரும் அவருடைய மனத்தை மாற்றி விடமுடியும், மன்னரின் மாமா ஸெர்கிக்கு அவர்மீது மிகுந்த செல்வாக்கு இருக்கிறது, அனால் ஸெர்கியோ ஓர் உதவாக்கரை...என்ருர் அவர்.

மன்னரைப் பற்றி போபேடோனேஸ்ட்ஸேவும் உயர்ந்த அபிப்பிராயம் கொண்டிருக்கவில்லை.

அரசவை அற்பச் சிக்கல்களில் மூழ்கியிருந்ததால் அரசியல் சீர்திருத்தங்கள் செய்யுமாறு வற்புறுத்தினர் மிதவாதிகள். 1903-ல், பேராசிரியர் பால் மிலியுகோவ், பால்கோமகன், பீட்டர் டோல்கோருக்கோவ், ஐவான் பெட்ருன்கேவிச், பியோடார் கோகோஷ்கின், பியோடார் ரோடிசேவ், வ்ளாடிமீர் நெபகோவ் ஆகியவர்களை முக்கியஸ்தர்களாகக் கொண்ட விடுதலை யூனியன் ஒன்று அமைக்கப்பட்டது. இந்தப்புதிய கோஷ்டி ஸ்டட்கார்ட்டிலிருந்து ஒரு பத்திரிகை பிரசுரித்தது. மாஜி மார்க்ஸீய வாதியான பீட்டர் ஸ்ட்ருவ் தான் இதன் ஆசிரியர் 1905-ல் மலியுகோவ் தலைமையில் அரசியல் ஜனநாயகக் கட்சி அமைக்க இந்த விடுதலை யூனியன் தான் காரணமாக இருந்தது.

ரஷிய ராணுவத் தோல்விகளுக்கிடையே பிற்போக்காளரான உள்நாட்டிலாகா மந்திரி வான்ப்ளேவை சோஷலிஸ்ட் புரட்சிக் கட்சியைச் சேர்ந்த பயங்கர வாதி ஒருவன் கொலை செய்து விட்டான். தெருக்களில் ஆர்பாட்டங்கள் மூண்டன. எல்லாத் திசைகளிலும் எதிர்ப்பு

வலுத்தது. இந்தச் சமயத்தில் தான் மன்னர் முதல். முறையாகக் பின் வாங்கினுர். வான்ப்ளேவின் ஸ்தானத்திற்கு. மிதவாதியான ஸ்வியாடோ போர்க் மிர்ஸ்கி கோமகனை அவர் அழைத்தார். தணிக்கை விதிகள் தளர்த்தப்பட்டன. சீர்திருத்தங்கள் செய்வதாக வாக்களிக்கப்பட்டது. 1904 நவம்பரில் மாகாணசபைகளின் மகாநாடு ஒன்று ஸெயிண்ட் பீட்டர்ஸ்பர்க்கில் கூடியது. பேச்சுச் சுதந்திரம், பத்திரிகைச் சுதந்திரம், தனி நபர் சுதந்திரம், சிறுபான்மையினர் சமத்துவம், பிரதிநிதி சபை ஆகியவை அளிக்குமாறு அது கோரியது.

இதற்கிடையில் தொழிலாளரைத் தீவிர வாதத்திலிருந்து திருப்பும் பொருட்டு உள்நாட்டு இலாகாவும் அரசியல் போலீசும் சேர்ந்து ரஷியத் தொழிலாளர் யூனியன் என்ற ஸ்தாபனத்தை ஏற்படுத்தின, தொழிலாளரின் பொருளாதார உரிமையைப் பாதுகாப்பதும், மன்னரிடம் விசுவாஸம் செலுத்துவதும் இதன் நோக்கங்கள். கேபன் என்ற பாதிரியார் இந்த யூனியனின் தலைவராக நியமிக்கப்பட்டார். ஆனல் இந்த ஸ்தாபனம் தன் நோக்கங்களிலிருந்து வெகு தூரம் பின் தங்கிவிட்டது.

1905 ஜனவரி 22-ந் தேதி மன்னரிடம் ஒரு மகஜர் சமர்ப்பிப்பதற்காக மன்னரின் பனிக்கால அரண்மனைக்கு தொழிலாளர் ஊர்வலம் ஒன்றை இந்த ஸ்தாபனம் நடத்திச் சென்றது. ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் தங்கள் மனைவி மக்களுடன் விளம்பர அட்டைகளைப் பிடித்துக் கொண்டு ஊர்வலத்தில் சென்றனர். அவர்களை மன்னரோ மந்திரிகளோ சந்திக்காததுடன் அவர்கள் அரண்மனையை நெருங்காதபடி ராணுவம் தடுத்து நிறுத்தியது. ஊர்வலம் ட்ராட்ஸ்கி பாலத்தருகே வந்தவுடன் ராணுவத்தினர் அவர்கள் மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்தனர். மனம் போனபடி அவர்கள் சுட்டுக் கொண்டேயிருந்தனர்.

இதில் எழுபது பேருக்குமேல் மாண்டனர். இந்தப்படுகொலை யினால், சர்க்கார் மீது மக்களுக்குக் கொஞ்சம் நஞ்சம் இருந்த நம்பிக்கையும் போய் விட்டது. இந்த ரத்த ஞாயிற்றுக்கிழமை நாட்டு மக்கள் அனைவரும் மனத்தி லும் ஆத்திர மூட்டியது. கண்டன வேலை நிறுத்தங்கள் நடந்தன.

இந்தப் படுகொலை நடந்த ஒரு மாதத்திற்குள் சோஷ லிஸ்ட் புரட்சிக் கட்சியின் பயங்கரவாத கோஷ்டி, அப்பொ முது மாஸ்கோ கவர்னர் ஜெனரலாக இருந்த ஸெர்கி கோமகனைக் கொலை செய்தது.

கொலை செய்த காலியேவ் விசாரணையின் போது, "வரப்போகும் புரட்சியை நேரிடப் பார்க்கக் கற்றுக் கொள்ளுங்கள். நமது சந்ததியார் இந்த யதேச்சாதிகாரத் திற்கு இறுதி முடிவு கட்டிவிடுவார்கள்" என்று நீதிபதி களிடம் கூறினான். அவனுக்கு மரண தண்டனை விதிக்கப் பட்டது.

1905-ல் பேராசிரியர் மிலியுகோவின் தலைமையில் சங்கங்களின் சங்கம் அமைக்கப்பட்டது. இதனால் மித வாத கோஷ்டிகளும் தீவிரவாத கோஷ்டிகளும் ஒன்று சேர்ந்து பார்லிமெண்டரி ஆட்சி முறையை ஏற்படுத்து மாறும் அனைவருக்கும் வாக்குரிமை அளிக்குமாறும் வற் புறுத்தின.

டூமா என்ற மக்கள் சபையை அமைக்க 1905 ஆகஸ்ட் 19-ம் தேதி மன்னர் ஒரு பிரகடனத்தில் கையெழுத்திட் டார். மன்னருக்கு ஆலோசனை கூறத்தான் இதற்கு அதி காரம் உண்டு. சட்டமியற்ற அதிகாரமில்லை. இந்த அரை குறைச் சீர்திருத்தத்தினால் ஒருவருக்கும் திருப்தி ஏற்படவில்லை. மக்களின் சுதந்திர தாகம் அதிகரிக்கவே செய்தது.

வேலை நிறுத்தங்களும் ஆர்பாட்டங்களும், கலகங்களும் அதிகரித்தன. செப்டம்பர் மாத மத்தியில் மாஸ்கோவில் ஆரம்பமான வேலை நிறுத்தம் எந்தக் கட்சியும் வழி காட்டாமலே நாடு முழுதும் பரவியது. இதற்கு மத்தியிலிருந்து வழிகாட்ட ஒருவருமில்லை.

ரஷியா பலாத்காரப் புரட்சியின் எல்லையிலிருப்பதாக மாஜி மந்திரியான விட்டி கோமகன் 1905 அக்டோபர் 22-ந் தேதி மன்னரை எச்சரித்தார்.

அந்த அக்டோபர் கடைசியில் பொது வேலை நிறுத்தம் நடத்துமாறு அகில ரஷிய ரயில்வே தொழிலாளர் சங்கம் வேண்டுகோள் விடுத்தது. ரஷிய சாம்ராஜ்யம் முழுவதிலும் அக்டோபர் 25-ந் தேதியன்று ரயில் போக்கு வரத்து ஸ்தம்பித்து நின்றுவிட்டது. இதனால் சர்க்காரே செயலிழந்தது.

அதே சமயத்தில் "சோவியத் தொழிலாளர் பிரதிநிதிகள்" என்ற ஒரு விசித்திரமான புதிய சர்க்கார் ஸெயிண்ட் பீட்டர்ஸ்பக்கில் தோன்றியது. அக்டோபர் 26-ந் தேதி புதிய ஸ்தாபனத்திற்கு தொழிற்சாலைகளில் தேர்தல் ஆரம்பமாயிற்று. க்ரூஸ்டாலேவ் நோஸார் என்ற வாலிப வக்கீல் இந்த முதல் சோவியத்தின் தலைவராகவும், ட்ராட்ஸ்கி, சோஷலிஸ்ட் புரட்சிக் கட்சிக்காரரான நிகோலாய் ஆவ்க்ஸெண்டியேவ் ஆகியவர்கள் உபதலைவர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இந்தப் பாட்டாளி பார்லிமெண்டை அமைப்பதற்கான முதல் முயற்சி சமூக ஜனநாயகக் கட்சியின் மென்ஷ்விக் பிரிவிலிருந்துதான் வந்தது. பொது வேலை நிறுத்தத்திற்கு அரசியல் துறையில் வழிகாட்ட கட்சிச் சார்பற்ற ஒரு ஸ்தாபனம் தேவையாக இருந்தது. அதற்கு இந்த ஸ்தாபனம் மிகப் பயன்பட்டது. அக்டோபர் 26-ம் தேதியன்று இந்த சோவியத்தின் முதல் கூட்டம் தொழிற் பயிற்சிக் கழகத்தில் நடைபெற்றது. 20,000 தொழிலாளிகளின் பிரதிநிதிகளாக 40 பிரதிநிதிகள் தான் இங்

தக்கூட்டத்திற்கு வந்திருந்தனர். ஸெயிண்ட் பீட்டர்ஸ்பர்கில் இருந்த சகல தொழிற்சாலைகளிலும் தேர்தல் நடத்த அவகாசமில்லை.

இந்த சோவியத் சபையின் முதல் வேண்டுகோள், வேலை நிறுத்தத்தில் தொழிலாளர்கள் எல்லோரும் சேர வேண்டுமென்பதுதான். "அடுத்த சில தினங்களில் முக்கியமான சம்பவங்கள் ரஷியாவில் நடக்க விருக்கின்றன, இனிப் பல வருஷங்கள் வரை ரஷியத் தொழிலாளர்களின் விதி இன்னது என்பதை இச்சம்பவங்கள் நிர்ணயிக்கும். நாம் ஒற்றுமையுடன் இச்சம்பவங்களுக்கு தயாராக இருக்க வேண்டும்" என்று அந்த வேண்டுகோள் கூறியது,

சோவியத் சபை பகிரங்கமாகவே வேலை செய்து வந்தது. இது மக்களுக்குச் சக்தியூட்டும் ஸ்தாபனம் என்ற முறையில் இதைப்பற்றி ஒரே நாளில் எங்கும் தெரிந்து விட்டது.

க்ருஸ்டாலேவ் மக்கள் தலைமைப் பதவியை ஏற்றார், ஆனால் அவருடைய அரசியல் தலைமை ட்ராட்ஸ்கியினால் மூன்றாவது நாளே ஆட்டங் கொடுத்தது. ட்ராட்ஸ்கி தம் பேச்சு வன்மையினால் உடனே முன்னணிக்கு வந்து விட்டார்.

சோவியத்சபை, வேலை நிறுத்தத்தை நடத்துவதற்கான மத்திய கமிட்டியாக உருவாக்கப்பட்ட போதிலும் அரசியல் கிளர்ச்சிக்கும் அதை உபயோகிக்கலா மென்பதை அதன் தலைவர்கள் சீக்கிரத்திலேயே உணர்ந்து கொண்டனர். சில தினங்களுக்குள்ளாகவே அது புரட்சிச் சக்தியின் கருவியாகி விட்டது.

28-ந் தேதி ஹர்த்தால் அனுஷ்டிக்குமாறு எல்லாக் கடைகளுக்கும் சோவியத் சபை உத்திரவிட்டது. மளிகைக் கடைகளைக் காலையில் மாத்திரம் திறந்து வைக்க அது அனுமதித்தது. தொழிற்சாலைகளையும் கடைகளையும் திறந்து

வைத்தால் மக்களின் கோபத்திற்குள்ளாக வேண்டியிருக்குமென்று முதலாளிகளையும் கடைக்காரர்களையும் அது எச்சரித்தது. இரண்டு தினங்களுக்குப்பின் ஸெயிண்ட் பீட்டர்ஸ் பர்க்கில் வாழ்க்கை பூரணமாக ஸ்தம்பித்து விட்டது.

ஒரு தோட்டா கூடச் சுடப்படவில்லையென்றாலும் இதுதான் புரட்சி, மன்னரின் ஆலோசகர்களுக்கு இது தெரியும். அரசியல் திட்டம் வகுக்குமாறு ஜெர்மன் மன்னர் தம் தாயாதியான ரஷிய மன்னருக்கு யோசனை கூறினார். அவருக்கு ஜெர்மனியில் புகலிடம் கொடுப்பதாகவும் வாக்குறுதியளித்தார். ராஜ சபையில் இது பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது அரசியல் சீர் திருத்தத்தை எதிர்த்தவர்கள் மன்னர் ஜெர்மனிக்குப்போய் விடுவதை ஆதரித்தனர். ஆனால் இவ்விதம் செய்வது மன்னர் குலத்திற்கே முடிவுகட்டுவதாகுமென்று விட்டி எச்சரித்தார்.

மேலும் தாமதித்தால் விபரீதமாக முடியுமென்பதை உணர்ந்த நிகொலஸ் மன்னர் போபே டோனேஸ்ட்ஸீபை வேலையிலிருந்து விலக்கி விட்டு விட்டி கோமகனைப் பிரதம மந்திரியாக நியமித்து அக்டோபர் 30-ந் தேதி ஒரு புதிய பிரகடனத்தை வெளியிட்டார். பேச்சு, கருத்து, கூட்டம் கூடுதல் ஆகியவற்றில் சுதந்திரம், தொழிற்சங்கங்கள் அமைத்துக் கொள்ளும் உரிமை டூமா பார்லிமெண்டுக்குத் தேர்தல் நடத்துவதில் வாக்குரிமை விஸ்தரிப்பு முதலியவற்றை இந்தப் பிரகடனம் அளித்தது, பார்லிமெண்டின் அங்கீகாரமில்லாமல் எந்தச் சட்டமும் இயற்றப்படாதென்று மன்னர் முதல் முறையாக வாக்குறுதியளித்தார், ஸெய்ண்ட் பீட்டர்ஸ்பர்க் கவர்னர் ட்ரெபோவ் இச்செய்தியைக் கேட்டவுடன். "தெய்வாதீனமாக இந்தப் பிரகடனம் கையெழுத்தாயிற்று; சுதந்திரம் அளிக்கப்பட்டு விட்டது. மக்கள் தங்கள் பிரதிநிதிகளைத் தாங்களே தேர்ந்தெடுத்துக் கொள்

வார்கள். புது வாழ்க்கை உதயமாகிக் கொண்டிருக்கிறது" என்று ஆச்சரியத்துடன் கூறினர்.

சோவியத் பத்திரிகையான "இஸ்வெஸ்தியா"வின் முதல் இதழில் ட்ராட்ஸ்கி எழுதியிருந்த கட்டுரையில் "நமக்கு விட்டி கிடைத்திருக்கிறார், ஆனால் ட்ரெபோவ் இன்னமும் இருக்கிறார். அரசியல் திட்டம் கிடைத்திருக்கிறது. ஆனால் சர்வாதிகாரம் இன்னமும் இருக்கிறது. எல்லாம் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆனால் ஒன்றும் கொடுக்கபடவில்லை" என்று கூறியிருந்தார்.

வேலை நிறுத்தத்தை நீடிப்பதென்று சோவியத் சபை தீர்மானித்தது. 31-ம் தேதியன்று ஒரு மாபெரும் ஆர்பாட்டம் நடந்தது. சோவியத் சபையின் மூன்று அங்கத்தினர்கள் இதை நடத்தினர். ராணுவத்தினரோ மாலுமிகளோ இதில் கலந்துகொள்ள வில்லை. அவர்கள் இன்னமும் மன்னரிடம் விசுவாசம் செலுத்தினர்.

நவம்பர் 3-ம் தேதியன்று வேலை நிறுத்தம் முடிவடைந்தது. ஆனால் இஸ்வெஸ்தியா பத்திரிகை மாத்திரம் சொற்போரை நீடித்தது.

வலது சாரிகளுடனும் இடது சாரிகளுடனும் பிரதம மந்திரி அரசியல் சதுரங்கம் ஆடினர். ட்ரெபோவைக்காட்டி க்ருஸ்டாவ்ஸேவையும், க்ருஸ்டாவ்ஸேவைக்காட்டி ட்ரெபோவையும் அவர் பயமுறுத்தி வந்தார். சர்க்கார் தயங்கிக் கொண்டிருந்தது. "அதிகார வர்க்கத்தை நிராயுதபாணியாக்கிப் புரட்சிக்கு ஆயுதம் எடுங்கள்" என்ற கோஷத்தை சோவியத் சபை எழுப்பியது. ஸெய்ண்ட்பீட்டர்ஸ்பர்க்கில் எல்லாத் தொழிலாளர்களுக்கும் எட்டு மணி நேர வேலையும் கூலி உயர்வும் கொடுக்குமாறு அது வற்புறுத்தியது. இதன் விளைவாக முதலாளிகளும் மத்தியதர வகுப்பினரும் அதிகார வர்க்கத்தை ஆதரிக்கத் தொடங்கிவிட்டனர். விவசாயிகள் ஒன்றிலும் சேராமல் மந்தமாக இருந்தனர்.

க்ரான்ஸ்டாட் கோட்டையிலிருந்த மாலுமிகளிடையே நவம்பர் 8-ம் தேதி கலகம் மூண்டது. ஆனால் இது சீக்கிரம் அடக்கப்பட்டுவிட்டது. கலகம் செய்த தலைவர்கள் மரண தண்டனைபெற விருந்தனர். பெட்ரோக்ராட் தொழிலாளர்கள் மறுபடியும் வேலை நிறுத்தம் செய்தனர். ராணுவக் கோர்ட்டுகளையும் மரண தண்டனையையும் ரத்துசெய்ய வேண்டுமென்பது அவர்களுடைய கோரிக்கை. அதே சமயத்தில் ராணுவத்திலும் கிளர்ச்சியை ஆரம்பிப்பதென்று சோவியத் சபை தீர்மானித்தது. வேலை நிறுத்தம் அதிகாரிகள் எதிர்பார்த்ததைவிட வெற்றிகரமாக நடந்தது. அதற்கு முன் எந்த மந்திரியும் உபயோகித்திராத மொழியில் விட்டி கோமகன் தொழிலாளர்களுக்கு வேண்டுகோள் விடுக்க வேண்டியதாயிற்று. "சகோதரத் தொழிலாளர்களே! உங்கள் வேலைகளுக்குத் திரும்புங்கள். கலகத்தைக் கைவிடுங்கள். உங்கள் மனைவி மக்களுக்காக இரங்குங்கள்" என்று பிரதம மந்திரி கெஞ்சினர். "உங்கள் நலனில் அக்கரையுள்ள ஒருவனின் யோசனையைக் கேளுங்கள்" என்றார் அவர்.

அவருக்குச் சோவியத் சபை உடனே பதிலளித்தது. "சோவியத் மந்திரி ஒருவர் தொழிலாளர்களைச் 'சகோதரர்களே' என்று அழைப்பது ஆச்சரியமாக இருக்கிறது. பாட்டாளி மக்கள் விட்டி கோமகனின் பந்துக்களல்ல" என்றது.

இந்த சமயத்தில்தான், அதாவது 1905 நவம்பரில் லெனின் ரஷியாவுக்குத் திரும்பினர். "ரத்த ஞாயிற்றுக் கிழமை"க்குப் பின் அவர் என்ன செய்துகொண்டிருந்தார்?

புரட்சி நடக்கப்போகிறது என்பதை அறிந்த லெனின் கட்சியின் அதிகாரத்தை மென்ஷ்விக்குகளிடமிருந்து கைப்பற்ற முற்பட்டார். தம்மைப் பின்பற்றிய வர்களின் கூட்டம் ஒன்றை ஏப்ரலில் அவர் கூட்டினர். "அகில ரஷிய சமூக ஜனநாயகக் கட்சியின் மூன்ருவது மகாநாடு" என்று இதற்கு அவர் பெயரிட்டார்.

1905 ஏப்ரல் 25-ம் தேதி முதல் மே 10-ம் தேதி வரை லண்டனில் நடந்த இந்த மகா நாட்டிற்கு லித்வினுவ், காமனேவ், ரிகோவ், க்ராஸின், லுனகார்ஸ்கி ஆகியோர் உள்ளிட்ட போல்ஷ்விக்குகள் மட்டுமே வந்திருந்தனர்.

இந்த மகாநாட்டில் தம் திட்டத்தை நிறைவேற்றுவதில் லெனினுக்கு எவ்வித கஷ்டமும் இல்லை. பிரதிநிதிகள் லெனினைத் தங்கள் தலைவராக ஏற்று அவருக்குப் பூரண அதிகாரம் அளித்தனர். ஆயுதம் தாங்கிய கலகம் நடத்துவது தான் உடனடியான பிரச்னை என்று மகாநாடு அறிவித்தது. மென்ஷ்விக்குகள் நாடு கடத்தப் பட்டனர். ஆனால் இந்த மகாநாட்டை மென்ஷ்விக்குகள் அங்கீகரிக்காததால் இந்த முடிவுக்கு விசேஷ முக்கியத்துவமில்லை, லண்டன் மகாநாடாகவே அவர்கள் கருதினர்.

1905-ல் கோடையில் ஓர் இளம் போல்ஷ்விக் லெனினிடம் வந்து யோசனை கேட்டான். "ரஷியாவில் உள்ள கட்சி ஊழியர் என்ன செய்யவேண்டும்" என்று கேட்டான்.

"செய்வது என்ன? ஒன்றே ஒன்று தான். ஆயுதம் எடுத்துக் கலகம் செய்ய வேண்டும். அதை உடனே செய்ய வேண்டும்" என்றார் லெனின்.

"இந்தச் சமயத்தில் ஆயுதமெடுத்துக் கலகம் செய்தால் வெற்றி கிடைக்குமா என்று போல்ஷ்விக்குகள் சந்தேகிக்கின்றனர்" என்றான் அவன். லெனின் ஒரு கணம் அசைவற்று நின்றார்.

"வெற்றியா? நாம் ஏன் வெற்றியைப் பற்றிக் கவலைப் பட வேண்டும்?" என்று கர்ஜித்தார் அவர். ஒரு பெரிய கூட்டத்தில் பேசுவது போல் இருந்தது அவர் பேசிய பாணி.

"மாயைகளின் மூலம் நாம் வாழ வில்லை. இவ்விதம் நான் சொன்னதாகத் தோழர்களிடம் சொல். நாம் தெளிந்து

6

யதார்த்த வாதிகள் ; நமக்கு வெற்றி கிடைத்தே தீருமென்று யாரும் நினைக்க வேண்டாம். நாம் இன்னமும் பலவீன மாகவே இருக்கிறோம். ஆனால் இது வெற்றியை மாத்திரம் பொறுத்த விஷயமல்ல, அதிகார வர்க்கத்தின் அஸ்திவாரத் திற்கு ஆட்டங் கொடுத்து மக்களைக் கிளப்பிவிடவே கலகம் செய்ய வேண்டு மென்கிறோம் நாம். பிறகு மக்கள் நம்மை ஆதரிக்கும்படிச் செய்வது அடுத்த வேலை. அதுதான் முக்கியம். கலகம்தான் நாம் இப்பொழுது செய்ய வேண்டிய வேலை. 'கலகம் செய்தால் வெற்றி கிடைக்காது. ஆகையால் கலகம் வேண்டாம்' என்று கூறுவது கோழைகளின் பேச்சு. அவர்களுடைய உறவே நமக்குத் தேவையில்லை'' என்றார் லெனின்.

வந்திருந்த போல்ஷ்விக்கின் செவிகளில், 'கலகம் கலகம்' என்ற சொல் ஒலிக்கலாயிற்று. அவன் திரும்பிச் சென்றான்.

கலகம் செய்தல், புரட்சிப் படை அமைத்தல், இடைக் கால புரட்சி சர்க்கார் அமைத்தல் முதலிய கருத்துக்களு டனேயே போல்ஷ்விக் நடவடிக்கைகள் எல்லாவற்றை யும் லெனின் நடத்தி வந்தார். ஆயுதங்கள் வாங்கி அவற்றை ரஷியாவுக்குக் கள்ளத்தனமாக அனுப்ப அவர் தீவிர நட வடிக்கைகள் எடுத்தார். போடம் கின் என்ற கப்பலில் கலகக்காரர்களை அவர் சந்தித்து, மாலுமிகள் கலகத்தி லிருந்து அறிய வேண்டிய உண்மைகளை எடுத்துக் கூறினர். மகத்தான சரித்திரப் பிரச்னைகளை பலாத்காரத்தின் மூலம் தான் தீர்க்க முடியும். தற்காலத்தில் கட்டுப் பாடான பலத் திற்கு ராணுவம் அவசியம். அதனால் தான் புரட்சிச் சேனை அவசியமாகிறது'' என்றார் அவர்.

ஸெய்ண்ட் பீட்டர்ஸ் பர்க் சமூக ஜனநாயகக்கட்சியின் ராணுவப் பிரிவுக்கு போராட்டம் பற்றிப் பின்வருமாறு அவர் எழுதினர்.

"இதற்கு அளவில்லாத பலம் தேவை. குண்டுகள் செய்வது பற்றிய வெறும் பேச்சில் ஆறு மாதத்திற்குமேல் செலவிடப்பட்டிருக்கிறது. ஆனால் இன்னும் ஒரு குண்டு கூடச் செய்தபாடில்லை. இதைக் கண்டு நான் மிகுந்த கவலை யடைகிறேன். இளைஞர்களிடம் செல்லுங்கள். மாணவர்களி டையேயும், குறிப்பாகத் தொழிலாளர்களிடையேயும் போராட்டப் படைகளை அமையுங்கள். கிடைத்த ஆயுதங் களையெல்லாம் அவர்கள் சேர்த்து வைத்துக்கொள்ளட்டும். கத்தியோ, கைத்துப்பாக்கியோ, தீ வைப்பதற்கு மண் எண்ணையில் நனைந்த கந்தைத் துணியோ எதுவானாலும் பரவாயில்லை.

சமூக ஜனநாயகக் கட்சிக்குள் பிரவேசிக்க உரிமை கேட்காதீர்கள். ஏசுவின் பெயரால் உங்கள் திட்டங்கள் எல்லாவற்றையும் வீசி எறியுங்கள். வேலைகள் உரிமைகள் எல்லாவற்றையும் மூட்டைகட்டி வையுங்கள், அவை நாச மாகப் போகட்டும். படைகள் உடனே நடவடிக்கை எடுக்கப் பழகிக் கொள்ளட்டும். உளவாளிகளைக் கொலை செய்யும் பொறுப்பைச் சிலர் ஏற்கலாம். போலீஸ் ஸ்டே ஷனுக்குச் சிலர் தீ வைக்கலாம். வேறு சிலர் ஒரு பாங்கைக் கொள்ளையடித்து புரட்சிச் செலவுக்குப் பணம் சேகரிக்க லாம்" என்று அவர் எழுதினார்.

பொது வேலை நிறுத்தம் லெனினுக்கு எதிர்பாராத அதிர்ச்சியாக இருந்தது. அவர் பத்திரிகையில் எழுதிவந்த விஷயங்களுடனோ, மூன்றாவது மகாநாட்டுத் தீர்மானங்க ளுடனோ அது பொருந்தவில்லை. ஆனால் ரஷியாவில் அதுவே மக்கள் மனதில் நிரம்பியிருந்ததால் அதன் முக்கியத்துவத்தை லெனின் ஒப்புக் கொள்ள வேண்டியதாகி விட்டது. சோவி யத் சபையை அவர் அங்கீகரிக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற் பட்டது. முதலில் இந்தச் சபை மன்னரைவிட லெனினுக் குத்தான் அதிக பீதியூட்டியது. மென்ஷ்விக்குகளும் சோஷ

லிஸ்ட் புரட்சிக்காரர்களும் முதலில் இந்தச் சபையை அமைத்தபோது, இது கட்சிக்கு அபாயகரமான போட்டி என்றே லெனின் கருதினர். புரட்சியையே தொழிலாகக் கொண்டவர்கள் இதைக் கட்டுப்படுத்த முடியாதென்று அவருக்குத் தோன்றியது.

லெனின் நவம்பரில் ரஷியாவுக்குத் திரும்பியபோது புரட்சி இயக்கத்தில் சோவியத் சபை ஒரு முக்கிய சக்தியாகி விட்டது. "ரஷியாவில் இரண்டு சர்க்கார் உள்ளன. பிரதம மந்திரி விட்டியின் சர்க்கார் ஒன்று. க்ருஸ்டாலேவின் சர்க்கார் மற்ருென்று. இவற்றில் எதைக் கைது செய்வதில் எது வெற்றிபெறும் என்பதுதான் பிரச்னை" என்று "நேவோயா வ்ரெம்யா" என்ற பிற்போக்குப் பத்திரிகை எழுதியது.

ஆனல் 1905–ல் இக்கருத்து சோவியத்தின் முக்கியத்துவத்தை மிகைப்படுத்தியதாகும். ஆனல் அதன் அரசியல் எதிரிகள் அதன் சக்தியை உணர்ந்திருந்தனர் என்பதை இது காட்டுகிறது. சிறிது காலத்திற்குப் பின் க்ருஸ்டாலேவ் கைது செய்யப்பட்டார். "நோவோயா வ்ரெம்யா" பத்திரிகை எழுப்பிய பிரச்னை இவ்விதம் தீர்க்கப்பட்டது. சோவியத்தின் தலைமை, லியான்ட்ராட்ஸ்கியைத் தலைவராகக் கொண்ட மூவர் அடங்கிய கமிட்டிக்கு மாறியது.

சோவியத்தைத் தாம் ஆரம்பத்தில் எதிர்த்தது தவறு என்பதை லெனின் உணர்ந்து விட்டார். ஆகையால் அவர் இதை விஸ்தரித்து, இடைக்கால சர்க்காரின் வித்தாகச்செய்ய வேண்டுமென்று வாதித்தார்.

தற்காலிகமாக சிவில் உரிமைகள் அளிக்கப்பட்டிருந்த காலத்தில் ஸெயிண்ட் பீட்டர்ஸ் பர்க்கில் போல்ஷ்விக் கட்சியின் முதல் தினசரிப் பத்திரிகையான "நோவாயா ஸ்ஹின்" வெளி வந்தது. லெனினுக்கு தம்முடைய கருத்துக்களை வெளியிட இப்பொழுது முதல் முறையாக, சட்டபூர்வ

மான ஒரு பத்திரிகை கிடைத்தது. ஆனல் இந்த ஆயுதத்துடன் அவர் திருப்தியடையவில்லை. தமது நேரத்தில் பாதியைப் பத்திரிகையிலும் மற்றப் பாதியைக் கலகத்திற்கான திட்டங்களை வகுப்பதிலும் அவர் செலவிட்டார்,

சிறிது காலம் தம் மனைவியிடமிருந்து பிரிந்து, வில்லியம் ப்ரே என்ற மாறு பெயருடன் போலி பாஸ்போர்ட் வைத்திருப்பது நல்லதென்று அவர் நினைத்தார். ஒரு நாள் மாலை ப்ரே, ஸெயிண்ட் பீட்டர்ஸ்பர்க்கில், டார்ட்டார் ஹோட்டல் ஒன்றில் தம்முடைய முக்கிய சகாக்களில் ஒருவருடன் சிற்றுண்டி அருந்திக் கொண்டிருந்தார். பக்கத்து மேஜையில் அழகான ஓர் இளம் பெண் உட்கார்ந்திருப்பதை அவர் கவனித்தார். அவருடைய கருத்தை அறிந்த அவருடைய சகாவுக்கு அந்தப் பெண்ணை ஏற்கெனவே தெரியும். அவர் அவளருகே சென்று, “ நீ யாருக்காகவும் காத்திருக்கவில்லையானல் எங்களுடன் சிற்றுண்டி அருந்தவரலாம். ரஸமான மனிதர் ஒருவரைச் சந்திப்பாய். அவர் மிகவும் பிரபலமானவர். ஆனல் அவரைப்பற்றிய விவரங்களைக் கேட்காதே ” என்றார். வில்லியம் ப்ரேயை அறிமுகம் செய்துகொள்ள அவளுக்கும் ஆவல் இருந்தது. அவள் பெயர் எலிஸபெத் கே. பணக்காரப் பெண்.

“ நீங்கள் பிரிட்டிஷ்காரரா ?” என்று அவள் ப்ரேயைக் கேட்டாள்.

“ அப்படிச் சொல்வதற்கில்லை ” என்று பரிகாசமாக பதிலளித்தார் லெனின்.

அவர்கள் சுமார் ஒரு மணி நேரம் உல்லாசமாகப் பேசிக்கொண்டிருந்து விட்டுப் பிரிந்தனர். சில தினங்களுக்குப் பிறகு ஒரு எழுத்தாளரைச் சந்திப்பதற்காக அவள் “ நோவ்யா ஸ்ஹின் ” காரியாலயத்திற்குச் சென்றாள். விசித்திர மனிதராகிய ப்ரே, தம்முடைய வழக்கமான பரிகாசச்

சிரிப்புடன் அவளை வரவேற்றார். "என்ன, சௌக்கியமா? இப்பொழுதெல்லாம் டார்டார் ஹோட்டலுக்குப் போவதில்லையா?" என்று கேட்டார்.

அவர் தன்னை அழைப்பதாக அவள் நினைத்தாள். அவளை அறிமுகம் செய்து வைத்த போல்ஷ்விக் தோழரிடம் அவள் இதைச் சொன்னபோது, அவர் சிரித்துவிட்டு, "நண்பர் ப்ரேய்க்குப் பெண்கள்விஷயத்தில் அக்கறை உண்டு. ஆனால் தம் சொந்த வாழ்க்கைக்காக அல்ல, சமூக அரசியல் ரீதியில் தான் அவருக்கு அவர்களிடத்தில் அக்கறை, உன்னைப்பற்றி உத்தரவாதம் கொடுக்கும்படிக் கூட அவர் கேட்டார். அவருக்குச் சந்தேகம் அதிகம், புதிதாக யாருடனும் அறிமுகம் செய்து கொள்வதில்லை. ஆகையால் நீ யாரென்பதை அவரிடம் சொல்லவேண்டிய அவசியம் ஏற்பட்டுவிட்டது. ரகசியக் கூட்டங்களுக்கு உன் வீட்டை உபயோகித்துக் கொள்ளலாமென்று கூடச்சொல்லி வைத்திருக்கிறேன்" என்று பதிலளித்தார்,

இரண்டு நாளைக்குப் பின் அவர்கள் மூவரும் டார்ட்டார் ஹோட்டலில் சாப்பிடச் சென்றனர். ப்ரே வாரத்தில் இரண்டு நாள் தம் வீட்டில் ரகசியக் கூட்டங்கள் நடத்த அவள் சம்மதித்தாள். கூட்டம் நடக்கும் தினங்களில் அவள் வேலைக்காரியை வீட்டுக்கு அனுப்பிவிட்டு, தானே வாசலில் நின்று, வருகிறவர்களில் சங்கேத பாஷையில் பதிலளிப்பவர்களை மட்டும் உள்ளே விடுவாள். பிறகு அவளும் குரல் கேட்காத அளவு தூரத்திற்குப் போய் விடுவாள்.

பல சமயங்களில் லெனின் மாலையில் தனியாக வருவார். எலிஸபெத் சமைப்பதற்கும், பண்டங்களைச் சாப்பாட்டு அறையில் கொண்டு வந்து வைப்பதற்கும் அவர் உதவுவார். அவர்கள் நட்பு வளர்ந்தது. சில சமயங்களில் அவள் அவருக்கு பியானோ வாசித்துக் காட்டுவாள், பீதோவனின் பாடலில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் அவர் காட்டிய

அக்கறை அவளுக்கு வியப்பூட்டியது. அதையே திருப்பித் திருப்பி வாசிக்கச் சொல்லி கேட்டார்.

ஆராய்ந்து பார்த்ததில், அப்பாடல் யூத சோஷலிஸ்ட் பண்டின் புரட்சி கீதத்தை அவருக்கு ஞாபகமூட்டியதே காரணமென்று தெரிந்தது. எலிஸபெத்துக்கு ஸெயிண்ட் பீட்டர்ஸ்பர்க்கின் சோஷலிஸ்ட்டுகளைவிட, சங்கீத இலக்கிய உலகத்தில் தான் பரிச்சயம் அதிகம். இந்தக் காரணத்தை அறிந்த அவள் வெறுப்புடன் சிரித்தாள்.

புரட்சியின் கொந்தளிப்பு அடங்கியது. பிற்போக்காளர்கள் எதிர்த்தாக்குதல் நடத்தத் தொடங்கி விட்டனர். உள்நாட்டு மந்திரி டுர்னோவோ பிரதம மந்திரி விட்டியைப் புறக்கணித்துவிட்டு, மன்னருக்கு மீண்டும் சர்வ அதிகாரங்களையும் வாங்கித் தர அனுமதி பெற்றுவிட்டார்.

"அவர்களுடைய தலையாவது உருள வேண்டும் அல்லது நம் தலையாவது உருளவேண்டும். அவசிய மென்று தோன்றும் நடவடிக்கைகளையெல்லாம் எடுக்க உங்களுக்கு அதிகாரம் தருகிறேன்" என்றார் நிக்கொலஸ் மன்னர்.

தாருமாருக திட்டமிட்டு நடத்தப்பட்ட சிப்பாய்க் கலகங்களும் மாலுமிகளின் கலகங்களும் ஆங்காங்கு நடந்து கொண்டிருந்தன. தபால் தந்தி ஊழியர்களின் வேலை நிறுத்தம் மறுபடியும் செய்திப் போக்கு வரத்துக்கு இடையூறு விளைவித்தது. சமூகப் புரட்சி வருவதை உணர்ந்த தொழிலதிபர்கள் கடுமையான நடவடிக்கை எடுக்குமாறு சர்க்காரை வற்புறுத்தினர்.

வரி கொடா இயக்கம் நடத்தும்படியும், சர்க்காரைக் கவிழ்க்கும்படியும் அரசியல் நிர்ணய சபை கூட்டும்படியும் கோரி சோவியத் சபை ஒரு பிரகடனம் வெளியிட்டது. இந்த வேண்டுகோள் வெளியான மறுநாளே, அதாவது 1905 டிசம்பர் 16-ம் தேதியன்று சோவியத் சபையின் நிர்வாகிகள் அனைவரும் கைது செய்யப்பட்டு விட்டனர்.

அதைப் பிரசுரித்த எல்லாப் பத்திரிகைகளும் நிறுத்தப் பட்டன.

இதற்கிடையில் போல்ஷ்விக்குகள் கலகத்திற்கான தங்கள் ஏற்பாடுகளைச் செய்துவந்தனர், ரகசியமாக ஆயுதங்க ளைச் சேர்ப்பதிலும் ஆயுத பாணிகளான 25 பேர் அடங்கிய போர்ப்படைக் குழுக்களை அமைப்பதிலும் அவர்கள் முனைந் திருந்தனர். லெனின் மாஸ்கோவில்தான் நம்பிக்கை வைத் திருந்தார். ஸெயிண்ட் பீட்டர்ஸ்பர்க்கில் வேறெந்தக் கட்சி யும் கலகத்தை ஆதரிக்கவில்லை. ஆனால் மாஸ்கோ நகரம் கலகத்திற்குப் பக்குவமாக இருப்பதுபோல் தோன்றியது.

டிசம்பர் 20—ம் தேதி மற்றொரு பொது வேலை நிறுத் தம் நடத்துமாறு வேண்டுகோள் வந்தபோது ஸெயிண்ட் பீட்டர்ஸ்பர்க் அதற்குச் செவி சாய்க்கவில்லை. ஆனால் மாஸ்கோவில் வேலை நிறுத்தம் துரிதமாக மாறுதலடைந்து கலகமாக மாறி விட்டது. கட்சியின் போர்ப் படைகள் ஜனங்களின் உதவியுடன் அரண்கள் அமைத்துக் கொண் டன. போராட்ட முறைகள் அடங்கிய துண்டுப் பிரசுரங்கள் சுவரெல்லாம் ஒட்டப்பட்டிருந்தன; "இரண்டுபேர் அல்லது நாலுபேர் அடங்கிய கோஷ்டிகளாகச் சேர்ந்து சண்டை யிடுங்கள். திடீரென்று தாக்குங்கள். உடனே ஓடி மறைந்து விடுங்கள்" என்று அவை கூறின.

மாஸ்கோவில் கவர்னர் ஜெனரல் டுபாஸோவ் தலைமை யில் போராடிய சர்க்கார் படைகளுக்கு ஸெயிண்ட் பீட் டர்ஸ்பர்க்கிலிருந்து துரிதமாக உதவி அனுப்பப்படவில்லை. அங்கு இருந்த படைகள் போதவில்லை. குழப்பம் ஒருவாரம் தாண்டவமாடிய பின் சர்க்கார் புதியபடைகளை ஸெயிண்ட் பீட்டர்ஸ்பர்க்கிலிருந்து அனுப்பியது. கலகக்காரர்களின் கடைசி அரண் 21-ம் தேதி காலையில் முறிந்தது.

24-ம் தேதி முதல் கலகம் ஒடுக்கப்படும் வரை லெனின் பின்லாந்தில் இருந்தார். கலகம் தோற்றதால்,

போல்ஷ்விக்குகளுக்குள்ளேயே லெனினுக்கு இருந்த எதிர்ப்பு முதல் முறையாக பகிரங்கமாக வெளிப்படத் தொடங்கியது. நெசெயெவ் முறையையே லெனின் பின்பற்றுவதாகவும் வேண்டுமென்றே அவர் ரத்தக் களறியை தூண்டியதாகவும் அவரை எதிர்த்தவர்கள் குற்றம் சாட்டினர். ஆனால் இந்தத் தோல்வி ஜனங்களுக்கும், கட்சித் தலைவர்களுக்கும் ஒரு நல்ல பாடமென்றே லெனின் கருதினர். 1917-ம் வருஷப் புரட்சிக்கு இது ஓர் ஒத்திகை,

மன்னருக்கு மீண்டும் தன்னம்பிக்கை ஏற்பட்ட பின், அவர் அளித்திருந்த சிவில் உரிமை வாக்குறுதிகளை அவருடைய மந்திரிகள் மீறத் தொடங்கினர். தீவிர வாதப் பத்திரிகைகள் அடக்கப்பட்டன. சோஷலிஸ்ட் தலைவர்கள் கைது செய்யப்பட்டனர்.

இந்த சமயத்தில் டூமா பார்லிமெண்ட் என்ன செய்யும் என்பதுதான் பிரச்னையாக இருந்தது. மன்னர் பிரகடனத்தை ரத்து செய்யும் அளவுக்கு அதிகார வர்க்கத்திற்கு இன்னமும் திடம் ஏற்படவில்லை. ரஷியாவில் ஆட்சியை சட்ட வரம்பிற் குட்பட்ட முடியாட்சியாகச் செய்ய டூமா பார்லிமெண்ட் சட்டம் இயற்றுமென்று மிதவாதிகள் இன்னமும் நம்பினர்.

மன்னரின் அதிகாரத்தைக் கட்டுப்படுத்தும் சட்டங்களுக்கு அவர் பணிவாரென்ற கருத்தைப் புரட்சி சோஷலிஸ்ட் கட்சிகள் ஒப்புக்கொள்ள வில்லை. ஆனால் டூமா பார்லிமெண்ட் தேர்தலைப் பற்றித்தான் அவை கருத்து வேற்றுமை கொண்டிருந்தன. தங்கள் திட்டத்தைப் பொதுமக்களுக்கு எடுத்துக் கூறத் தேர்தலை ஒரு சந்தர்ப்பமாகப் பயன் படுத்திக்கொள்ள வேண்டுமென்றும், பார்லிமெண்ட் அங்கத்தினர்களுக்கு அளிக்கப்படும் பாதுகாப்பை பயன் படுத்திக் கொண்டு சர்க்காரைத் தாக்கி, பார்லிமெண்

டைப் போர்க்களமாக உபயோகித்துக் கொள்ளவேண்டு மென்றும் மென்ஷ்விக்குகள் கூறினர்.

ஆனால் லெனின், டூமா பார்லிமெண்டை வெறும் மோசடி என்று கூறி, தேர்தலை பகிஷ்கரிக்க வேண்டுமென்றார். சோஷலிஸ்ட் கட்சிகளில் லெனின் கருத்துக்கே அதிக ஆதரவு கிடைத்தது. பார்லிமெண்ட் எதிர்ப்புக் கூட்டங்கள் பலவற்றில் அவர் இடைவிடாமல் பேசினர்.

"மாஸ்கோ கலகத்தின் தோல்வியோடு புரட்சி முடிந்து விடவில்லை. தாராள வாதிகள் தொழிலாளர்களின் பிணங்கள்மீது மன்னருடன் குலாவுகின்றனர். கலகத்தின் தோல்வி கற்பிக்கும் பாடத்தை மென்ஷ்விக்குகள் புரிந்து கொள்ளவில்லை" என்று அவர் பிரசாரம் செய்தார். ஆனால் ரஷியாவில் சோஷலிஸத்தை ஏற்படுத்துவது அசாத்தியம் என்றும் சொல்லி வந்தார்.

மிஞ்சியிருக்கும் நிலப் பிரபுத்துவத்தைத் தகர்த்து தீவிரமான நிலச் சீர்திருத்தங்கள் செய்ய மத்தியதரவகுப்பினர் புரட்சி செய்ய வேண்டியது அவசியமென்று லெனின் கூறினர். "ஜனநாயகக் குடியரசு ஏற்பட்டால் தொழிலாளர் ஒன்றுபட்டு பலம் பெறுவார்கள். பாட்டாளிப் புரட்சி முதலில் பிரிட்டனிலும் பிரான்சிலும் தான் வரும்" என்றார். முதலாளித்துவம் வளர்ச்சி பெற்ற நாடுகளில் தான் புரட்சி ஆரம்பமாகுமென்ற மார்க்ஸீயக் கோட்பாட்டில் அவர் உறுதியான நம்பிக்கை கொண்டிருந்தார்.

சோஷலிஸ்ட்டுகள் தேர்தலை பகிஷ்கரித்ததில், டூமா தேர்தலில் அரசியல் ஜனநாயக வாதிகளுக்கு வெற்றி கிடைத்தது. நூற்றுக்கதிகமான தீவிரவாத விவசாயிகளும் தேர்ந்தெடுக்கப் பட்டனர். "ட்ருடோவிக்ஸ்" (பாட்டாளிகள்) என்ற பெயருடன் இவர்கள் தனிக் கோஷ்டி அமைத்துக் கொண்டனர். சுயேச்சைத் தொழிலாளர்கள் பத்துப்

பன்னிரண்டு பேரும் தேர்ந்தெடுக்கப் பட்டனர். பின்னர் இவர்கள் சமூக ஜனநாயக கோஷ்டியாக ஒன்று சேர்ந்தனர்.

பார்லிமெண்ட் கூட்டம் ஆரம்பமாவதற்கு முன்னல் போல்ஷ்விக்குகளும் மென்ஷ்விக்குகளும் ஸ்டாக்ஹோமில் ரகசியமாகக் கூடினர். லெனின் தம் சகாக்களின் வற்புறுத்தலின் பேரில் சமரசத்திற்கு முயற்சி செய்ய ஒப்புக்கொண்டார், இருதரப்பினரும் பெரும் பான்மையினராக ஸ்டாக்ஹோமுக்கு வர முயற்சி செய்தனர். லுனகார்ஸ்கியிடம் லெனின் பின்வருமாறு வெளிப்படையாகக் கூறினுர்,

''மத்தியக் கமிட்டியில் நாம் பெரும்பான்மையாக இருந்தால் கடுமையாகக் கட்டுப் பாட்டை அனுஷ்டிக்க வேண்டுமென்று கூறப் போகிறேன். மென்ஷ்விக்குகள் கட்சி ஒற்றுமைக்கு ஒப்புக்கொள்ள வேண்டுமென்று வற்புறுத்துவோம், அவர்களுடைய பூர்ஷ்வா புத்தியில் நம்மைப் பின்பற்ற மறுத்தால் அவர்களுக்குத் தான் கெடுதல், கட்சி ஒற்றுமையைப் பிளந்ததற்கான பொறுப்பை அவர்கள் ஏற்கட்டும்'' என்ருர் லெனின்.

"ஆனுல் நாம் சிறுபான்மையராக இருந்தால், நாம் அவர்களுக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டுமா ?'' என்று லுனகார்ஸ்கி கேட்டார்.

இதற்கு லெனின் புன்முறுவலுடன் பதிலித்தார். ''பார்த்துக் கொள்வோம். என்ன நேர்ந்தாலும் அவர்கள் அந்தக் கயிற்றைப் பிடித்து நம்மை இழுத்துக் கொண்டு போக நாம் விடக்கூடாது.''

மத்திய கமிட்டியில் பெரும் பான்மையைக் கைப்பற்ற முடியும் என்ற லெனினின் நம்பிக்கை ஆதாரமற்றது. வெளிக்கு தாம் ஸ்டாக்ஹோம் ஒப்பந்தத்திற்குக் கட்டுப்பட்டிருப்பதுபோல் அவர் காட்டிக் கொண்டார். பத்திரிகை அளவில் கட்சி ஒற்றுமை வந்து விட்டது. ஆனுல் நடை

முறையில் லுனகார்ஸ்கியிடம் சொன்னபடியேதான் லெனின் செய்தார். போல்ஷ்விக் கேந்திரத்தை அவர் அப்படியே வைத்துக்கொண்டு, பெயரளவில் ஏற்பட்ட ஒற்றுமை தன் திட்டங்களில் குறுக்கிடாதபடி பார்த்துக் கொண்டார்.

லெனின் ஸ்டாக்ஹோமில் தங்கியிருந்தபோது மறுபடியும் எலிஸபெத் கே யைச் சந்தித்தார். ஸ்வீடிஷ் சமூக ஜனநாயக வாதி ஒருவர் செய்த ஏற்பாட்டின்படி அவள் அங்கு வந்தாள். அவள் வந்தவுடன் அந்த ஸ்வீடிஷ் நண்பர் லெனினுக்கு டெலிபோன் மூலம் அறிவித்தார். அவளை மறுநாள் சந்திப்பதாகவும் ஆனால் அங்கு வேறு ரஷியர் இருந்தால் அவர்கள் போகும் வரை அவள் தன்னை கவனித்த தாகவே காட்டிக் கொள்ளக் கூடாது என்றும் அவர் சொன்னர்,

மறுநாள் அவர்கள் சந்தித்த போது இரு ஜார்ஜியர் அங்கு இருந்தனர். அவர்கள் போனபின், "இவர்கள் இருவரும் எங்கள் காகேஷிய ஸ்தாபனத்தின் பிரதிநிதிகள்; மிகவும் நல்லபிள்ளைகள்; ஆனல் வெறும் காட்டுமிராண்டிகள்" என்ருர் லெனின்.

மகாநாட்டு வேலைகளால் லெனினுக்கு ஒழிவே இல்லை; ஆனுலும் ஒரு ஞாயிற்றுக் கிழமை மாத்திரம் ஸ்டாக்ஹோமை அடுத்துள்ள கிராமாந்தரப் பிரதேசத்திற்குச் சென்று ஒருநாள் முழுதும் தங்கிவிட்டு வந்தார். அங்கு ஒரு ஏரியில் ஒரு படகை அவர்கள் வாடகைக்கு எடுத்துக் கொண்டனர். துடுப்புக்களை லெனின் வேகமாகத் தள்ளி படகை ஓட்டத் தொடங்கினர். அதைக் கண்ட எலிஸபெத் "நீங்கள் புரட்சிக்காரர் வேலைக்கு லாயக்கில்லை. விவசாயியாகவோ, மீன் பிடிப்பவராகவோ, மாலுமியாகவோ, இரும்புக் கொல்லனுகவோ இருக்கத்தான் லாயக்கு" என்ருள். லெனின் உரக்கச் சிரித்தார். படகு ஒரு திருப்பத்தில் திரும்பியவுடன் ஓர் அழகான இயற்கைக் காட்சி தென்பட்டது.

இந்த இடம் நட்ஹாம்ஸனின் நாவல்களைத் தனக்கு நினை வூட்டுவதாக அவள் சொன்னாள்.

"ஆமாம் அவர் மகத்தான எழுத்தாளர்தான். 'பசி' என்ற நாவலில், முதலாளித்துவக் கொடுமைக்கு பலியாகிப் பசியினால் வாடும் ஒருவனின் உடற் கூறுகளையும் மனோ தத்துவத்தையும் அவர் அற்புதமாகத் தான் வர்ணித்திருக் கிறார்" என்றார் லெனின்.

எலிஸபெத் தோள்களைக் குலுக்கிக் கொண்டு சிரித் தாள். அவள்குறிப்பிட்டது "பான்" "விக்டோரியா" போன்ற நட்ஹாம்ஸனின்காதற் கதைகளைப் பற்றி. மறுபடியும் பீதோ வனின் பாடலை அவருக்குப் பியானோவில் வாசித்துக் காட் டிய பொழுது அவர் உலகமும் தன் உலகமும் வெகு தூரத் தில்உள்ளவை என்பதை உணர்ந்தாள். மகாநாடு நீண்டு கொண்டே போயிற்று. அவளைச் சந்திக்க லெனினுக்குச் சந்தர்ப்பமே கிடைக்கவில்லை. அவள் பொறுமையிழந்து லெனினுக்குத் தகவல் கூடக் கொடுக்காமல் ஸ்டாக்ஹோமி லிருந்து கிளம்பி விட்டாள்.

அவள் ஸெயிண்ட் பீட்டர்ஸ்பர்க் போய்ச் சேர்ந்த பின், பல வாரங்கள் கழித்து லெனினிடமிருந்து ஒரு கடிதம் வந் தது. 'அதற்கு அவள் பதிலே எழுதவில்லை.

ஆனால் இரண்டு வருஷம் கழித்து அவள் பாரிஸில் இருந்தபொழுது, லெனின் பேசிய ஒரு கூட்டத்திற்குப் போகாமலிருக்க அவளால் முடியவில்லை. இடைவேளையில் அவள் பின்புறமாகச் சென்று லெனினைச் சந்தித்தாள். அவரைச் சுற்றி ஒரு கூட்டம் நின்று கொண்டிருந்தது. அவளைக் கண்டவுடன் லெனின் கண்கள் ஆச்சரியத்தினால் அகல விரிந்தன. ஆனால் உடனே சமாளித்துக்கொண்டு, "எங்கு வந்தீர்கள்?" என்று கேட்டார். "உங்கள் பிரசங் கத்தைக் கேட்க வந்தேன், மற்றொரு வேலையும் இருக்கி றது. இந்தக் கடிதத்தை ஒரு நண்பர் உங்களிடம் கொடுக்

கச் சொன்னார்'' என்று கூறி கவரை அவரிடம் கொடுத்தாள். அதில் அவளுடைய விலாசமும் டெலிபோன் நம்பரும் இருந்தன.

மறுநாள் காலை அவள் எதிர்பார்த்துக் கொண்டிருந்த டெலிபோன் அழைப்புக்கு பதிலாக லெனினே நேரில் வந்து விட்டார். அவர் தூக்கக் கலக்கத்துடன் காணப்பட்டார்.

''நீ உயிரோடு தான் இருக்கிறாயா? இல்லையென்றல் லவா நினைத்தேன்'' என்றார் லெனின். அவர்கள் கைகுலுக் கியபோது லெனின் அவளை நெருங்கி ஆலிங்கனம் செய்து கொள்ள முயன்றார். ஆனால் அவள் தடுத்து, ''மன்னிக்க வும். அந்தக் காலமெல்லாம் மலையேறி விட்டது'' என்றாள்.

''நீ சொல்வது முற்றிலும் சரி. அந்தக் காலம் மலை யேறித்தான் போய்விட்டது. ஆனால் இன்னமும் நீ ஒரு சுவாரஸ்யமான பெண்ணாகத்தான் இருக்கிறாய், ஆனால் நீ சமூக ஜனநாயக வாதியாக இல்லாமலிருப்பதுதான் வருந்தத் தக்கது'' என்றார் லெனின்.

இதற்கு எலிஸபெத்தும் சட்டென்று பதிலளித்தாள். ''நீங்களும் ஒரு சுவாரஸ்யமான மனிதர்தான்; ஆனால் நீங்கள் வெறும் சமூக ஜனநாயக வாதியாக மட்டும் இருப்பதுதான் துரதிருஷ்ட வசமானது'' என்றாள். லெனின் இடிஇடி யென்றுசிரித்தார். ஆத்திரம் தணிந்தது. அவர்கள்வெகு நேரம் சந்தோஷமாகப் பேசிக் கொண்டிருந்தனர். முன்பு ஸ்டாக் ஹோம் அருகே படகில் சென்றதை அவள் ஞாபகப்படுத்தி னாள். ''நீ ஒரு சமூக ஜனநாயக வாதியே அல்ல என்பதை நான் அப்பொழுதுதான் முதன் முறையாக உணர்ந்தேன். 'பசி'யைத் தவிர நட்ஹாம்ஸனின் மற்ற நாவல்களை எல் லாம் நீ படித்திருக்கிறாய்'' என்றார் லெனின்.

''நாம் எவ்வளவு தொலைவிலிருக்கிறோம் என்பதை நானும் அப்பொழுதுதான் உணர்ந்தேன். 'பசி' ஒன்றை

மட்டும் தான் நீங்கள் படித்திருக்கிறீர்களென்று எனக்குத் தோன்றியது'' என்ருள் எலிஸபெத்.

மறுபடியும் ஸ்விட்ஜர்லாந்தில் சந்திப்பதாக ஒப்புக் கொண்டு அவர்கள் பிரிந்தனர்.

1906, மே, 10–ந்தேதி, லெனின் ஸ்டாக்ஹோமிலேயே இருந்து வந்தபோது, பூரண அரசியல் சுதந்திரம் அளிக்குமாறு டூமா பார்லிமெண்ட் கேட்டுக் கொண்டது. அரசியல் கைதிகளுக்குப் பொது விடுதலை, மரண தண்டனை ரத்து, சிறுபான்மையினருக்குச் சமத்துவம், போலந்துக்கும், பின்லாந்துக்கும் சுயஆட்சி, வோட்டுரிமை விஸ்தரிப்பு, ஸ்தல ஸ்தாபனங்களை ஜனநாயக மயமாக்குவது, புறம்போக்கு நிலங்களையும் பிரபுக்களின் சொத்துக்களையும் குடியானவர்களின் நலனுக்காகப் பறிமுதல் செய்வது, ஜீவகாருண்யமுள்ள தொழிலாளர் சட்டங்கள், விரிவான சமூகச் சட்டங்கள் முதலியவை அளிக்குமாறு டூமா பார்லிமெண்ட் கோரியது.

ஸார் மன்னர் சிறிது திகைத்தார். பொறுப்பாட்சி ஏற்படுத்துவது சம்பந்தமாக மிலியுகோவுடன் பேச்சு வார்த்தைகள் நடத்தலாமென்று கூட ஒரு சமயம் நினைத்தார். ஆனல் இந்த முயற்சிகள் அந்தரங்க சுத்தியுடன் இல்லை யென்று மிலியகோவ் அதை நம்பவில்லை.

இந்த சமயத்தில் டூமா பார்லிமெண்டுக்கு இருந்த பொது ஜன ஆதரவும், மன்னர் தடுமாற்றத்திற்கு முடிவுகட்டுவதில் ஒரு முக்கிய சக்தியாக விளங்கியது. டூமாவை நாடு முழுதும் ஆதரித்திரா விட்டால் அல்லது நகரத் தொழிலாளர்கள் பிளவுண்டிருந்தால் மன்னர் அதற்கு பணிந்திருக்க வேண்டுமென்ற அவசியமில்லை.

இந்த நெருக்கடியான சமயத்தில், வேற்றுமைகளை மறந்து டூமாவை முழு பலத்துடன் ஆதரிக்குமாறு ப்ளெகனேவும் மென்ஷ்விக்குகளும் தொழிலாளர் சமூகத்தைக்

கேட்டுக் கொண்டனர். ஆனால் லெனினும் போல்ஷ்விக் பத்திரிகையும் டூமாமீது தொடுத்திருந்த போரை நிறுத்தவேயில்லை. மிதவாத எதிர்ப் புரட்சிக்காரர்களை அம்பலப்படுத்துவது தான் சமூக ஜனநாயக வாதிகளின் உடனடியான வேலையென்று கூறி மக்கள் மறுபடியும் கலகத்திற்குத் தயாராக வேண்டுமென்று பிரசாரம் செய்தனர்.

1917-ம் வருஷப் புரட்சிக்குப் பின் கிடைத்த ரகசிய போலீஸ் தஸ்தாவேஜுகளிலிருந்து சில உண்மைகள் வெளியாகின்றன. டூமாவை எதிர்த்து போல்ஷ்விக்குகள் நடத்தும் போரில் அவர்களைச் சுயேச்சையாக விட்டுவிடுமாறு ரகசிய போலீஸ் ஸ்தாபனம் தன் ஏஜெண்டுகளுக்கு உத்தரவிட்டிருந்தது. எல்லா முக்கிய பொதுக் கூட்டங்களிலும் போல்ஷ்விக்குகளுக்கு ரகசிய போலீசின் ஆதரவும் ஒத்துழைப்பும் இருந்தது. கலகம் செய்யுமாறு போல்ஷ்விக்குகள் செய்த பிரசாரத்தைக் கண்டு சர்க்கார் அஞ்சவில்லை. அதன் அதிகாரத்திற்கு டூமாவினால் தான் அபாயம் இருப்பதாகக் கருதியது.

மன்னர் கருத்துப்படி லெனின் இயக்கம் வெற்றி பெற்று விட்டது. டூமா மீது பொதுமக்களுக்கு இருந்த நம்பிக்கை குலைய அது உதவியது. பொது வேலை நிறுத்தம் நடக்கக் கூடுமென்ற பயமில்லாமல், பார்லிமெண்டு கூட்டப்பட்ட 72 நாளைக்குள் அதை மன்னர் கலைக்கும் அளவுக்கு அது பொதுஜன நம்பிக்கையை இழந்து விட்டது. ஆறு மாதத்திற்குப் பிறகுதான் மறு தேர்தலுக்கு உத்தரவிடப்பட்டது.

பார்லிமெண்ட் கலைக்கப்பட்ட பின் கலகம் நடத்த போல்ஷ்விக்குகள் ஏற்பாடு செய்து வந்தனர். 1887 முதலே புரட்சிக்காரராக இருந்தவரும், மத்திய கமிட்டி அங்கத்தினருமான க்ராஸினுக்கு சமூகத்தின் மேல்வட்டாரங்களில் அதிகத் தொடர்பு இருந்தது. மாக்ஸிம் கார்க்கியின் நண்பர்

என்ற முறையில் 1903-ல் அவருக்கு ஸவ்வா மோரோஸோவ் என்ற மாஸ்கோ லக்ஷாதிபதியுடன் தொடர்பு ஏற்பட்டது. பஞ்சாலே முதலாளியான அவர் தீவிர வாதத்திலும் குட்டை குழப்பிக்கொண்டிருந்தார்.

க்ராஸீன்தான் லெனினின் "நிதி மந்திரி". அவர் மோரோஸோவிடம் சென்று லெனினின் பிரதாபங்களே எடுத்துக் கூறிக் கடன் கேட்டார். மோரோஸோவ் பேச்சைப் பாதியில் துண்டித்து, "அதெல்லாம் எனக்குத் தெரியும். லெனின் தீர்க்க திருஷ்டி நிறைந்தவர்தான். அவருக்கு எவ்வளவு வேண்டும்?" என்று கேட்டார்.

"எவ்வளவு முடியுமோ அவ்வளவு" என்று க்ராஸீன் பதிலளித்தார்.

"என் சொந்த வருமானம் வருஷத்தில் 60,000 ரூபிள். அதில் மூன்றில் ஒரு பங்கு உபகாரச் சம்பளம் முதலிய சில்லரைச் செலவுகளுக்குப் போகிறது; உங்களுக்கு மாதம் ஆயிரம் ரூபிள் போதுமா?" என்று கேட்டார் மோரோஸோவ்.

1905-ல் மோரோஸோவ் தற்கொலே செய்து கொண்ட போது, போல்ஷவிக் கட்சிக்காக, மாக்ஸிம் கார்க்கியின் மனேவி பெயரில் ஒரு பெருந் தொகையை எழுதி வைத்துவிட்டு இறந்தார். அடுத்த வருஷத்தில் கார்க்கி அமெரிக்காவில் சுற்றுப்பிரயாணம் செய்ய ஏற்பாடு செய்தார் க்ராஸீன். இந்தச் சுற்றுப் பிரயாணத்திலிருந்தும் கட்சிக்குக் கணிசமான தொகை கிடைத்தது.

இதைத் தவிர, போல்ஷ்விக்குகள் அமைத்திருந்த ரகசிய ஆயுத தொழிற்சாலேகளேயும் க்ராஸீன் மேற்பார்வையிட்டு வந்தார். பிற்காலத்தில் மாக்ஸிம் லித்விணுவ் என்று அழைக்கப்பட்ட அவருடைய நெருங்கிய நண்பர் "பாபாஷா," பால்கன் நாடுகளிலிருந்து ஆயுதங்களே ரகசியமாகக் கொண்டு வருவதற்கும் அவர் உதவி புரிந்தார்.

இரண்டாவது டுமாவுக்கு நடந்த தேர்தலில் பிற்போக்காளர்கள் வெற்றி பெறுவதைத் தவிர்ப்பதற்காக

அவர்கள் வெற்றி பெறக்கூடுமென்று தோன்றிய இடங்களில் மிதவாதி அபேக்ஷகர்களுடன் மென்ஷ்விக்குகள் சேர்ந்துகொள்ள விரும்பினர். இந்தப் பிரச்னையைத் தீர்க்க 1907 ஜனவரி ஆரம்பத்தில் ஸெய்ண்ட் பீட்டர்ஸ்பர்க் சமூக ஜனநாயகக் கட்சியின் கூட்டம் கூட்டப்பட்டது. ஒன்று சேரும் விஷயத்தில் மென்ஷ்விக்குகளின் நிலை என்ன என்பதை நிர்ணயிப்பதே இந்தக் கூட்டத்தின் முக்கிய வேலையென்று லெனின் தலைமையில் போல்ஷ்விக்குகள் வற்புறுத்தினர். தங்களுக்குப் பலமில்லையென்று உணர்ந்த மென்ஷ்விக்குகள் நிகழ்ச்சி நிரலிலிருந்து இதை அகற்ற முயன்றனர். 42 போல்ஷவிக் பிரதிநிதிகளுக்கும் 31 மென்ஷ்விக் பிரதிநிதிகளுக்குமிடையே தகராறு ஏற்பட்டபோது மென்ஷ்விக்குகள் வெளியேறினர். மற்றவர்கள் அடங்கிய கூட்டத்தில் லெனின் பேசுகையில், தேர்தலில் முற்றிலும் சுயேச்சையாக இருக்க வேண்டுமென்று வற்புறுத்தினர். "பலாத்காரக் கலகம்", "பாட்டாளியின் சர்வாதிகாரம்" முதலிய கோஷங்களில் நம்பிக்கை கொண்டிருந்த இளம் போல்ஷ்விக்குகளுக்கு லெனின் வாதம் மிகவும் பிடித்திருந்தது. ஆனால் வ்ளாடிமீர் வோய்டின்ஸ்கி என்பவர் தலைமையில் இருந்த ஒரு சிறு கோஷ்டி மற்ற இடதுசாரிக் கட்சிகளுடன் ஒரு குறிப்பிட்ட அளவில் ஒற்றுமை ஏற்படுத்திக்கொள்ளலாமென்று வாதித்தது.

எதிர்பாராத இந்த எதிர்ப்பைக் கண்டவுடன் லெனின் திடீரென்று தம் நிலையை மாற்றிக்கொண்டுவிட்டார். பதினைந்து நிமிஷ யோசனைக்குப் பின் மற்ற கட்சிகளுடன் சேர்வதை லெனின் ஆதரித்தார்.

பூரணமாகப் பல்டியடித்தவர் லெனின்தானென்றாலும், மென்ஷ்விக்குகள் துரோகம் செய்துவிட்டதாக அவர் குற்றம் சாட்டினர். '31 மென்ஷ்விக்குகளின் கபடச்செயல்' என்று அவர் ஒருபிரசுரம் வெளியிட்டார். அவதூறு செய்த குற்றத்திற்காகக் கட்சி விசாரணைக் கமிட்டி ஒன்றின் முன் லெனின் ஆஜராக வேண்டுமென்று மென்ஷ்விக்குகள் வற்புறுத்தினர். விசாரணை

யின்போது, தாம் அவதூறு செய்தது உண்மையே என்பதை லெனின் ஒப்புக்கொண்டார். ஆனால் பொது மக்களின் முன் மென்ஷ்விக் கருத்துக்களை இழிவு படுத்துவதற்காகத் தாம்அவ்விதம் அவதூறு செய்தது சரியே என்றும் அவர் வாதித்தார். "இத்தகைய தந்திரங்களைக் கையாள்பவர்கள் மீது பொது மக்களுக்கு அருவருப்பும் துவேஷமும் ஏற்பட வேண்டுமென்பதற்காக வேண்டுமென்றேதான் நான் இப்படி எழுதினேன். இந்தத் தொனி அங்கத்தினர்களைத் திருப்திப்படுத்துவதற்காக ஏற்பட்டதல்ல; அவர்களைப் பிளப்பதற்காக ஏற்பட்டது; எதிரியின் தவறைத் திருத்துவதற்காக ஏற்பட்டதல்ல; அவனை அழிப்பதற்காக, உலகத்திலிருந்தே அவனை ஒழிப்பதற்காக ஏற்பட்டது. துவேஷ வித்தை ஊன்றும் பாஷையில் கட்சித் தோழர்களைப் பற்றி எழுதுவது அனுமதிக்கத்தக்கதல்ல. ஆனால் நம்மிடமிருந்து பிரிந்து போனவர்களைப் பற்றி இப்படி எழுதுவது அனுமதிக்கத்தக்கது மாத்திரமல்ல; அவசியமும்கூட" என்றார் லெனின்.

சமூக ஜனநாயகக் கட்சிக்குள் இவ்விதம் சண்டை நடந்துகொண்டிருந்த போதிலும் தேர்தலில் சர்க்காருக்குத் தோல்வியே ஏற்பட்டது. மறுபடியும் மிதவாதிகளும் சோஷலிஸ்ட்களுமே பெரும்பான்மையாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். சில ஜில்லாக்களில் "கரு நூற்றுவர்" வெற்றி பெற்றனர். இவர்கள் ரஷிய கு-க்ளக்ஸ்-க்ளான் ஸ்தாபனத்தைச் சேர்ந்தவர்கள். முதல் பார்லிமெண்டில் இவர்களுக்கு ஒரு ஸ்தானம் கூட இல்லை.

சீர்திருத்தம் அளிக்க வேண்டும், அல்லது பார்லிமெண்டைக் கலைக்க வேண்டும் என்ற நிலைமை மீண்டும் சர்க்காருக்கு ஏற்பட்டது. பார்லிமெண்டைக் கலைக்க ஏதாவது சாக்குக் கிடைக்குமாவென்று பிரதம மந்திரி ஸ்டோலிபின் எதிர்பார்த்துக்கொண்டிருந்தார். போல்ஷ்விக்குகள் அந்த சந்தர்ப்பத்தை அவருக்கு அளித்தனர். பார்லிமெண்ட் அங்கத்தினர்கள் தங்களுக்கு அளிக்கப்படும் பார்லிமெண்டரி பாதுகாப்பைப்

பயன்படுத்திக் கொண்டு கலகத்திற்குக் கிளர்ச்சி செய்ய வேண்டுமென்று லெனின் வற்புறுத்தினர். "கலகத்தை மூட்ட இவர்கள் தங்கள் பார்லிமெண்ட் அந்தஸ்தைப் பயன்படுத்தவில்லையென்ருல் இவர்கள் உபயோகமற்றவர்களே" என்ருர். போல்ஷ்விக்குகள், சிப்பாய் கோஷ்டிகளையும், மாலுமி கோஷ்டிகளையும் அனுப்பி, டுமா, "உண்மையான வேலையை" ஆரம்பிக்க வேண்டுமென்று வற்புறுத்தச் சொன்ஞர்கள். பார்லிமெண்ட் அங்கத்தினர்களாலும் ரகசியப் படையினராலும் அமைக்கப்பட்ட இந்த கோஷ்டிகள் "செயலை"த்தான் மக்கள் விரும்புகிருர்களென்றும் பேச்சையல்லவென்றும் எடுத்துக்காட்ட முயன்றன.

இந்த ரகசிய போல்ஷ்விக் ஸ்தாபனங்களில் ரகசிய போலீஸ் ஏஜெண்டுகள் நிறைந்திருந்தனர் என்பது பல வருஷங்களுக்குப் பின் வெளியாயிற்று. சமூக ஜன நாயகக் கட்சிப் பிரதிநிதிகளின் நடவடிக்கைகளை இவர்கள் கூர்ந்து கவனித்து வந்தனர். கலகத்தைத் தூண்டியதாக அவர்கள்மீது குற்றம்சாட்ட முடிந்தது. பின் ஸ்டோலிபினுக்கு நல்ல சாக்கு கிடைத்துவிட்டது.

சமூக ஜனநாயகக் கட்சியின் ரகசிய ராணுவத்திற்கு ரகசிய போலீசால் உளவாளியாக அனுப்பப்பட்ட ஷோர்னிகோவா என்ற பெண் தன் ஒப்புதல் வாக்குமூலத்தில் சொன்னதாவது:— "அப்பொழுது ஸெய்ண்ட் பீட்டர்ஸ்பர்கில் இருந்த மத்திய கமிட்டி அங்கத்தினர் ஒவ்வொருவரையும் நான் சந்தித்தேன். ரகசியமாகக் கூடும் எல்லா இடங்களும், அவர்களின் சங்கேத பாஷைகளும் எனக்குத் தெரியும். ராணுவத்தில் இருந்த புரட்சி ஸ்தாபனத்தின் தஸ்தாவேஜுகள் என்னிடம்தான் இருந்தன. எல்லா ஜில்லாக் கூட்டங்களிலும் பிரசார அணிவகுப்புகளிலும், கட்சி மஹாநாடுகளிலும் நான் பிரசன்னமாக இருந்தேன். எல்லாவற்றையும் தெரிந்துகொண்டேன். நான் அறிந்த விஷயங்களை ரகசியப் போலீசுக்கு அனுப்பினேன்" என்று அவள் சொன்ஞர்.

1907-ல் லண்டனில் நடைபெற்ற அடுத்த கட்சி

மகாநாட்டின்போது, மத்தியக் கமிட்டியில் லெனின் ஆதிக்கம் பெற்ருர். மகாநாட்டிற்கு மென்ஷ்விக்குகள் போல்ஷ்விக்குகள், யூத சோஷலிஸ்ட் பண்ட், போலிஷ் லாத்வியா, லிதுவேனிய சமூக ஜனநாயகக் கட்சிகள் முதலியவற்றின் பிரதிநிதிகள் வந்திருந்தனர். லெனின், ப்ளெகஞேவ், ஆக்ஸல்ராட், மார்டோவ், பொட்ர ஸோவ், ட்ராட்ஸ்கி, பொக்டொஞேவ், க்ராஸீன், ரோஸா லக்ஸம்பர்க், ட்ஸெர் டெல்லி, மாக்ஸிம் கார்க்கி முதலிய தலைவர்களும் பிரசன்னமாகியிருந்தனர். இவர்களைத் தவிர, தற்காலத்தில் பிரபலமடையவிருந்த ஸிஞேவீவ், காமனேவ், டாம்ஸ்கி, யாரோஸ்லாவ்ஸ்கி, வோரோஷிலோவ், டேவிட் ஸாஸ்லாவ்ஸ்கி, பூர்ஸ்டம் பர்க், கானெட்ஸ்கி, ஸ்டாலின் முதலியவர்களும் மகாநாட்டிற்கு வந்திருந்தனர்.

கட்சியைச்சேர்ந்த பார்லிமெண்ட் அங்கத்தினர்கள் லண்டனிலிருந்து ரஷியாவுக்குத் திரும்பியபின் போல்ஷவிக் ராணுவ ஸ்தாபனம் ஒரு தூதுகோஷ்டியின் மூலம் அவர்களிடம் கோரிக்கை சமர்ப்பிக்க விரும்பியது. ரகசியப்போலீஸ் உளவாளியான ஷோர்னிகோவா தீர்மானத்தை எழுதுவதில் பங்கு கொண்டாள். ராணுவ ஸ்தாபன அங்கத்தினர்களைப் போலீசார் இஷ்டப்பட்டபோது கைது செய்திருக்கலாம். ஆனல் பார்லிமெண்டின் சமூக ஜனநாயக அங்கத்தினர்களுடன் தொடர்பு ஏற்படுத்திக்கொள்வதுதான் அவர்களுடைய நோக்கம். எல்லாத் தகவல்களும் நேராக ஸ்டோலிபின்னுக்குச்சென்றன. தீர்மானத்தின் வாசகம் சமூக ஜனநாயகக் கட்சிப் பிரதிநிதிகளுக்குக் கிடைப்பதற்கு முன்பே அவருக்குக் கிடைத்து விட்டது. ஷோர்னிகோவா தீர்மானத்தின் இரண்டு நகல்களை எடுத்து ஒன்றை ராணுவ ஸ்தாபனத்திற்கு வைத்து விட்டு மற்ருென்றை ரகசிய போலீசுக்கு அனுப்பினுள்.

தீர்மானத்தைத் தூது கோஷ்டியினர் பார்லிமெண்ட் அங்கத்தினர்களிடம் சமர்ப்பித்தவுடன் போலீசார் தோன்றிச் சோதனை நடத்தினர். ஆனல் சமர்ப்பிக்கப்பட்ட தீர்மானத்தின் நகல் கிடைக்க

வில்லை. பார்லிமெண்ட் அங்கத்தினர் ஒருவர் அதைத் தம் பைக்குள் வைத்துக்கொண்டு விட்டார். அவரைச் சோதனை செய்யப் போலீசாருக்கு அதிகாரமில்லாததால் வழக்கே தோற்று விடும்போலிருந்தது. ஆனால் ஷோர்னிகோவா கொடுத்திருந்த நகலை அவர்கள் சாட்சியமாக உபயோகித்துக் கொண்டனர். பார்லிமெண்ட் அங்கத்தினர்கள் மீது ராஜத்துரோகக் குற்றம் சாட்டப்பட்டது. 1907 ஜூன் 16-ம் தேதி பார்லிமெண்ட் கலைக்கப்பட்டது. ட்ஸெர்ட்டெல்லிக்கும், சமூக ஜனநாயகக் கட்சியைச் சேர்ந்த பார்லிமெண்ட் அங்கத்தினர்களில் பெரும்பாலானவர்களுக்கும் ஸைபீரியாவில் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது. இவர்கள் போல்ஷ்விக் கோஷ்டியைச் சேர்ந்தவர்கள்.

புரட்சி தோற்றுவிடுமென்றும், பின்வாங்கும் தந்திரத்தை அனுஷ்டிக்க வேண்டுமென்றும் 1906-ம் வருஷ கோடைகாலத்தில் லெனின் சொன்னதாக லெபெஷின்ஸ்கி அறிவிக்கிறார். ஆனால் தொழிலாளரின் புரட்சி உணர்ச்சிமாத்திரம் நீடிக்கும்படிப் பார்த்துக்கொள்ள வேண்டுமென்றும், அதனால் தீங்கு ஒன்றும் ஏற்படாதென்றும் லெனின் கருதினார். அரை வெற்றிக்குச் சந்தர்ப்பம் உண்டென்றால் ஜனங்களின் புரட்சி உணர்ச்சியைத் தூண்டுவதன் மூலம்தான் அது சாத்தியம். ஆனால் பின்வாங்குவது தவிர்க்க முடியாததென்றால், பிற்போக்கு சக்திகளை பயமுறுத்தும் பொருட்டு அதை ராணுவ முறையில் செய்யவேண்டும் என்றார் லெனின்.

ஆனால் வெற்றிகரமாகக் கலகம் செய்ய முடியுமென்று அப்பொழுதுகூட லெனின் நம்பியதாக க்ருஷிஷானேவ்ஸ்காயா கூறுகிறார். தொழிலாளர்களுக்கு உதவி செய்ய விவசாயிகள் முன்வருவார்களென்றும், இதனால் நாட்டில் புதிய புரட்சி பெருக்கெடுக்குமென்றும் லெனின் எதிர்பார்த்ததாக அவர் சொல்கிறார். 1906-ம் வருஷ இலையுதிர் காலத்தில் விவசாயிகள் கலகம் செய்வார்களென்று லெனின்

நம்பினாராம். ஆனால் விவசாயிகள் கலகம் செய்ய வில்லை.

ஷோர்னிகோவா விவகாரத்திற்குப் பின் ஸெய்ண்ட்பீட்டர்ஸ்பர்க்கில் லெனின் வாழ்க்கை அபாயகரமானதாகி விட்டது.

ஒருநாள் இரவு போலீசார் சூழ்ந்து கொண்டு நெருங்கி வந்தபோது லெனின் தம் மனைவி க்ரூப்ஸ் காயாவுடன் கூடச் சொல்லிக் கொள்ளாமல் தப்பி ஓடவேண்டியதாயிற்று. இவ்விதம் தப்பித்துக் கொண்டு அவர் பின்லாந்துக்குச் சென்றார்.

பின்லாந்தில்தான் அவருக்கு ஒரு விசித்திரமான தலைவலியும், தூக்கமின்மையும் ஆரம்பமாயின. அவை பின்னர் அவருடைய வாழ்க்கை முழுதும் அடிக்கடி வந்து சித்திரவதை செய்து கொண்டிருந்தன. காலைச் சாப்பாடு ஆனவுடன் 5 அல்லது 6 மணி நேரம் இடைவிடாமல் எழுதுவார். இரவில் அலுத்துப் போய்த் தூக்கம் வருவித்துக்கொள்வதற்காக வெகு தூரம் நடப்பார். இரவைத் தூக்கமில்லாமல் கழித்த பின், உதயமாகி வெகு நேரத்திற்குப்பின் மந்தமாகப் படுக்கையை விட்டு எழுந்திருப்பார்.

பின்லாந்தில் இருப்பதும் அபாயகரமாக இருந்தது. போலீசார் அவரைத் தேடி வந்ததால் அவர் ஸ்டாக் ஹோமுக்குச் செல்லவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. அபோ துறைமுகத்திற்குப் போய்க் கப்பலேறுவது போலீசாரை அழைப்பது போலாகும். ஆகையால் இரவில் பனிக்கட்டி மீது நடந்து ஒரு தீவுக்குச் சென்று அங்கு காத்திருக்கும் கப்பலில் ஏறிச் செல்ல லெனின் தீர்மானித்தார். இரு பின்னிஷ் விவசாயிகளைத் துணை யாகக் கொண்டு அவர் இரவில் பனிக்கட்டிமீது நடந்து அந்தத் தீவுக்குச் சென்றார். அவர்கள் அக்கரையை அடைந்தவுடன் பனிக்கட்டி பிளவுபடத்தொடங்கியது. இதை நினைத்தபோது, “சாவதற்கு எவ்வளவு அசட்டு தனமான வழி!” என்ற எண்ணம்தான் தமக்குத் தோன்றியதாக லெனின் பிற்காலத்தில் சொன்னார்.

## 6. அதலபாதாளம்

லெனின் வாழ்க்கையிலேயே இதுதான் மிகவும் கஷ்டமான காலமென்று சொல்லலாம். புரட்சி அப்போதைக்குத் தோற்றுவிட்டது. எதிர்காலம் பிரகாசமாக இல்லை. அவர் கட்சியைக் கைப்பற்றியிருந்ததால் மத்தியக் கமிட்டியில் ஆதிக்கம் செலுத்தும் அதிகாரம் அவருக்கு இருந்தது. அவருக்குக் கிடைக்கக்கூடிய பெரும்பான்மை ஆதரவும் குறைவாகவே இருந்தது. தவிர கட்சியின் போராட்டப் படைகளைக் கலைக்கும்படி லண்டன் மஹாநாடு தீர்மானித்திருந்தது. ஆயுதம் தாங்கிக் கொள்ளையடிப்பதையும் அது தடை செய்திருந்தது.

போர்ப் படைகளையும் கொள்ளை கூட்டங்களையும் கலைக்க லெனின் விரும்பவில்லை. பாதகமான சூழ்நிலையில் தம் வேலைகளைத் தொடர்ந்து நடத்த அவருக்கு முன்னைக் காட்டிலும் அதிகப் பணம் தேவையாக இருந்தது. போல்ஷ்விக் இயக்கத்தை உயிரோடு வைத்திருக்க தீவிர நடவடிக்கைகள் தேவையாக இருந்தன. ப்ளெகனோவையும், மார்ட்டோவையும் போன்றவர்கள் தம் கைகளைக் கட்டி வைப்பதை அவர் அனுமதிக்க விரும்பவில்லை. போல்ஷ்விக் கேந்திரத்தை எப்படியாவது நடத்தவேண்டியிருந்தது. எந்த முறையிலாவது பணம் சேகரிக்க வேண்டும்.

உடனே கலகம் நடக்கு மென்ற நம்பிக்கையை 1907-ம் வருஷ மத்திக்குள் லெனின் இழந்துவிட்டார். மூன்றுவது டுமா பார்லிமெண்டுக்கான தேர்தலில் கலந்துகொள்ளுமாறு ரஷியாவில் இருந்த தம் சகாக்களை லெனின் கேட்டுக் கொண்டார். ஆனால் அவருடைய கொள்ளைக் கூட்டங்களின் கொள்ளைகள் நீடித்தன.

லண்டன் மஹாநாட்டிலிருந்து 1910-ம் வருஷம் வரை போல்ஷ்விக் கேந்திரம், போல்ஷ்விக்குகளின் ஆதிக்கத்தில் இருந்த ஸெய்ண்ட் பீட்டர்ஸ்பர்க் கட்சி கமிட்டிக்கு மாதம் ஆயிரம் ரூபிளும், மாஸ்கோ கமிட்டிக்கு மாதம் 500 ரூபிளும் அனுப்பி வந்தது. ஐக்கிய

மத்தியக் கமிட்டியின் வெளிப்படையான மாதாந்திர வருமானம் மாதம் 100 ரூபிளுக்குமேல் போகாமலிருந்த போது இவ்விதம் அனுப்பப்பட்டது.

இந்தப் பெருந் தொகைகளை லெனின் பல வழி களில் சம்பாதித்தார். மாக்ஸிம் கார்க்கி நன்கொடை கள் அளித்து லெனினை ஆதரித்தார். மற்றொரு எழுத் தாளரும் பணக்கார எஞ்சினீயருமான காரின்மிக்ஹெய் லோவ்ஸ்கி பதினாயிரக் கணக்கில் பணம் கொடுத்தார். போல்ஷவிக்குகளுக்கு மோரோஸோவ் வருஷத்திற்கு 12,000 ரூபிள் வீதம் கொடுத்திருந்த மான்யத்திற்கு மேலும் இந்தத் தொகைகள் கிடைத்தன.

ஆனால் கொள்ளைகளின் மூலம்தான் அவர்களுக்கு அதிகப் பணம் கிடைத்தது. 1907-ம் வருஷத்தில் டிப்ளிஸில் நடந்ததுதான் கொள்ளைகளுக்குள் மிகப் பெரியது.

ஜூன் 26-ம் தேதி காலை 10-30 மணிக்கு டிப்ளிஸ் தபாலாபீஸுக்கு ஒரு பெரிய தொகை வந்து சேர்ந்தது. அந்தத் தொகை 2½லக்ஷம் ரூபிள் தானென்று சோவியத் சரித்திராசிரியர்கள் கூறுகின்றனர். 3,41,000 ரூபிள் என்று ரஷியப் பத்திரிகைகள் கூறின. அதிகாரிகள் அந்தப் பணமூட்டைகளை ஒரு கோச் வண்டியில் ஏற் றிக் கொண்டு பாங்குக்குப் புறப்பட்டனர். மற்றொரு கோச் வண்டியில் சோல்ஜர்கள் பின் தொடர்ந்தனர். ஆயுதம் தாங்கிய கஸாக்குகள் இரு வண்டிகளுக் கும் காவல் சென்றனர். வண்டிகள் நகரின் மத்திக்கு வந்தவுடன் ஒரு வீட்டு மாடியிலிருந்து தெருவில் ஒரு குண்டு வீசப்பட்டது. அது வெடித்த சத்தத்தில் ஒரு மைல் சுற்றுவட்டாரத்திற்குள் இருந்த ஜன்னல் கண்ணாடிகளெல்லாம் நொறுங்கிப் போயின. காவல் சென்ற கஸாக்குகள்மீதும் குண்டுகள் விழுந்தன. பரம சாதுக்கள்போல் தெருவில் சென்றுகொண் டிருந்தவர்கள் துப்பாக்கிகளால் சுட்டனர். பண மூட்டைகள் மறைந்தன.

பல மாதங்களுக்குப்பின், டிப்ளிஸுக்கு அனுப்பப் பட்ட எண் உள்ள 500ரூபிள் கரன்ஸி நோட்டுகளை

மாற்ற முயன்றதாக பெர்லின், மூனிக், பாரிஸ் முதலிய இடங்களில் பல போல்ஷ்விக்குகள் கைது செய்யப் பட்டனர். 1908 ஜனவரியில் ஒரு பெண்மணி மூனிக் கில் இந்த நோட்டுகளில் ஒன்றை மாற்ற முயன்ற போது கைது செய்யப்பட்டாள். அதே சமயத்தில் பாரிஸில் மாக்ஸிம் லித்விருவ் கைதானுர். அவரிடம் இத்தகைய நோட்டுகள் பன்னிரண்டு இருந்தன.

இத்தகைய நோட்டுகள் வைத்திருந்த அனைவரும் கைது செய்யப்பட்டனர். ஆனுல் இவர்களை ரஷிய சர்க் காரிடம் ஒப்படைக்க பிரெஞ்சு சர்க்காரும் ஜெர்மன் சர்க்காரும் மறுத்துவிட்டன.

இந்தக் கொள்ளை நடத்துவதற்கு வேண்டிய வெடி குண்டுகளை லியோனீட் கிராஸீன்தான் சப்ளை செய்தா ரென்பது மேற்கொண்டு நடந்த புலன் விசாரணைகளி லிருந்து வெளியாயிற்று.

காகேஸஸ் கொள்ளைக் கூட்டத்தின் மூல புருஷர் கள் காமோ, லோமிட்ஸே, ட்ஸின் ஸாட்ஸே ஆகியோ ராவர். காகேஸஸில் காமோவுக்கு மேலதிகாரிபோல், "தோழர் கோபா" என்பவர் லெனின் பிரதிநிதியாக இருந்து வந்தார். ஜோஸப் ஜுகாஷ் வில்லி என்றும் இவர் அழைக்கப்பட்டார். இவர்தான் பின்னர் ஸ்டாலின் என்ற பெயர் பெற்ருர். இந்த நடவடிக்கை களுக்கெல்லாம் தளபதி காமோதான். ஸ்டாலின், லெனி னுடைய தலைமைக் காரியாலயத்தின் பிரதிநிதி.

கொள்ளையடித்தலைக் கைவிட வேண்டுமென்று லண்டனில் நடந்த சமூக ஜனநாயகக் கட்சி மஹாநாடு முடிவு செய்தபின், காகேஸஸைச் சேர்ந்த போயேவிகி கோஷ்டியினரும் ஸ்டாலினும் கட்சியிலிருந்து விலக்கப் பட்டனர்.

ஸ்டாலினும், லண்டன், ஸ்டாக்ஹோம் மஹாநாடு களிலிருந்து திரும்பி வந்த மற்ற போல்ஷ்விக் பிரதிநிதி களும் லெனினைப் போற்றிப் புகழ்ந்தனர். "நீங்கள் புரட்சியின் அவதாரம்; உங்கள் வாக்கே வேத வாக்கு" என்றெல்லாம் முகஸ்துதி செய்தனர்.

டிப்ளிஸ் கொள்ளைக்கு முன்னால் பெர்லின் கிடங்கு ஒன்றில், "நீரோட்ட" அடையாளத்துடன் கூடிய காகிதங்கள் சேமித்து வைக்கப்பட்டிருந்ததை பிரஷிய போலீசார் கண்டுபிடித்தனர். இவை, மூன்று ரூபிள் கள்ள நோட்டுகள் அச்சடிப்பதற்காகச் சேர்த்து வைக்கப்பட்டிருந்தவை. இதைத் தொடர்ந்து பல போல்ஷவிக்குகள் கைதாயினர்.

இந்தக் காகிதங்கள் ஜெர்மன் சமூக ஜனநாயகக் கட்சியினருக்குத் தெரியாமல் பெர்லினுக்குக் கொண்டு வரப்பட்டனவாகையால் இதுபற்றி அவர்களும் ஆத்திரமடைந்தனர்.

இதைப்பற்றி ஆக்ஸல்ராட் கேள்விப்பட்டவுடன் "இது உண்மையென்றால் ஒருவன் போல்ஷ்விக்குகளுடன் சேர்ந்து ஒரே கட்சியில் எப்படி இருக்க முடியும் ?" என்று கேட்டு மார்ட்டோவுக்கு எழுதினார்.

"போல்ஷ்விக்குகளுடன் நம்முடைய எல்லா உறவுகளையும் துண்டித்துக் கொள்ள வேண்டிய காலம் வந்துவிட்டதுபோல் தோன்றுகிறது. இந்த விவகாரம் அவ்வளவு கேவலமாக உள்ளது" என்று ப்ளெகனேவ் கூறினார்.

இந்தக் கண்டனங்களைப் பற்றி லெனின் அதிகம் கவலைப்படவில்லை. "சமூக ஜனநாயகவாதிகள் தாங்கள் அராஜகவாதிகளோ, திருடர்களோ, கொள்ளைக்காரர்களோ அல்ல; அவற்றிற்கெல்லாம் மேம்பட்டவர்கள் நாங்கள்; இந்த முறைகளின் மூலம் நடத்தப்படும் போராட்டத்தை நாங்கள் வெறுக்கிறோம்" என்று பெருமையுடன் சொல்லிக்கொள்ளும்போது, இவர்கள் என்ன சொல்கிறார்களென்பது இவர்களுக்கே புரிகிறதா என்ற சந்தேகம் ஏற்படுகிறது" என்றார் லெனின்.

இருப்பினும், கள்ள நோட்டுச் சதி பற்றி விசாரணை நடத்த வேண்டுமென்று பல போல்ஷவிக்குகள் வற்புறுத்தினர். விசாரணை நடத்த, கட்சியின் அயல்நாட்டு விவகாரப் பிரிவு ஜார்ஜ் சிகேரினை நியமித்தது. பின்னர் இவர்தான் சோவியத் வெளிநாட்டு மந்திரியானார்.

எல்லாச் சாட்சியங்களும் அழிக்கப்பட்டுவிட்டன என்பது லெனினுக்கு நன்ருகத் தெரியும். பிரபல போல்ஷவிக்குகளின் படங்களே, நீரோட்டக் காகிதங்கள் வைத்திருந்த உற்பத்தியாளரிடம் சிகேரின் காட்டினுர். க்ராஸினே அவர் சுட்டிக்காட்டி அவர்தான் உத்தரவு கொடுத்ததாகச் சொன்னுர். இதைக்கண்டு பீதியடைந்த லெனின் இந்த விசாரணேயைக் கட்சியின் வெளிநாட்டுவிவகாரக் குழுவினிடம் ஒப்படைக்க வேண்டுமென்று மத்தியக் கமிட்டியை வற்புறுத்தினுர். இதில் பெரும்பான்மையாக இருந்த போல்ஷ்விக்குகள் சாட்சியங்களேக் குழிதோண்டிப் புதைத்துவிட்டனர்.

லெனின் தூண்டுதலின் பேரில் காகேஷிய கொள்ளேக் கூட்டப் பிரிவினரும் ஸ்டாலினும் மீண்டும் கட்சியில் கௌரவத்துடன் சேர்த்துக்கொள்ளப்பட்டனர். தவிர கட்சி விசாரணேயின்போது சாட்சி சொன்னதற்காக மார்ட்டோவை விசாரிக்க வேண்டுமென்றும் அவர்கள் வற்புறுத்தினர்.

க்ராஸீன் இறந்த பின் அவர் ஞாபகார்த்தமாக மாஸ்கோவில் ஒரு மலர் பிரசுரிக்கப்பட்டது. கொள்ளேயடிப்பதற்கு அவர் எப்படி திட்டங்கள் வகுத்தாரென்பதும் அவற்றைக் காமோ எப்படி நிறைவேற்றினுரென்பதும் அதில் பெருமையுடன் விளக்கப்பட்டிருந்தன. 1907-ல் க்ராஸீன் பின்லாந்தில் கைது செய்யப்பட்டபோது, அவரைத் தூக்கிலிடுவதற்கு வேண்டிய சாட்சியங்கள் ஸெய்ண்ட் பீட்டர்ஸ்பர்க் போலீசாருக்குக் கிடைத்திருப்பதாக லெனின் நினேத்தார். ஆனுல் க்ராஸீன் காரணம் கூறப்படாமல் திடீரென்று விடுதலே செய்யப்பட்டார். அவர் பெர்லினுக்குச் சென்று ஸீமென்ஸ்-ஷுகார்ட் கம்பெனியில் ஒரு பதவி ஏற்றுக்கொண்டார். தவிர, டிப்ளிஸில் கொள்ளேயடிக்கப்பட்ட 5 நூறு ரூபிள் நோட்டுக்களின் எண்களே ரசாயன முறையில் மாற்றிப் பணமாக்கிக்கொண்டார்.

க்ராஸீன் விவகாரம் முடிந்தவுடனே விக்டர் தோழர் விவகாரம் கிளம்பியது. விக்டரின் உண்மையான பெயர் டாராடுடா. அவர் ரகசியப் போலீசுக்குத்

தகவல் கொடுப்பவர் என்று 3 வருஷ காலம் ஒதுக்கி வைக்கப்பட்டிருந்த போதிலும் போல்ஷவிக் கேந்திரத்தில் சேர்த்துக்கொள்ளப்பட்டார். இதுபற்றி விசாரணை நடத்தப்படவில்லை. அவர் என்ன வாக்குறுதியளித்தார் என்பது கட்சியில் ஒரு சிலருக்கு மட்டுமே தெரியும். "ப்ரோலடேரி" பத்திரிகையில் விக்டர் மீது போக்டனேவ் இந்தக் குற்றச் சாட்டுகளைக் கூறியபோது அவை பற்றி விசாரணை நடத்துமாறு உத்தரவிடப்பட்டது. ஆனால் அந்த விசாரணையின் முடிவுகள் வெளியிடப்படவேயில்லை. விக்டர் பகிரங்கமாக கௌரவிக்கப்படவில்லையென்றாலும் லண்டன் மஹாநாட்டில் அவர் கட்சியின் மத்தியக் கமிட்டி அங்கத்தினராகவும் வெளிநாட்டு விவகாரக் குழுவின் தலைவராகவும் போல்ஷ்விக் கேந்திரத்தின் நிதி டைரக்டராகவும் நியமிக்கப்பட்டார். நிதி டைரக்டர் என்ற முறையில் அவர் அசாத்தியத் திறமை காட்டினார்.

ஷ்மிட் என்ற மாஸ்கோ முதலாளி ஒருவர் சமூக ஜனநாயகக் கட்சிக்குப் பெருந்தொகை எழுதி வைத்திருந்தார். அந்தப் பணம் போல்ஷ்விக் கேந்திரத்துக்கு தான் சேரவேண்டுமென்று லெனின் வற்புறுத்தினார். இத்தொகையைப் பெற மத்தியக் கமிட்டிக்குத்தான் அதிகாரம் உண்டென்று நிதியின் நிர்வாக அதிகாரி கூறினார். போல்ஷ்விக் கேந்திர அங்கத்தினர்களும் நிதி பராமரிப்பாளரும், சொத்து எழுதி வைத்தவர் வாரிசுகளும் அடங்கிய கூட்டம் ஒன்று கூடியது. இந்தக் கூட்டத்திற்கு வந்திருந்த போல்ஷ்விக் கேந்திர அங்கத்தினர்கள் அனைவரும் மத்தியக் கமிட்டி அங்கத்தினர்களுமாவார்கள். பணத்தை போல்ஷ்விக் கேந்திரத்திற்காகத் தம்மிடமிருந்து பறிக்க விக்டர் முயன்றதாக நிதி நிர்வாக அதிகாரி புகார் செய்தார். எஸ்டேட் செட்டில்மெண்ட் ஆகும் வரையில் இப்பிரச்னையை நிறுத்தி வைப்பதாகவும், விக்டரின் நடவடிக்கை பற்றி விசாரிப்பதாகவும் போல்ஷ்விக்குகள் வாக்குறுதியளித்தனர்.

பின்னர் மத்தியக் கமிட்டிக் கூட்டம் ஒன்றில்

இதுபற்றித் தற்செயலாக ஒரு கேள்வி எழுப்பப்படும் வரையில் மென்ஷ்விக்குகளுக்கு இதைப் பற்றி ஒன்றுமே தெரியாது. எஸ்டேட் செட்டில்மெண்ட் இன்னும் ஆகாததால் "சதிக்காரணங்களை" முன்னிட்டு இதுபற்றி மௌனமாக இருக்கவேண்டுமென்று போல்ஷ்விக்குகள் கூறினர்.

இந்தத் தொகையில் பெரும்பகுதியை போல்ஷ்விக் கேந்திரத்திற்கு விக்டர் அனுப்பிவிட்டாரென்பது ஒரு வருஷத்திற்குப் பின் தெரிய வந்தது.

ஷ்மிட் விவகாரம் உண்மையில் இன்னும்பெரியது. ஷ்மிட், அவருடைய சகோதரர், இரு சகோதரிகள் ஆகியவர்களுக்கு மாஸ்கோவில் மரச்சாமான் தொழிற்சாலை பரம்பரைச் சொத்தாக இருந்தது. **1905** ஜனவரியில் தொழிற்சாலைத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்தபோது, ஷ்மிட் அவர்களுடைய கோரிக்கைக்கு இணங்கி, அவர்களுடைய உதாரணத்தைப் பின்பற்ற மற்ற தொழிற்சாலைத் தொழிலாளர்களையும் தூண்டுமாறு கூறினர். தொழிற்சாலையில் பள்ளிக்கூடம் கட்ட ஒரு பெருந்தொகை ஒதுக்கி, தொழிலாளர்களைப் பங்குதாரர்களாகச் செய்யவும் திட்டமிட்டார்.

**1905** டிசம்பரில் மாஸ்கோவில் கலகம் நடந்தபொழுது போல்ஷ்விக்குகள் அந்தத் தொழிற்சாலையில் அரண் அமைத்துக் கொண்டனர். பீரங்கிகுண்டுகளினுல் கட்டிடம் சேதமாயிற்று. ஷ்மிட் கைது செய்யப்பட்டுச் சிறையில் அடைக்கப் பட்டார். ஒரு வருஷச் சிறை வாசத்திற்குப்பின் அவர் தூக்குப் போட்டுக் கொண்டு மாண்டார். அவர் இறப்பதற்குமுன் தம் சொத்தில் பெரும்பகுதியை சமூக ஜனநாயகக் கட்சிக்கு எழுதிவைத்தார். அவருடைய சகோதரிகளுக்கு போல்ஷவிக்குகளிடம் அபிமானம் இருந்தபோதிலும், பணம் அவர்களுக்கு மாற்றப் படுவதைத் தாமதிக்க முயன்றனர். ஸ்விட்ஜர்லாந்தில் இருந்த லெனின் இதை அறிந்து ஆண்ட்ரி கானிஸ் என்ற போல்ஷ்விக்கை மாஸ்கோவுக்கு அனுப்பினுர். சகோதரிகளில் ஒருத்தியின் பங்கை போல்ஷவிக் கட்சிக்குக் கொடுத்துவிடத்

தூண்டுமாறு அவரிடம் லெனின் சொல்லியனுப்பினர். ஆண்ட்ரி கானிஸ், அந்த சகோதரிகளில் ஒருத்தியான காதரீன், தம்மை மணக்கச் சம்மதிக்கும்படிச் செய்து விட்டார். ஆனல் விவாகமானபின் அவரும் பணத்தைக் கொடுக்கவில்லே. அவருடைய போல்ஷ்விக் தோழர்கள் அவரைக் கொன்று விடுவதாக பயமுறுத்தி ஒரு லக்ஷம் ரூபிள் வசூலித்தனர்.

மற்ருெரு சகோதரியின் சொத்தையும் அபகரிக்க விக்டரை லெனின் அனுப்பினர். ஆண்ட்ரி கானிஸ் காட்டிய வழியையே விக்டரும் பின்பற்றி, மற்ருெரு சகோதரியான எலிஸபெத்தை மணந்து கொண்டார். ஆனல் பணம் மட்டும் போல்ஷ்விக்கட்சிக்குப் போய்ச் சேரவில்லே. போக்டனேவ், ஜனகார்ஸ்க்கி, முதலிய போல்ஷ்விக் தலைவர்கள், விக்டரை, சர்க்கார் உளவாளி யென்று மறுபடியும் குற்றம்சாட்டினர். லெனின் மட்டும் முதலில் அவரை ஆதரித்து விசாரணைக்குக் கொண்டுவர மறுத்தார். ஆனல் இறுதியில் கட்சிக் கோர்ட் ஒன்று அமைக்கப்பட்டது. விசாரணையை நடத்துவதற்கு உளவாளிகள் மீது வஞ்சம் தீர்த்துக் கொள்ளும் விளாடிமீர் புர்ட்ஸேவும் அழைக்கப்பட்டார். விக்டர் மீது குற்றத்தை நீரூபிக்கக்கூடிய ருஜு கிடைக்கவில்லே. ஆனல் கட்சி வேலேகளில் ஈடுபட அவர் தகுதியற்றவரென்று தீர்ப்புக் கூறப் பட்டது. அவர் கட்சியிலிருந்து கைவிடப் பட்டார்.

விக்டரின் அரசியல் வாழ்வு அதோடு முடிவடைந் திருக்கவேண்டும். ஆனல் அப்படி முடிந்துவிட வில்லே. போல்ஷ்விக் புரட்சிக்குப்பின் விக்டருக்கு மறுபடியும் லெனின் தயவு கிடைத்தது. பிரான்ஸில் இருந்த சர்வதேச கம்யூனிஸ்ட் ஸ்தாபனத்தில் அவர் மாஸ்கோவின் பிரதிநிதியாக, டாரடுடா என்ற தம் உண்மைப் பெயருடன் இருந்துவந்தார். சோவியத் பொருளாதாரக் கவுன்ஸிலிலும் அவர் உயர்ந்த பதவி வகித்துவந்தார். 1920-க்குப் பின் அவர் இறந்த பொழுது சோவியத் பத்திரிகைகள் அவரைப் பற்றி அதிகமாக ஒன்றும் சொல்லவில்லே.

1907-ல்லண்டனில் நடந்த மஹாநாட்டில் மத்தியக் கமிட்டிக்கு விக்டரின் பெயரை லெனின் பிரேரித்த போது பிரபல போல்ஷ்விக்கான ஸ்டானிஸ்லாவ் வோல்ஸ்கி தம் ஆச்சரியத்தைத் தெரிவித்தார். இதற்கு லெனின் பதிலளிக்கையில், "எந்த மத்தியக் கமிட்டியும் சக்தி வாய்ந்ததாக இருக்கவேண்டுமானுல் அதில் வன்மை படைத்த எழுத்தாளர்களும், திறமையான ஸ்தாபன அமைப்பாளர்களும், புத்திசாலிகளான அயோக்கியர்களும் இருக்கவேண்டும். தோழர் எக்ஸ் (விக்டர்) புத்திசாலியான அயோக்கியன் என்ற முறையிலேயே அவர் பெயரைப் பிரேரிக்கிறேன்" என்ருர்.

"விக்டர் அயோக்கியன் என்பது எல்லாருக்கும் தெரியும்" என்று பழைய போல்ஷ்விக்கான பேராசிரியர் ரோஷ்கோவ் கூறிஞர். லெனின் சிரித்துவிட்டு, "அதனுல்தான் அவர் நமக்கு உபயோகமாக இருக்கிருர். அவர் எதைச் செய்வதற்கும் தயங்கமாட்டார். உண்மையாகச் சொல்லுங்கள் — நீங்கள் கூத்தாடியாக இருக்கச் சம்மதிப்பீர்களா? மாஸ்கோ சீமாட்டி ஒருத்தியுடன் பணத்திற்காக வாழ்க்கை நடத்துவீர்களா? நிச்சயமாகச் செய்யமாட்டீர்கள்; நானும் செய்யமாட்டேன். ஆனுல் அவர் அவ்விதம் வாழ்க்கை நடத்திஞர். ஆகையால் அவர் மிகவும் உபயோகமானர்; அவருக்கு பதில் மாற்று ஆள் கண்டு பிடிக்கமுடியாது" என்று பதிலளித்தார்.

ரஷியாவின் தற்காலச் சரித்திரத்தில் அதிக முக்கிய ஸ்தானம் வகிக்கவிருந்த அவருடைய நெருங்கிய சகாக்கள் பலரைப்பற்றி லெனின் இத்தகைய கருத்துத்தான் கொண்டிருந்தார்.

லெனினின் இத்தகைய போக்கு அவரையே திருப்பித்தாக்கத் தொடங்கியது. மாக்ஸிம் கார்க்கி, போக்டனேவ், பேராசிரியர் ரோஷ்கோவ், அலெக்ஸின்ஸ்கி, பேராசிரியர் போக்ரோவ்ஸ்கி, ஜன கார்ஸ்கி, ஸ்டார்னிஸ்லாவ் வோல்ஸ்கி ஆகிவர்கள் உள்ளிட்ட பல முக்கிய எழுத்தாளர்களும் அறிஞர்களும் போல்ஷ்விக் கேந்திரத்திலிருந்து வெளியேறினர். பெரும்

பான்மைக் கருத்தைப் புறக்கணிப்பதாகவும், கட்சிப் பணத்தையும், அச்சுக்கூடத்தையும் சட்ட விரோத மாகக் கைப்பற்றியதாகவும், சுதந்திரமான கருத்துக் களை நசுக்க முயன்றதாகவும் லெனின் மீது இவர்கள் குற்றம் சாட்டினர். க்ராஸினும் வேறு காரணங்களுக் காக லெனினைத் துறந்தார். பிற்காலத்தில் இவர்களில் சிலர் மட்டும் போல்ஷவிக் கட்சிக்குத் திரும்பினர். ஆனால் 1908-ல் லெனின் அநேகமாகத் தன்னந்தனியா கவே இருந்தார். இந்தக்காலத்தில் லெனினை உறுதி யுடன் ஆதரித்தவர்கள் கிரிகிரி ஜீனேவீவ், லியோ காமனேவ் ஆகிய இருவர்தான்—இவர்கள் இருவரை யும்தான் 1936-ல் ஸ்டாலின் கொன்றார்.

ரஷியாவிலேயேகூட புரட்சியையே தொழிலாகக் கொண்டவர்களும் மாணவர்களும் நம்பிக்கையையும் உற்சாகத்தையும் இழந்து வந்தனர். ஸ்டோலி பின்னின் உறுதியினால் புரட்சிப் பெருக்கு தடுத்து நிறுத்தப்பட்டது. வோட்டுரிமையைக் கட்டுப்படுத் தும் புதிய தேர்தல் சட்டங்கள் இயற்றப்பட்டிருந்தன. ஆகையால் மூன்றாவது டுமா பார்லிமெண்ட் அதற்கு முந்தின பார்லிமெண்டுகளைவிடப் பிற்போக்கானதாக இருந்தது. புரட்சியின் பயங்கரச் செயல்கள் தயை தாக்ஷண்யமின்றி ஒடுக்கப்பட்டன. அறிவாளிகளும் தொழிலாளரும் புரட்சி இயக்கத்தை விட்டு விலகினர்.

லெனின் ஜினீவாவுக்குத் திரும்பி, "ப்ரோலடேரி" என்ற பத்திரிகையையும் மற்றும் பல போல்ஷவிக் பிரசுரங்களையும் வெளியிட்டு வந்தார். ஆனால் இந்த வாழ்க்கை அவருக்குத் திருப்தியளிக்கவில்லை.

1908 ஜனவரி 14-ம் தேதி அவர் தங்கை மேரியா வுக்கு எழுதிய ஒரு கடிதத்தில், "நாங்கள் இந்த நரகக் குழிக்கு வந்து பல நாட்கள் ஆகிவிட்டன. ஆனால் வேறு வழியில்லை. இதற்குப் பழக்கப்படவேண்டும்" என்று குறிப்பிட்டிருந்தார்.

ஒரு நாள் ஜினீவாவின் ஜனசஞ்சாரமற்ற தெருக் கள் வழியே அவர் நடந்து சென்று கொண்டிருக் கையில், "சாவதற்குத்தான் நான் இங்கு வந்திருக்

கிறேனே என்று தோன்றுகிறது'' என்று தம் மனைவியிடம் கூறினார்.

ஸ்விட்ஜர்லாந்தில் எலிஸபெத் கே.யை அவர் மறுபடியும் சந்தித்தார். ஜினீவா அருகிலேயே அவள் வசித்து வந்தாள். லெனின் அடிக்கடி சைகிளில் அவள் வீட்டுக்குச் செல்வார். சில சமயங்களில் அவர் ஒரு சதுரங்கப் பலகையையும் காய்களையும், அவளுக்குச் சதுரங்க விளையாட்டு சொல்லிக் கொடுப்பதற்காகக் கொண்டு செல்வார். அவளுக்குச் சதுரங்க விளையாட்டு வரவேயில்லை. லெனின் பொறுமையிழந்து, ''மார்க்ஸைப் புரிந்து கொள்வது, சதுரங்கம் ஆடுவது, ரயில்வே கால அட்டவணையைப் படிப்பது ஆகிய மூன்று காரியங்களையும் செய்யக்கூடிய பெண்ணை நான் இதுவரை சந்தித்ததில்லை'' என்றார்.

1909-ம் வருஷம் இலையுதிர் காலத்தில் லெனின் பாரிஸுக்குச் சென்றார். அவருடைய வாழ்க்கையின் மிகக் கஷ்டமான காலத்தை அங்குதான் கழித்தார். நகரின் வெளிப்புறத்தில் நாலு அறைகளுடன் கூடிய ஓர் இடத்தை அவர்கள் வாடகைக்கு அமர்த்திக் கொண்டனர். அறைகள் விசாலமாகவும் வெளிச்சமாகவும் இருந்தன. ஓர் அறை க்ருப்ஸ்காயாவின் தாயாருக்காகவும், மற்றொன்று, பாரிஸில் படித்துக் கொண்டிருந்த லெனின் தங்கைக்காவும், மூன்றுவது அறை லெனின் தம்பதிகளுக்காகவும், நாலாவது அறை பொழுது போக்குக்காகவும் ஒதுக்கப்பட்டிருந்தன. அவர் வசித்த இடத்திலிருந்து புத்தகசாலை சிறிது தூரத்தில் இருந்தது. அங்கு லெனின் சைகிளில் போய் வருவார்.

புத்தகங்கள் வாங்குவதில்கூட அதிக ''சிவப்பு நாடா'' சம்பிரதாயங்கள் அனுஷ்டிக்கப்பட்டன. சாப்பாட்டு வேளையில் புத்தகசாலை மூடப்படும். இதற்காகப் புத்தகசாலையையும் பாரிஸையுமே லெனின் சபிப்பார்.

1910-ல் லெனின் குடும்பம், ரூ மேரி ரோஸ் என்ற அமைதியான இடத்திற்குக் குடி போயிற்று. அருகில்

இருந்த புல்வார்ட் மாண்ட்பார்னஸி என்ற இடத்திலும் அவர்கள் இரு அறைகள் வைத்திருந்தனர். இங்கு லெனின் கடுமையான வேலை திட்டம் வகுத்துக் கொண்டார். காலை எட்டு மணிக்கு அவர் எழுந்து புத்தகசாலைக்குச் செல்வார். பிற்பகல் இரண்டு மணிக்குத் திரும்பி வருவார். பிறகு வீட்டிலேயே வேலை செய்வார். அவருடைய தோழர்கள் அவருக்கு அதிகத் தொந்தரவு கொடுக்காதபடி க்ரூப்ஸ்காயா பார்த்துக் கொள்வாள்.

எதிரிகளுடன் சமாதானம் செய்துகொள்ளக் கூடாது என்பதில் லெனின் உறுதியாக இருந்தார். 1910-ம் வருஷ கோடை காலத்தில் சர்வதேச சோஷலிஸ்ட் ஸ்தாபன மகாநாடு கோபன்ஹேகனில் நடைபெற்றது. பல்வேறு பிரிவுகளுக்குமிடையேயிருந்த வேற்றுமைகள் அப்பொழுது நன்ருகத் தெரிந்தன. முக்கியமாக லெனினுக்குத்தான் எதிர்ப்பு அதிகமாக இருந்தது. மகாநாட்டின் ரஷியப் பிரிவுக் கூட்டத்தில் லெனின் தொலைந்தால் கட்சிக்கு நல்லதென்று எல்லோரும் சொல்வதைக் க்ருஷி ஷாஞேவ்ஸ்காயா கேட்டாள். “ஒரு மனிதன் எப்படிக் கட்சியைக் கெடுக்க முடியும்?” என்று அவள் லெனின் எதிரிகளில் ஒருவரைக் கேட்டாள். “எப்படியென்ருல், ஒரு நாளில் 24 மணி நேரமும் புரட்சி ஒன்றைப் பற்றி மட்டுமே சிந்தித்துக் கனவு காண்பவர் வேறு ஒருவரும் இல்லை” என்று அவர் பதிலளித்தார்.

ரஷியாவில் புரட்சி இயக்கம் தோல்வியடைந்து கொண்டே வந்தது. கட்சியில் போலீஸ் உளவாளிகளும் ஏஜெண்டுகளும் நிறைந்திருந்தனர்.

1910-ம் வருஷம் புரட்சி சோஷலிஸத்திற்குத் தோல்விக் காலமென்ருலும் 1905-ம் வருஷத்திலிருந்து பெரிதும் முன்னேறியிருந்தது. ஸ்டோலிபின் போட்ட கட்டுப்பாட்டுக்குஉட்பட்டு பத்திரிகைகளுக்கு முன்னை விட அதிக சுதந்திரம் இருந்தது. அடிக்கடி சோஷலிஸ்ட் பத்திரிகைகள் வெளிவரும். ஒரு பத்திரிகையை ஸென்ஸார் தடுத்தால், அது வேறு பெயருடன் மறு

நாள் வெளி வரும். தொழிலாளர்கள் தொழிற்சங்கங்களும் பரஸ்பர உதவிச் சங்கங்களும் அமைத்துக் கொள்ளும் சுதந்திரத்தைத் தொழிலாளர்கள் பயன் படுத்திக்கொண்டனர். இவை அரசியலில் ஈடுபடாமலிருந்த வரை இவற்றில் அதிகாரிகளும் தலையிடுவதில்லை.

மென்ஷவிக்குகள் தொழிற்சங்க இயக்கத்தின் சக்தியை உணர்ந்து இந்தத் துறையில் கவனம் செலுத்தத் தொடங்கினர். ஆனால் இந்தப் புதிய போக்கு சமூக ஜனநாயகக் கட்சிக்கு அபாயம் என்று லெனின் கருதினார். தொழிலாளர்கள் ரகசிய ஸ்தாபனங்களிலிருந்தும், புரட்சியையே தொழிலாகக் கொண்டவர்களின் தலைமையிலிருந்தும் விலகிச் சென்றதைக் கண்டு லெனின் பீதியடைந்தார். மென்ஷவிக்குகள் புரட்சி லட்சியத்திற்கு துரோகம் செய்ததாகவும், கட்சியையே அழிக்க முயன்றதாகவும் லெனின் குற்றம் சாட்டினார்.

தொழிற்சங்க இயக்கம் பலப்பட்டபின் முக்கியமான சங்கங்களைக் கைப்பற்ற லெனின் ஓர் இயக்கம் ஆரம்பித்தார். அவை கட்சிக்கு அடங்கி நடக்க வேண்டுமென்றார். மிகவும் பலம் பொருந்திய சங்கங்களில் ஒன்று ஸெய்ண்ட் பீட்டர்ஸ்பர்க் உலோகத் தொழிலாளர் சங்கமாகும்.

1906ல்ரோமன் மாலினேவ்ஸ்கி என்ற தொழிலாளி அதன் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவர் அறிவினாலும் உற்சாகத்தினாலும் பேச்சு வன்மைமையாலும் உலோகத் தொழிலாளர்களின் ஆதரவைப் பெற்றார். 1909-ல் மாலினேவ்ஸ்கி கைது செய்யப்பட்டு ஸெய்ண்ட் பீட்டர்ஸ்பர்க்கிலிருந்து பிரஷ்டம் செய்யப்பட்டார். அவர் மாஸ்கோவுக்குச் சென்று மென்ஷவிக் ஸ்தாபனத்தில் சேர்ந்தார். 1910-ல் அவரும் அவருடைய சகாக்களில் சிலரும் கைது செய்யப்பட்டனர். அவர் சீக்கிரத்திலேயே விடுதலையானார். ஆனால் அவரோடு கைது செய்யப்பட்ட மற்ற மென்ஷவிக்குகள் மாத்திரம் சிறையிலேயே இருந்தனர்.

அவருடைய விடுதலை சந்தேகத்தைக் கிளப்பியது. ஏனெனில் ஒரே கூட்டத்தில் புரட்சிகரமான பிரசங்கங்கள் நிகழ்த்தியதற்காகத்தான் எல்லாரும் கைது செய்யப்பட்டனர். அவற்றுள் மாலினேவ்ஸ்கியின் பிரசங்கம்தான் ஆக்ஷேபகரமானது. சிறிது காலத்திற்குப் பின் மாலினேவ்ஸ்கி போல்ஷவிக் பிரிவில் சேர்ந்தார்.

பிறகு மாஸ்கோவில் பல போல்ஷவிக்குகள் கைது செய்யப்பட்டனர். கைது செய்யப்பட்டவர்களில் நிகொலாய் புகாரின் ஒருவர். (இவர் சோவியத் அதிகாரவர்க்கத்தில் உயர்ந்த ஸ்தானம் வகித்தவர்களில் ஒருவர். 1938-ல் இவரைஸ்டாலின் கொன்றுவிட்டார்.) புகாரின் போல்ஷவிக் கட்சியின் மாஸ்கோ கமிட்டி அங்கத்தினர். மாலினேவ்ஸ்கி அவருடைய நம்பிக்கையைப் பெறத் தீவிரமாக முயன்ற போதிலும் அவரை ஆரம்ப முதலே புகாரின் நம்பவில்லை. எந்தக் கட்சித் தோழனுடனாவது ரகசியப் பேச்சு நடத்த அவர் ஏற்பாடு செய்யும்போதெல்லாம் அவர்மீது பாய ரகசிய போலீஸ் ஏஜெண்டுகள் காத்திருப்பார்கள். இந்த ஒவ்வொரு சமயத்திலும் நடக்கவிருந்த சந்திப்பைப் பற்றி மாலினேவ்ஸ்கிக்குத் தெரியும். புகாரினுடன் பேசவிருந்தவர்கள் கைது செய்யப்படுவார்கள்.

கடைசியில் புகாரினே கைது செய்யப்பட்டார். அவரை மாஸ்கோ கமிட்டியிலிருந்து ஒழிப்பதற்காக மாலினேவ்ஸ்கி துரோகம் செய்துவிட்டாரென்று அவருக்குச் சந்தேகமற விளங்கியது. சிறையில் இருந்த பல மென்ஷவிக்குகளும், தாங்கள் கைதியானதற்கு மாலினேவ்ஸ்கிதான் காரணமென்று நினைத்தனர். ஆனால் இதை நிரூபிப்பதற்கு திட்டமான அத்தாட்சி யில்லை. புகாரினும் மற்ற போல்ஷவிக் தலைவர்களும் இல்லாமற் போனபின் கட்சி ஸ்தாபனத்தில் மாலினேவ்ஸ்கி பிரமிக்கத்தக்க முறையில் முன்னேறினர்.

புரட்சி நடவடிக்கைகளில் தேக்கம் ஏற்பட்டிருந்ததற்கு மாறாகத் தொழிலாளர் இயக்கம் வேகமாக முன்னேறியது. ஜார் மன்னன் ஆட்சி இனனும் உறுதியாகவே இருந்தது. ஆனால் ஸெய்ண்ட் பீட்டர்ஸ்பர்க்,

மாஸ்கோ முதலிய நகரங்களில் தொழிலாளர் சக்தி வாய்ந்த முறையில் வேலை நிறுத்தங்கள் நடத்தினர். சமூக ஜனநாயகக் கட்சியில் பிளவு வளர்ந்து கொண்டே வந்தது. ஐக்கிய மத்தியக் கமிட்டி 1910-ல் பாரிஸில் கூடியது. 1907-ல் லண்டனில் கூடிய மகா நாட்டில் தங்களுக்கு இருந்த பெரும்பான்மையைக் கொண்டு இந்த மகாநாட்டில் ஆதிக்கம் செலுத்த போல்ஷவிக்குகள் விரும்பினர். ஆனால் லெனின் தலைமையை ஏற்க மென்ஷவிக்குகளும் யூத ஜன நாயக பண்ட் ஸ்தாபனத்தினரும் மறுத்துவிட்டனர்.

போல்ஷவிக் கேந்திரம் பின்னர் தன்னிடம் இருந்த பெருந்தொகையை, ரஷியாவில் ரகசிய இயக்கத்திற்காகவும் வெளிப்படையான நடவடிக்கைகளுக்காகவும் பயன்படுத்தியது. லெனின் ரஷியாவில் இருந்த தம் ஏஜெண்டுகள் மூலம் ஸெய்ண்ட் பீட்டர்ஸ்பர்க்கில் "ஸ்வெஸ்டா" (நக்ஷத்திரம்) என்ற ஒரு பெரிய வாரப் பத்திரிகையை ஆரம்பித்தார். அதில் கட்டுரை எழுத ப்ளெகனேவ் சம்மதித்ததால் அதன் மதிப்பு உயர்ந்தது. அதன் முதல் இதழ் 1910-ம் வருஷக் கடைசியில் வெளி வந்தது. டூமா பார்லிமெண்டில் இருந்த சமூக ஜனநாகக் கட்சி அங்கத்தினர்கள் அதை ஆதரித்தனர். அதன் ஆசிரியர் குழுவில் பார்லிமெண்ட் அங்கத்தினர் ஒருவர் ஒரு போல்ஷவிக், ப்ளெகனேவை ஆதரிக்க ஒரு மென்ஷவிக் ஆகியவர்கள் இருந்தனர். 1911 ஜூனில் பத்திரிகை நின்றது. அது மறுபடியும் இலையுதிர் காலத்தில் வெளிவந்த போது ப்ளெகனேவும், போல்ஷவிக் அல்லாத மற்றவர்களும் அதிலிருந்து வெளியேறிவிட்டனர். இப்பொழுது "ஸ்வெஸ்டா" லெனினின் சொந்தப் பத்திரிகையாகிவிட்டது. ஸினேவீவ், காமனேவ், க்ருப்ஸ்காயா ஆகியவர்கள் தான் அதில் முக்கியமாகக் கட்டுரைகள் எழுதி வந்தனர்.

இப்பொழுது லெனினுக்கு வயது நாற்பது. அவருடைய சக்திகளெல்லாம் உச்சநிலையில் இருந்தன. ஆனால் பல வருஷங்களைச் செலவிட்டு அவர் நிர்மா

ணிக்க விரும்பிய ஸ்தாபனம் இன்னும் பலவீனமாகவே இருந்தது. அவர் அலுத்துக் காணப்பட்டார். தலை வலியும் தூக்கமின்மையும் அவருக்குத் தொல்லை கொடுத்து வந்தன. இருந்தாலும் அவர் உக்கிரமாக வேலை செய்து வந்தார்.

1911-ம் வருஷத்திற்குள், கட்சியில் ஆதிக்கம் பெறப் புதிய திட்டங்களை வகுப்பதில் அவர் முனைந்தார். மென்ஷவிக்குகளுடன் ஒன்று சேர்வதை ஆதரித்த சிலர் அவர் தரப்பிலேயே இருந்தனர். இருதரப்புப் பிரதிநிதிகளும் லண்டனில் சந்தித்துப் பேசினர். ஆனால் அந்தச் சம்பாஷணைகளில் லெனின் கலந்து கொள்ள விரும்பவில்லை. எதிரிகளைத் தோற்கடிப்பதற்காகத் தம்முடைய ஆதரவாளர்கள் அடங்கிய ஒரு மஹாநாட்டைக் கூட்டத் தம் ஏஜெண்டுகளை ரஷியாவுக்கு அனுப்பினார்.

போல்ஷவிக் மஹாநாடு 1912 ஜனவரியில் பிரேகில் கூடவிருந்தது. அவர் பிரேகுக்குப் புறப்பட்டபின், அதே இடத்திற்குச் செல்லும் இரு போல்ஷவிக் பிரதிநிதிகள் பிரேக் வந்து சேர்ந்தனர். சட்ட விரோதப் பிரசுரங்களை மாஸ்கோவில் வினியோகிப்பதையே முக்கிய வேலையாகக் கொண்ட பிரெண்டின்ஸ்கி இவர்களில் ஒருவர். இவர் மேற்கு ஐரோப்பாவுக்குப் புறப்படுவதற்குமுன் வில்னுவில் கைது செய்யப்பட்டு, பத்து தினங்களுக்குப் பின் விடுதலை செய்யப்பட்டார்.

போல்ஷவிக் பிரசுரங்கள் மாஸ்கோவில் வினியோகிக்கப்படுவதில்லை யென்று க்ரூப்ஸ் காயாவுக்குத் தெரிந்தது. "இவற்றை யாருக்குக் கொடுத்தீர்கள்?" என்று அவர் பிரெண்டின்ஸ்கியைக் கேட்டபொழுது அவர் குழப்பமடைந்து, தொழிலாளருக்குக் கொடுத்ததாகக் கூறினார். அவர்களுடைய பெயர்களையும் விலாசங்களையும் க்ரூப்ஸ்காயா கேட்டார். பிரெண்டின்ஸ்கியின் தடுமாற்றத்திலிருந்து அவர் பொய் சொல்கிறார் என்பது தெரிய வந்தது. மேலும் விசாரித்தபொழுது அவர் நிலைகுலைந்து உண்மையை ஒப்புக் கொண்டுவிட்டார். போல்ஷவிக் பிரசுரங்கள் அத்த

னையும் நேராக ரகசியப் போலீசுக்குப் போய்க்கொண் டிருந்தன.

பலவருஷங்களுக்குப் பின் எழுதப்பட்ட சோவியத் கலைக்களஞ்சியத்தால், ப்ரேக் மகாநாட்டிற்கு வந்தி ருந்த 13 பிரதிநிதிகளில் இருவர் ரகசியப்போலீஸ் ஏஜெண்டுகள் என்று ஒப்புக் கொள்ளப்பட்டிருந்தது.

பிரேகில் கூடியவர்கள் லெனினால் பொறுக்கி எடுக்கப்பட்டவர்கள். சமூக ஜனநாயகக் கட்சி முழு வதற்கும் தாங்கள் பிரதிநிதிகளென்று அவர்கள் சொல்லிக்கொண்டனர். லெனின் எதிர்ப்பாளர்களை இவர்கள் கண்டித்தனர். லெனின், ஸினோவீவ், ஆர்ட் ஸோனிகிட்ஸே, ஸ்பாண்டாரியன், கோலோஸ்கோரின் ஷ்வார்ட்ஸ்மான், மாலினோவ்ஸ்கி ஆகியவர்கள் அடங் கிய மத்தியக் கமிட்டி ஒன்று தேர்ந்தெடுக்கப்பட்டது

போல்ஷவிக் மத்தியக் கமிட்டியின் ரஷியப் பிரி வின் தலைவராக மாலினோவ்ஸ்கி நியமிக்கப்பட்டார். தமக்கு இஷ்டமானவர்களை மத்தியக் கமிட்டி அங்கத் தினர்களாக நியமிக்க அவருக்கு அதிகாரம் அளிக்கப் பட்டிருந்தது. லெனின் கூறிய யோசனையின் பேரில் 1912 பிப்ரவரியில் வோலோக்டா மாகாணத்திலிருந்து தப்பிச் சென்ற ஸ்டாலினை மாலினோவ்ஸ்கி நியமித் தார்.

இரு பிரிவினருக்குமிடையே இருந்த பிளவை ப்ரேக் மகாநாடு நிரந்தரப்படுத்தி விட்டது. பின்னர் போல்ஷவிக்குகள் மென்ஷ்விக்குகளை விட்டுப் பிரிந்து தனியாகவே வேலைசெய்து வந்தனர். பார்லிமெண்டில் மட்டுமே அவர்களுக்கிடையில் சிறிது ஒத்துழைப்பு இருந்தது. அதுவும் சீக்கிரத்திலேயே முடிவடைந்து விட்டது.

லெனின் சகோதரி அன்னா அவரைப் பாரிஸில் சந்தித்தபொழுது, "கட்சி புத்துயிர் பெறும்வரை நான் உயிருடன் இருப்பேனா என்பதே சந்தேகமாக இருக் கிறது'' என்று கூறினார். திருப்ப கட்டம் வந்து விட்டது என்ற நம்பிக்கை இப்பொழுது அவருக்கு ஏற்பட்டது.

ஸ்டாலின் சுதந்திரமாக இருந்த குறுகிய காலத்தில் ரஷியாவில் இருந்த போல்ஷவிக் குழுக்களைத் திருத்தி அமைத்தார். இவானேவ் என்ற மாறு பெயருடன் ஸெய்ண்ட் பீட்டர்ஸ்பர்க்கில் ஒரு சிறு ஹோட்டலில் அவர் வசித்து வந்தார். 1912, பிப்ரவரி 10-ம் தேதி அவர் லெனினுக்கு எழுதிய ஒரு கடிதத்தில் "எல்லாமே சிறிது திருப்திகரமாகத்தான் நடந்து வருகின்றன; மேலும் திருப்திகரமாக நடக்குமென்று நம்புகிறேன். நம் ஜனங்களின் மனோநிலை நம்பிக்கையூட்டுவதாக இருக்கிறது" என்று எழுதினார்.

பிறகு இரண்டு மாதத்திற்குள் ஏற்பட்ட ஓர் அரசியல் நெருக்கடி ரஷிய சாம்ராஜ்யத்தையே குலுக்கி எடுத்தது. வட ஸைபீரியாவில் லீனா தங்கச் சுரங்கத் தொழிலாளர் வேலை நிறுத்தத்திலிருந்து இது ஆரம்பமாயிற்று. சுரங்கத் தொழிலாளர்களின் பிரதிநிதிகள் கைது செய்யப்பட்டபோது அவர்களை விடுதலை செய்யுமாறு கோருவதற்காகத் தொழிலாளர்கள் கூடினர். துருப்புகள் முன் எச்சரிக்கையின்றி அவர்களைச் சுட்டனர். நூற்றுக்கணக்கானவர்கள் செத்து வீழ்ந்தனர். 1912 ஏப்பரல் 4-ம் தேதி இது நடந்தது. ஒரு வாரத்திற்குப் பின் இச்செய்தி ஐரோப்பிய ரஷியாவுக்கு எட்டியபோது தீவிர விளைவுகள் ஏற்பட்டன. சில தினங்களுக்குள் தொழில் நகரங்கள் எல்லாவற்றிலும் தொழிலாளர் தாங்களாகவே வேலை நிறுத்தம் செய்தனர். 2,15,000 தொழிலாளருக்கு மேல், சர்க்கார் செய்கையைக் கண்டித்து வேலை நிறுத்தங்களில் ஈடுபட்டனர். 1905-ம் வருஷத்திய வேலை நிறுத்தத்திற்குப் பின் நடந்த மிகப் பெரிய வேலை நிறுத்தம் இதுவே. பலர் கைது செய்யப்பட்டனர். லெனின் வாரப் பத்திரிகையின் ஸெய்ண்ட் பீட்டர்ஸ்பர்க் காரியாலயத்தில் வேலை செய்து வந்த ஸ்டாலின் கைது செய்யப்பட்டு, ஸைபீரியாவுக்கு பிரஷ்டம் செய்து அனுப்பப்பட்டார்.

லெனின் நெருங்கிய நண்பரும், போல்ஷவிக் கட்சியின் வெளி நாட்டுப் பிரிவுத் தலைவர்களில் ஒரு

வருமான டாக்டர் ஜிடோமிர்ஸ்கி சர்க்கார் உளவாளி யென்று புர்ட்ஸெவ் குற்றம் சாட்டினர். லெனின் கவலையடைந்து புர்ட்ஸெவிடம் சாட்சியம் இருக்கிறதா என்பதை விசாரிக்குமாறு மாலினேவ்ஸ்கிக்கு உத்தரவிட்டார். ஆனல் மாலினேவ்ஸ்கியையே புர்ட்ஸெவ் சந்தேகித்து, அவரிடம் எந்தத் தகவலையும் வெளியிட மறுத்து விட்டார். 1917-ம் வருஷப் புரட்சிக்குப்பின் போலீஸ் தஸ்தாவேஜுகளைப் பார்வையிட்ட பொழுது, டாக்டர் ஜிடோமிர்ஸ்கி 1902-ம் வருஷம் முதல் 1917-ம் வருஷம் வரை ரகசிய போலீஸின் ஏஜெண்டாக வேலை செய்து வந்தாரென்பது தெரியவந்தது.

ஸெயிண்ட் பீட்டர்ஸ் பர்கில் "ப்ராவ்தா" என்ற ஒரு தினசரிப் பத்திரிகையை வெளியிடுவதென்றும் பிரேக் மகாநாடு முடிவு செய்திருந்தது. இதைப் பிரசுரிக்கும் பொறுப்பு மாலினேவ்ஸ்கியிடம் ஒப்படைக்கப்பட்டது.

மென்ஷவிக்குகளுக்குப் பெருந் தொழிற்சங்க ஆதரவு இருந்தும், தங்கள் தினசரிப் பத்திரிகையை நடத்த முடியாததுடன் வாரப் பத்திரிகையை நடத்துவதற்கும் கஷ்டப்பட்டனர். ஆனல் போல்ஷவிக்குகளுக்குக் கொள்ளைகளின் மூலமும் உயில்களின் மூலமும் அரசியல் விவகாரங்களின் மூலமும் ஏராளமான நிதி கிடைத்திருந்ததால் அவர்களால் பத்திரிகையை நடத்த முடிந்தது. "ப்ராவ்தா" பத்திரிகையின் முதல் இதழ் 1912 மே மாதத்தில் வெளிவந்தது. லீனு படுகொலையைத் தொடர்ந்து நடந்த வேலை நிறுத்தத்திற்குப் பின் சில வாரங்களுக்குள்ளாகவே இப்பத்திரிகை பிரசுரமாயிற்று. புரட்சிக் கிளர்ச்சியின் இந்தப் புதிய வெள்ளத்தில், தொழிலாளரின் தினசரிப் பத்திரிகை "ப்ராவ்தா" ஒன்றுதான். ஆகையால் அதன் விற்பனை பெருகியது. சிறிது காலம் வரை மற்ற சோஷலிஸ்ட் பிரிவுகளுடன் அது தகராறு செய்துகொள்ளவில்லை. ஆகையால் ஸெய்ண்ட் பீட்டர்ஸ்பர்க் தொழிலாளரிடையே அதன் மதிப்பு உயர்ந்தது. "ப்ராவ்தா"வின் மதிப்பு

கணிசமாக உயர்ந்த பிறகுதான் லெனின் தம் சோஷலிஸ்ட் எதிரிகளை அதன் மூலம் தாக்கத் தொடங்கினர்.

*1912* ஜூலையில் லெனின், ஜினேவீவ், காமனேவ் ஆகியவர்கள் பாரிஸிலிருந்து காலீஸியாவில் உள்ள க்ராகோவுக்குச் சென்றனர். "ப்ராவ்தா" பத்திரிகையை நடத்துவதில் உதவுவதற்காகவும், போல்ஷவிக் நடவடிக்கைகளுக்கு வழி காட்டுவதற்காகவும் இவர்கள் அங்கு சென்றனர். ப்யூர்ஸ்டன்பர்க் கானெட்ஸ்கி என்பவர் ஆஸ்ட்ரிய சர்க்காருடன் பேசி, க்ராகோவில் லெனின் வசிப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தார். பிற்காலத்தில் லெனினுக்கு மிகவும் நெருக்கடியான நிலைமை ஏற்பட்ட போதெல்லாம் கானெட்ஸ்கி தோன்றி உதவியிருக்கிறர்.

"ப்ராவ்தா"வின் தலையங்கங்களிலும், கொள்கை சம்பந்தமான கட்டுரைகளிலும் பெரும்பாலானவற்றை லெனின் எழுதினர்.

இந்த சமயத்தில் புகாரின் தம் தேசப் பிரஷ்ட வாழ்க்கையிலிருந்து தப்பி, லெனினிடம் வந்தார். அவர் வந்தவுடனேயே மாலினேவ்ஸ்கி விஷயத்தில் ஜாக்கிரதையாக இருக்குமாறு லெனினை எச்சரித்தார்.

ஆனல் லெனினும், ஜினேவீவும் மாலினேவ்ஸ்கிக்குப் பரிந்து பேசினர். புகாரினுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. இதற்கிடையில் மாலினேவ்ஸ்கி ரஷியாவில் போல்ஷவிக் ஸ்தாபனத்தின் தலைவராகிவிட்டார். உண்மையில் ரஷியாவிற்குள் அவர் லெனினின் பிரதிநிதியாகவே விளங்கினர். நாலாவது டூமா பார்லிமெண்டில் அவர் போல்ஷவிக் கட்சியின் தலைவராக அமர்ந்தார். இதற்கு முந்தின 3 டூமா பார்லிமெண்டுகளிலும் சமூக ஜனநாயகக் கட்சி பிரதிநிதி கோஷ்டி ஒற்றுமையாக வோட் செய்து வந்தது. ரஷிய மக்களிடையே பெரும் செல்வாக்கும் பெற்றிருந்தது.

*1912* டிசம்பரில் கட்சிக் கவுன்சில் க்ராகோவில் கூடியது. தெருக்களில் புரட்சி ஆர்ப்பாட்டங்கள், வேலை நிறுத்தங்கள் முதலியவை

நடத்துவதென்றும், ரகசிய தொழிற்சாலே கமிட்டிகள் அமைப்பதென்றும் அக்கவுன்சில் தீர்மானித்தது. இந்த கூட்டத்திற்கு லெனின், காமனேவ், ஸிஞேவீவ், க்ருப்ஸ்காயா, மாலிஞேவ்ஸ்கி உள்பட டுமா பார்லிமெண்டில் இருந்த போல்ஷவிக் பிரதிநிதிகள், பிரஷ்ட வாழ்க்கையிலிருந்து தப்பி வந்த ஸ்டாலின் முதலியோர் இந்தக் கூட்டத்திற்கு வந்திருந்தனர். பிற்காலத்தில் அமெரிக்காவில் சோவியத் ஸ்தானிகராக நியமிக்கப் பட்ட அலெக்ஸாண்டர் ட்ரோயாஞேவ்ஸ்கியும் ஷெ கவுன்சில் கூட்டத்திற்கு வந்திருந்தார்.

ட்ரோயாஞேவ்ஸ்கியின் மனேவி ஆஸ்ட்ரியாவி லிருந்து திரும்பி வந்தவுடன் 1913 பிப்ரவரியில் கீவில் கைது செய்யப்பட்டார். டுமா பார்லிமெண்டில் போல்ஷவிக் கோஷ்டியின் காரியதரிசியாகுமாறு அவர் கேட்டுக்கொள்ளப்பட்டிருந்தார். சில முக்கியமான தஸ்தாவேஜுகள் அவரிடமிருந்து கைப்பற்றப்பட்டன.

அவர் வந்ததைப் பற்றி மிகச் சிலருக்கே தெரியும். அவர் கைது செய்யப்பட்டதில் மாலிஞேவ்ஸ்கிக்கும் சம்பந்தம் உண்டென்று புகாரின், ட்ரோயாஞேவ்ஸ்கி இருவருமே சந்தேகித்தனர். ட்ரோயாஞேவ்ஸ்கி இது பற்றி விசாரித்தார். இதனல் மாலிஞேவ்ஸ்கியின்மீது சந்தேகம் பலப்படவே செய்தது.

இதுபற்றி புகாரினுடன் அவர் பேசினுர். பின்னர் இருவரும் மத்தியக் கமிட்டிக்கு எழுதிய கடிதத்தில் கட்சிக் கோர்ட்டின் முன் மாலிஞேவ்ஸ்கி ஆஜராக வேண்டுமென்று வற்புறுத்தினர் இதற்குக் கடுமை யான பதில் வந்தது. மத்தியக் கமிட்டியின் சார்பில் லெனின் எழுதியிருந்த கடிதத்தில், மாலிஞேவ்ஸ்கி யைப் பற்றி இதுபோன்ற வதந்திகளேப் பரப்ப வேண் டாமென்று உத்தரவிட்டிருந்தார். இப்படிச் செய்தது துரோகத்தைவிடக் கேவலமானதென்றும், இதை நீடித்தால் அவர்கள் கட்சியிலிருந்து நீக்கப்படுவார் களென்றும் அவர் எச்சரித்திருந்தார். புகாரின் அதற்கு பணிந்தார். ஆனல் ட்ரோயாஞேவ்ஸ்கி சீக்கிரம் லெனினை விட்டுப் பிரிந்து போய்விட்டார். 1921 வரை

போல்ஷவிக்குகளுடன் திரும்பிச் சேரவேயில்லை. ஆனால் மாலினோவ்ஸ்கியைப் பற்றி புதிய சாட்சியங்கள் வந்து குவிந்துகொண்டிருந்தன.

1913 கோடையின் பிற்பகுதியில் ஸ்வெர்ட்லோவ் ஸைபீரியாவிலிருந்து செயிண்ட் பீட்டர்ஸ்பர்க்குக்குத் தப்பி வந்துவிட்டார். டூமா சபையின் பிரதிநிதியான படெயேவின் ஜாகையில் அவர் ஒளிந்துகொண்டிருந்தார். சில தினங்களுக்குப் பின் போலீசார் படெயேவிடம் சென்று, ஸ்வெர்ட்லோவின் அடையாளங்களைச் சொல்லி அத்தகைய ஒருவருக்கு இடமளித்திருக்கிறீர்களா என்று விசாரித்தனர். அதற்குமேல் ஸ்வெர்ட்லோவ் தம்முடன் தங்கியிருப்பது ஆபத்து என்பதை படெயேவ் உணர்ந்தார். மாலினோவ்ஸ்கியுடன் கலந்தாலோசித்து அவரை வேறு இடத்திற்கு அனுப்பத் தீர்மானித்தார். டூமா சபையின் மற்றொரு அங்கத்தினரான கபட்ரோவ்ஸ்கியின் வீட்டுக்கு அவரை அனுப்பினார். அன்றிரவே அவர் கைது செய்யப்பட்டு ஸைபீரியாவுக்கு அனுப்பப்பட்டார். அப்படியிருந்தும்கூட மாலினோவ்ஸ்கியின் நடத்தை பற்றி விசாரிக்க எவ்வித நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை.

ஸ்வெர்ட்லோவ் கைதியான சில தினங்களுக்குப் பின் போல்ஷவிக்குகள் பிராவ்தா பத்திரிகைக்கு நிதி திரட்டுவதற்காக ஒரு சங்கீத நாட்டியக் கச்சேரிக்கு ஏற்பாடு செய்தனர். ஸெயிண்ட் பீட்டர்ஸ்பர்க்கில் இத்தகைய கச்சேரிகள் அடிக்கடி நடப்பதுண்டு. புரட்சிக்காரர்கள் அபாயமில்லாமல் சந்திக்க இவை பயன்பட்டன. போலி பாஸ்போர்ட்டுகளுடன் வாழ்ந்து வந்தவர்கள்கூட இங்கு வந்து தங்கள் சகாக்களைச் சந்திக்க முடிந்தது. அப்பொழுதுஸெயிண்ட் பீட்டர்ஸ் பர்க்கில் சட்ட விரோதமாக வாழ்ந்துவந்த ஸ்டாலினும் மாலினோவ்ஸ்கியும்கூட அன்றைய கச்சேரிக்கு வந்திருந்தனர்.

ஸ்டாலின் வந்தவுடனேயே போலீஸ் ஏஜெண்டுகள் அவரைச் சூழ்ந்துகொண்டுவிட்டனர். கச்சேரிக்கு ஏற்பாடு செய்தவர்கள் அவருக்கு மாறுவேஷம் போட்டு

வெளியே அனுப்புவதற்காக அவரை ஸ்நான அறைக்கு அழைத்துச் சென்றனர். ஆனால் ரகசியப் போலீஸார் கதவைப் பிளந்துகொண்டு உள்ளே சென்று, அவரைக் கைது செய்து ஸைபீரியாவுக்கு அனுப்பினர். பிறகு புரட்சிவரை ஸ்டாலின் ஸைபீரியா விலேயே இருந்தார்.

புதிதாக நடந்த இந்தக் கைதுகளுக்குப் பின், கட்சி அங்கத்தினர்களைப் போலீஸுக்குப் பிடித்துக் கொடுக்கும் யாரோ ஒருவன் போல்ஷவிக் மேல்வட்டா ரத்தில் இருக்கிறா னென்ற சந்தேகம் அதிகரித்தது. ஆனால் அவன் யாரென்பதை ஒருவராலும் சொல்ல முடியவில்லை.

1913 ஆகஸ்டில், காலீஸியாவில் ஸகோபேன் அருகே ஒரு கிராமத்தில் நடந்த மத்திய கமிட்டிக் கூட்டத்திற்கு போல்ஷவிக் தலைவர்கள் அழைக்கப்பட் டிருந்தனர். லெனின், ஜினோவீவ், காமனேவ், ஷாட் மன், கானெட்ஸ்கி, மாலினோவ்ஸ்கி ஆகியவர்களும், டூமாசபையில் அங்கத்தினர்களாக இருந்த மற்ற போல்ஷவிக்குகளும் உள்பட 22 பேர் கூட்டத்திற்கு வந்திருந்தனர். இவர்களில் 5 பேர் ரகசியப் போலீஸ் ஏஜெண்டுகள் என்பது பின்னர் தெரியவந்தது. டூமா சபையில் இருந்த சமூக ஜனநாயகக் கட்சியைப் பிளப் பதென்ற தீர்மானத்தை லெனின் நிறைவேற்றினர். சபையில் தனி போல்ஷவிக் கோஷ்டி அமைக்கும் பொறுப்பு மாலினோவ்ஸ்கியிடம் ஒப்படைக்கப் பட்டது.

இரண்டு வாரங்களுக்குப் பின், 6 போல்ஷவிக் அங்கத்தினர்களும் லெனின் திட்டத்தை ஏற்குமாறு வற்புறுத்தி ஓர் இறுதி எச்சரிக்கைக் கடிதத்தை மென் ஷவிக்குகளிடம் கொடுத்தனர்; மென்ஷவிக்குகள் அதை ஏற்க மறுத்ததால், லெனின் ஆதரவாளர்கள் மாலினோவ்ஸ்கி தலைமையில் ஒரு தனிக்கட்சியை அமைத்துக் கொண்டனர்.

உடனேயே செகிட்ஸ்ஸேயைப் பற்றியும் மென் ஷவிக்குகளைப் பற்றியும் கேவலமான பிரசாரம் செய்யத்

தொடங்கிவிட்டது "பிராவ்தா" பத்திரிகை. அதன் தலையங்கங்களில் பெரும்பாலானவற்றை லெனினும் ஜினோவீவுமே எழுதி வந்தனர். ஆனால் ஸ்தல கொள்கையை மாலினோவ்ஸ்கியே நிர்ணயித்துவந்தார். சந்தர்ப்பம் கிடைத்த போதெல்லாம் டூமா சபையின் மென்ஷவிக் அங்கத்தினர்களையும் தொழிற்சங்கத் தலைவர்களையும் அவர் தாக்கி வந்தார். டூமா சபையில் அவர் பேசும்போதும், மிதவாத, தீவிரவாத எதிர்க் கட்சிகளைக் கோழைகளென்றும் மக்களின் துரோகிகளென்றும் கடுமையாகத் தாக்கிப்பேசினார்.

பிரபல மென்ஷவிக் தலைவர்களையும் ஊழியர்களையும் சர்க்கார் கைது செய்ததால் பல சங்கங்களில் போல்ஷவிக்குகள் ஆதிக்கம் பெற்றனர். அந்த சமயத்தில் இந்தக் கைதிகள் பொதுவான அடக்குமுறைக் கொள்கையின் ஒரு பகுதிபோல் தோன்றியது. ஆனால் இது உண்மையில் மாலினோவ்ஸ்கி வகுத்ததிட்டம் தானென்பது பின்னர் தெரிய வந்தது.

மாலினோவ்ஸ்கியின் வீராப்புப் பேச்சுக்களால் அவருக்குத் தொழிலாளிரிடையே ஆதரவு அதிகரித்தது. அவர் ரஷியாவில் லெனினின் பிரதி பிம்பமாகி விட்டார். உத்தரவுகள் பிறப்பிப்பதற்காக அடிக்கடி கிராகோவுக்குச் செல்வார்

டூமா சபை அங்கத்தினர்களின் பார்லிமெண்டரி சலுகைகளை **1914** ஏப்ரலில் சர்க்கார் பறிக்கத் தொடங்கியது. பிரதம மந்திரியாக இருந்த கோகோட்ஸேவ் தாராள மனப்பான்மை படைத்திருந்தார் என்று குற்றம் சாட்டி அவரை மன்னர் டிஸ்மிஸ் செய்து, கோர்மிகின் என்ற பிற்போக்காளரை அந்த ஸ்தானத்தில் நியமித்தார். புரட்சி இயக்கத்தை வேரோடு ஒழிக்குமாறு அவருக்கு உத்தரவிடப்பட்டது. டூமா சபையில் செகிட்ஸே தீவிரமாகப் பேசியதற்காக அவர் மீது குற்றச்சாட்டுடன் கோர்மிகின் தம் நடவடிக்கைகளை ஆரம்பித்தார். டூமாவில் கோர்மிகின் பேசத் தொடங்கியவுடன், இடது சாரி அங்கத்தினர்கள் மேஜையைத் தட்டி, "சபை அங்கத்தினர்களுக்குப்

பேச்சுச் சுதந்திரம் கொடுங்கள்'' என்று கூச்சலிட்ட னர். கோர்மிகின்னுல் மேற்கொண்டு பேசமுடிய வில்லை. அமைதியை நிலைநாட்ட சபாநாயகர் ரோட் ஸியாங்கோ செய்த முயற்சி பலனளிக்கவில்லை. பின் னர் அவர் கோர்மிகின்னிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு, சமூக ஜனநாயகக் கட்சியினரும், அலெக் ஸாண்டர் கெரன்ஸ்கியின் ட்ருடோவிக் கட்சியினரும் சபையின் 15 கூட்டங்களில் கலந்து கொள்ளக் கூடாது என்று தடைசெய்யும் பிரேரணையைப் பிரேரித்தார். பிரேரணை நிறைவேறியது.

சஸ்பெண்டு செய்யப்பட்ட அங்கத்தினர்கள் 1914, மே மாதம் 7-ம் தேதி சபைக் கூட்டத்திற்குத் திரும்பி வந்தபொழுது, இடது சாரி அங்கத்தினர்கள் அனைவரின் சார்பிலும், சர்க்காரைக் கண்டித்து ஓர் அறிக்கையை கெரன்ஸ்கி படித்தார். அவரைச் சபா நாயகர் பலமுறை இடை மறித்தார். கடைசியில் அவர் அறிக்கை ஒழுங்கு முறைக்கேற்றதல்ல வென்று நிராகரித்தார். பிறகு மாலினேவ்ஸ்கி தொடர்ந்து பேசினுர். அவருடைய பேச்சும் ஒழுங்கு முறைக்கு ஏற்றதல்லவென்று சபாநாயகர் நிராகரித்தார். ஆனுல் மாலினேவ்ஸ்கி மேடையில் நின்று பேசிக்கொண்டே யிருந்தார். சபாநாயகர் ஸார்ஜெண்டை அழைத்து அவரை அவருடைய இடத்திற்குத் திருப்பி அனுப்பச் செய்தார்.

டூமா சபையில் இடது சாரி அங்கத்தினர்கள் இருப் பதால் பிற்போக்காளர்களின் கௌரவம் அதிகரித்து விடுவதாகக் கூறி, அச்சபையிலிருந்து அவர்கள் ராஜி நாமாசெய்து விடவேண்டுமென்று மாலினேவ்ஸ்கி வற் புறுத்தினுர். அவருடைய யோசனை ஏற்றுக்கொள்ளப் படாததால் அவர் சபையிலிருந்து ராஜிநாமா செய்து விட்டார். இச்செய்தியைச் சபையில் சபாநாயகர் அறிவித்தபொழுது பெருத்த பரபரப்பு ஏற்பட்டது. சபையிலிருந்த ஒரே போல்ஷவிக்கான படேயேவை அனைவரும் எதிர்பார்த்தனர். அவரும் ஆச்சரியத்தில் ஆழ்ந்து, "பிராவ்தா'' பத்திரிகாலயத்திற்கு டெலி

போன் செய்தார். இச்செய்தியைக் கேட்ட பத்திரிகையின் ஆசிரியர் குழாத்தினர் பிரமித்துப் போயினர்.

மாலிநேவ்ஸ்கியின் திட்டம் போல்ஷ்விக் பிரதிநிதி கோஷ்டியில் யாருக்கும் தெரியாதென்று படயெவ் கூறினர். இது, கட்சிக் கட்டுப்பாட்டை அப்பட்டமான முறையில் மீறிய செயலாகுமென்று அவர்கள் கருதினர். மாலிநேவ்ஸ்கி சோவியத் பிரதிநிதிகளின் முன் ஆஜராகி, திருப்திகரமான காரணம் கூற வேண்டுமென்று வற்புறுத்துவதற்காகமாலிநேவ்ஸ்கியிடம் பெட்ரோவ்ஸ்கி அனுப்பப்பட்டார். பெட்ரோவ்ஸ்கி சென்றபொழுது மாலிநேவ்ஸ்கி அரை குறையாக உடை அணிந்து அறையில் குறுக்கும் நெடுக்குமாக உலாவிக் கொண்டிருந்தார்.

"கட்சியின் அனுமதியில்லாமல், துரோகத்திற்குச் சமமான ஒரு செயலை நீங்கள் செய்திருக்கிறீர்கள். முன்பின் கண்டிராத இத்தகைய உங்கள் செய்கைக்கான காரணங்களைக் கூறுவதற்காக, பிரதிநிதிகள் காரியாலயத்தில் நீங்கள் உடனே ஆஜராக வேண்டுமென்று வற்புறுத்த கட்சி என்னை அனுப்பியிருக்கிறது." என்று பெட்ரோவ்ஸ்கி கூறினர்.

"காரணங்கள் கூறும் நிலையில் நான் இப்பொழுது இல்லை" என்று மாலிநேவ்ஸ்கி மொட்டையாக பதிலளித்தார்.

"கட்சி முடிவுக்கு அடங்கி நடக்க நீங்கள் மறுக்கிறீர்கள் என்று இதற்கு அர்த்தமா?"

"நீங்கள் எப்படி வேண்டுமானுலும் அர்த்தம் செய்து கொள்ளுங்கள். நான் காரணம் கூறும் நிலையில் இல்லையென்பதை மறுபடியும் வற்புறுத்த விரும்புகிறேன்" என்று மாலிநேவ்ஸ்கி கத்தினர்.

டுமா சபையின் போல்ஷ்விக் கட்சிக் கூட்டத்தில் இதை பெட்ரோவ்ஸ்கி அறிவித்தார். மாலிநேவ்ஸ்கி உடனே வராவிட்டால் அவர்மீது கடுமையான நடவடிக்கை எடுக்கப்படுமென்று அறிவிக்குமாறு மீண்டும் பெட்ரோவ்ஸ்கியிடம் அனுப்பப்பட்டார்.

கட்சி விசாரணை பயமுறுத்தியதால் மாலினேவ்ஸ் கிக்கு வெறி பிடித்தது போலாகிவிட்டது. "என்னை விசாரணைக்குக் கொண்டு வாருங்கள்; குற்றம் சாட் டுங்கள்; இன்னும் என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளுங்கள். நான் காரணமெதுவும் கூறப்போவ தில்லை. காதில் விழுந்ததா? காரணம் கிடையாது" என்று கர்ஜித்துக் கொண்டே அறையில் குறுக்கும் நெடுக்குமாக அலைந்தார்.

"மாலினேவ்ஸ்கியின் செய்கை போல்ஷ்விக் கட்டுப்பாட்டுக்கு முரணான செயல் என்பது மாத்திர மின்றி, எதிரிகளின் துஷ்பிரசாரத்திற்கு மிகவும் சாதக மானது மாகும்" என்று படயெவ் கூறினார். போல் ஷ்விக் பிரதிநிதிகளிடையே பிளவு ஏற்பட்டு விட்ட தாக வதந்திகள்பரவின. இந்த விவகாரத்தினால் பெரிய பரபரப்பு ஏற்பட்டது.

"எல்லா இடது சாரிக்கட்சிகளும் சேர்ந்து, மாலி னேவ்ஸ்கி விவகாரம் பூராவைப் பற்றியும் விசாரணை நடத்தவேண்டுமென்று "ரபோட்சாயா கெஸட்டா" என்ற மென்ஷ்விக் பத்திரிகை வற்புறுத்தியதை மட் டும் படயெவ் சொல்லவில்லை. மாலினேவ்ஸ்கி ஆதியி லிருந்தே போலீஸ் உளவாளியாக இருந்து வந்திருக் கிறாரென்று உதவி சபாநாயகர் வோல்கோன்ஸ்கி, ஒரு போல்ஷ்விக் அங்கத்தினரிடம் கூறிய தன் பேரில் அப்பத்திரிகை இப்படி வற்புறுத்தியது.

மாலினேவ்ஸ்கியின் காரியங்களைப்பற்றி விசா ரணை நடத்தத் தொடங்கினர். அவர் போலீஸ் உள வாளியே என்பதை ஊர்ஜிதம் செய்வதற்கான பல புதிய சாட்சியங்கள் கிடைத்தன. பிறகு, அவரை விசாரணைக்குக் கொண்டு வரவேண்டும் மென்று அவர்களுடைய பத்திரிகை வற்புறுத்தியது.

ஆனால் "பிராவ்தா" பத்திரிகை, லெனினும் ஜினோ வீவும் கையெழுத்திட்ட ஓர் அறிக்கையை வெளியிட் டது. மென்ஷ்விக்குகள் வம்புக்காரர்களென்றும் கோழைகளென்றும், மாலினேவ்ஸ்கி மீது பகிரங்க மாகக் குற்றம் சாட்டாமல் போல்ஷ்விக்குகளை முது

கில் குத்துவதாகவும் அது கண்டித்தது. அப்பொழுது ஸெயிண்ட் பீட்டர்ஸ்பர்கிலிருந்த பெரிய மென்ஷ்விக் தலைவர்களான, மார்ட்டோவும் டானும் கையெழுத் திட்டு, தங்கள் குற்றச்சாட்டுகளையும் கோரிக்கைகளை யும் ஊர்ஜிதம் செய்து ஓர் அறிக்கை வெளியிட்டன. ஒரு போலீஸ் உளவாளியை அம்பலப் படுத்துவது குற்றம். மார்ட்டோவும், டானும், தாங்கள் வெளி யிட்ட அறிக்கையின் மூலம் கைதாகும் அபாயத்திற் குள்ளானுர்கள்.

"லெனின், ஜினோவீவ், காமனேவ் ஆகியவர்கள் "பிராவ்தா" பத்திரிகை மூலம் இதற்கு பதிலளிக்கை யில், புரட்சிக்காரப் பாட்டாளிகளின் தலைவர் ஒரு வரைப்பற்றி "நாசக்காரர்கள்" தீர்ப்புக்கூற அனு மதிக்க முடியாதென்று கூறினர். ஆனுல் "ரபோட் சாயா கெஸட்டா" பத்திரிகை மட்டும், புரட்சிக் கோர்ட்டின் மூலம் மாலினேவ்ஸ்கியை விசாரிக்க வேண்டுமென்று வற்புறுத்தும் தீர்மானங்களைப் பிரசுரித்து வந்தது.

மாலினேவ்ஸ்கி, செய்ண்ட் பீட்டர்ஸ் பர்கிலிருந்து, லெனின் தங்கியிருந்த காலிஸியாவுக்குச் சென்றுவிட் டார். 1914, மே மாதம் 25-ம் தேதி 'பிராவ்தா' பத்திரி கையில் மாலினேவ்ஸ்கியின் கையெழுத்திட்ட ஒரு கடிதம் பிரசுரிக்கப்பட்டது. "சொந்தக் காரணங்களுக் காக அரசியலிலிருந்து நான் தற்காலிகமாக ஒதுங்கி யிருந்தபோதிலும் போல்ஷ்விக்காகவே இருந்து வரு கிறேன். கையெழுத்திட்டு என்மீது குற்றம் சாட்டும் துணிவு மார்ட்டோவுக்கும் டானுக்கும் இருக்குமானுல் அந்தப் பிற்போக்காளர்களைக் சுதந்திர நாட்டில் கோர்ட்டின் முன் கொண்டுவந்து நிறுத்துகிறேன்," என்று அவர் அந்தக் கடிதத்தில் எழுதியிருந்தார்.

இந்தக் கடிதத்தோடு, லெனின், ஜினோவீவ், கானெட்ஸ்கி ஆகியவர்கள் கையெழுத்திட்ட ஒரு தந் தியும் காலிஸியாவிலிருந்து 'பிராவ்தா' காரியாலயத் திற்கு வந்தது. அதில், "மார்ட்டோவும் மட்டமான வம்புக்காரர்கள்; தங்கள் எதிரிகளைப் பற்றி அவர்கள்

விஷமத் தனமான வதந்திகளைக் கிளப்பி விடுகின்றனர். அவர்கள் கையெழுத்திட்டு நேரடியாகக் குற்றம் சாட்டவேண்டுமென்று நாங்கள் வற்புறுத்துகிறோம். வதந்திகளைப் பற்றிப் புலன்விசாரணை செய்ததால், மாலினோவ்ஸ்கியின் அரசியல் நேர்மையைப் பற்றிச் சந்தேகமில்லை யென்ற முடிவுக்கு நாங்கள் வந்திருக்கிறோம்,, என்று அவர்கள் தந்தி கூறியது.

இதைப் பற்றிப் பிராவ்தா எழுதிய தலையங்கத்தில் மாலினோவ்ஸ்கியும் லெனினும் வெளியிட்ட இந்த அறிக்கைகள் கோழைத்தனமான வம்புப் பேச்சுக்கு முற்றுப் புள்ளிவைத்து விட்டதாகவும், கட்சிக்காரர்கள் வேற்றுமைகளை மறந்து வெளி விரோதிகளையும், வம்புக்காரர்களையும், மார்ட்டோவ், டான் போன்ற துரோகிகளையும் எதிர்த்து முன்னேற வேண்டுமென்று கூறியது.

யுத்தத்தில் மாலினோவ்ஸ்கி கொல்லப்பட்டுவிட்டதாக, 1915-ல் லெனினின் அகதிப் பத்திரிகை "சோஷல் டெமாக்ரட்"டில் ஒரு செய்தி வெளியாயிற்று. இந்த மாபெரும் பாட்டாளித் தலைவரின் மறைவுக்கு வருத்தம் தெரிவித்து அவருடைய வாழ்க்கைக் குறிப்பு ஒன்று பிரசுரிக்கப்பட்டது. ஆனால் மாலினோவ்ஸ்கியும் இறக்கவில்லை, அவருடைய விவகாரமும் அதோடு முடிந்துவிடவில்லை.

இந்த சமயத்தில் லெனினின் விஷயத்தில் போல்ஷ்விக்கல்லாதவர்கள் மனோபாவத்தை சார்லஸ் ராபோர்ட் தெளிவாக வெளியிட்டிருந்தார். அவர் ரஷிய-பிரெஞ்சு சோஷலிஸ்ட். பிற்காலத்தில் ஒரு முக்கியமான கம்யூனிஸ்டாக ஆனவர். புரட்சி இயக்கத்தில் லெனினின் நிலையை ஜார் ஆட்சியில் இருந்த ஸ்டோலிபினின் நிலையுடன் அவர் ஒப்பிட்டார். "லெனினின் சர்வாதிகார ஆட்சியின்கீழ் எந்தக் கட்சியும் இருக்க முடியாது" என்று அவர் 1914லேயே சொன்னார்.

"லெனினின் சாதனைகளை நாங்கள் ஒப்புக்கொண்டோம். இரும்பு போன்ற மன உறுதி படைத்தவர். அவர். கோஷ்டிகள் சேர்ப்பதில் இணையற்றவர்......

தம்மை எதிர்ப்பவர்களை அடியோடு ஒழித்துக் கட்டக் கூடியவர். மரண தண்டனையை, சமூக ஜனநாயக கட்சி பிழைத்திருப்பதற்கான சிறந்த சாதனமென்று கருதுபவர். எதிரிகளை சோஷலிஸ முறையில், அதாவது வாதத்தின் மூலம் எதிர்ப்பதற்குப் பதிலாக, சஸ்திர சிகிச்சைமூலம், ரத்தப் பெருக்கெடுக்கச் செய்வதன் மூலம்தான் லெனின் எதிர்க்கிறார். இந்த சமூக ஜனநாயக மன்னனின் (ஜாரின்) கீழ் எந்தக் கட்சியும் ஜீவித்திருக்க முடியாது. மார்க்ஸைவிட பெரிய மார்க்ஸீய வாதியாக அவர் தம்மைக் கருதுகிறார். உண்மையில் அவர் ஒரு பெரிய சாகஸக்காரரே. போட்டியிடும் கோஷ்டிகளில் எதையும் நான் சேர்ந்தவனல்ல. ஆனால் பல வருஷ அனுபவத்தின் விளைவாக ஒரு விஷயம் மட்டும் சொல்வேன். அவர் வெற்றி பெற்றால் ரஷியப் புரட்சிக்கே அது ஒரு பெரிய ஆபத்து அவருடைய ஆலிங்கனத்தில் அது மூச்சுத் திணறி இறந்துவிடும்" என்று அவர் எழுதினார்.

இதற்கு முன், டூமா சபையில் மென்ஷ்விக் கட்சித் தலைவர் செகிட்ஸேக்கு ட்ராட்ஸ்கி எழுதிய ஒரு கடிதத்தில் பின் வருமாறு குறிப்பிட்டிருந்தார்.

"கட்சித் தகராறுகளைத் தூபம் போட்டு விடுவதில் நிபுணனான லெனினின் செய்கைகளைக் கண்டிக்காமலிருக்க முடியாது. ரஷியத் தொழிலாளர் இயக்கத்தில் பிற்பட்ட நிலைமையைப் பயன்படுத்திக்கொள்ளும் சுரண்டல்காரர் அவர். ....தற்சமயம் லெனினிஸம் பொய்யையும் புளுகையுமே அடிப்படையாகக்கொண்டு நிர்மாணிக்கப்பட்டுள்ளது. அதன் அழிவின் வித்துக்கள் அதிலேயே அடங்கியுள்ளன" என்று அவர் எழுதியிருக்கிறார்.

சர்வதேச சோஷலிஸ்ட் ஸ்தாபனத்தின் விசேஷ மகாநாடு **1914** ஜூலை **16, 17** தேதிகளில் பிரஸ்ஸல்ஸில் கூடியது. ரஷிய தொழிலாளர் இயக்கத்தில் ஒற்றுமை ஏற்படுத்துவது பற்றி யோசிப்பதே இந்த மகாநாட்டின் நோக்கம்.

சமூக ஜனநாயகக் கட்சியில் ஏற்பட்டிருந்த பிளவு பற்றியும், லெனின், அவருடைய சகாக்கள் ஆகியவர்

களின் வலுச் சண்டைக்கிழுக்கும் குணம் பற்றியும் சர்வதேச சோஷலிஸ்ட் ஸ்தாபனம் சிறிது காலமாகவே கவலைப்பட்டு வந்தது. ஆனால் கட்சியின் உள்விவகாரத்தில் தலையிடாமல் அது தவிர்த்து வந்தது. ஆனால் மேற்கொண்டு புறக்கணிக்க முடியாத அளவுக்கு வம்பு பலத்துவிட்டது. சர்வதேச சோஷலிஸ்ட் ஸ்தாபனத்தின் கண்டனத்திற்கு உட்பட லெனின் விரும்பவில்லை. அவரோ, ஜினேவீவ், காமனேவ் முதலியவர்களோ பிரஸ்ஸல்ஸ் மகாநாட்டிற்கு வரவில்லை. ஆனால், புதிய ஐக்கியக் கட்சி அமைக்கும் யோசனையை லெனின் ஏற்கவில்லை என்பதை அறிவிப்பதற்காக சிறு பிரதிநிதிகள் அனுப்பப்பட்டனர். ஏற்கனவே தயாரித்துக்கொடுக்கப்பட்டிருந்த பிரசங்கங்களை அவர்கள் ஒப்பித்தனர். லெனின் கமிட்டியையே கட்சி முழுவதன் மத்தியக் கமிட்டியாகவும் ஏற்பது ஒன்றுதான் ஒற்றுமைக்கு வழியென்று அவர்கள் கூறினர். ஆனால் ப்ளெகனேவ் பேசுகையில், கட்சியில் லெனினின் செல்வாக்கைக் குறைக்காவிட்டால் ஒற்றுமை சாத்தியமில்லையென்றார். உளவாளிகள் அம்பலப்படுத்தப் படுவதை லெனின் தடுத்ததாக அலெக்ஸின்ஸ்கி குற்றம் சாட்டினார். இந்த குற்றச் சாட்டுகளைக்கேட்டு சர்வதேச சோஷலிஸ்ட் ஸ்தாபன அங்கத்தினர்கள் அதிர்ச்சி அடைந்தனர். இதுபற்றிய விவாதத்தில் கலந்துகொள்ள போல்ஷ்விக் பிரதிநிதிகள் முன்வரவில்லை. ஆகஸ்ட் கடைசியில் வியன்னாவில் கூடவிருந்த சர்வதேச மகாநாட்டில் இதுபற்றி விவாதிக்க வேண்டுமென்று வண்டா வெல்ட் ஒரு பிரேரணை கொண்டு வந்தார். கவுட்ஸ்கி அதை ஆமோதித்தார். ஆனால் அந்த மகாநாடு கூடாமலே போய்விட்டது.

சமூக ஜனநாயகக் கட்சியின் பழைய தலைவர்களிடையே லெனினுக்கு ஆதரவு இல்லையென்றாலும், ஸெயிண்ட் பீட்டர்ஸ்பர்க், மாஸ்கோ முதலிய தொழிற்சாலை நகரங்களின் தொழிலாளரிடையே அவருடைய செல்வாக்கு அதிகரித்து வந்தது. புரட்சிக்கான அவருடைய எளிய, நேரடியான சூத்திரங்கள் சாதாரண ரஷியருக்கு மேற்கு ஐரோப்பிய மார்க்ஸீயத்தின் சிக்க

லான தத்துவங்களைவிடவும், மென்ஷவிக்குகளின் நிதானப் போக்கையும்விட அதிகம் பிடித்திருந்தது.

போல்ஷவிக் மகாநாடு கூட்டுவதற்கான ஏற்பாடுகள் பற்றி ஆலோசிக்க 1914, ஜூனில் போல்ஷ்விக் மத்தியகமிட்டி கூடியது. ஆனால் யுத்தம் மூண்டதால் இந்த ஏற்பாடுகள் தடைபட்டன.

## 7. யுத்தத்திலிருந்து புரட்சி

ரஷிய ஜப்பானிய யுத்தம், 1905-ம் வருஷப் புரட்சிக்குப் பயன்பட்டதை லெனின் கண்டார். மற்றொரு யுத்தம் புதிய புரட்சிக்குப் பூர்வாங்கமாக இருக்குமென்று அவர் எதிர் பார்த்தார். 1913-ல் அவர் மாக்ஸிம் கார்க்கிக்குப் பின் வருமாறு எழுதினார். "ஆஸ்ட்ரியாவுக்கும் ரஷியாவுக்குமிடையே யுத்தம் மூண்டால், அது மேற்கு ஐரோப்பாவின் புரட்சிக்குப் பெரிதும் உதவியாக இருக்கும். ஆனால் பிரான்ஸ் ஜோஸப்பும் நிகலெஸும் இந்த மகிழ்ச்சியை நமக்கு அளிப்பார்களென்று தோன்றவில்லை.

ஒரு வருஷத்திற்குப் பின் அவர்கள் அந்த மகிழ்ச்சியை அளித்தே விட்டனர். ஜெர்மனி மீது ரஷியா யுத்தம் தொடுத்துவிட்டதென்ற செய்தி கிராகோவில் லெனினுக்குக் கிடைத்தவுடன், ஜினோவீவை லெனின் கேட்ட முதல் கேள்வி, "இரண்டாவது சோஷலிஸ்ட் சர்வதேச ஸ்தாபனம் என்ன செய்யும்?" என்பதுதான்.

"நீங்களே பார்க்கப்போகிறீர்கள். யுத்தம் சம்பந்தமாகக் கெய்ஸர் சர்க்காருக்கெதிராக வோட் செய்ய, ஜெர்மன் சமூக ஜனநாயகக் கட்சிக் கனவான்கள் துணிய மாட்டார்கள். அவர்கள் கூட்டத்திற்கு வரவே மாட்டார்கள்" என்று ஜினோவீவ் கூறினார்.

"மாட்டார்கள்; அவர்கள் அவ்வளவு கோழைகளல்ல; அவர்கள் யுத்தத்தை எதிர்க்க மாட்டார்களென்பதில் சந்தேகமில்லை. ஆனால், தங்கள் மனச்சாட்சியைத் திருப்திப்படுத்திக்கொள்வதற்காக அதற்கெதிராக வோட் செய்வார்கள். வேறு காரணத்திற்காக

இல்லாவிட்டால்கூட, தொழிலாளர் வர்க்கம் எதிர்த்தெழும் என்பதற்காகவாவது அவர்கள் அப்படிச் செய்வார்களென்று லெனின் சொன்னார்.

1914 ஜூலையில் பிரஸ்ஸல்ஸில் நடந்த சர்வ்தேச சோஷலிஸ்ட் ஸ்தாபன மகாநாடு ஆஸ்ட்ரியாவையும் ரஷியாவையும் கண்டித்தது. ஜெர்மனியில் சமூக ஜனநாயகக் கட்சியினர் பிளவைத் தவிர்க்கக் கடுமையாக முயன்றனர். ஜெர்மனியின் எல்லா நகரங்களிலும் பிரம்மாண்டமான ஆர்ப்பாட்டங்கள் நடந்தன. ஜெர்மன் ஜனநாயகக் கட்சியின் நிர்வாகக் கமிட்டி ஜூலை 25-ம் தேதி கூடி, "ஆஸ்ட்ரியக் கொடுங்கோலனைத் திருப்திப் செய்வதற்காக ஜெர்மன் சோல்ஜர்களின் ரத்தத்தைச் சிந்தக்கூடாது. வர்க்க உணர்வு பெற்ற பாட்டாளிகள் சமாதானத்தையே விரும்புகின்றனர் என்ற உறுதியான விருப்பத்தை உடனே பொதுக்கூட்டங்களின் மூலம் தோழர்களைக் கேட்டுக்கொள்கிறோம்" என்று ஒரு தீர்மானம் நிறைவேற்றியது.

ஆனால் ஜெர்மன் தொழிலாளர்களின் கோரிக்கைகளுக்குச் செவி சாய்க்கப்படாததால் சமூக ஜனநாயக கட்சியினர் அதுவரை எதிர்த்து போராடி வந்த யுத்தம் பிரத்யக்ஷமாக வந்துவிட்டது. ஜெர்மன் சமூக ஜனநாயகக் கட்சியினர் கெய்ஸர் சர்க்காரின் வலுச் சண்டையை எதிர்த்ததாகவும், இப்பொழுது யுத்தத்தை எதிர்ப்பது ஜாருக்கு வெற்றியாக முடியுமென்றும் கூறி யுத்தத்தை ஆதரிப்பதாக அறிவித்து, லெனின் ஜினோவீவ் ஆகியவர்களின் நம்பிக்கைகளைத் தோல்வியுறச் செய்தனர். "வொர்வெர்ட்ஸ்" என்ற பெர்லின் பத்திரிகையில் இச் செய்தியை லெனின் பார்த்தபொழுது அதை நம்ப மறுத்தார்.

"இது சாத்தியமில்லை" யென்று அவர் முதலில் கத்தினார். கடைசியில் அதை நம்பி, "இரண்டாவது சர்வதேச ஸ்தாபனம் இறந்துவிட்டது" என்று இறுதியாக அறிவித்தார்.

யுத்தம் மூண்டவுடன் ஆஸ்ட்ரியப் போலீசார் காலீஸியா முழுவதிலும் உளவாளிகளை வேட்டையாட

தொடங்கினர். 1914 ஆகஸ்ட் 7-ம் தேதி இரவு கொட்டும் மழையில் லெனின் கானெட்ஸ்கி வீட்டுக்கு வந்தார்.

"சற்று முன் என் வீட்டில் போலீசார் சோதனை நடத்தினர். நாளை காலை என்னை ரயில் ரோடு ஸ்டேஷனுக்கும், அங்கிருந்து அவர்களுடன் நோவிடார்குக்கும் வரச்சொல்லியிருக்கின்றனர். நாளை எங்களை நோவிடார்க்கில் அவர்கள் கைது செய்வார்களா, விட்டு விடுவார்களா ? நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் ?" என்று கேட்டார்.

லெனின் ஜாரிஸத்தின் பரம விரோதி என்பது க்ராகோ போலீசாருக்குத் தெரியுமென்று கானெட்ஸ்கி கருதினர். அவர்கள் லெனினை இடைவிடாது கவனித்து வந்தனர். ஆஸ்ட்ரிய விவகாரங்களில் அவருக்கு அக்கரையில்லையென்பது அவர்களுக்குத் தெரியும். க்ராகோ போலீசார் நிலைமை இது. ஆனல் நோவிடார்க் விஷயம் வேறு. அங்கு என்ன வேண்டுமானாலும் நடக்கக்கூடும்.

ஆகையால், ஆஸ்ட்ரிய சமூக ஜனநாயகக் கட்சியைச் சேர்ந்த பார்லிமெண்ட் அங்கத்தினரான டாக்டர் மரேக்குக்குக்கானெட்ஸ்கி எழுதினர். லெனின் க்ராகோவில் குடியேறுவதற்கு உதவிபுரிந்தவர் டாக்டர் மரேக் தான். லெனினே க்ராகோ போலீஸ் டைரக்டருக்குப் பின் வருமாறு ஒருதந்தி அனுப்பினர்; "ஸ்தல போலீசார் என்னை உளவாளியென்று சந்தேகிக்கின்றனர். க்ராகோவில் ஸ்வெண்ட்ஷின்ட்ஸ் ஜில்லாவில் லுபோமிர்ஷ்கா தெரு 57-ம் நம்பர் கட்டிடத்தில் சென்ற இரு வருஷமாக நான் வசித்து வருகிறேன். ஸ்வெண்ஷன்ஸ் போலீஸ்கமிஷனருக்கு நேரில் தகவல் கொடுத்திருக்கிறேன். நான் ஓர் அகதி. சமூக ஜனநாயகக் கட்சியைச் சேர்ந்தவன். தப்பப்பிராயத்தைத் தவிர்க்கும் பொருட்டு நோவிடார்க்கைச் சேர்ந்த தக்க போலீஸ் அதிகாரிகளுக்கு தந்தி கொடுங்கள்" என்று லெனின் அந்தத் தந்தியில் கேட்டுக்கொண்டிருந்தார்.

மறுநாளே ஸ்தல போலீஸுக்கு க்ராகோ போலீஸ் கமிஷனரிடமிருந்து, "லெனினைக் கைது செய்ய வேண்டிய அவசியமில்லை" யென்று ஒரு தந்தி வந்தது. இதற்கிடையில் லெனினும் ஜினேவீவும் கைது செய்யப்பட்டு விட்டனர். பின்னர் கானெட்ஸ்கி, ஆஸ்ட்ரிய சமூக ஜனநாயகத் தலைவர் விக்டர் ஆட்லருக்கும், காலீசியா சோஷலிஸ்ட் பார்லிமெண்ட் அங்கத்தினர் இக்னுட்ஸ் டாலின்ஸ்கிக்கும் தந்தி கொடுத்தார். ஜெர்மன் சமூக ஜனநாயகக் கட்சியினரைப் போலவே ஆஸ்ட்ரிய சமூக ஜனநாயகக் கட்சியினரும் யுத்த முயற்சியைப் பொதுவாக ஆதரித்தனர். ஆகையால் அவர்களுக்கு சர்க்காரிடம் வழக்கத்தைவிட அதிகச் செல்வாக்கு இருந்தது. ஆட்லர் அயல் நாட்டு மந்திரியைச் சந்தித்து லெனினைப் பற்றிப் பேசினார். ரஷியமன்னர் ஜார்விஷயத்தில் லெனின் கொண்டுள்ள கொள்கையை முன்னிட்டு, அவரை விடுதலை செய்வது ஆஸ்ட்ரிய-ஜெர்மன் லக்ஷியத்திற்கு மிகவும் உதவியாக இருக்கும் என்று அவர் எடுத்துச் சொன்னார்.

பின்னர் ஆஸ்ட்ரிய உள்நாட்டு இலாகா மந்திரி கீழ்க்கண்டபடி உத்தரவிட்டார்.

"தற்போதைய நிலைமையில் உலியனேவ் மிகவும் உதவியாக இருக்க முடியுமென்று டாக்டர் ஆட்லர் கருதுகிறார். அவர்மீது எந்த ராணுவக் கோர்ட்டுக்கு அதிகாரம் இருக்கிறது என்பதையும் எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் எமக்குத் தெரியப்படுத்துமாறு போலீஸ் அதிகாரிகள் கேட்டுக்கொள்ளப் படுகின்றனர்" என்பது உத்திரவு. **1914**, ஆகஸ்ட் **19**-ம் தேதி லெனின் விடுதலையானார். ஸ்விட்ஜர்லாந்து செல்ல அவருக்கு அனுமதி அளிக்கப்பட்டது.

ஜூரிச்சிலும் ஜினீவாவிலும் இருந்த சோஷலிஸ்ட் அகதிகளிடையே யுத்தத்தைப் பற்றிக் கடுமையான அபிப்பிராய பேதம் ஏற்கனவே வளர்ந்து வந்தது. மென்ஷ்விக் தலைவர் மார்ட்டினேவ் தொடர்ச்சியாகச் சில பிரசங்கங்கள் நிகழ்த்தினார். அவைப்பற்றிப் பல தினங்கள் விவாதம் நடந்தது. பிறகு பல ஜெர்மானி

யர் பேசினர். அவர்களைத் தொடர்ந்து கார்ல் ரடேக், ட்ராட்ஸ்கி, அலெக்ஸின்ஸ்கி ஆகியவர்களும், கடைசியில் லெனின், ஜினேவீவ், மார்ட்டோவ் ஆகியவர்களும் பேசினர்.

அப்பொழுது ட்ராட்ஸ்கிக்கு லெனினுடன் நெருங்கிய பழக்கமில்லை, அவர் பேசுகையில், பெரும்பாலான சோஷலிஸ்ட் கட்சிகள் யுத்தத்தைப் பற்றற்ற முறையிலேயே ஆதரிப்பதாகக் கூறினர். எல்லா நாடுகளின் முதலாளிகளிடையேயும் பொது நலன் இருப்பதாகக் கருதப்பட்ட போதிலும் உலகப் பொருளாதார அமைப்பு தேசீய அடிப்படையிலேயே அமைந்துள்ளதென்றும், சர்வதேச அடிப்படையில் அமையவில்லை யென்றும் அவர் கருதினர். தங்கள் நாடு புதிய நாடுகளைப் பிடித்துப் புதிய மார்க்கெட்டுகளை வசப்படுத்திக் கொண்டால் தங்கள் வாழ்க்கைத் தரம் உயருமென்று தொழிலாளர் நினைப்பதாகவும் ஆகையால் யுத்தகாலத்தில் சுரண்டல்காரர்களின் பக்கமே தொழிலாளர் சேர்ந்ததாகவும் ட்ராட்ஸ்கி கருதினர்.

"நாடு பிடித்தாலோ, ஜெயித்தவன் தோற்றவன் என்பதே இல்லாத சமாதானம் வேண்டும்" என்பதே 1914-ல் ட்ராட்ஸ்கியின் தாரக மந்திரமாக இருந்தது. ஆஸ்ட்ரிய ஹங்கேரிய சாம்ராஜ்யத்தைக் கலைக்க வேண்டுமென்பது ஒன்றுதான் அவர் ஆதரித்த தீவிர நடவடிக்கை. அப்பொழுது அவருடைய சர்வதேச வாதம் முக்கியமாக ஜெர்மனிக்கு எதிராகவே இருந்தது. யுத்தம் ஆரம்பமான முதல் சில வாரங்களில் ஜெர்மனி வெற்றி பெறும்போல் தோன்றியது. அதனுல் ஏற்படக்கூடிய விளைவுகள் பற்றி "சர்வதேச வாதிகள்" கூட அப்பொழுது பயந்தனர். ஆனுல் ட்ராட்ஸ்கி பாரிஸுக்குப் புறப்படுவதற்குள் யுத்த நிலைமை மாறிவிட்டது. வில்ஹெம் விரும்பியது போன்ற சமாதானம் கிடைக்காதென்பது தெளிவாகத் தெரிந்தது. ட்ராட்ஸ்கி முன்பு ஜெர்மன் சமூக ஜன நாயகக் வாதிகளைத் தாக்கியது போல் இபபொழுது பிரான்ஸில் பிரெஞ்சுக்காரர்களின் தேசபக்தியை எதிர்த்துப் போராட வேண்டியிருந்தது.

மார்ட்டோவ், மார்ட்டினேவ் ஆகியவர்களும், ஸ்விட்ஜர்லாந்தில் இருந்த மற்றும் பல போல்ஷ்விக்கு களும் ஒரே சர்வதேசச் கருத்துத்தான் கொண்டிருந் தனர். ஆனல், யுத்தத்தினல் ஏற்பட்டிருந்த தேச பக்தியை வெல்லும் சக்தி அத்த சர்வதேச உணர்ச் சிக்கு இல்லையென்பது ஒப்புக்கொள்ளப்பட்டது

லெனின் வந்த மறுநாள் போல்ஷ்விக்குகளின் கூட்டம் ஒன்று நடந்தது அதில், யுத்தம் பற்றிய தம் கருத்துக்களை லெனின் விளக்கிப் பேசினர். அந்தப் போராட்டம் ஏகாதிபத்தியத் தன்மை வாய்ந்ததென்றும், இரண்டாவது சர்வதேச ஸ்தா பனத் தலைவர்களின் நடத்தை தொழிலாளர் வர்க்கத் திற்குச் செய்யப்படும் துரோமாகுமென்றும் கூறி ஒரு தீர்மானம் நிறைவேற்றப் பட்டது. இந்தத் தீர் மானத்தை ஸெயிண்ட் பீட்டர்ஸ்பர்கிற்கும், டூமா சபை யின் போல்ஷ்விக் கட்சி மத்தியக் கமிட்டிக்கும் எடுத் துச் சொல்லுமாறு ஷி சபையின் போல்ஷவிக் அங்கத் தினரான ஸமாய்லோவுக்கு உத்திரவிடப்பட்டது.

ஜூரிச்சில் நடந்த ஒரு விவாதத்தில் லெனின் பேசு கையில், ட்ராட்ஸ்கியின் சாமாதான கோஷம் வெறும் பகற்கெனவென்று வர்ணித்தார். சமாதானம் கூடாது; உள்நாட்டு யுத்தம் நடத்தவேண்டும் என்பதுதான் லெனின் திட்டம். ரகசியமாக புரட்சிக்குழுக்கள் அமைப் பதுதான் சரியான வழியென்று அவர் கருதினர்.

“துப்பாக்கியை எடுங்கள்; அதை அதிகாரிகளுக் கும் முதலாளிகளுக்கும் எதிராகத் திருப்புங்கள்” என் ருர் லெனின். மத்தியதர வகுப்பினரான பூர்ஷ்வாக் கள் முதலில் சுடும்படிச் செய்யவேண்டும் என்பதற்கு அவர் எங்கெல்ஸை மேற்கோள் காட்டினர். இப் பொழுது உலக பூர்ஷ்வாக்கள் சுடத் தொடங்கிவிட்ட தால், அதற்கு பதிலளிக்கவேண்டிய காலம் வந்து விட்டதாக அவா கருதினர். “பூர்ஷ்வா கனவான் களே, நீங்கள்தான் முதலில் சுட்டீர்கள் என்று அவர் இடித்துக் கூறினர்.

நேச நாடுகளின் யுத்த முயற்சியை ப்ளெகனேவ்

ஆதரிக்கிருரென்ற செய்தி கேட்டு லெனின் ஆத்திர மண்டந்தார். ப்ளெகனேவை நேருக்கு நேர் சந்திக்க வேண்டுமென்று அவருக்கு ஆவல். ஜெர்மனி வெற்றி பெற்ருல் ரஷ்யா ஜெர்மனியின் காலனியாகி விடுமென் றும், ரஷியாவின் தொழில்களும் அவற்றுடன் தொழி லாளர் வர்க்கமும் நசிக்குமென்றும், நிலப் பிரபுக்கள் ஆதிக்கம் பெற்று, அதனுல் ஜாரின் கொடுங்கோன்மை பலமடையுமென்றும் ப்ளெகனேவ் கருதினுர். இதனுல் ரஷியா பல ஆண்டுகள் பின் நோக்கிச் சென்றுவிடு மென்று அவர் நினைத்தார்.

இது சம்பந்தமாக ஒரு சம்பவம் பற்றி புகாரின் விவரித்திருப்பது குறிப்பிடத்தக்கது. ப்ளெகனுவ் ஒரு கூட்டத்தில் பேசப்போவதாக லாஸேனில் எங் களுக்குத் தெரிய வந்தது. உடனே, பெர்னேயில் இருந்த லெனினுக்கு ஒரு தந்தி கொடுத்தோம். லெனின் வாயு வேகத்தில் அங்கு வந்து சேர்ந்தார். மூச்சுத் திணறும்படி மண்டபத்தில் ஜனங்கள் நிறைந் திருந்தனர்......ப்ளெகனேவ் லெனினைப் பார்த்துவிட்டு, தாம் கூண்டில் அடைக்கப்பட்டதுபோல் தோன்று வதாக ஹாஸ்யமாகக் கூறினுர்.

வெள்ளி போன்ற புருவங்களின் கீழ்க்கண்கள் பளபளக்க அவர் பேசினுர். நேச நாட்டு சோஷலிஸ்டு களின் தேச பக்தியை அவர் ஆதரித்தார். ஜெர்மன் சமூக ஜனநாயக வாதிகளின் போக்கை அவர் கண் டித்தபோது எழுந்த கரகோஷத்தில் லெனினும் கலந்து கொண்டார். ஆனுல், பிரான்ஸ், பெல்ஜியம், ஜெர்மனி ஆகிய நாடுகளின் சோஷலிஸ்ட் கட்சிகள் ஜெர்மன் ராணுவ வெறியை எதிர்த்து தங்கள் நாட்டு சர்க்கார் களை ஆதரிக்க வேண்டுமென்று அவர் சொன்ன பொழுது லெனின் ரெளத்ராகாரமாகக் கோபமண்டந் தார். ப்ளெகனேவ் பேசி முடித்தவுடன் லெனின், கையில் பீர் டம்ளருடன் எழுந்து மேடையை நோக்கி நடந்தார். அவர் முகம் சவம்போல் வெளுத்திருந்தது.

"அவர் முகம் அவ்வளவு பயங்கரமாக வெளுத் திருந்ததை அதற்கு முன்போ பின்போ நான் பார்த்த

தில்லை'' என்று புகாரின் எழுதுகிறார். "அவருடைய கண்கள் மட்டுமே பிரகாசித்தன; வறண்ட குரலில் அவர் தம் எதிரியைக் கடுமையாகத் தாக்கிப் பேசத் தொடங்கினார்'' என்கிறார் அவர்.

"அவர் அமைதியாகப் பேசினார். அவருடைய வெளிறிய முகம்தான் அவருடைய உணர்ச்சியை வெளிப்படுத்தியது'' என்கிறார் க்ரூப்ஸ்காயா.

"யுத்தம் தற்செயலாக மூண்டதல்ல; பூர்ஷ்வா சமுகம் முழுவதன் தன்மையினாலும் அது திட்டமிடப் பட்டது. யுத்தம் சம்பந்தமாக சோஷலிஸ்டுகள் எப்படி நடந்து கொள்ளவேண்டும் என்பது பற்றி ஸ்டட்கார்ட்டிலும் பாஸ்லேயிலும் நடந்த சர்வதேச சோஷலிஸ்ட் காங்கிரஸ் முடிவு செய்து விட்டது. அந்தந்த நாட்டில் சமூக ஜனநாயக வாதிகள் குறுகிய தேசீய உணர்ச்சியை எதிர்த்துப் போராடுவது கடமை. யுத்தம் பாட்டாளி வர்க்கத்திற்கும் ஆளும் கட்சிக்குமிடையே நடக்கும் உறுதியான போராட்டமாக மாற்றப்பட வேண்டும்'' என்று லெனின் சொன்னதாக க்ரூப்ஸ்காயா எழுதி வைத்துள்ளார். "லெனின் பத்து நிமிஷமே பேசினார். முக்கிய விஷயங்கள் பற்றி மட்டுமே குறிப்பிட்டார். ப்ளெகனேவ் பிரசித்தி பெற்ற தம் கூரிய சொற்களின் மூலம் பதிலளித்தார். அந்தக் கூட்டத்தில் பெரும்பான்மையாக இருந்த மென்ஷ்விக்குகள் அவரைப் பாராட்டிக் கரகோஷம் செய்தனர். அக்கூட்டத்தில் ப்ளெகனேவ் வெற்றி பெற்றுவிட்டது போலவே தோன்றியது'' என்கிறார் க்ரூப்ஸ்காயா.

1914 அக்டோபர், 17-ம் தேதி, லெனின், பிரபல போல்ஷ்விக்குகளில் ஒருவரான ஷ்லிப்னிகோவுக்கு எழுதிய ஒரு கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிட்டார். "ரஷியாவில் பிரெஞ்சு சொற்றொடர்களுக்கும், துரதிருஷ்டவசமான பெல்ஜியத்திலும், கெய்ஸர், அவர் அனுஷ்டிக்கும் முறைகள் ஆகியவற்றின் மீது உள்ள பகைமையிலும் குறுகிய தேசீய உணர்ச்சி ஒளிந்து கொண்டிருக்கிறது. இதை எதிர்த்துப் போராடுவது நம் பெருங்கடமையாகும். போராட்டம் திட்டவட்ட

மான, நேரான பாதையில் செல்லும்பொருட்டு இந்தப் பிரச்னை முழுவதையும் தன்னுள் அடக்கிய ஒரு சூத்திரம் அவசியம். ரஷியப் பாட்டாளிகளின் நலனுக்கு ஜார் மன்னனின் ஆட்சி தோல்வி அடைவது நல்லது என்பதை அந்த சூத்திரம் தெளிவுபடுத்த வேண்டும். கெய்ஸர் ஆட்சியைவிட ஜாரின் ஆட்சி ஆயிரம் மடங்கு மோசமானது. இந்த சமயத்தில் 'சமாதான' கோஷம் சரியானதல்ல. குருமார்களும் பூர்ஷ்வா அற்பர்களும் எழுப்பும் கோஷமே இது. 'உள்நாட்டு யுத்தம்' என்பதே பாட்டாளி வர்க்கத்தின் சூத்திரமாக இருக்கவேண்டும்......உள்நாட்டு யுத்தத்திற்கு நாம் உறுதி கூறவோ, உத்தரவிடவோ முடியாது. ஆனால் அதற்கானவேலைகளை அவசியமானால் நெடுங்காலம் வரையில் கூடச்செய்து வர வேண்டும்'' என்று லெனின் அந்தக் கடிதத்தில் எழுதினர். (சொற்களின் அடியில் கோடிட்டவர் லெனின்.)

ஷ்க்லோவ்ஸ்கி என்ற ஒரு போல்ஷ்விக் லெனினுடன் வாதிக்கையில் "ஜெர்மனி தோற்காவிட்டால் பிரான்ஸில் ஜனநாயகம் அழிந்துவிடும்" என்று கூறியபோது லெனின் பின்வருமாறு பதிலளித்தார். "அவர்கள் அதை அழிக்கட்டும். பிரான்ஸானது, லேவாதேவிக்காரர்களும் வாடகை வருமானத்தையே நம்பியிருப்பவர்களும் கொழுக்கும் பிற்போக்குக் குடியரசே தவிர வேறில்லை. புரட்சி மார்க்ஸிஸ்ட்டுகளாகிய நமக்கு யார் வெற்றி பெற்றாலும் ஒன்றுதான்'' என்றார் லெனின்.

யுத்தத்தை உடனே நிறுத்த விரும்பிய சமாதான வாதிகளையும், யுத்த எதிர்ப்பாளர்களையும் அவர் வன்மையாகக் கண்டித்தார். யுத்தம் நின்றால் புரட்சிக்கான சிறந்த சாத்தியக்கூறு கெட்டுவிடும் என்பதே அவர் அவர்களை எதிர்த்ததற்குக் காரணம். **1914**, நவம்பர் **11**-ம் தேதி அவர் எழுதிய ஒரு கட்டுரையில், "கிறிஸ்தவ மதத் தலைவர்கள் நினைப்பதுபோல் யுத்தம் பாவமோ அல்லது தற்செயலான நிகழ்ச்சியோ அல்ல. அவர்கள் மற்றெல்லா சந்தர்ப்பவாதிகளையும்

போல் தேச பக்தி, ஜீவகாருண்யம், அமைதி முதலிய வற்றைப் பிரசாரம் செய்கின்றனர். முதலாளித்துவத் தின் தவிர்க்க முடியாத ஒரு பகுதியே யுத்தம். யுத்த மும் சமாதானத்தைப் போல் முதாளித்துவத்தின் நியாயமான உருவமேயாகும். ஒரு உள் நாட்டு யுத்தமோ அல்லது தொடச்சியான போராட்டங்களோ இலலாமல் முதலாளித்துவத்தை அழித்துவிட முடியு மென்பது பைத்தியக்காரத்தனம். பல்வேறு நாடு களின் பூர்ஷ்வா வகுப்புக்களுக்கிடையேயும் ஏகாதி பத்திய யுத்தம் மூளும் பக்ஷத்தில் அந்த யுத்தத்தை வர்க்கப் போராட்டமாக மாற்றுவதுதான் சோஷ லிஸ்டுகளின் கடமை. 'எப்படியும் சமாதானம்' என்ற போலி கோஷம் ஒழிக, உள்நாட்டு யுத்தம் நீடுழி வாழ்க" என்று எழுதினர்.

ஸ்விட்சர்லாந்தில் சுறுசுறுப்பாக இருந்த சர்வ தேச சோஷலிஸ்ட் வாதிகளில் கார்ல் ரடேக் ஒருவர். 1914 ஆகஸ்டில் அவர் ஜெர்மனியிலிருந்து வந்தார். ஏகாதிபத்தியத்தைப் பற்றி அவர் ஜூரிச்சில் படித்த கட்டுரை நன்கு வரவேற்கப்பட்டது.

ரஷிய-ஜெர்மன் சமூக ஜனநாயகவாதியான பார் வூனைப்பற்றி ரடேக் நன்ருக அறிந்திருந்தார். பண விஷயத்திலும் பெண்கள் விஷயத்திலும் அவர் துர் நடத்தை உள்ளவர். பணத்தை கையாடியதற்காக ஜெர்மன் சமூக ஜனநாயகக் கட்சியிலிருந்து அவர் விலக்கப்பட்டவர். ஆனுல் அவரைப்புற்றி ரடேக் பரி வுடன் பேசினுர். பார்வூன் சிறந்த புத்திசாலியென் றும், ஆனுல் எந்த விஷயத்தையும் அவர் அதிக நாள் நீடித்துக் கடைபிடிக்க மாட்டாரென்றும் ரடேக் கூறி ஞர். அந்த சமயத்தில் பார்வூன் மத்திய வல்லரசு களுக்காகச் சேவை செய்து வந்தார். காகேஸிய முனையில் ரஷியரை எதிர்த்துப் போராடுவதற்காக ஜியார்ஜிய யுத்தக் கைதிகளை, துருக்கி சேனையின் தனிப்படையாகச் சேர்க்க, துருக்கியும் ஜெர்மனியும் முயன்று கொண்டிருந்தன. ஜியார்ஜியாவிலிருந்து ராணுவத்தைத் துறந்து ஓடியவர்கள் பல்கேரியாவில்

தங்கியிருந்தனர். அங்கு ஒரு ஸ்தாபனத்தை அந்நாடுகள் ஏற்படுத்தியிருந்தன. உத்தியோகத் தொடர்பற்ற முறையில் இந்தத் திட்டத்தின் அமைப்பாளர் பார்வூஸ்.

பார்வூஸ் ஒரு சிறந்த ஜெர்மன் தேச பக்தரும், ஜெர்மன் ராணுவத்தின் கண்ட்ராக்டருமாக இருந்தார். யுத்தத்தின்போது சூதாட்ட பேரத்தினுல் அவருடைய வருமானம் அதிகரித்தது. அவருக்காக உழைத்தவர்களில் ஒருவர் கானெட்ஸ்கி. பார்வூஸ், கானெட்ஸ்கி ஆகிய இருவருடனும் ரடேக்குக்கு அடிக்கடி தொடர்பு இருந்து வந்ததென்ருலும், பார்வூஸின் வர்த்தக, பண விவகாரங்களில் அவருக்கு சம்பந்தமில்லை. ஆனல் பார்வூஸ்-கானெட்ஸ்கி உறவும், பெர்லினேடு பார்வூஸுக்கு இருந்து வந்த தொடர்பும், லெனினின் பிற்கால நடவடிக்கைகளில் முக்கிய பாகம் வகித்தன.

ரஷியா தோல்வியடைய வேண்டுமென்று ரஷியத் தொழிலாளர் வர்க்கம் விரும்புகிறதென்று டூமாசபையில் போல்ஷ்விக் அங்கத்தினர்கள் பிரகடனம் செய்ய வேண்டுமென, ஸெய்ண்ட் பீட்டர்ஸ்பர்க்கில் இருந்த காமனேவுக்கு லெனின் தகவல் அனுப்பினர். போல்ஷ்விக் கட்சியினரும், டூமா சபையில் இருந்த போல்ஷ்விக் அங்கத்தினர்களும் அடங்கிய ரகசியக் கூட்டத்தில் இதற்கான பிரேரணையைக் காமனேவ் கொண்டு வந்தார்.

லெனின் பிரகடனத்தை ஏற்குமாறு டூமா சபை அங்கத்தினர்களைக் காமனேவ் கேட்டுக்கொண்டிருந்த பொழுது, போலீசார் வந்து, அங்கிருந்த அனைவரையும் கைது செய்தனர். டூமா சபை அங்கத்தினர்கள் உள்பட அங்கிருந்த அனைவர் மீதும் தேசத்துரோகக் குற்றம் சாட்டப்பட்டு, அவர்கள் ஸைபீரியாவுக்கு அனுப்பப்பட்டனர்.

இந்த நிலையில், ரஷியா தோல்வியடைந்தால் புரட்சி துரிதப்படும் என்ற லெனின் பிரசாரத்திற்கு, ரஷியாவிலிருந்து வெளியேறி வந்தவர்களிடையே

ஆதரவு அதிகரித்தது. அவருடைய ஆதரவாளர் களில் சிலர் சமாதானவாதிகள். லெனினை சமாதானத் தூதர் என்று நம்பிய அவர்கள் அவருடைய உள் நாட்டு யுத்தப் பேச்சை நம்பவில்லை.

மென்ஷ்விக்குகள் இரு பிரிவுகளாகப் பிரிந்து விட்டனர். அவர்களில் பெரும்பான்மையினருக்கு ரஷியாவில் பொட்ரஸோவும், ஸ்விட்ஜர்லாந்தில் ப்ளெகனேவும் தலைமை வகித்தனர். யுத்தத்தை ஆதரிக்க வேண்டுமென்று இந்தப் பெரும்பான்மை கோஷ்டி கருதியது. மார்ட்டோவ், ஆக்ஸல்ராட் ஆகியவர்கள் தலைமையில் இருந்த சிறுபான்மையினர் சர்வதேச சோஷலிஸ வாதிகளை ஆதரித்தனர். ஜெர்மனி, இத்தாலி, பிரான்ஸ் ஆகிய நாடுகளின் இடதுசாரி சோஷலிஸ்ட்டுகளின் நிலையே இவர்களுடைய நிலையுமாகும். புரட்சி சோஷலிஸ்டுகளிடையேயும் இதேபோன்ற பிளவு ஏற்பட்டிருந்தது. விக்டர் செர்னேவ் தலைமையில் இருந்த கோஷ்டி சர்வதேச வாதிகளையும், நிகொலாய் ஆவ்க்ஸெண்டீவ் தலைமையில் இருந்த கோஷ்டி நேசநாடுகளையும் ஆதரித்தன.

லெனின் பல கஷ்டங்களையும் மீறி, ஸெய்ண்ட் பீட்டர்ஸ்பர்க்கில் இருந்த போல்ஷ்விக் மத்தியக் கமிட்டியுடன் கடிதப் போக்குவரத்து நடத்தி வந்தார். ஸைபீரியாவுக்கு பிரஷ்டம் செய்யப்பட்டிருந்த போல்ஷ் விக்குகளான ஸ்டாலின், ஸ்வெர்ட்லோவ் முதலியவர் களுடனும் அவர் தொடர்பு ஏற்படுத்திக்கொள்வதிலும், அவர் வெற்றி பெற்று, யுத்தம் பற்றிய தம் சித்தாந்தத்தையும் அவர்களுக்கு அனுப்பி வைத்தார்.

வெளிநாடுகளில் இருந்த போல்ஷ்விக் கோஷ்டி களுக்கு லெனின் தம் கொள்கை அறிக்கையை அனுப்பி வைத்தார். முக்கிய ப்பால்ஷ்விக் கோஷங் களை உருவாக்கித் தந்த அவருடைய தீர்மானத்தை மகாநாடு ஏற்றது. பின்கண்ட இறுதி எச்சரிக்கையைச் "சந்தர்ப்பவாதிகளுக்கு" அனுப்ப வேண்டுமென்று லெனின் பிரேரித்தார். "யுத்தத்தைப்பற்றி

மத்தியக் கமிட்டியின் கொள்கை அறிக்கை இதோ உள்ளது. அதை உங்கள் பாஷையில் பிரசுரிக்கிறீர்களா? இல்லையானுல் நாங்கள் பிரிந்து போகிறோம்" என்பதே அந்த இறுதி எச்சரிக்கை.

சீர்கெட்டிருந்த ரஷியாவின் பொருளாதாரத்தை யுத்தம் இன்னமும் மோசமாக்கியது. விவசாயம், கைத்தொழில், போக்குவரத்து வசதி முதலியவற்றின் பலவீனம் நன்கு வெளியாயிற்று. ஏற்கனவே வரிச் சுமை தாங்காமல் தவித்துக்கொண்டிருந்த நாட்டின் மீது யுத்தச் சுமையும் வீழ்ந்தது. வெளி நாடுகளிடமிருந்து சர்க்கார் கடன் வாங்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. வெளிநாட்டுக் கடன் வேகமாக அதிகரித்தது.

ஒரு கோடியே எண்பது லக்ஷம் பேர், அதாவது வேலை செய்யக்கூடிய முதியோர்களில் கிட்ட தட்டப் பாதிப் பேர் யுத்த சேவைக்கு அழைக்கப்பட்டனர் போர்முனையிலிருந்து தொழிலாளரைத் திருப்பி அனுப்புமாறு தொழிலதிபர்கள் மனுச் செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்டது. பயிற்சி பெற்ற தொழிலாளர்கள் மறைந்து விட்டனர். அவர்களுக்கு பதிலாக, பயிற்சியற்ற கிராமவாசிகள் நியமிக்கப்பட்டனர். ரஷிய தொழிற்சாலைகளில் சாதனங்கள் இல்லை. வெளிநாடுகளிலிருந்து இயந்திரங்கள் வரவில்லை. மூலப் பொருள்களின் இறக்குமதியும் நிலக்கரி உற்பத்தியும் குறைந்தன.

சரியான சாதனங்களில்லாத ரஷியப் படைகளுக்கு, முதலில் சில வெற்றிகள் கிடைத்தனவே தவிர, பின்னர் அவற்றிற்குப் பெருந்தோல்விகள் ஏற்பட்டன. தவருக திட்டமிட்டு நடத்தப்பட்ட நடவடிக்கைகளின் மூலம் வீண ரத்தப்பெருக்கு அதிகரித்தது. திறமையற்று யுத்தத்தை நடத்தியதற்கும், உள்நாட்டு விவகாரங்களில் குறுகிய நோக்கு அனுஷ்டித்ததற்கும் நிகொலஸ் மன்னரே பொறுப்பு.

சர்க்கார் எதிர்பார்த்ததுபோல், யுத்தத்தின் விளைவாக விவசாயப் பிரச்னை பின்னணிக்குப் போய்விட

வில்லே. உண்மையில், ஆயுதம் தாங்கிப் போராடுவதற்குப் பரிசாகத் தங்களுக்கு நில உரிமை அளிக்கப்படுமென்று விவசாயிகள் நம்பினர்.

ரஷியா ஒற்றுமையாக இருக்கிறது என்பதை நிரூபிப்பதற்காக யுத்தத்தின் ஆரம்பத்தில் டூமா சபையின் ஒருநாள் கூட்டம் ஒன்று கூட்டப்பட்டது. சர்க்காருக்கும் மிதவாதிகளுக்குமிடையே "சிவில் சமாதானம்" ஏற்படுத்திக்கொள்ளப்பட்டது. நம்முடைய சொந்தத் தகராறுகளே மறப்போம். நம்மிடையே பிளவு ஏற்படுமென்ற நம்பிக்கை எதிரிக்கு ஏற்படச் செய்ய சிறிது கூட இடம் தரவேண்டாம். நம்முடைய நியாயமான காரணத்திற்காக போராடுகிறவர்களே ஆதரிப்பதே நம்முடைய முதற்கடமை என்பதை ஞாபகப்படுத்திக் கொள்வோம்" என்று ஜனநாயகக் கட்சியினர் கூறினர்.

ஆனல் மன்னன் இரண்டாவது நிகொலஸ் பல வீனமானவன்; பிடிவாதக்காரன்; அவன் மிதவாதிகளின் ஆதரவைப் பயன்படுத்திக் கொள்ளாமல் தன் மனேவியான ஜெர்மன்காரியையும், ராஸ்புடீனேயும் நம்பினுன். மன்னனேடு ஒப்பிட்டுப் பார்த்ததில் ராணி அதிக அறிவும் மனேதிடமும் பெற்றவள்.

தெய்வீக சக்தி படைத்தவன் என்ற முறையில் ராஸ்புடீன் ராணியின் நம்பிக்கையை பெற்றிருந்தான். ராணிக்கும், மன்னனுக்கும் கடவுளுக்குமிடையே அவன் தரகனுக விளங்கினுன். அவனுக்குத் திட்டமான வேலே ஒன்றுமில்லே. ஆனல் அரசியல் பதவிகளுக்கு ஆட்கள் நியமிக்கப்படும்பொழுது அவன் யோசனே கேட்கப்படும். இதுதான் அவனுக்குப் பிடித்தமான வேலே. இதன் மூலம் அவன் மன்னனுக்குச் சந்தேகம் ஏற்படாத வகையில் ஏராளமாகப் பணம் சேர்த்தான். அவன் ஜெர்மன் உளவாளி என்ற குற்றச்சாட்டு இறுதி வரை நிரூபிக்கப்படவில்லே. ஆனல் டூமா சபை மன்னனின் அதிகாரத்தை எதிர்ப்பதாகக் கூறி அதை எதிர்த்து அவனும் ராணியும் போராடினர்.

"டூமா சபைக்கூட்டம் ஆரம்பிக்கப்படும் தேதியைத் தள்ளிப் போடுமாறு நம் நண்பர் உங்களைப் பல முறை கேட்டிருப்பதால், இப்பொழுது செய்யப்பட்டுள்ள முடிவின்படி அக்கூட்டம் ஆகஸ்ட் மாதத்தில் ஆரம்பமாகும்" என்று 1915-ம் வருஷம் கோடை காலத்தில் ராணி தன் கணவருக்கு எழுதினாள்.

காலீஸிய முனையில் பெரிய தோல்விகள் ஏற்பட்டதால் டூமா சபையை 1915 ஜூன் 19-ம் தேதியே மன்னர் மீண்டும் கூட்ட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. ஆனால், செப்டம்பர் 3-ம் தேதி அது மீண்டும் ஒத்தி வைக்கப்பட்டது. நினைத்த போது கூட்டப்பட்ட இத்தகைய கூட்டங்களினால் அங்கத்தினர்களின் மனோபாவம் மாறவில்லை. ராஜாங்கத்திலிருந்து ராஸ்புடீனை விரட்ட வேண்டுமென்று அவர்கள் வற்புறுத்தியே வந்தனர். முற்போக்கு கோஷ்டி என்று கூறப்பட்ட கோஷ்டி மத்தியதர வகுப்பு, பிரபுக்கள், அரசாங்க கோஷ்டி ஆகியவற்றின் நலன்களுக்கிடையே சமரசம் ஏற்படுத்த முயன்றது. இந்த ஏற்பாட்டைச் செய்த மியுலிகோவ் மன்னரின் மந்திரிகள் சிலரிடமிருந்து இந்த யோசனை வந்ததாக ஒப்புக்கொண்டார். விரிவான அரசியல், சமூகச் சீர்திருத்தங்கள் செய்வது, ஐக்கிய சர்க்கார் ஏற்படுத்துவது முதலியவை இந்த கோஷ்டியின் வேலை திட்டமாகும். ஆனால் டூமா சபைக்குப் பொறுப்பான ஒரு மந்திரி சபை அமைக்கப்பட வேண்டுமென்று அது வற்புறுத்தவில்லை. இறுதி அதிகாரம் மன்னரிடமே இருந்து வரும். இந்தச் சிறந்த திட்டம் வெறும் ஆசையாகவே நின்றுவிட்டது. சீர்திருத்தம் எதுவும் நடைபெறவில்லை.

1915-ம் வருஷக் கோடை காலத்தில் லெனின் பின்வருமாறு எழுதினார்.

"தொழிலாளி வர்க்கத்தை விடுவிக்கும் பொருட்டு, உலகத்தில் தீயினாலும் இரும்பினாலும் அழிக்கப்பட வேண்டிய விஷயங்கள் பல இருக்கின்றன. பாமர மக்களிடையே மனக் கசப்பும் அவநம்பிக்கையும் வளர்ந்து,

புரட்சிகரமான நிலைமையும் ஏற்படும் பக்ஷத்தில் புதிய ஸ்தாபனங்கள் ஏற்படுத்தி, சாவையும் அழிவையும் ஏற்படுத்தக் கூடிய இந்த உபயோகமான ஆயுதங்களை உங்கள் சர்க்காருக்கும் உங்கள் பூர்ஷ்வாக்களுக்கும் எதிராக உபயோகிக்கத் தயாராகுங்கள்.

"இது சுலபமல்ல, இதற்குக் கஷ்டமான பூர்வாங்க ஏற்பாடுகள் செய்யவேண்டும். பெரிய தியாகங்கள் செய்யவேண்டியிருக்கும். இது நாம் கற்கவேண்டிய ஒரு புதுரக ஸ்தாபனமும் போராட்டமுமாகும். தவறுகளும் தோல்விகளுமல்லாமல் நாம் எதையும் கற்க முடிவதில்லை. இந்த விதமான வர்க்கப் போராட்டத்திற்கும் தேர்தலில் கலந்து கொள்வதற்குமிடையே உள்ள தொடர்பு, ஒரு கோட்டையைத்தாக்குவதற்கும், தந்திரமாக முன்னேறுவது, அகழ்களில் ஒளிந்து கொள்வது ஆகியவற்றிற்குமிடையே உள்ள தொடர்பைப் போன்றதுதான் என்று லெனின் எழுதினர்.

யுத்தத்தை எதிர்த்த எல்லா சோஷலிஸ்ட் கோஷ்டிகளும் அடங்கிய ஒரு மகாநாடு 1915, செப்டம்பர் 5-ம் தேதி ஸ்விட்ஜர்லாந்தைச் சேர்ந்த ஸிம்மர்வால்டில் நடை பெற்றது. அவர்கள் தங்களைச் சர்வதேச வாதிகளென்று கூறிக் கொண்டனர். இதற்கு முன்னால் பெர்னேயில் ஒரு புதிய சர்வதேச ஸ்தாபனத்தை ஏற்படுத்தி, யுத்தத்தை எதிர்த்து வேலைநிறுத்தம் செய்யுமாறு, யுத்தத்தில் ஈடுபட்டிருந்த எல்லா நாடுகளின் சோல்ஜர்களையும் தொழிலாளர்களையும் கேட்டுக் கொள்ள லெனின் உத்தேசித்திருந்தார்.

1915 மேமாதத்தில் இத்தாலி யுத்தத்தில் சேர்ந்த பொழுது. சர்வதேச யுத்தஎதிர்ப்பு ஸ்தாபனம் அமைப்பதில் இத்தாலிய சோஷலிஸ்டுகள் முந்திக் கொண்டனர். பெர்னேயில் சர்வதேச வாதிகளுடன் பேச்சு வார்த்தைகள் நடத்துவதற்காக அஞ்சலிகா பலபனேயையும் மொர்காரியையும் இத்தாலிய சோஷலிஸ்டுகள் அனுப்பினர்.

லெனின் யோசனைக்கு பலத்த எதிர்ப்பு இருந்தது. பிரெஞ்சு இடது சாரித் தலைவர்களில் ஒருவரான

மொர்ஹீம் இதுபற்றிப்பேசுகையில், சோல்ஜர்களுக்கும் தொழிலாளர்களுக்கும் விடுக்க உத்தேசித்துள்ள பிர கடனம் பயனற்றதாக இருக்குமென்றார். இந்தப்பிர கடனத்தில் கையெழுத்திடுபவர்கள் தங்கள் நாடு களுக்குத் திரும்பியவுடன் தேசத்துரோகிகளாகக் கரு தப்பட்டு மரண தண்டனைக்குள்ளாவார்களென்றும், லெனின் மாத்திரம்,-நடுநிலைமை நாடாகிய ஸ்விட்ஜர் லாந்தில் பத்திரமாக இருப்பாரென்றும் மற்றப் பிரதி நிதிகள் கூறினர். எட்டு மணிநேர விவாதத்திற்குப் பின் பெர்னே கூட்டம் பலனேதுமின்றிக் கலைந்தது.

யுத்தத்தை எதிர்த்த பல்வேறு கோஷ்டிகளுக் கிடையேயும் நிரந்தரமான தொடர்பு ஏற்படுத்த, ஸ்விட்ஜர்லாந்தைச் சேர்ந்த பத்திரிகையாளரும் சோஷ லிஸ்ட் தலைவருமான ராபர்ட் க்ரிம் முயன்றார். வர்க்கப் போராட்டக் கொள்கையை ஏற்றுக்கொண்டு, யுத்த மான்யக் கோரிக்கைகளை எதிர்த்து வோட் செய்த எல்லா கோஷ்டிகளையும இத்தாலிய சோஷலிஸ்ட் கட்சி அழைத்திருந்தது. ஜெர்மன் சமூக ஜனநாயகக்கட்சி யைச் சேர்ந்த "சென்ட்ரிஸ்ட்டுகள்" என்று அழைக்க வேண்டுமென்று ஸிம்மர்வால்டு மகாநாட்டிற்கு ஏற் பாடு செய்தவர்கள் விரும்பினர்.

மகாநாட்டிற்கு முன் நடந்த பூர்வாங்கக்கூட்டம் ஒன்றில் ஜினேவீவ் போல்ஷ்விக்குகளின் சார்பில் பேசு கையில், மகாநாட்டிற்கு ஜெர்மன் "சென்ட்ரிஸ்ட்டு" கள் அழைக்கப் படுவதை எதிர்த்தார். இதற்குச் சில வாரங்களுக்கு முன்னால் கௌட்ஸ்கி, பெர்ன்ஸ்டீன், ஹாஸ் ஆகியவர்கள் வெளியிட்ட ஒரு பிரகடனத்தில் நாடு பிடித்தல் இல்லாமல் சமாதானம் ஏற்படுத்த வேண்டு மென்று வற்புறுத்தினர். சென்ட்ரிஸ்ட்டு களை அழைக்காவிட்டால் தாமும் மகாநாட்டிற்கு வர வில்லை யென்று மென்ஷவிக் சர்வதேசவாதிகளின் பிரதிநிதியான ஆக்ஸல்ராட் கூறியதால் ஜினோவீவின் பிரேரணை தோற்கடிக்கப்பட்டது.

பின்னர் கௌட்ஸ்கி கோஷ்டி, ஸிம்மர்வால்டில் கூடியிருந்த சிறு கோஷ்டிகளுடன் பேச்சு வார்த்தை

கள் நடத்துவதைவிட, சக்தி வாய்ந்த பிரெஞ்சு சோஷலிஸ்ட் கட்சியுடன் நேரடியாகப் பேசுவது மேலென்று கருதியது.

ஜெர்மனியிலிருந்து பத்துப் பிரதிநிதிகள் லெட்பர் வந்திருந்தனர். அவர்களில் பெரும்பாலானவர்கள் கௌட்ஸ்கிக்கும் அதி தீவிர இடது சாரிகளுக்கு மிடையே நடுநிலைமை வகித்தனர். கார்ல் லீப்னெக்டின் சகாக்கள்மட்டுமே லெனினை ஆதரித்தனர்.

போல்ஷ்விக்குகளின் சார்பில் லெனின், ஜினேவீவ் ஆகியவர்களும், மென்ஷ்விக் சர்வதேசவாதிகளின் சார்பில் ஆகஸல்ராட், மார்ட்டோவ் ஆகியவர்களும் மகாநாட்டிற்கு வந்திருந்தனர். ட்ராட்ஸ்கி தம் சிறு கோஷ்டியின் சார்பில் பேசினார். ரஷிய சோஷலிஸ்ட் புரட்சிக் கட்சியின் சார்பில் செர்னேவ், பாப்ரோவ் ஆகியவர்களும், போலந்திலிருந்து கார்ல் ரடேக், வார்ஸ்கி, லாபின்ஸ்கி (மூவரும் துணுக்குக்கட்சிகளின் பிரதிநிதிகள்) ஆகியவர்களும் வந்திருந்தனர். பால்கன் சமஷ்டி என்ற கற்பனை ஸ்தாபனத்திலிருந்து கோலாரோவ், கிரிஸ்டியின் ராகோவ்ஸ்கி என்ற இரு பிரதிநிதிகள், ஸ்வீடன், நார்வே, ஹாலந்து முதலிய நாடுகளின் உதிரி கோஷ்டிகளின் பிரதிநிதிகள், பிரான்ஸிலிருந்து *சிண்டிகலிஸ்ட் பிரதிநிதி மெர்ஹீம், சோஷலிஸ்ட் போர்டீரான்சி ஆகியோர் வந்திருந்தனர். பெரிய ஸ்தாபனங்களில், மேற்கு ஐரோப்பாவைச் சேர்ந்த இரு ஸ்தாபனங்கள் மட்டுமே பிரதிநிதிகளை அனுப்பியிருந்தன. அவை இத்தாலிய சோஷலிஸ்ட்கட்சியும் ஸ்விஸ் சோஷலிஸ்ட் கட்சியுமாகும். மொத்தம் 35 பிரதிநிதிகள் மகாநாட்டிற்கு வந்திருந்தனர்.

மகாநாட்டில் பெரும்பான்மையினரின் அறிக்கை யுத்தத்தை ஏகாதிபத்திய யுத்தமென்று கண்டித்து, யுத்தத்தை எதிர்த்தும் சோஷலிஸத்தை ஆதரித்தும்

---

*சிண்டிகலிஸம் என்பது தொழில்கள் தொழிலாளருக்கே சொந்தமாக இருக்க வேண்டுமென்ற நம்பிக்கை கொண்ட சித்தாந்தம்.

போராடுமாறு வற்புறுத்தியது. ஆனல் போல்ஷ்விக்கு கள் இன்னும் தீவிரப்புரட்சி வேண்டுமென்று கோரினர். பகிரங்க உள்நாட்டு யுத்தம் நடத்த வேண்டுமென்றும், புதிய சர்வதேசப் புரட்சி ஸ்தாபனம் ஏற்படுத்த வேண்டுமென்றும் அவர்கள் வற்புறுத்தினர்.

லெனினின் உத்தேசப் பிரகடனத்தைப் பிரஞ்சுப் பிரதிநிதிகளும் ஜெர்மன் பிரதிநிதிகளும் எதிர்த்ததால் மகாநாடு பிளவுறும் கட்டத்திற்கு வந்து விட்டது. இந்த நிலையில் ராகோவ்ஸ்கி தலையிட்டு, ஒரு சமரச திட்டத்தைச் சமர்ப்பித்தார். நஷ்டஈடோ நாடு பிடித்தலோ இல்லாத சாமாதானத்திறகாக மக்களின் சுய நிர்ணய உரிமை அடிப்படையில் ஐரோப்பியப் பாட்டாளி வர்க்கம் போராட வேண்டுமென்று, இறுதியாக அங்கீகரிக்கப்பட்ட பிரகடனம் கூறியது. கமிட்டியிலும் மகாநாட்டிலும் லெனின் இதை எதிர்த்தார்.

ஸீம்மர்வால்டு யூனியன் என்ற ஸ்தாபனம் இந்த மகாநாட்டில்தான் தோன்றியது. யுத்தத்தை எதிர்த்த சோஷலிஸ்டுகளின் கோஷ்டி இது. பின்னர் சர்வதேச கம்யூனிஸ்ட் ஸ்தாபனம் ஏற்படும் வரையில் இது நீடித்தது.

இந்தப் பெரிய பிரச்னைகளைப்பற்றிப் போராட்டங்கள் நடந்து கொண்டிருந்த பொழுது லெனினுக்கு வீட்டு வாடகை, சாப்பாட்டுச் செலவுகளுக்குக் கஷ்டம் ஏற்பட்டது.

ஸிம்மர்வால்டு மகாநாட்டிற்கு ஒரு மாதத்திற்குப் பின் “சோஷல் டெமாக்ரட்” பத்திரிகையில் லெனின் பின்வருமாறு எழுதினர் :

“ரஷியாவில் நடக்கவேண்டிய அடுத்த புரட்சியின் அமைப்பு, பாட்டாளி, விவசாய வர்க்கத்தின் ஜனநாயக சர்வாதிகாரமாகத்தான் இருக்க வேண்டும். முடியாட்சியையும் நிலப் பிரபுக்களையும் ஒழிக்காவிட்டால் புரட்சி வெற்றி பெருது. தொழிலாளர் வர்க்

கத்தை விவசாயிகள் ஆதரிக்காவிட்டால் முடியாட்சியையும் நிலப்பிரபுக்களையும் ஒழிக்க முடியாது. ஐரோப்பாவின் பூர்ஷ்வா புரட்சியை ஒரு முடிவுக்குக் கொண்டு வந்து, சோஷலிஸ்ட் புரட்சியைத் தூண்டுவதே ரஷியாவில் பாட்டாளி வர்க்கத்தின் நோக்கம்'' என்று லெனின் எழுதினர்.

* * *

*1916* ஜனவரியில் லெனினும் அவர் மனைவியும் பெர்னேயிலிருந்து ஜூரிச்சுக்குச் சென்றனர்.

ஜூரிச்சில், தீவிரவாத கோஷ்டிகளின் ஆதரவைப் பெற லெனின் செய்த முயற்சி வெற்றி பெறவில்லை. லெனின் வசித்து வந்த இடத்திற்கருகிலேயே இருந்த கபே ஸூம் ஆட்லர் என்ற ஹோட்டலில் ஒரு கூட்டம் நடத்தப்பட்டது. ரஷிய, போலிஷ் போல்ஷ்விக்குகள் சிலர், சில ஸ்விஸ் சோஷலிஸ்டுகள், சில ஜெர்மன், இத்தாலிய இளைஞர்கள் ஆகியவர்கள் தான் கூட்டத்திற்கு வந்திருந்தனர். யுத்தத்தைப்பற்றியும், ஐரோப்பிய சோஷலிஸ்ட் தலைவர்களைப்பற்றியும் லெனின் தம் கருத்துக்களை விளக்கிக் கூறியபோது கூட்டத்தினர் அதை வரவேற்க வில்லை. லெனின் அனுவசியமாகச் சுவரில் முட்டிக் கொள்வதாக ஸ்விட்ஜர்லாந்தைச் சேர்ந்த இளம் தீவிரவாதி ஒருவர் கூறினர். மற்றவர்களும் அதை ஆமோதித்தனர். கூட்டம் பயனின்றிக் கலைந்து விட்டது. பின்னர் நடந்த கூட்டங்களுக்கு வந்தவர்களின் தொகை குறைந்து கொண்டே வந்தது. கடைசிக் கூட்டத்திற்கு ரஷியரும் போலிஷ்காரர்களும் மட்டுமே வந்தனர். ''நாங்கள் சில வேடிக்கைக் கதைகள் பேசிவிட்டு வீடு திரும்பினேம்'' என்று க்ருப்ஸ்காயா எழுதுகிறர். *1916*-ல் லெனின் ஒதுக்கப்பட்டிருந்ததுபோல் அதற்கு முன் எப்பொழுதும் இருந்ததில்லை.

* * *

யுத்தம் முடிவு தெரியாமல் நீண்டுகொண்டே போனதால், ஸிம்மர்வால்டு சர்வதேச சோஷலிஸ்ட் கமிட்டி மற்ருெரு மகாநாடு கூட்டியது. *1916* ஏப்ரல்

24-ம் தேதி, கீந்தால் என்ற ஸ்விஸ் நகரில் மகாநாடு நடைபெற்றது. பிரெஞ்சுப் பிரதிநிதி சபையின் மூன்று சோஷலிஸ்ட் அங்கத்தினர்கள் உள்பட 43 அங்கத்தினர்கள் மகாநாட்டிற்கு வந்திருந்தனர்.

லெனின் தலைமையில் கீந்தாலுக்கு வந்திருந்த ஸிம்மர்வால்டு இடதுசாரியினர் ஆறு மாதத்திற்கு முன் இருந்ததைவிட அதிக பலம் பெற்றிருந்தனர். இரண்டாவது சர்வ தேச ஸ்தாபனத்தின் உலக சோஷலிஸ்ட் பீரோவைக் கண்டித்து அவர்கள் ஒரு தீர்மானம் நிறைவேற்றினர். போல்ஷ்விக்குகளுக்கு இது திட்டவட்டமான வெற்றியல்ல வென்றாலும் லெனின் இதில் திருப்தி யடைந்தார்.

ஆனால், லெனின் தம் சகாக்களிலேயே சிலரைக் கூட யுத்தம், சமாதானம், புரட்சி முதலியவை சம்பந்தமாக அவர்கள் கொண்டிருந்த கருத்துக்களுக்காகக் கண்டித்துப் பேசினார். குறிப்பாக அவர்களுடைய "சமாதான மயக்கத்தை" அவர் வன்மையாகக் கண்டித்தார்.

"முதலாளித்துவத்தின் கீழ் யுத்தத்தை ஒழித்து விட முடியுமென்ற அற்ப பூர்ஷ்வா சமாதான வாதத்தை விட நாசகரமானது வேறொன்றுமில்லை. ஏகாதிபத்தியம், உலகத்தைக் கூறு போட முதலாளித்துவ நாடுகளிடையே போட்டியை ஏற்படுத்துகிறது. இதன் விளைவாக முதலாளித்துவத்தில் யுத்தங்கள் தவிர்க்க முடியாதவை..............." என்று லெனின் வாதித்தார்.

பாட்டாளி மக்கள் ஆயுதம் தாங்கக்கூடாது என்றவர்கள் மீது லெனின் ஆத்திரத்தைக் கக்கினார். "பூர்ஷ்வாக்களை முறியடித்து, அவர்களுடைய சொத்து சுதந்திரங்களைப் பறித்து, நிராயுதபாணிகளாகச் செய்யும் பொருட்டு பாட்டாளிக்கு ஆயுதம் கொடு" என்பதே நம் கோஷமாக இருக்கவேண்டும் என்றார் லெனின்.

அரசியல் நடவடிக்கை அசாத்தியமாகி விட்ட தால் குமுறிக்கொண்டிருந்த லெனின் எழுதுவதில் மூனைந்தார். 1916-ம்வருஷ இலையுதிர்காலத்தில், தின மும் காலை 9 மணி முதல் மாலை 6 மணி வரை புத்தக சாலையில், "ஏகாதிபத்தியமே முதலாளித்துவத்தின் கடைசி உருவம்" என்ற தம் நூலைப் பூர்த்தி செய்வ தற்கான விஷயங்களைச் சேகரிப்பதில் மூழ்கியிருந்தார். உலகப் பொருளாதார ஏக போக உரிமைகளுக்கு அவர் புதிய வியாக்கியானம் கொடுத்தார். "முதலா ளித்துவ நாடுகள் புதிய புதிய மார்க்கெட்டுகளையும் காலனிகளையும் பிடிப்பதற்கான போட்டியில் எழும் தங்கள் வேற்றுமைகளை யுத்தத்தின் மூலமே தீர்த்துக் கொள்ளுமென்று அவர் ஒரு சித்தாந்தம் கூறினர்.

அதோடு நிற்கவில்லை. "எங்கும் சோஷலிஸம் ஸ்தாபிக்கப்படும் வரையில் ஆயுதப் பரிஹரணத்தை ஆதரிப்பது தவறு; புரட்சியின் மூலம்தான் சோஷலி ஸம் வர முடியும்; நிராயுதபாணிகள் புரட்சி செய்ய முடியாது. சோஷலிஸம் வெற்றி பெறுமுன் பூர்ஷ்வா வகுப்பும் பாட்டாளி வர்க்கத்திற்குமிடையே இறுதிப் போராட்டம் தவிர்க்க முடியாதது. அந்தப் புரட்சி யைத் துப்பாக்கிகள்தான் முடிவு செய்யும். புரட்சித் துருப்புக்களிடம் துப்பாக்கி இருந்தால் பாட்டாளி வர்க்கத்திற்கு வெற்றி நிச்சயம்" என்பது லெனின் வாதம்.

1916ல் மேரியா அலெக்ஸாண்ட்ரோவ்ன உயிர் நீத்தார். லெனின் 1910-ல் ஸ்டாக்ஹோமில் தம் தாயைச் சந்தித்ததுதான் கடைசி முறை. அவர் ஒரு பொதுக்கூட்டத்தில் பேசியதை அவருடைய தாய் அப்பொழுதுதான் முதல் முறையாகக் கேட்டார். பிறகு அவர்கள் சந்திக்கவேயில்லை. தாயின் மரணத் தினல் லெனின் மிகுந்த சோகத்தில் ஆழ்ந்தார்.

அப்பொழுது ரஷிய சம்பவங்களிலிருந்து அவர் துண்டிக்கப்பட்டு விட்டார். ஆரம்ப கால நண்பர் களில் பலர் துறந்து விட்டனர். உள்நாட்டு யுத்த

யோசனைக்குப் பிற நாட்டு சோஷலிஸ்டுகளின் ஆதரவைத் தேடச் செய்த முயற்சி பலனளிக்கவில்லை. 1916-ம் வருஷக் கடைசியில் லெனின் தம் அதிருஷ்டச் சக்கரத்தின் மிகத் தாழ்ந்த நிலையில் இருந்தார். அவர் பேச்சைக் கேட்பாரில்லை. அவரை வெறும் ஓட்டாஞ் சல்லியாகவே பலர் மதித்தனர்.

ஜினீவாவில் ஓர் அரசியல் கூட்டத்திலிருந்து அவர் திரும்பி வந்த பொழுது, ரஷியாவுககுத் தாம் அனுப்பிய ஆட்களிடமிருந்து தகவல் வரவில்லையென்று புகார் செய்தார். அப்பொழுது, ரஷியாவில் ஐம்பது அல்லது அறுபது போல்ஷ்விக்குகளின் மகாநாடு ஒன்றைக் கூட்டி, கட்சியின் பெயரால் யுத்த எதிர்ப்புப் பிரகடனம் ஒன்று வெளியிடலாமென்று அவருடைய சிஷ்யர்களில் ஒருவரான தோழர் பிலியா கூறினர்.

அதற்கு லெனின் அளித்த பதில் இதுதான்: "ஐம்பது—அறுபது பேர் எதற்கு? அது மிகவும் அதிகம்; நான்கு அல்லது ஐந்து பேர் இருந்தால் போதும்; காகேஸஸிலிருந்து ஒருவர்; ஸைபீரியாவிலிருந்து இரண்டொருவர், யூரல்ஸிலிருந்து ஒருவர்; பெட்ரோக்ராடிலிருந்து ஒருவர் வந்தால் போதும்; இந்த நான்கு அல்லது ஐந்து பேரும் அப்பிரதேசங்களிலிருந்து தொழிலாளர் வர்க்கத்தின் பிரதிநிதிகளாக வந்து, கட்சி மகாநாட்டின் பிரதிநிதிகளென தங்களை அறிவித்து யுத்தத்தை உறுதியுடன் எதிர்ப்பார்களானுல், அது ஒரு மகத்தான சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த சம்பவமாக இருக்கும். ரஷியாவில் புரட்சி இயக்கத்தை அது பெரிதும் தீவிரப்படுத்தும்" என்ருர் லெனின்.

இதைக் கேட்டு பிலியா அவரை ஆச்சரியத்துடன் நோக்கினர்.

"இதனுல் ஏற்படும் தீவிரமான புரட்சிச் சூழ்நிலையில், கட்சி மகாநாடென்று கூறிக்கொள்ளும் இந்த நாலைந்து பேரைச் சுற்றி புரட்சியை எதிர்பார்க்கும்

பல்லாயிரக்கணக்கான தொழிலாளரின் உறுதி உரு வாகும்" என்று தொடர்ந்து கூறினர் லெனின்.

1916-ம் வருஷம் முடிவடையும் தருவாயில் இந்த நாலைந்து பேர்கூட அவருக்கு கிடைக்கவில்லை. அவர்களை எங்கே கண்டு பிடிப்பது? காகேஸஸ் போல்ஷ்விக் எங்கே? அவர் டுமா சபையின் போல்ஷ்விக் அங்கத்தினர்களுடனும் போல்ஷ்விக் கட்சியின் மத்தியக் கமிட்டி அங்கத்தினர்களுடனும் அவர் ஸைபீரியாவில் இருந்தார்.

புரட்சி சமயத்தில் ஐரோப்பிய ரஷியாவில் போல்ஷ்விக்குகளிடையே லெனினுக்கு ஆதரவாளர்கள் இல்லையென்றே கூறவேண்டும். லெனின் பணமில்லாமல் கஷ்டப்படுகிருர் என்பதை அவருடைய நண்பர் சாலமன் அறிந்து பெட்ரோக்ராடில் அவருடைய பழைய நண்பர்களிடையே பணம் வசூலிக்க முயன்ருர். அப்பொழுது பெரிய எஞ்சினீயராக இருந்த க்ராஸினை அவர் அணுகி நன்கொடை கேட்ட பொழுது பிற்காலத்தில் ராஜதந்திரியாக ஆன அவர் தோள்களைக் குலுக்கிவிட்டுக் கூறினர்: "ஜார்ஜ், உங்கள் நேரத்தை வீணுக்கிக் கொண்டிருக்கிறீர்கள். இரிச்சைப் பற்றி எனக்குத் தெரிந்த அளவு உங்களுக்குத் தெரியாது. அவன் நாசமாய்ப் போகட்டும்; நாம் சாப்பிடப் போவோம் வாருங்கள்" என்ருர்.

சாப்பிட்டுக்கொண்டிருந்த பொழுது ஸாலமன் மறுபடியும் பணத்தைப் பற்றிக் கேட்டார். "சரி, உங்களுக்காகக் கொடுக்கிறேன்" என்று கூறி இரு ஐந்து ரூபிள் நோட்டுகளை க்ராஸீன் எடுத்துக் கொடுத்தார்.

ஸாலமன் கோபமடைந்து, அந்தப் பத்து ரூபிளையும் திருப்பி வீசி எறிந்துவிட்டு, "உங்கள் நன்கொடை இல்லாமலே எங்களால் சமாளித்துக்கொள்ள முடியும்" என்ருர்.

"ரொம்ப சரி" என்று க்ராஸீன் அமைதியாக பதிலளித்துவிட்டு, இருநோட்டுகளையும் எடுத்து பையில்

வைத்துக்கொண்டு, " ஜார்ஜ், கோபித்துக் கொள்ளா தீர்கள்; லெனின் உதவி பெறத் தகுதியற்றவர்; அவர் நாசாகார ரகத்தைச் சேர்ந்தவர். அவர் மண்டையிலி ருந்து எந்த மிருகத்தனமான திட்டம் வருமென்று சொலலவே முடியாது " என்ருர்.

அப்பொழுது லெனினைப் பற்றிப் பெரிதும் சந்தே கப்பட்ட போல்ஷவிக் க்ராஸீன் ஒருவர் மட்டுமல்ல. பாரிஸிலிருந்து வெளிவந்த " அவர் எக்கோ " என்ற பத்திரிகையில் வியாசெஸ்லாவ் மென்ஷின்ஸ்கி, " எஸ். டி " என்று கையெழுத்திட்டு எழுதிய கட்டுரை யில் பின் வருமாறு குறிப்பிட்டிருந்தார்:—

" லெனின் ஓர் அரசியல் கபடன்; அவர் மார்க் ஸிஸத்தைத் தம் நோக்கத்திற்கேற்றபடி மாற்றிக் கொண்டுவிட்டார். இப்பொழுது அவர் முற்றிலும் குழப்பமடைந்துவிட்டார்......ரஷிய யதேச்சாதிகாரத் தின் முறை கெட்ட குழந்தையான லெனின், ரஷிய சிம்மாசனத்திற்குத் தாம் தான் இயற்கையான வாரிசு என்று நினைப்பதோடு மட்டுமல்லாமல், சர்வதேச சோஷலிஸ்ட் ஸ்தாபனத்தின் ஏக வாரிசாகவும் கருது கிருர். அவர் பதவிக்கு வந்தால் செய்யக்கூடிய விஷமம்; முதலாவது பால் மன்னன் (அரைப் பைத்திய அரசன்) செய்த விஷமங்களைவிட எந்தவிதத்திலும் குறைந்தவையாக இராது. லெனினிஸ்ட்டுகள் விவஸ்தையற்ற கட்சியினர் மாத்திரமல்ல. அரசியல் நாடோடி ஜாதியினர். சாட்டையைச் சுழற்றும் இவர் கள் தங்கள் கூச்சலின் மூலம் பாட்டாளியின் குரலை அமுக்கிவிடப் பார்க்கின்றனர். பாட்டாளிகளை ஓட்டும் ஸாரதியாக இருக்கும் உரிமை தங்களுக்குத்தான் உண்டென்று நினைத்திருக்கின்றனர் " என்று அவர் அக்கட்டுரையில் குறிப்பிட்டிருக்கிருர். (இவர் பிற்கா லத்தில் ரஷிய ரகசியப் போலீசின் தலைவராக ஆனுர்.)

1917 ஜனவரி 22-ம் தேதி ஜூரிச்சில் நடந்த இளந் தொழிலாளர்களின கூட்டம் ஒன்றில் லெனின் பேசு கையில் கூறியதாவது:

" தற்சமயம் ஐரோப்பாவில் நிலவும் சுடுகாட்டின் அமைதியைக் கண்டு நாம் ஏமாந்துவிடக்கூடாது. ஐரோப்பாவில் புரட்சி உணர்ச்சி நிறைந்திருக்கிறது. ஏகாதிபத்திய யுத்தத்தின் பயங்கரங்களும், விலைவாசி உயர்வினால் ஏற்பட்டுள்ள கஷ்டமும் எங்கும் புரட்சி உணர்ச்சியை ஏற்படுத்தியிருக்கின்றன. ஆளும் வர்க்கங்களும், பூர்ஷ்வா வர்க்கமும், அவற்றின் கைப் பொம்மைகளான சர்க்கார்களும் முட்டுச் சந்தில் முன்னேறிச் சென்று கொண்டிருக்கின்றன விபரீத விளைவுகளுக்குள்ளாகாமல் அவை அதிலிருந்து தப்ப முடியாது " என்றார் லெனின்.

சுடுகாட்டின் அமைதி முடிவடையும் கட்டம் வந்தது.

ஸ்விட்சர்லாந்தில் அக்ஞாதவாஸம் செய்துகொண்டிருந்த லெனினை பெட்ரோக்ராடுக்குக் கொண்டுவந்து பிரபலப்படுத்துவதற்கான மகத்தான சம்பவம் நெருங்கி வந்துகொண்டிருந்தது. கஷ்டமான போராட்டம் முடிவடைந்து வந்தது. 1917 ஜனவரியில்கூட ரஷியாவில் புரட்சியையே முழுநேர வேலையாக கொண்டவர்களைத் தவிர மற்றவர்களுக்கு லெனின் பெயர் சுமாராகத்தான் தெரிந்திருந்தது. மேற்கு ஐரோப்பிய சோஷலிஸ்டுகள் அவரை, ஹோட்டல் சதிகாரரென்றும், பெரிய சித்தாந்தங்களை வைத்துக்கொண்டு ஆனால், பின்பற்றுவோர் இல்லாமலிருந்த ரஷியரென்றும்தான் கருதினர். ஆனால் மூன்று மாதத்திற்குப் பின், ரஷிய மன்னருக்குப் பிடித்தமான நாட்டியக்காரியின் அரண்மனையில் குடியேறி, ஜாகோபீன்களின் காலத்திற்குப் பின் உலகமே கேட்டிராதபடி இடிபோல் புரட்சி முழக்கம் செய்யவிருந்தார்.

## 8. "பூர்ண சுதந்திர நாடு"

ஒவ்வொரு ரஷிய நகரிலும் உணவுக் கடைகளுக்கெதிரே நீண்ட 'கியூ' வரிசைகள் நின்றிருந்தன. பல நகரங்களில் மின்சார உற்பத்தி நிலையங்களும் தண்ணீர் சப்ளை நிலையங்களும் வேலை செய்யவில்லை.

1916 அக்டோபரில் மாஸ்கோ அரசியல் ரகசிய சர்விஸ் தலைவர் போஸ் இலாகாவுக்குப் பின்வருமாறு அறிவித்தார்: "மக்களின் கஷ்டம் மிகவும் அதிகமாக இருக்கிறது. பலர் பட்டினி கிடக்கின்றனர். உணவுப் பஞ்சம் இருக்கும்போது இதை அனுமதிப்பது புரட்சிக் கூட்டங்கள் நடத்துவதற்கும், பதினாயிக் கணக்கான புரட்சித் துண்டுப் பிரசுரங்களை வினியோகிப்பதற்கும் ஒப்பாகும். இவ்வளவு மனக்கசப்பு எப்பொழுதும் ஏற்பட்டிருந்ததில்லை. 1905-ம் வருஷத்தில் இருந்ததை விட இப்பொழுது நிலைமை மிகவும் அபாயகரமாக இருக்கிறது" என்று அவர் அறிவித்தார்.

1917 ஜனவரியில் போலீசார் அறிவித்ததாவது: "ஜனங்கள் உணவுக்காக இதுவரை கலகம் செய்ய வில்லை யென்பதால் இனியும் செய்யமாட்டார்கள் என்று அர்த்தமில்லை. மக்களின் அதிருப்தி அதிவேக மாக அதிகரித்து வருகிறது. 'உணவு கொடு, இல்லை யேல் யுத்தத்தை நிறுத்து' என்று கோரும் கூட்டத் தின் தொகை நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது. சர்க்காருக்கெதிராகப் பிரசாரம் செய்வதற்கு மிகவும் பொருத்தமானவர்கள் இவர்கள். பாதகமான சமா தானம் ஏற்பட்டால்கூட இவர்கள் இழப்பதற்கு ஒன்று மில்லை. அது எப்பொழுது எப்படி நடக்கும் என்பதைச் சொல்லமுடியாது ஆனால் மிகவும் அபாயகர மான பெரிய சம்பவங்கள் சமீபித்துக் கொண்டிருக் கின்றன" என்று போலீசார் கூறினர்.

ஆனால் இந்த எச்சரிக்கைகளை சர்க்கார் புறக் கணித்துவிட்டது.

தொழிலாளரும், குதிரைகளும் யுத்தத்தில் சேர்க் கப்பட்டுக் கொண்டே வந்ததில் சாகுபடியான நிலத் தின் அளவு பெரிதும் குறைந்துவிட்டது. 1917 ஜனவரிக்குள் பெட்ரோகிராட்டில் பண்டங்களின் விலைகள் 6 மடங்கு உயர்ந்துவிட்டன. "இன்று ரொட்டி இல்லை; வருமென்று எதிர்பார்க்கப்படவும் இல்லை" யென்ற போர்டுகள் மாஸ்கோவெங்கும்

காணப்பட்டன. மாஸ்கோவின் மின்சார உபயோகத்தை பாதியாகக் குறைக்க வேண்டியதாயிற்று.

யுத்தம் முடிந்தபின் தங்களுக்கு நிலம் கிடைக்குமென்ற நம்பிக்கை விவசாயிகளிடையே இன்னமும் இருந்துவந்தது. யுத்தம் நீடித்து, மற்ற வர்க்கத்தினரும் யுத்தத்திற்குச் சேர்க்கப்பட்டதால் இந்த நம்பிக்கை குறைந்தது. துப்பாக்கிகளும், போதிய உணவும் இல்லாமல் சண்டையிடுமாறு தாங்கள் நிர்ப்பந்திக்கப்படுவதாக சோல்ஜர்கள் புகார் செய்தனர். ஆள் சேதம் அதிகரித்துக்கொண்டு போயிற்று. முடமான வீரர்கள் கிராமங்களில் வந்து நிறைந்தனர். இரண்டாந்தர ரிசர்வ் படைகள் போருக்கு அழைக்கப்பட்டன.

ரஸ்புடீனின் அதிகாரம்பற்றி ஆபாசமான வதந்திகள் கிராமங்களில் பரவின. கிராமத்திலிருந்து வந்த வதந்திகளைக் கொண்டு போர்முனையும், போர் முனையிலிருந்து வந்த செய்தியைக் கொண்டு கிராமங்களும் பிழைத்து வந்தன. போர்முனையிலிருந்த குடியானவர்களிடையே கிளர்ச்சி இன்னமும் கடுமையாக இருந்தது.

"புரட்சியில் ஈடுபடக் கூடியவர்கள் ராணுவத்தில் நிறைந்திருக்கின்றனர். அவர்கள் அவ்விதம் ஈடுபட்டால் அவர்களை தண்டிக்கக்கூட மற்றவர்கள் மறுக்கக்கூடும். சர்க்காரைக் காப்பாற்றுவதற்குப் போதுமான எதிர்ப்புரட்சிக்காரர்கள் ராணுவத்தில் இருக்க மாட்டார்கள்'' என்று போலீசார் எச்சரித்தனர். சர்க்கார் வேகமாகச் சீர்குலைந்து வந்தது. ரோமானோவ் ஆட்சியின் கடைசி வருஷத்தில் இருந்ததுபோல் அவ்வளவு பரிதாபகரமான கோஷ்டி அதற்கு முன் எப்பொழுதுமே சர்க்காரில் இருந்ததில்லை. உள்நாட்டிலாகா மந்திரி ப்ரோடோபோபோவ் ஒருவர்தான் சிறிது திறமைசாலி. ஆனால் அவர்கூடத் தம் ஜாதகத்தைப் பார்த்துக் கொண்டுதான் பார்லிமெண்டைக் கூட்டுவதற்கு நாள் குறிப்பிட்டார்.

மற்ற மந்திரிகள் சந்தர்ப்பவாதிகள். லஞ்சத்தை மறைப்பதற்காக உயர்ந்த பதவிகளில் நியமிக்கப்பட்ட கிழங்கள். ராணிகூட இவர்களை முட்டாள்கள் என்றும்

மனிட்யர்கள் என்றும் வர்ணித்தாள். ரஷியாவின் முடியாட்சியின் கடைசி மாத காலத்தில் ராணிதான் உண்மையான சக்ரவர்த்தினியாக இருந்தாள்.

சம்பவங்களின் போக்கை மாற்றும் அளவுக்குப் பார்லிமெண்டுக்கு அதிகாரமில்லை. இருந்தாலும் 1916ம் வருஷ பிற்பகுதியில் முற்போக்குப் பிரிவினர் அதிகாரத்தைக் கைப்பற்ற முயற்சி செய்யவேண்டி யிருந்தது. ரஷியாவின் பொருளாதாரத்தையும் ராணு வத்தையும் காப்பாற்ற புதிய தலைமை வேண்டியதாக இருந்தது. கலகம் செய்யுமாறு பார்லிமெண்டின் மாஜி தலைவரான அலெக்ஸாண்டர் குச்சோவ் கூறி ஞர். ராணியை ஒரு யுத்தக் கப்பலுக்கு வரவழைத்து அப்படியே இங்கிலாந்துக்குக் கொண்டு போய்விடு மாறு யாரோ ஒருவர் ஒரு யோசனை கூறினர். மன்ன ரின் ரயிலைப் பிடித்து, நிகொலஸ் மன்னரை முடி துறக்கச் செய்து, அவருடைய இளம் குமாரன் அலெக்ஸ்ஸுக்கு முடி சூட்டி, எல்லா மந்திரிகளையும் கைது செய்யும் யோசனையை ஜெனரல் க்ரிமோவ் ஆதரித்தார்.

1916 நவம்பர் 7-ம் தேதி நிகோலாய் கோமகன் மன்னரைச் சந்தித்து, அவருடைய சிம்மாசனம் ஆட்டம் கொடுப்பதாகக் கூறினர்.

1916 டிசம்பர் 20-ம் தேதி அரண்மனை ஊழியர்கள் ரஸ்புடினைக் கொன்று, மன்னரைக் காப்பாற்ற முயன் றனர். ஆனல் அந்தச் சம்பவம் காலம் கடந்து நடந்தது. நிகொலஸ் மன்னரைக் காப்பாற்ற முடிய வில்லை.

முழு அதிகாரத்தையும் பார்லிமெண்ட் ஏற்க வேண்டுமென்று எல்லா வட்டாரங்களும் வற்புறுத் தின. பதவியைப் பார்லிமெண்ட் கைப்பற்ற வேண்டு மென்று கூறியவர்களுக்கு அதன் தலைவர் ரோட்ஸி யான்கோ பதிலளிக்கையில், "மன்னருக் கெதிராக மக்களைக் கிளப்பிவிட எனக்குச் சக்தியுமில்லை, விருப்ப முமில்லை" என்று கூறினர்.

புரட்சி வந்தால் பார்லிமெண்டை ஆதரிக்க ரா்ணுவம் தயாராயிருப்பதாக 1917 ஜனவரியில் ஜெனரல் கிரிமோவ் கூறினுர்.

“ஜெனரல் சொல்வது சரி — புரட்சி அவசியம். ஆனுல் அதை மேற்கொள்ள யார் துணிவார்கள்?” பார்லிமெண்ட் மெம்பர் ஷிங்கரேவ் கேட்டார்.

“மன்னர் ரஷியாவை அழிப்பாராஞல் அவர் மீது அனுவசியமாக அனுதாபம் காட்டக் கூடாது” ஷிட்லோவ்ஸ்கி என்ற பார்லிமெண்ட் மெம்பர் ஆத்திரத்துடன் கூறினுர்.

“புரட்சி வருமென்று நினைக்கின்றீர்களா?” என்று மைக்கேல் கோமகன் 1917 பிப்ரவரி 3-ம் தேதி ரோட்ஸியான்கோவைக் கேட்டார்.

“அரசியலில் ராணி தலையிடாமல் விலக்கி, மக்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்களை மந்திரிகளாக நியமித்தால் இப்பொழுது கூட ரஷியாவைக் காப்பாற்ற முடியும். ராணியிடம் அதிகாரம் இருந்தால் புரட்சியைத் தவிர்க்க முடியாது” என்று ரோட்ஸியான்கோ பதிலளித்தார்.

“ஸர். ஜார்ஜ் புகானனும் (பிரிட்டிஷ் ஸ்தானிகர்) இதையேதான் என் சகோதரியிடம் சொன்னுர். ராணியால் எவ்வளவு தீமை ஏற்படுகிறது என்பதை என் குடும்பம் உணர்கிறது. ஆனுல் அவளையும் என் சகோதரரையும் துரோகிகள் சூழ்ந்துக் கொண்டிருக்கிருர்களே, என்ன செய்வது?” என்று கோமகன் ஒப்புக் கொண்டார்.

“நிலைமையை உள்ளபடி மன்னரிடம் எடுத்துச் சொல்லுங்கள். ராணி ரஷியாவின் நலனுக்கு விரோதமாக வேலை செய்யும் ஜெர்மன் ஏஜெண்டென்று மக்கள் கருதுகின்றனர் என்பதை அவருக்கு அறிவியுங்கள்” என்று யோசனை கூறினுர் ரோட்ஸியான்கோ.

முயற்சிப்பதாகக் கோமகன் பதிலளித்தார்.

இரண்டு வாரத்திற்குப் பின் பிப்ரவரி 15-ம் தேதி ரோட்ஸியான்கோ மன்னரைச் சந்தித்தபோது,

"ராணியை அரசியலிலிருந்து விலக்க நீங்கள் வழி செய்யவேண்டும்'' என்று எச்சரித்தார். பொறுப்பு வாய்ந்த பிரதம மந்திரியை நியமிக்குமாறு அவர் மன்னரிடம் மன்ருடினர். "ரஷியாவுக்குத் தீமையும், எதிரிக்கு நன்மையும் ஏற்படும் வகையிலேயே எல்லாக் காரியங்களும் செய்யப்படுகின்றன என்ற கருத்து மக்களிடையே பரவி வருகிறது. உங்களைச் சுற்றி இருக்கும் கும்பலில் ஒரு யோக்கியன் கூட இல்லை. எல்லாரும் விரட்டப்பட்டு விட்டனர்; அல்லது தாங்களாகவே போய்விட்டனர்'' என்று ரோட்ஸியான்கோ கூறினர்.

"ஆதாரம் காட்டுங்கள்; உங்கள் வார்த்தைகளுக்கு ஆதாரமில்லை'' என்று மன்னர் பதிலளித்தார்.

1917 பிப்ரவரி 27ம் தேதி பார்லிமெண்ட் கூட்டப்பட்டது. ஆரம்பக் கூட்டத்தில் கெரன்ஸ்கி பின் வருமாறு பேசினர்: "மந்திரிகள் செய்தது தவறென்று கூறுகிறவர்கள் இருக்கின்றனர். மந்திரிகள் தோன்றி மறையும் நிழல்களே என்பதை நாடு இப்பொழுது உணர்கிறது. அவர்களை இங்கு அனுப்புகிறவர்கள் யாரென்பதை நாடு தெளிவாகக் காணமுடியும். விபரீதத்தைத் தவிர்க்க வேண்டுமானல் மன்னரையே பதவியிலிருந்து விலக்க வேண்டும்—வேறு வழியில்லையென்ருல் பலாத்காரத்தின் மூலம் விலக்க வேண்டும்'' என்ருர்.

கெரன்ஸ்கியின் பிரசங்கத்தை ராணி படித்து விட்டு, அவனை தேசத்துரோகியென்று தூக்கிலிட வேண்டுமென்ருள்.

இடதுசாரிக் கட்சிகளின் ரகசியக் கூட்டம் ஒன்று பெட்ரோக்ராடில் நடந்தது. பார்லிமெண்டுக்குப் பொறுப்பான மந்திரி சபை அமைக்க வேண்டுமென்ற கோரிக்கையைத் தம் கோஷ்டி ஆதரிக்க முடியாதென்று போல்ஷ்விக் பிரதிநிதி ஷ்லியாப்னிகோவ் கூறினர். உத்தேசிக்கப்பட்டுள்ள ஆர்பாட்டத்தை போல்ஷ்விக்குகள் எதிர்க்கமாட்டார்களென்றும்,

ஆனால் தாங்கள் வேறு கோஷங்களைக் கொண்டு பிரசாரம் நடத்தப் போவதாகவும் அவர் அறிவித்தார்.

பிப்ரவரி 27-ம் தேதி நடந்த ஆர்பாட்டத்தில் மாணவர்களுடன் பல அதிகாரிகளும் கலந்து கொண்டனர்.

பார்லிமெண்ட் கூட்டம் ஒருவாரம் நடந்தது. மன்னர் பொறுப்பாட்சி வழங்கப் போவதாக ரோட்ஸியான்கோ கேள்விப்பட்டார். பிரதம மந்திரி கோலிட்ஸின்னையும் மற்ற மந்திரிகளையும் மன்னர் அழைத்திருந்தார். மறுநாள் மன்னரே பார்லிமெண்டுக்கு வருவதாக வாக்குறுதி அளித்திருந்தார்.

ஆனால் கோலிட்ஸின்னின் மகிழ்ச்சி நிலைக்கவில்லை. தாம் தலைநகருக்குத் திரும்புவதாக அன்று மாலை மன்னர் அவரிடம் கூறினர்.

"பொறுப்புவாய்ந்த மந்திரி சபை அமைக்கும் விஷயம் என்ன வாயிற்று? நாளை பார்லிமெண்டுக்கு வர நீங்கள் உத்தேசித்திருந்தீர்களே!" என்று கோலிட்ஸின் கேட்டார்.

"நான் மனத்தை மாற்றிக் கொண்டு விட்டேன்" என்று மன்னர் பதிலளித்தார்.

நிகொலஸ் மன்னர் தடுமாறிக் கொண்டிருந்த பொழுது, சம்பவங்கள் கன வேகத்தில் உருவாயின. மார்ச் 8-ம் தேதி பெட்ரோக்ராட் தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்தனர். பாலை தொழிற்சாலைத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தத்தில் சேர்ந்திருப்பதாகவும், ஜனங்கள் கட்டுக்கடங்கவில்லையென்றும் பெட்ரோக்ராட் படைத்தலைவன் ஜெனரல் காபலோவ் மார்ச் 10-ம் தேதியன்று மன்னருக்கு ஒரு தந்தி அனுப்பினன்.

"குழப்பத்தை உடனே நிறுத்துங்கள்" என்று மன்னர் பதில் அனுப்பினர். கலகக்காரர்களைப் பெருத்த அளவில் சுட்டுத்தள்ளுமாறு காபலோவ் உத்திர விட்டான்.

இவை அற்ப சம்பவங்களாகவே ராணிக்குத் தோன்றின. மார்ச் 9-ம் தேதி அவள் தன் கணவனுக்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டிருந்ததாவது:

"வாஸிலியெவ் தீவிலும் கெவ்ஸ்கியிலும் நேற்று கலகம் நடந்தது. ரொட்டிக் கடைகளை ஏழைகள் சூறையாடினர். பிலிப்போவ் ரொட்டிக் கிடங்கை அவர்கள் தகர்த்தனர். அவர்கள் மீது காலாக்குகள் ஏவிவிடப் பட்டனர். உத்தியோக தொடர்பற்ற வட்டாரங்களிலிருந்து இவற்றையெல்லாம் நான் அறிந்தேன். பத்து மணிக்குள் கலகம் அதிகரித்தது. ஆனால் ஒரு மணிக்குள் அடங்கி விட்டது. நிலைமையைக் காபலோவ் கட்டுப்படுத்தியிருக்கிறார்" என்று எழுதினார்.

மறுநாள் அவள் எழுதியதாவது:

"வேலை நிறுத்தக்காரர்களும் கலகக்காரர்களும் அடங்காத மனப்பான்மைக் கொண்டிருக்கின்றனர். கலகங்களை காலிகள் தான் கிளப்பி விடுகின்றனர். சிறுவர், சிறுமிகள் உணவில்லை என்று கத்திக் கொண்டு செல்கின்றனர். பரபரப்பு ஏற்படுத்துவதற்காகவே இவர்கள் இப்படி செய்கின்றனர். குளிர் அதிகமாக இருந்தால் இவர்கள் வீட்டிலேயே இருந்திருப்பார்கள். பார்லிமெண்ட் ஒழுங்காக நடந்துக் கொண்டால் எல்லாம் அடங்கிவிடும். மோசமான பிரசங்கங்கள் பத்திரிகைகளில் பிரசுரிக்கப்படவில்லை. ஆனால் மன்னருக்கெதிராகப் பேசுவோருக்கு உடனே கடுந்தண்டனை விதிக்க வேண்டும்" என்று எழுதினார்.

இந்தக் கலகங்களைச் சோம்பேறிகள் நடத்துவதாக மார்ச் 11-ம் தேதி எழுதினார். "நன்றாக உடை அணிந்தவர்கள், காயமடைந்த சோல்ஜர்கள், உயர் தரப் பள்ளி மாணவிகள் முதலிய சோம்பேறிகள் தான் இதற்கெல்லாம் காரணம். நிலைமையை அறியச் சில வண்டிக்காரர்களுடன் லிலி பேசினாள். அவர்கள் காலையில் வெளியே வந்தால் சுட்டுக்கொல்லப்படுவார்களென்று மாணவர்கள் அவர்களிடம் சொன்னார்களாம். எவ்வளவு கெட்டுப்போன மனம்! ஆனால் வண்டிக்காரர்களும் மோட்டார் டிரைவர்களும் வேலை நிறுத்தம் செய்யத்தான் செய்கின்றனர். ஆனால் இது 1905-ம் வருஷத்திலிருந்து வேறுபட்டதென்று கூறப் படுகிறது. ஏனென்றால் இவர்கள் உங்களைப் பூஜிக்

கின்றனர். இவர்கள் வேண்டுவது உணவுதான்'' என்று எழுதினுள்.

புரட்சி ஆரம்பமாகவிருந்த சமயத்தில்கூட, "எல்லாம் சரியாகிவிடும்; சூரியன் பிரகாசமாகக் காய்கிறது; அவருடைய (ராஸ்புடீனுடைய) சமாதி அருகே நான் நிம்மதியாக இருக்கிறேன். நம்மைக் காப்பாற்றுவதற்காக அவர் உயிர் துறந்தார்'' என்று எழுதினுள்.

மன்னருக்கு ஆறுதல் கூறும் இந்தக் கடிதங்களை ராணி அனுப்பிக் கொண்டிருந்தபொழுது மார்ச் 11-ம் தேதியன்று ரோட்ஸியான்கோ கீழ்க்கண்ட தந்தியை மன்னருக்கு அனுப்பினுர்.

"நிலைமை மோசமாக இருக்கிறது. தலைநகரில் அராஜகம் தாண்டவமாடுகிறது. ஆட்சி ஸ்தம்பித்துவிட்டது. போக்குவரத்துக்கள் முறிந்துவிட்டன. உணவு, விறகு சப்ளைகள் சீர்குலைந்துவிட்டன. அதிருப்தி அதிகரித்து வருகிறது. சோல்ஜர்கள் ஒருவரை ஒருவர் சுட்டுக் கொள்ளுகின்றனர். புதிய சர்க்கார் அமைக்கும் பொறுப்பை நாட்டின் நம்பிக்கைக்குப் பாத்திரமானவரான ஒருவரிடம் ஒப்படைப்பது அவசியம். தாமதம் கூடாது. தாமதித்தால் முடிவு விபரீதமாகிவிடும்'' என்று அவர்தம் தந்தியில் அறிவித்திருந்தார்.

மறுநாள் அவர் அனுப்பியிருந்த ஒரு தந்தியில், "நிலைமை மேலும் மோசமாகிக் கொண்டிருக்கிறது; உடனே நடவடிக்கை எடுக்க வேண்டும். நாட்டின் விதியும், மன்னர் பரம்பரையின் விதியும் நிர்ணயிக்கப்படும் நேரம் வந்துவிட்டது'' என்று குறிப்பிட்டார்.

"பார்லிமெண்டைக் கலைத்து விடு'' என்று மன்னர் பதில் அனுப்பினுர்.

ரோட்ஸியான்கோ பின்வரும் பதில் தந்தியை அனுப்பினுர். "தங்கள் உத்தரவுப்படி பார்லிமெண்ட் அடுத்த ஏப்ரல் வரை ஒத்தி வைக்கப்பட்டிருக்கிறது. அமைதியைப் பாதுகாப்பதற்கான கடைசி அரணும் அகன்றுவிடடது. குழப்பத்தைத் தடுக்க சர்க்காருக்

குச் சக்தியில்லை. ராணுவத்தை நம்ப முடியாது. மூலப்பலப் படைகளும் புரட்சியில் குதித்துள்ளன. அதன் அதிகாரிகள் கொல்லப்படுகின்றனர். உள் நாட்டு இலாகா காரியாலயத்தையும் பார்லிமெண்டை யும் நோக்கி அவர்கள் முன்னேறுகின்றனர். உள் நாட்டு யுத்தம் ஆரம்பமாகிப் பரவி வருகிறது. புதிய சர்க்கார் அமைக்க உடனே உத்தரவிடுங்கள்; தங்க ளுடைய சமீப உத்தரவை ரத்து செய்து பார்லி மெண்டை மீண்டும் கூட்ட உத்தரவிடுங்கள். இவற்றை அறிவித்து உடனே ஒரு பிரகடனம் வெளி யிடுங்கள். கலகம் ராணுவத்தில் பரவினுல் ஜெர்மனி வெற்றி பெற்றுவிடும்; அதோடு ரஷியாவும் ராஜவம்ச மும் அழிந்துவிடும். மேலே குறிப்பிடப்பட்டுள்ள சிபாரிசுகளை நிறைவேற்றுமாறு ரஷியாவின் பெயரால் உங்களை மன்ருடிக் கேட்டுக்கொள்கிறேன். உங்கள் விதியையும் ரஷியாவின் விதியையும் நிர்ணயிக்கும் காலம் வந்துவிட்டது. நாளைவரை தாமதித்தால்கூட காலம் கடந்துவிடும்" என்று ரோட்ஸியான்கோ தம் தந்தியில் கூறியிருந்தார்.

பெட்ரோக்ராடில் ராணுவம் கலகம் செய்வதாக வும், அதை அடக்கப் புதிய படைகள் அனுப்புமாறும் ஜெனரல் கபாலோவ் மன்னருக்குத் தந்தி அனுப்பி யிருந்தார்.

ஆனுல் நிகொலஸ் மன்னன் மட்டும் தம் மனைவி யின் யோசனைப்படியேதான் நடந்து வந்தார். பார்லி மெண்டைக் கலைத்ததன் மூலம், புரட்சிக்கும் தமக்கு மிடையே இருந்த கடைசி அரணை அவர் அழித்து விட்டார்.

பார்லிமெண்டைக் கலைக்கும் மன்னர் உத்தரவுக் குப்பின் என்ன செய்வது என்பது பற்றி யோசிக்க ஒரு பொது உடன்பாட்டின் பேரில், பார்லிமெண்ட் அங்கத் தினர்களின் உத்தியோகத் தொடர்பற்ற கூட்டம் மார்ச் 12-ம் தேதியன்று கூட்டப்பட்டிருந்தது. ்வக மாக நடந்துவந்த சம்பவங்களைப் பார்லிமெண்ட் அங்கத்தினர்கள் அறிவித்தனர். தொழிலாளர்கள்

தேர்தல்கள் நடத்தி வந்தனர்; ஒரு படை புரட்சி செய்தது; அந்தப் படையினர் தங்கள் தலைவனைக் கொன்றுவிட்டனர். கஸாக்குகள் மக்களுடன் உறவாடினர். நெவ்ஸ்கியில் அரண்கள் அமைக்கப்பட்டிருந்தன. மந்திரிகளின் கதி என்ன ஆயிற்றென்று ஒருவருக்கும் தெரியாது. தொழிலாளர், மாணவர்கள், ராணுவத்தினர், பெண்கள் முதலிய 30,000 பேர் அடங்கிய ஒரு பட்டாளம் பார்லிமெண்டை நோக்கி முன்னேறிக் கொண்டிருந்தது.

பின்னர், எல்லாக் கட்சிகளின் தலைவர்களும் அடங்கிய கூட்டம், பார்லிமெண்ட் தலைவர் இல்லத்தில் நடைபெற்றது. கூட்டத்திற்கு ரோட்ஸியான்கோ தலைமை வகித்தார். பார்லிமெண்டைக் கலைக்குமாறு மன்னர் உத்தரவிட்ட பின் கூட்டத்தைத் தொடர்ந்து நடத்துவது புரட்சிப் பிரகடனம் செய்வதாகும். இந்த நடவடிக்கையை எடுக்க ரோட்ஸியான்ஸ்கியும், மற்ற பெரும்பான்மையினரும் துணியவில்லை. உத்தரவுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதென்றும், பின்னர் உத்தியோகத் தொடர்பற்ற முறையில் உடனே கூடுவதென்றும் தீர்மானிக்கப்பட்டது. பார்லிமெண்ட் கலையமறுத்து, அது தன்னையே தற்காலிக சர்க்காராகவும் அரசியல் நிர்ணய சபையாகவும் பிரகடனம் செய்து கொள்ள வேண்டுமென்று ஓர் அங்கத்தினர் யோசனை கூறினர். பார்லிமெண்ட் மன்னரை ஆதரிக்கிறதா மக்களை ஆதரிக்கிறதா என்பதை அறிவிக்க வேண்டுமென்றார் மற்றொருவர். அந்தச் சமயத்தில் வாசலில் ஏதோ கூச்சல்கள் கேட்டன.

ஓர் அதிகாரி உள்ளே ஓடிவந்து, "பார்லிமெண்ட் கனவான்களே, என்னைக் காப்பாற்றுங்கள்; உங்கள் பார்லிமெண்ட் காவல் படையின் தலைவன் நான். சில சிப்பாய்கள் என்னைக் கொல்ல வந்தனர். நான் தெய்வாதீனமாகத் தப்பித்துக் கொண்டேன், உதவி செய்யுங்கள்" என்று கத்தினன்.

இந்தச் சமயத்தில் கெரன்ஸ்கி எழுந்து பேசத் தொடங்கினர். "நாம் தாமதிக்கக் கூடாதென்பதை

இப்பொழுது நடந்த சம்பவம் எடுத்துக் காட்டுகிறது. இப்பொழுது நான் ராணுவத்தினிடம் போகப்போகிறேன். அவர்களிடம் என்ன சொல்வதென்பது எனக்குத் தெரிய வேண்டும். பார்லிமெண்ட் அவர்களை ஆதரிக்கிறது, எல்லாப் பொறுப்புக்களையும் அது ஏற்கிறது, இயக்கத்தை இது முன் நின்று நடத்தும்' என்று சொல்லலாமா என்று அவர் கேட்டார்.

"அவருக்கு பதில் கிடைத்ததா என்பது எனக்கு நினைவில்லை. இல்லையென்றுதான் நினைக்கிறேன். ஆனால் அப்பொழுது முதல் அவர் முக்கியத்துவம் பெற்று விட்டார். அதிகார தோரணையுடன்தான் பேசினார்" என்று ஷுல்கின் எழுதியிருக்கிறார். 'இவன் சர்வாதிகாரி' என்று தம் அருகில் இருந்த யாரோ முணு முணுத்தது தம் காதில் விழுந்ததென்கிறார்.

30,000 பேர் அடங்கிய ஊர்வலம் டாணுட் மாளிகையை அடைந்தது. முதலில் வந்த ராணுவத்தினரின் கூட்டத்தில் கெரன்ஸ்கி பேசினார் கட்டிடத்தை கூட்டத்தினர் கைப் பற்றியதன் விளைவாகப் புரட்சியும் பார்லிமெண்டும் ஒன்றாக ஐக்கியமாகிவிட்டன.

அதே தினத்தில், அதாவது மார்ச் 12-ந்தேதி பெட்ரோக்ராட் தொழிற்சாலைகளின் தொழிலாளர்கள் தொழிலாளர் பிரதிநிதிகளின் சோவியத் ஒன்றை அமைத்தனர். 1905-ல் அமைக்கப்பட்டிருந்த பெட்ரோக்ராட் சோவியத்தைப் போல் இது அமைந்தது. செகிட்ஸே இதன் தலைவராகவும், கெரன்ஸ்கி உபதலைவராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

கலகம் செய்த ராணுவத்தினரும் தொழிலாளர்களும் அரசியல் கைதிகளை விடுவித்துவிட்டு அரண்மனையை நோக்கிச் சென்றனர். பெட்ரோக்ராட் புரட்சித்தலைவர்கள் ஏற்கனவே இங்கு வந்து கூடியிருந்தனர். 2 மணிக்குள் பெரும்பாலான தொழிற் சங்கத் தலைவர்களும் கூட்டுறவுத் தலைவர்களும் அங்கு வந்து விட்டனர். பார்லிமெண்டின் இடது சாரி அங்கத்தினர்கள், யுத்தத் தொழில்கள் கமிட்டியின் தொழிலாளர் கோஷ்டியினர் முதலியோர் சேர்ந்து தொழிலாளர்

சோவியத்தின் தற்காலிக நிர்வாகக் கமிட்டியை அமைத்தனர். சோஷலிஸ்ட் பார்லிமெண்ட் அங்கத்தினர்கள், செகிட்ஸே, ஸ்கோபெலேவ், மற்றும் 5 அங்கத்தினர்கள் ஆகியோர் இருந்தனர். கமிட்டி உடனே செயலில் இறங்கியது. அன்று மாலை 7 மணிக்கே பெட்ரோக்ராட் தொழிலாளர் சோவியத்தைக் கூட்டியது. அதன் வேண்டுகோள் லாரி மூலம் நகரில் எல்லாத் தொழிற்சாலைகளிலும் வினியோகிக்கப்பட்டது. சில மணி நேரத்திற்குள் பெட்ரோகராட் தொழிலாளர் அனைவரும் புரட்சிக் கூட்டமாக கூடிவிட்டனர். ஒரு மணிக்கு வெகு நேரத்திற்கு முன்பே பிரதிநிதிகள் நூற்றுக்கணக்கில் வந்து கூடிவிட்டனர். அவர்களைப் பதிவு செய்ய ஒரு தனி கோஷ்டியே வேலை செய்தது.

தலைவர் மேஜை அருகே, 1905-ம் வருஷ சோவியத்துக்குத் தலைமை வகித்த குடாலேவும் ஸோகோலோவும் தற்காலிகக் கமிட்டியின் வருகைக்காகக் காத்திருந்தனர். ஸோகோலோவ் கூட்டத்தை ஆரம்பித்து வைத்து நிர்வாகக் குழு ஒன்றைத் தேர்ந்தெடுக்குமாறு கேட்டுக் கொண்டார். கூட்டம் ஆரம்பமான போது 250 பிரதிநிதிகள் இருந்தனர். மேன்மேலும் வந்து கொண்டிருந்தனர்.

உணவு நிலைமை, அராஜகத்தைத் தடுப்பதற்கான நடவடிக்கைகள், முடியாட்சியை எதிர்த்து நடத்த வேண்டிய இறுதிப் போராட்டத்திற்கான ஏற்பாடுகள் முதலிய விஷயங்கள் பற்றிப் பிரதிநிதிகள் ஆலோசித்தனர். பிறகு நிரந்தர நிர்வாகக் குழுவைத் தேர்ந்தெடுத்தனர். செகிட்ஸே அதன் தலைவராகவும், கெரன்ஸ்கி, ஸ்கோபெலேவ் ஆகியவர்கள் உபதலைவர்களாகவும், க்வோஸ்டியோவ், ஸோகோலோவ், க்ரினெவிச், இடதுசாரி மென்ஷ்விக் பன்கோவ் ஆகியவர்கள் காரியதரிசிகளாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

அந்தக் கூட்டத்தில் பேச சோல்ஜர்களின் கோஷ்டி ஒன்று அனுமதி கோரியபோது, உற்சாகத்துடன் அனுமதி அளிக்கப்பட்டது. தங்கள் படைகளில் நடந்து கொண்டிருந்தவற்றை அவர்கள் அறிவித்த

னர். கூட்டத்தினர் அவர்களுடைய பேச்சை வெகு ஊக்கத்துடன் கேட்டனர். ரொமானேவ் ஆட்சியின் முடிவை அவர்கள் எடுத்துக் கூறிக் கொண்டிருந் தனர்.

"நாங்கள் வோலின்ஸ்கி படையைச் சேர்ந்தவர் கள்," "நாங்கள் பாவ்லோவ்ஸ்கி படையைச் சேர்ந்தவர் கள்," "நாங்கள் லிடோவ்ஸ்கி படையிலிருந்து வந்திருப் பவர்கள்" என்று அவர்கள் அறிவித்தனர், அவர்கள் தங்கள் படைகளின் பெயர்களை அறிவித்தபோது கூட்டத்தினர் பிரம்மாண்ட கரகோஷம் செய்தனர்.

"நாங்கள் மக்களுக்கு எதிராகப் போராட விரும்ப வில்லையென்பதை அறிவிக்குமாறு எங்களுக்கு உத் தரவிடப்பட்டிருக்கிறது. எங்கள் அதிகாரிகள் தலை மறைவாக இருக்கின்றனர். எங்கள் சகோதரத் தொழி லாளர்களுடன் நாங்கள் சேர்கிறோம். மக்கள் நலனுக் காக நாங்கள் உயிரையும் கொடுப்போம். புரட்சி நீடூழி வாழ்க என்று எங்கள் கூட்டம் தீர்மானித்தது"என்று அவர்கள் கூறினர்.

புரட்சி ராணுவத்தினரையும் தொழிலாளரையும் சேர்த்து சில விநாடிகளுக்குள் ஒரே ஸ்தாபனத்தைப் பிரதிநிதிகள் அமைத்தனர். அந்தக் கூட்டம் இப் பொழுது தொழிலாளர், சோல்ஜர்கள் பிரதிநிதி சபை யாக ஆகிவிட்டது.

நிலைமையைச் சபை ஆலோசித்துக் கொண்டிருக் கையில், ஓர் இளம் சிப்பாய் கையில் துப்பாக்கியுடன் ஓடிவந்து, "ஸெமியோனேவ்ஸ்கி படையைச் சேர்ந்த வன். நாங்கள் அத்தனைபேரும் மக்களுடன் சேரத் தீர்மானித்து விட்டோம்" என்றான்.

மீண்டும் கூட்டத்தில் உற்சாகம் கரைபுரண்டு ஓடியது. 1905-ல் மாஸ்கோ கலகத்தை அடக்கியது ஸெமியோனேவ்ஸ்கி படைதான் என்பது அனைவருக் கும் தெரியும். படைகளின் பிரதிநிதிகள் மேன்மேலும் ஹாலுக்கு வந்து சேரச் சேர, புரட்சியைத் தடுக்க மன்னரால் முடியாது என்பதைக் கூட்டத்தினர் உணர்ந்தனர்.

அமைதியைப் பாதுகாக்குமாறு பொது மக்களை சோவியத் கேட்டுக்கொண்டு ஒரு பிரகடனம் வெளியிட்டது. தேர்ந்தெடுக்கப்பட்ட அரசியல் நிர்ணய சபை ஒன்று அமைக்கப்படுமென்று பிரகடனம் கூறியது.

பெட்ரோக்ராட் சோவியத்தின் பத்திரிகையான 'இஸ்வெஸ்த்தியா'வின் முதல் இதழில் இந்தப் பிரகடனம் பிரசுரிக்கப்பட்டது.

பிறகு நிரந்தர நிர்வாகக் கமிட்டிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் பெரும்பாலும் கட்சிப் பற்றற்றவர்கள். ஒவ்வொரு கட்சியின் நிலையும் தெளிவாகத் தெரியாததோ, அல்லது அவற்றைப் பிரதிநிதிகள் அறிந்துகொள்ளாததோதான் இதற்குக் காரணம்.

பிற்காலத்தில் பெரிய தலைவர்களாக ஆனவர்களில் யாரும் முதல் சில வாரங்களில் மத்தியக் கமிட்டி அங்கத்தினர்களாக இல்லை. அவர்களில் சிலர் பிரஷ்டம் செய்யப்பட்டிருந்தனர். மற்றவர்கள் இன்னமும் வெளிநாடுகளிலேயே இருந்தனர்.

ஆரம்பத்தில் புரட்சியில் கிடைத்த லாபங்களை விஸ்தரிப்பதையும் பலப்படுத்துவதையுமே சோவியத் தன் முக்கிய வேலையாகக் கொண்டிருந்தது. சம்பிரதாயமான பார்லிமெண்டாக அது வேலை செய்யவில்லை திட்டமான விதிகள் எதுவுமில்லாமல் அன்றாட வேலைகளை மட்டும் கவனித்து வந்தது. அதன் அங்கத்தினர் தொகை சீக்கிரத்திலேயே 2000 ஆகிவிட்டது. மார்ச் மாத மத்திக்குள் அதில் 3000 பிரதிநிதிகள் இருந்தனர்.

மன்னரைச் சந்திப்பதற்கு ஒரு ரயில் பெறுவதற்காக சோவியத்திடம்தான் ரோட்ஸியான்கோ அனுமதி கோரினார்; பொது வேலை நிறுத்தத்தை நிறுத்தியது சோவியத்துதான்; தொழிற்சாலைகளைத் திறந்ததும், பஸ் போக்கு வரத்தை மீண்டும் ஏற்படுத்தியதும் அதுவே.

பார்லிமெண்டில் நிலைமை இன்னும் குழப்பமாகவே இருந்தது. அடுத்தபடி என்ன நேருமென்பது ஒரு

வருக்கும் தெரியாது. கெரென்ஸ்கியும், செகிட்ஸேயும் தைரியமாக ஒரு நடவடிக்கை எடுத்தனர். அவர்கள் தெருவில் வந்து, புரட்சியில் சேருமாறு ராணுவத் தினரைக் கேட்டுக் கொண்டனர். அவர்களுடைய வேண்டுகோளின்படியே ராணுவத்தினரும் நடந்து கொண்டனர்.

பெட்ரோக்ராட் சோவியத்தின் உத்தரவைக் கொண்டு, சர்க்கார் நிர்வாகத்தை ஏற்கத் தற்காலிகக் கமிட்டி ஒன்றைப் பெரும்பான்மைக் கட்சியினர் தேர்ந் தெடுக்கும்படி அவர்கள் செய்தனர். அவர்கள் இரு வரும் இக்கமிட்டியின் அங்கத்தினர்களானுர்கள்.

"இஸ்வெஸ்த்தியா" பத்திரிகையின் முதல் இதழ் நகரெங்கும் சுவர்களிலெல்லாம் ஒட்டப்பட்டிருந்தது. மன்னர் ஆட்சியைக் கவிழ்க்கும் வேலையைப் பூர்த்தி செய்யுமாறு பொது மக்களை அது கேட்டுக் கொண்டது.

மன்னரின் மந்திரி சபை கலைத்துவிட முன்வந்தது. மைகேல் கோமகன் சேனுதிபதி ஜெனரல் அலெக்ஸி யேவுக்கு பரபரப்புடன் டெலிபோன் செய்து, பொறுப் பான மந்திரி சபை அமைக்க மன்னருக்கு யோசனை கூறுமாறு கேட்டுக் கொண்டார். அப்படி யெல்லாம் ஒன்றும் செய்ய முடியாதென்று மன்னர் பதிலளித்து விட்டார்.

மொகிலியேவ் அருகே, தலைமைக் காரியாலயத்தில் தம் ரயிலில் இருந்தார் மன்னர். என்ன நடந்ததென் பது மன்னருக்கு இன்னும் தெரியவில்லை.

உறுதியான நடவடிக்கை எடுக்க ஜெனரல் இவா ஞேவ் நியமிக்கப்பட்டார். மார்ச் 13-ம் தேதி இரவு, விசுவாஸமுள்ள துருப்புகள் என்று கருதப்பட்ட ஒரு படையுடன் தலை நகருக்குப் புறப்பட்டார். மன்னர், தம் ரயிலை ட்ஸார்கோயே ஸெலோவுக்குத் திரும்புமாறு உத்தரவிட்டார்.

இரவு 2 மணிக்கு மலாயா விஷேரா என்ற ஸ்டேஷனுக்குள் ரயில் பிரவேசித்தது. அங்கு பிளாட்

பாரத்தில் ஒரு கோஷ்டி ஆவலுடன் காத்திருந்தது. "உங்கள் வண்டியை பெட்ரோக்ராடுக்குத் திருப்பி அனுப்ப எங்களுக்கு உத்திரவிடப் பட்டிருக்கிறது. அங்கு போட்டி சர்க்கார் ஒன்று அமைக்கப் பட்டிருக்கிறது'' என்று அவர்கள் கூறினர்.

உடனே மன்னரின் ரயில், ஜெனரல் குஸ்கியின் தலைமைக் காரியாலயம் இருந்த புஸ்கோவுக்குத் திரும்பப் புறப்பட்டது. குஸ்கி உதவக் கூடு மென்று மன்னர் நம்பினர்.

இவானேவின் படைகள் கலகத்தை முறியடித்து விடுமென்ற நம்பிக்கையை மன்னர் இன்னமும் இழக்கவில்லே.

அப்பொழுது ராணி ட்ஸார்ஸ்கோயே ஸெலோவில் இருந்தாள். அவள் தன் கணவனுக்கு எழுதியிருந்த கடிதத்தில் குறிப்பிட்டிருந்ததாவது: "நிலைமை படுமோசமாகிவிட்டது. நான் உங்களே எங்கே வந்து சந்திப்பதென்று புரியவில்லே. ஆனல் எல்லாம் சரியாகிவிடும் என்ற என் நம்பிக்கை தளரவில்லே. நீங்கள் எங்கே இருக்கிறீர்கள் என்பது தெரியாததால் தலைமைக் காரியாலயத்தின் மூலம் உங்களோடு தொடர்பு ஏற்படுத்திக் கொள்ள முயன்றேன். நீங்கள் எங்கே, ஏன் தடுத்து நிறுத்தப்பட்டிருக்கிறீர்கள் என்பது தெரியவில்லே யென்று ரோட்ஸ்யான்கோ கூறினர். அரசியல் சட்டத்திலோ அல்லது அது போன்ற வேறு ஏதாவது ஒரு பயங்கரமான தஸ்தாவேஜிலோ உங்களேக் கையெழுத்திடும்படிச் செய்வதற்குமுன் நீங்கள் என்னேச் சந்திக்காமல் தடுக்க அவர்கள் முயற்சிக்கின்றனரென்று தோன்றுகிறது. நீங்கள் ராணுவத்தின் உதவியில்லாமல் பொறியில் சிக்கிய எலிபோல் அகப்பட்டுக்கொண்டுவிட்டால் என்ன செய்யமுடியும்? சக்ரவர்த்தியைத் தடுத்து நிறுத்தி வைப்பதென்பது மிகுந்த அற்பத்தனம். புஸ்கோவிலும் மற்ற இடங்களிலும் உள்ள படைகளின் முன் நீங்கள் தோன்றினல் அவர்களுடைய ஆதரவைப் பெறமுடியுமென்று தோன்றுகிறது. நீங்கள் விட்டுக்கொடுக்க வேண்டிய

நிர்பந்தம் ஏற்பட்டால் அவற்றின்படி நடக்க வேண்டு மென்ற அவசியமில்லை. ஏனெனில் அவை நிர்ப்பந்தத் தின் பேரில் வாங்கப் படுகின்றன'' என்று ராணி எழுதி யிருந்தாள்.

தற்காலிக டுமா கமிட்டியின் விருப்பப்படி நடக்கு மாறு மன்னருக்கு ரூஸ்கி யோசனை கூறினுர். ஒரு மணி நேர சம்பாஷணைக்குப்பின், ரோட்ஸ்யான்கோ தலைமையில் பொறுப்பு வாய்ந்த மந்திரி சபை அமைக்க மன்னர் இணங்கினுர். பின்னர் ரூஸ்கி திரும்பி வந்து ஜெனரல் இவானேவின் உத்தரவுகளை ரத்து செய்யு மாறு மன்னரைக் கேட்டார். மன்னர் இணங்கி விட்டார்.

மார்ச் 14-ம் தேதி அதிகாலை 3-30 மணிக்கு இந்தக் கோரிக்கைகளை மன்னர் அளித்தார். ரூஸ்கி உடனே இதை ரோட்ஸியான்கோவுக்கு அறிவித்தார். இதைக் கேட்டவுடன் ரோட்ஸியான்கோவுக்கு ஆத்திரம் பொங் கிக் கொண்டு வந்தது. பல வாரங்களுக்கு முன், இவை சாத்தியமாக இருந்தபோதே, அவர் இந்த யோசனை யைச் சொல்லியிருந்தார். ஆனுல் இப்பொழுது மன்னர் முடி துறக்க வேண்டுமென்று ஜனங்கள் கோரினர்.

காலை 10-15 மணிக்கு மன்னரின் ரயிலில் ரூஸ்கி மீண்டும் ஆஜரானுர். ரோட்ஸியான்கோவிடன் தாம் நடத்திய சம்பாஷணையை மன்னரிடம் சமர்ப்பித்தார். அதைப் படித்துக் காட்டுமாறு மன்னர் கேட்டுக் கொண்டார். பின்னர் அவர் நாற்காலியிலிருந்து எழுந்து ஜன்னல் அருகே சென்ருர். ஒரு நிமிஷம் மௌனம் நிலவியது. பிறகு மன்னர் சுய நம்பிக்கை பெற்று விட்டார்.

அவர் குரலில் பரபரப்பு இல்லை. ஆனுல் பேச்சு தொடர்பற்றிருந்தது. "ரஷியாவின் நலனுக்காக நான் வெளியேற வேண்டுமென்ருல் அதற்கு நான் தயார். ஆனுல் ஜனங்கள் தவருக நினைப்பார்கள்; வருத்தப் படுவதற்கே நான் பிறந்திருக்கிறேன். ரஷியாவுக்கும் நான் வருத்தம் ஏற்படுத்துகிறேன். முடி சூட்டு விழா

வின் போது நான் அளித்த வாக்குறுதியை மீறினுல் ஆஸ்திகர்கள் என்னை மன்னிக்க மாட்டார்கள்'' என்ருர் மன்னர்.

இந்த சமயத்தில் ஜெனரல் அலெக்ஸியேவிட மிருந்து ஒரு தந்தி வந்தது. "மன்னர் முடிதுறந்து, அவருடைய குமாரனுக்குப் பட்டம் கட்டி, மைகேல் கோமகனின் மேற் பார்வையில் ஆட்சியை விட்டால் தான் யுத்தத்தைத் தொடர்ந்து நடத்த முடியும். தாம திக்கும் ஒவ்வொரு நிமிஷமும் புரட்சிக்காரர்களின் கோரிக்கைகள் அதிகரித்துக் கொண்டே போகும்'' என்று தந்தி கூறியது.

அலெக்ஸியேவின் தந்தியை ரூஸ்கி படித்தார்.

"இதைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் நிகோலாய் வ்ளாடி மீரோவிச்?'' என்று கேட்டார் மன்னர்.

"இது மிகவும் முக்கியமான விஷயம்; இதைப் பற்றி யோசிக்கச் சிறிது அவகாசம் வேண்டும். மற்ற முனைகளில் உள்ள படைத் தலைவர்கள் என்ன நினைக் கிருர்கள் என்பதைக் கேட்போம்'' என்று அவர் பதி லளித்தார்.

இரண்டு மணிக்கு ரூஸ்கி மீண்டும் வந்தார். அவருடன் இரு ஜெனரல்கள் வந்திருந்தனர். கடைசிச் செய்தியை ரூஸ்கி அறிவித்தார். மன்னனின் மெய்க் காப்பாளர்கள்கூட மன்னரைத் துறந்துவிட்டு பார்லி மெண்டுக்குப் போய்விட்டனர்.ரோட்ஸியான்கோவைச் சந்தித்துப் பேச, ராணி விருப்பம் தெரிவித்திருந்தாள். ஒரு படையின் தலைவரான கிரில் வ்ளாடி மீரோவிச் பார்லிமெண்டுக்கு விசுவாஸம் தெரிவித்து விட்டார். மாஸ்கோ ஜில்லாவின் ராணுவ கவர்னர் இடைக்கால பார்லிமெண்ட் கமிட்டியின் அதிகாரத்தை அங்கீகரித் திருந்தார். மன்னரின் மந்திரிகள் கைது செய்யப்பட் டிருந்தனர்.

இரண்டரை மணிக்கு, ஜெனரல்களின் பதிலுடன் அலெக்ஸியோவின் தந்தி வந்தது. முடிதுறப்பை எல்லாரும் ஆதரித்தனர்.

ஒரு கண நேரம் மௌனம் நிலவியது; "நான் தீர் மானித்து விட்டேன், முடிதுறக்கிறேன்" என்று கூறி சிலுவைக் குறியிட்டார் சக்ரவர்த்தி. ஜெனரல்களும் அவ்விதமே செய்தனர்.

மன்னர் இரண்டு தந்திகளை எழுதினர். ரோட்ஸி யான்கோவுக்காக எழுதிய தந்தியில், "ரஷியத் தாய் நாட்டின் க்ஷேமத்திற்காகவும் விமோசனத்திற்காகவும் எந்தத் தியாகமும் செய்ய நான் தயார் ஆகையால் என் சகோதரன் மிகேல் அலெக்ஸாண்ட்ரோவிச்சின் பராமரிப்பில் என் மகன் ஆட்சி புரிய நான் முடிதுறக் கத்தயாராக இருக்கிறேன். ஆனல் என் மகனுக்கு வயது வரும் வரையில் அவன் என்னுடன் இருக்க வேண்டும்" என்று குறிப்பிட்டார்.

ஜெனரல் அலெக்ஸியேவுக்கு எழுதிய மற்ருெரு தந்தியில் "நம் அன்பான ரஷியாவின் சந்தோஷத்தை யும் விமோசனத்தையும் முன்னிட்டு நான் முடிதுறக் கத் தயாராக இருக்கிறேன். விசுவாஸத்துடனும் யோக்கியமாகவும் அவனுக்குச் சேவை செய்யுமாறு அனைவரையும் கேட்டுக் கொள்ளுகிறேன்" என்று குறிப்பிட்டார்.

1917, மார்ச் 15-ம் தேதி காலை 5 மணிக்கு, மன்னர் கையெழுத்திடுவதற்கான முடிதுறப்பு பத்திர ஙகலுடன் பார்லிமெண்ட் அங்கத்தினர்களான குச்கோ வும் ஷுல்கினும் பெட்ரோக்ராடிலிருந்து புஸ்கோ வுக்குப் புறப்பட்டனர். தமக்குப் பின் தம் சகோதரர் மிகேல் மன்னராகும் பொருட்டு மன்னர் முடி துறந்தார்.

இதற்கிடையில் பெட்ரோக்ராடில் தற்காலிக போட்டி சர்க்கார் ஒன்று அமைக்கப் பட்டு விட்டது. ஸ்வோவ் கோமகன் அதன் தலைவராக நியமிக்கப் பட் டார். காடட் கட்சித் தலைவர் பேராசிரியர் பால் மிலியு கோவ் அயல்நாட்டிலாகா மந்திரியாகவும், அலெக் ஸாண்டர் குச்கோவ் யுத்த மந்திரியாகவும், அலெக் ஸாண்டர் கெரன்ஸ்கி நீதி இலாகா மந்திரியாகவும் நியமிக்கப்பட்டனர்.

நிகோலஸ் மன்னரின் முடி துறப்பு காலம் கடந்து வந்தது. மன்னர் பரம்பரையின் ஆட்சியை சோவியத் சபை ஏற்க மறுத்தது.

மார்ச் 16-ம் தேதி காலை 6 மணிக்கு கோமகனுக்குக் கெரன்ஸ்கி டெலிபோன் செய்தார். ரோட்ஸியான்கோ தலைமையில் உள்ள பார்லிமெண்ட் கமிட்டி அங்கத்தினர்கள் அவரைச் சந்திக்க விரும்புவதாக கெரன்ஸ்கி அறிவித்தார். கோமகன் சிம்மாசனத்தை மறுத்து விடும்படிச் செய்ய வேண்டுமென்று மிலியுகோவைத் தவிரக் கமிட்டியில் மற்ற அனைவரும் ஒப்புக் கொண்டனர்.

இந்தப் பெரும்பான்மைக் கருத்தைக் கோமகனிடம் ரோட்ஸியான்கோ அறிவித்தார். "அமைதியை நிலைநாட்டுவதற்கு, ரஷிய மக்களுக்குப் பரிச்சயமான ஓர் அதிகாரச் சின்னம், அதாவது மன்னர் இருப்பது அவசியமென்று மிலியுகோவ் வாதித்தார்.

பலமணி நேர விவாதத்திற்குப்பின் சிம்மாசனத்தை ஏற்க கோமகன் மறுத்தார்.

1905-ல் மன்னர் அரசியல் சீர்திருத்தம் அளித்து விட்டுப் பின்னர் அதை வாபஸ் பெற்றுப் புரட்சியை நசுக்கியதுபோல இப்பொழுதும் செய்யக் கூடுமென்று ராணி நம்பினுள். அவர் மீண்டும் சிம்மாசனம் ஏறி ஆட்சி புரிவாரென்று தான் நம்புவதாக மார்ச் 16-ம் தேதி எழுதிய ஒரு கடிதத்தில் குறிப்பிட்டிருந்தாள்.

இப்பொழுது ரஷியாவில் பெட்ரோக்ராட் சோவியத் சபைதான் மிகவும் முக்கிய ஸ்தாபனமாக விளங்கியது. பார்லிமெண்டின் தற்காலிகக் கமிட்டியும் சோவியத் நிர்வாகக் கமிட்டியும் சிபாரிசு செய்த 8 அடிப்படை அம்சங்களையும் நிறைவேற்றுவதாகத் தற்காலிக சர்க்கார் வாக்குறுதி யளித்ததன் பேரில் அதை ஆதரிப்பதென்று சோவியத் தீர்மானித்தது. அரசியல் கைதிகளையும் நஷ்டம் செய்யப்பட்டவர்களையும் உடனே விடுதலை செய்வது, பேச்சு, பத்திரிகை, கூட்டம், வேலை நிறுத்தம் முதலியவற்றிற்கான சுதந்திரம், எல்லா மத,

வர்க்க, கோஷ்டி கட்டுப்பாடுகளேயும் ரத்து செய்வது, ரஷியாவுக்கான அரசியலே வகுக்க அரசியல் நிர்ணய சபை அமைப்பது, போலீசுக்கு பதிலாக ஸ்தல அதிகாரிகளுக்குக் கட்டுப்பட்ட தேசியப்படை அமைப்பது, நகர சபைகளுக்கு ஜனநாயக முறையில் தேர்தல் நடத்துவது, பெட்ரோக்ராடில் கலந்து கொண்ட படையை ஆயுதங்களுடன் அப்படியே வைத்துக் கொள்வது, சோல்ஜர்களுக்கு, வேலேயில் இருக்கும் சமயத்தில் ராணுவ கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டு சிவில் உரிமைகள் வழங்குவது ஆகியவை அந்த சிபாரிசுகளாகும்.

அப்போதைக்கு கெரன்ஸ்கிதான் ஜனங்களின் தெய்வமாக விளங்கினர். முதல் புரட்சி சர்க்காரில் அவர் ஒருவர் மட்டுமே சோஷலிஸ்ட் என்ருலும் தொழிலாளர் சோவியத்துக்கும் அவர் தலேமை வகித்தார். அரசியல் வழக்குகளில் எதிரிகள் தரப்பில் ஆஜராகும் சிறந்த வக்கீலாக அவர் கருதப்பட்டார். லேஞ தங்கச் சுரங்கப் படுகொலே பற்றி அவர் நடத்திய விசாரணே அவருடைய பெருமையை உயர்த்தியது. தொழிலாளர் நலன்களேக் காப்பவராக அவர் பார்லிமெண்டில் பிரவேசித்தார். ஆனுல் மிதவாத சோஷலிஸ்ட் பிரிவின் தலேவர்களில் ஒருவராக ஆகிவிட்டார்.

முதல் தற்காலிக சர்க்கார் பெரும்பாலும் பூர்ஷ்வா சர்க்காராக இருந்தபோதிலும் மென்ஷ்விக்குகளேயும் சோஷலிஸ்ட் புரட்சிக்காரர்களேயும் பெரும்பான்மையாகக் கொண்ட சோவியத்துக்குப் பணிய வேண்டியிருந்தது. தற்காலிக சர்க்காரை சொத்து படைத்தவர்களின் ஆட்சியாகவே இவர்களில் பெரும்பாலானவர்கள் கருதினர். பெரிய சமூக மாறுதல்களேச் செய்து, அரசியல் சுதந்திரம் அளிக்கும் வகையில் புரட்சியை நடத்த சோவியத் தீர்மானித்திருந்தது. பெட்ரோக்ராட் சோவியத்தின் கையெழுத்தும் இருந்தாலொழிய அதிகாரிகளின் உத்தரவுக்குப் பணிய வேண்டாமென்று துருப்புக்களுக்கு பெட்ரோக்ராட் சோவியத் 1917 மார்ச் 15-ம் தேதி உத்தரவிட்டது.

ஒவ்வொரு படையிலும் ஸ்தல சோவியத்துக்கள் அமைக்கும் படியும் அது உத்தரவிட்டது. ராணுவ கட்டுப்பாட்டை இந்த உத்தரவு அடியோடு தகர்த்து விட்டது.

கெரன்ஸ்கி முதலில் பார்லிமெண்டின் மிதவாதி களையும், சோவியத்தின் தீவிர வாதிகளையும் இணைக் கும் சங்கிலியாக இருந்து வந்தார். அவர் நாடெங்கும் சுற்றி, புதிய சர்க்காருக்கு ஆதரவு தேடினர்.

ஒடெஸ்ஸாவில் நடந்த ராணுவத்தினர் கூட்டத் தில் அவர் பேசுகையில், "நாடு முழுதும் ஏற்பட்டுள்ள மகத்தான உற்சாகத்தை நான் காண்கிறேன். அடிமை களை வீரர்களாக மாற்றக்கூடிய, ரஷியப் புரட்சி போன்ற அற்புதங்கள் ஒரு நூற்றுண்டுக்கு ஒரு முறை தான் நிகழ முடியும்" என்று கூறினர். சமூகம் முழு வதுமே அதில் பங்கு கொண்டதாகப் பேராசிரியர் யூஜீன்ட்ரூஸ்ட்ஸ்காய் கூறுகிருர்.

"உலகத்திலேயே அதிக சுதந்திரம் உள்ள நாடு" என்று 1917, ஏப்ரல் 20-ம் தேதி லெனின் "பிராவ்தா" பத்திரிகையில் வர்ணித்த நாடாக ரஷியாவை மார்ச் புரட்சி ஒரே நாளில் மாற்றிவிட்டது.

## 9. பெட்ரோக்ராடை நோக்கி லெனின் வருகை

ரஷியப் புரட்சி பற்றிய செய்தி லெனினுக்கு ஆச் சரிய மேற்படுத்தியது. 1917 மார்ச்சில் போல்ஷவிக்கு கள் அனைவரும் கைதிகளாகவோ, சைபீரியாவில் பிரஷ் டம் செய்யப்பட்டோ இருந்தனர். ஜினேவீவ், ஸெமாஸ்கோ, லூனகார்ஸ்கி, லித்விநேவ், சிகேரின், காமெனப்ஸ்கி, ஸ்ரீமதி கொல்லிண்டாய், லாரின் முதலி யவர்கள் பல வருஷங்களாகவெளிநாடுகளில் வசித்து வந்தனர். புகாரின் நியூயார்க்கில் ட்ராட்ஸ்கியுடன் சேர்ந்து "எமிக்ரி" என்ற பத்திரிகையை நடத்திக் கொண்டிருந்தார். ஸ்டாலின், காமனேவ், ஸ்வெர்ட் லோவ் ஆகியவர்கள் சைபீரியாவில் இருந்தனர்.

ப்ரோன்ஸ்கி ஓடிப்போய், புரட்சி பற்றிய செய்தியை லெனினிடம் சொன்னபோது அவர் நம்ப மறுத்துவிட்டார். ஜூரிச் பத்திரிகைகள் இதை ஊர்ஜிதம் செய்த பிறகுதான் அவருக்கு நம்பிக்கைஏற்பட்டது. அது முதல் எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் பெட்ரோக்ராட் போய்ச் சேரவேண்டும் என்ற நோக்கத்துடனேயே அவர் எல்லா வேலைகளையும் செய்து வந்தார். தம் கட்சிக்குள்ளேயும் மற்றவர்களுடனும் நடக்கவிருந்த போராட்டங்களை அவர் தெளிவாகக் கண்டார். ரஷியாவில் இருந்த போல்ஷ்விக்குகள் போராட்டத்தைச் சரியான மார்க்கத்தில் நடத்துவார்களென்ற நம்பிக்கை அவருக்கு இல்லை.

1917 வஸந்த காலத்தில் எல்லா நாடுகளிலிருந்தும் ரஷியர்கள் பெட்ரோக் ராடுக்குத் திரும்பத் தொடங்கினர். எல்லா விதமான ஆண்களும் பெண்களும் பழுத்த புரட்சிக்காரர்களும், தாராள வாதிகளும் சோஷலிஸ்ட்டுகளும், விவசாயிகளும், மாணவர்களும் தீவிரவாத அறிவாளிகளும் வருஷக் கணக்கில் ரஷியச் சிறைகளில் வசித்தவர்களும், சைபீரியாவில் பிரஷ்ட தண்டனை அனுபவித்து வந்தவர்களும் ஆயிரக் கணக்கில் திரும்பி வந்தனர்.

தற்காலிக சர்க்கார் அளித்த விடுதலை பொதுவானதாகையால் எல்லாரும் பெட்ரோக்ராடையே நோக்கி வந்து கொண்டிருந்தனர். இது ரஷியாவின் மகத்தான சுதந்திர காலம். பெட்ரோக்ராட் நகரம் திருவிழாக் கோலம் பூண்டுநின்றது.

பெட்ரோக்ராடை முதலில் அடைந்த முக்கிய போல்ஷ்விக்குகள் ஸ்டாலின், காமனேவ், முரானேவ், ஸ்வெர்ட்லோவ் ஆகியவர்களாவர். மார்ச் மாத முடிவுக்குள் இவர்கள் சைபீரியாவிலிருந்து தங்கள் பிரயாணத்தை முடித்துவிட்டனர். இவர்கள் வந்து சேர்ந்த பொழுது பெட்ரோக்ராடில் அரசியலானது உல்லாச வாழ்வாகவே இருந்தது. இந்த உணர்ச்சி அவர்களையும் பற்றிக் கொண்டது. ஆனால் முடியாட்சி வீழ்ந்தவுடனேயே மீண்டும் பிரசுரத்தை ஆரம்பித்திருந்த

ப்ராவ்தா காரியாலயத்தில் முற்றிலும் வேறு சூழ்நிலை நிலவியது. அப்பத்திரிகையின் தற்காலிக ஆசிரியர்களான மொலொடோவும் ஷ்ரியாப்னிகோவும் தற்காலிக சர்க்காரைத் தாக்கி கொண்டிருந்தனர்.

ஸ்டாலின், காமனேவ், முரானேவ் ஆகியவர்கள் சீக்கிரத்திலேயே பத்திரிகையின் ஆசிரியர் குழாத்தை மாற்றி விட்டனர். அவர்களுடைய அதிகாரத்தின் கீழ்ப் பத்திரிகையின் முதல் இதழ் மார்ச் 28-ஆம் தேதி வெளி வந்தது. புதிய நிர்வாகத்தின் கீழ் "ப்ராவ்தா" பத்திரிகை சர்க்காரிடமும், மற்ற சோஷலிஸ்ட் கட்சிகளிடமும் முன்னைவிட அதிக சமரசக் கொள்கையை அனுஷ்டித்தது. தற்காலிக சர்க்காரை எதிர்த்துப் போராடும் படியும், யுத்தத்தை நிறுத்த உடனே நடவடிக்கை எடுக்கும்படியும் லெனினும் ட்ராட்ஸ்கியும் தனித் தனியே பாட்டாளி மக்களைக் கேட்டு வந்தனர். ஆனால் ஸ்டாலின் மாத்திரம் மிகவும் ஜாக்கிரதையான கொள்கையை அனுஷ்டித்தார்.

மார்ச் 27-ஆம் தேதி பெட்ரோக்ராட் சோவியத், உலகமக்களுக்காக ஒரு பிரகடனத்தை அங்கீகரித்தது. மார்ச் புரட்சியானது, ஜெர்மன் ஏகாதிபத்தியத்தின் தோல்வியை அடிப்படையாகக் கொண்ட ஜன நாயக சமாதானத்திற்கு முதற்படி என்று அந்தப் பிரகடனம் கூறியது. "யுத்தம் இரு தீமைகளுக்கிடையே நடக்கும் ஏகாதிபத்யப் போர்" என்ற லெனின் சித்தாந்தத்திற்கு இது மாறுபட்டிருந்தது.

மார்ச் 28-ம் தேதி "ப்ராவ்தா"வில் ஸ்டாலின் எழுதிய கட்டுரையில் "யுத்தம் ஒழிக என்ற கோஷம் அனுபவ சாத்தியமற்றது. ஜெர்மன் ராணுவம் கெய்ஸரின் உத்தரவுப்படி நடக்கும் வரையில் ரஷிய சோல்ஜர்கள் உறுதியுடன் எதிர்த்து நிற்கவேண்டும். யுத்தத்தில் ஈடுபட்டுள்ள நாடுகள் உடனே சமாதானப்பேச்சு ஆரம்பிக்க நம்முடைய தற்காலிக சர்க்கார் முயற்சி செய்ய வேண்டுமென்று வற்புறுத்துவதே நம் கோஷமாக இருக்கவேண்டும். உலக மக்களுக்கு நேற்று

விடுக்கப்பட்ட பிரகடனத்தை வரவேற்காமலிருப்பது அசாத்தியம்'' என்று கூறியிருந்தார்.

போல்ஷ்விக்குகளிடையே புதிய ப்ராவ்தா மிகுந்த வருத்தத்தை ஏற்படுத்தியதாக ஷ்லியாப்னிகோவ் கூறுகிருர். மிதவாத போல்ஷ்விக்குகள் தீவிரவாதிகளைத் தோற்கடித்துவிட்டதாக அரண்மனை வட்டாரங்களில் செய்தி குமைந்தது.

ஸ்டாலின், காமனேவ், முரானேவ் ஆகியவர்களைக் கட்சியிலிருந்து விலக்க வேண்டுமென்று, போல்ஷ்விக் கட்சிக் காரியலயங்களில் ஊழியர்கள் கூறி வற்புறுத்தினர்.

மார்ச் 29-ம் தேதி நடந்த பெட்ரோக்ராட் போல்ஷ்விக் மகா நாட்டில் ஸ்டாலின் பேசுகையில், பின் வருமாறு கூறினுர்: "புரட்சிக்காரர்கள் பெற்ற லாபங்களை பலப்படுத்தும் பொறுப்பைத் தற்காலிக சர்க்கார் ஏற்றுக் கொண்டிருக்கிறது. இத்தகைய நிலைமையில் சாதகங்களும் இருக்கின்றன பாதகங்களும் இருக்கின்றன. பூர்ஷ்வாக்களை நம்மிடையிலிருந்து அவசரப் பட்டு விரட்டுவது நன்மை பயக்காது. பின்னர் இவர்கள் போய்த்தான் ஆக வேண்டும். தற்காலிக சர்க்கார் புரட்சிக்கு ஆக்கம் அளிக்கும் அளவுக்கு நாம் அதற்கு ஆக்கம் அளிக்க வேண்டியதே. எதிர்ப் புரட்சி செய்வதினுல் அதை நாம் ஆதரிக்கக் கூடாது'' என்று ஸ்டாலின் கூறினுர்.

கூட்டத்தின் நிகழ்ச்சிக் குறிப்பில், அன்றைய கூட்டத்தில் ஒற்றுமைக்கான ட்ஸெர்டெல்லியின் பிரேரணை ஆலோசிக்கப்பட்டதாகவும், இதற்கு ஒப்புக் கொள்ள வேண்டுமென்று ஸ்டாலின் சொன்னதாகவும் கூறப்பட்டிருக்கிறது. "ஒற்றுமை பற்றி நம்முடைய கருத்தை முடிவு செய்வது அவசியம்'' என்று அவர் கூறினுர்.

மொலடோவ் தம் எதிர்ப்பைத் தெரிவிக்க எழுந்த பொழுது ஸ்டாலின் பின் வருமாறு கூறினுர். "அபிப் பிராய பேதங்களை எதிர்பார்த்துத் தடுக்க வேண்டியதில்லை. ஒரே கட்சி அங்கத்தினர்கள் என்ற ரீதியில்

நம்மிடையே உள்ள சிறு அபிப்பிராய பேதங்கள் தாமாகவே மறைந்து விடும்'' என்றார். 1917 மார்ச்சில் ஸ்டாலின் நிலை இதுதான். பல இடதுசாரி மென்ஷ்விக்குகளும் போல்ஷ்விக்குகளும் இவ்விதம்தான் நினைத்தனர். ஆனால் லெனின் அப்படிக் கருதவில்லை.

மார்ச் 20-ம் தேதி லெனின் ஜூரிச்சில் இருந்தார். "தூரத்துக் கடிதங்கள்'' என்ற கடிதங்களில் முதல் கடிதத்தை அவர் அங்கிருந்து எழுதினார். ஏப்ரல் 3-ம் தேதி அது 'ப்ராவ்தா' பத்திரிகையில் பிரசுரமான போது ஸ்டாலினும் காமனேவும் அனுஷ்டித்த சமரசக் கொள்கையிலிருந்து அது முற்றிலும் பிரிந்து போய் விட்டது.

ரஷிய முடியாட்சி இவ்வளவு சுலபமாக வீழ்ந்ததற்குக் காரணம். யுத்தத்தை இன்னும் உக்ரமாக நடத்தி, மேலும் லக்ஷக்கணக்கான ரஷியத் தொழிலாளர்களைக் கொன்று குவிப்பதற்காக, மிலியுகோவ்-குச்கோவ் கும்பலை பிரிட்டிஷ் - பிரெஞ்சு ஏகாதி பத்தியங்கள் ஆதரித்ததே யென்பது லெனின் வாதம்.

அதே தினத்தில் ட்ராட்ஸ்கி, தம்முடைய நியூ யார்க் பத்திரிகையான ''நோவிமினில்'' பின்வருமாறு எழுதியிருந்தார்.

'ரஷியாவில் மன்னர் ஆட்சி இப்பொழுது இல்லை. ஆனால் 'தேசீய நலனுக்காக' ரத்தத்தைக் கொட்ட வேண்டுமென்று ரஷிய மக்களிடம் குச்கோவ்களும் மிலியுகோவ்களும்கூறி வருகின்றனர். அவர்கள் சொல்லும் தேசீய நலன் என்பதற்கு போலந்தைத் திருப்பிப் பிடிப்பது, காலீஸியா, கான்ஸ்டாண்டிநோபிள், அமெரிக்கா, பாரசீகம் முதலியவற்றைக் கைப்பற்றுவது என்றுதான் அர்த்தம். இதை வேறு விதமாகச் சொல்வதென்றால் ரஷியா மற்ற ஐரோப்பிய ஏகாதிபத்திய நாடுகளுக்குச் சமமான ஸ்தானம் வகிக்கிறது என்றுதான் சொல்ல வேண்டும்.

மார்ச் 24-ம் தேதி லெனின் மற்றொரு கடிதம் எழுதினார். "குச்கோவ்களையும் மிலியுகோவ்களையும், நிலப்

பிரபுக்களையும், முதலாளிகளையும் எதிர்த்துப் போராட" ஏழரை லக்ஷம் பேர் அடங்கிய ஒரு படை திரட்டுமாறு தொழிலாளர்களை அவர் கேட்டுக் கொண்டார்: நேச நாடுகளுடன் ரஷியா செய்து கொண்டிருந்த ஒப்பந்தங்களை மறுக்கும்படியும், எல்லா ரகசிய ஒப்பந்தங்களையும் வெளியிடுமாறும், சமாதானத்திற்குப் புதிய நியந்தனைகளை வெளியிடுமாறும் கோரினார். எல்லாக் காலனிகளையும் விடுவித்து, எல்லா நாடுகளிலும் சர்க்கார்களை மாற்றித் தொழிலாளர் பிரதிநிதி சபைகளுக்கு அதிகாரத்தை மாற்ற வேண்டுமென்பது புதிய சமாதான நிபந்தனைகளாக இருக்க வேண்டுமென்றார்.

ஸ்டாக்ஹோமில் இருந்த கானெட்ஸ்கிக்கு இந்தக் கடிதங்கள் போய்ச் சேர்ந்தன. அவர் இவற்றை, பெட்ரோக்ராடில் இருந்த லெனின் தங்கை மேரியாவுக்கு அனுப்பினார்.

லெனின் இன்னமும் ஜூரிச்சிலேயே இருந்தார். அவர் ரஷியா திரும்புவதற்கு இடையூறுகள் இருந்தன. தன் எதிரி நாடு திரும்புவதைத் தற்காலிக சர்க்கார் ஆட்சேபிக்க வில்லை. ஆனால் அவருக்குப் பிரயாண அனுமதிச் சீட்டு கொடுக்க பிரிட்டிஷ், பிரெஞ்சு சர்க்கார்கள்தான் தயங்கினர்.

ஆனால் லெனின் ஸ்விட்ஸர்லாந்தில் அதிக நாள் தங்கியிருக்கவில்லை. அவர் ரஷியாவுக்குத் திரும்பி தற்காலிக சர்க்காரைக் கவிழ்க்க நேச நாடுகள் உதவி செய்யவில்லை யென்றாலும் ஜெர்மனி செய்தது. ஜெர்மன் யுத்தக் கைதிகளை ஜெர்மனிக்குத் திருப்பி அனுப்புவதற்கு பதிலாக ரஷிய புரட்சிக்காரர்களை ஜெர்மனி வழியாக ரஷியாவுக்கு அனுப்ப வேண்டுமென்று மார்ட்டோவ்தான் முதலில் கூறினார்.

ரஷிய–ஜெர்மன் பரிவர்த்தனைக்கு மார்ட்டோவ் யோசனை கூறியபின், ராபர்ட்கிரிம் என்ற ஸ்விஸ் சமூக ஜனநாயகவாதி உதவி செய்ய முன் வந்தார். ஆனால் சோவியத் நிர்வாகக் கமிட்டியின் அனுமதி இல்லாமல் ஒன்றும் செய்ய இயலாதென்று மென்ஷ்விக்குகள்

மறுத்து விட்டதால் அவர் மறைந்து விட்டார். வெளி நாட்டில் உள்ள ரஷியர்கள் ரஷியா திரும்புவதற்கான யோசனையைத் தம் கட்சி நிபந்தனையின்றி ஏற்பதாக வும், பிரயாணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளை உடனே செய்வதாகவும் லெனின் அறிவித்தார்.

சோவியத்தின் அனுமதியில்லாமல் ரஷியாவுக்குத் திரும்ப இந்த சமயத்தில் 10 பேர்தான் தயாராக இருந் தனர். சோவியத் நிர்வாகக் கமிட்டியின் அங்கீகாரம் வேண்டுமென்று மென்ஷ்விக்குகள் வற்புறுத்துவதாக காமெனட்ஸ்கிக்கு லெனின் தந்தி அனுப்பினர்.

இந்த அடிப்படையில் சம்பாஷணைகளை நடத்த க்ரிம் மறுத்த போது ப்ரிட்ஸ் ப்ளாட்டன் என்ற மற் ெறாரு சர்வதேச சோஷலிஸவாதி முன் வந்தார். ஸ்விட் ஸர்லாந்தில் இருந்த ஜெர்மன் ஸ்தானீகருடன் அவர் ஒரு திட்டமான ஒப்பந்தம் செய்து கொண்டதாக உத்தியோக பூர்வமான போல்ஷ்விக் அறிக்கை கூறு கிறது. ஒப்பந்தத்தின் முக்கிய அம்சங்கள் வருமாறு: முதலாவதாக, ரஷியாவிலிருந்து தப்பி வந்திருந்தஅனை வரும், யுத்தத்தைப் பற்றி அவர்களுடைய கருத்து எதுவாக இருந்த போதிலும் திரும்பிப் போக வேண் டும். அவர்கள் பிரயாணம் செய்யும் ரயில் பிரதேசக் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டதாக இருக்கக் கூடாது. கடைசியாக இவர்கள் நாடு திரும்பியவுடன் தங்கள் எண்ணிக்கைக்குச் சமமான எண்ணிக்கையுள்ள ஆங் கிலோ, ஜெர்மன் கைதிகளை அவர்களுடைய நாட்டிற் குத் திருப்பி அனுப்ப வேண்டுமென்று ரஷியாவில் கிளர்ச்சி செய்ய வேண்டும்.

உத்தியோக பூர்வமான அறிக்கையிலிருந்து இவ் வளவுதான் தெரிகிறது. கிழக்குப் போர்முனையில் ஜெர் மன் படைத்தலைவராக இருந்த ஜெனரல் ஹாப்மன், ஜெர்மன் நோக்கத்தைப் பின் வருமாறு திட்டமாக விளக்கினர்,

''ரஷிய ராணுவத்தில், புரட்சி ஏற்படுத்தியுள்ள சீர்கேட்டை, அதிகரிக்க நாங்கள் முயற்சி செய்தது இயற்கை. ஸ்விட்ஸர்லாந்தில் இருந்த ரஷியப் புரட்சிக்

காரர்களுடன் தொடர்பு கொண்டிருந்த யாரோ ஒரு வன், ரஷிய ராணுவத்தின் விசுவாஸத்தைக் குலைக்க அவர்களில் சிலரை நியமித்துக் கொள்ளலாமென்று நினைத்தான்'' என்கிறார் ஜெனரல் ஹாப்மன்.

ஸ்விட்ஜர்லாந்தில் இருந்த ரஷியப் புரட்சிக்காரர் களுடன் தொடர்பு கொண்டிருந்த அந்த யாரோ ஒருவன் யார்? பார்வூஸ்தான் அவர். லெனினையும் சோஷலிஸ்ட் தீவிரவாதிகளையும் ரஷியாவுக்குத் திருப்பி அனுப்புவதால் ஏற்படும் நிலைமையை ஜெர்மனி நன்றா கப் பயன்படுத்திக் கொள்ளலாமென்று அவர் சொன் னார். பார்வூஸின் இந்த யோசனையை கவுண்ட்வான் மால்ட்ஸானும், ஜெர்மன் ராணுவப் பிரசார அதிகாரி யான எர்ஸ்பர்கரும் ஆதரித்தனர். பிரதம மந்திரி பெத் மான் ஹார்வெக் இதை ஏற்கும்படி அவர்கள் செய்தனர். பார்வூஸின் இந்த "அற்புதமான திட்டம்" பற்றி ராணுவ இலாகாவுக்கு அறிவித்தார்.

இந்த ஏற்பாடுகளை வில்ஹெல்ம் ஸ்ட்ராஸி மூலம் பார்வூஸ் நடத்திக் கொண்டிருக்கையில், யுத்தத்தை எதிர்த்து வந்த பால் லெவி என்ற சோஷலிஸ்ட் பெர் னேயிலும் ஜூரிச்சிலும் இந்த ஏற்பாடுகளைக் கவனித்து வந்தார். ஸ்விட்ஜர்லாந்தில் இருந்த ஜெர்மன் ஸ்தானி கருடன் இது பற்றிப் பேசுமாறு "ப்ராங்க்பர்ப்டர் ஸீடஸ்'' பத்திரிகையின் பெர்னே நிருபரைக் கேட்டுக் கொண்டார். பெர்லினில் இது பற்றி விசாரிப்பதாக அந்த ஸ்தானிகர் வாக்குறுதி யளித்தார்.

மறுநாள் மாலை லெவியுடன் ஜெர்மன் ஸ்தானிகர் டெலிபோனில் பேசினார். ''லெனினுடன் நான் எப்படித் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ளமுடியும்? அவரை ரஷியாவுக்கு அனுப்புவது சம்பந்தமாக எந்த நிமிஷத் திலும் நான் உத்தரவை எதிர்பார்த்துக் கொண்டிருக் கிறேன்'' என்று அறிவித்தார் அவர்.

இதை மிகவும் அவசரமான விஷயமாக ஜெர்மன் சர்க்கார் கருதியதென்பது அவருடைய குரலிலிருந்து வெளிப்பட்டது. இந்தச் செய்தியை லெனினுக்கு லெவி அறிவித்தபோது, தாம் ஜெர்மனி வழியே பிரயாணம்

செய்வதற்கான நிபந்தனைகளை லெனின் வரிசையாக எழுதத் தொடங்கினார். அவருடைய நிபந்தனைகள் அனைத்தும் ஏற்றுக்கொள்ளப்பட்டன. பெட்ரோக்ராட் பாதை திறந்து விடப்பட்டு விட்டது.

பெட்ரோக்ராட் சோவியத்தின் அனுமதியில்லாமல் லெனின் ஜெர்மனி வழியே செல்லச் சம்மதித்து விட்டார் என்ற செய்தி தெரிந்தவுடன் ஸ்விட்ஸர்லாந்திலும் பிரான்ஸிலும் இருந்த சோஷலிஸ்டு களிடையே பெருங் கிளர்ச்சி ஏற்பட்டது. ரஷிய அகதி களின் கூட்டங்கள் லெனினையும் அவரைப் பின் பற்றியவர்களையும் கண்டித்தன.

இரண்டு நாளைக்குப்பின் லெனினை வழியனுப்ப ஸ்டேஷனில் ரஷிய அகதிகள் கூடினர். லெனினுடன் ஜினோவீவ், ராடேக், க்ரூப்ஸ்காயா, கார்ப்பின்ஸ்கி ஆகியவர்களும் மற்றும் பல போல்ஷ்விக்குகளும் சென் றனர். ஆனால் போல்ஷ்விக்கு களல்லாத 20 பேரும் அவர்களுடன் சென்றனர். ஜெர்மனியின் ஆதரவில் தாம் பிரயாணம் செய்வதால் ஏற்படும் தப்பபிப் பிராயத்தை மாற்றுவதற்காக இவர்களும் தம்முடன் வரவேண்டுமென்று லெனின் வற்புறுத்தினார். ரயில் புறப்படத்தயாராக நின்றிருந்தது. லெனின் ஆதர வாளர்கள் அதைச் சூழ்ந்துக் கொண்டிருந்தனர். அவருடைய விரோதிகள் கண்டன கோஷங்கள் எழுப் பினர். "உளவாளிகள்; ஜெர்மன் உளவாளிகள்; எவ்வளவு குஷியாக இருக்கிறார்கள் பாருங்கள்! கெய்ஸர் செலவில் தாய்நாடு திரும்புகின்றனர்" என் றெல்லாம் அவர்கள் கோஷித்தனர். லெனின் புன் முறுவலுடன் தலையை ஆட்டிக்கொண்டு ஜன்னல் அருகே நின்றிருந்தார்.

ஏப்ரல் 13-ம் தேதி கானட்ஸ்கிக்கு லெனினிட மிருந்து ஒரு தந்தி வந்தது: "இன்று மாலை 6 மணிக்கு ட்ரெல்பர்க்" என்று அந்தத் தந்தியில் குறிப்பிடப் பட்டிருந்தது.

கானெட்ஸ்கி லெனினை மால்மோவில் சந்தித்தார். அவர்கள் ஆலிங்கனம் செய்து கொண்டனர்.

காஞெட்ஸ்கியின் கண்களில் ஆனந்த பாஷ்பம் பெருகியது: சிலமணி நேரத்திற்குள் அவர்கள் ஸ்டாக்ஹோம் செல்லும் பிரத்யேக வண்டியில் இருந்தனர். லெனின் பிரயாணம் செய்த பெட்டியில் காஞெட்ஸ்கி, க்ரூப்ஸ்காயா, ஜினேவீவ் ஆகியவர்கள் இருந்தனர். பெட்ரோக்ராட் செய்திகளைப் பற்றி காஞெட்ஸ்கியிடம் லெனின் விசாரித்துக் கொண்டிருந்தார்.

பார்வூஸ் லெனினைச் சந்திக்கவில்லை, ஆனல் சமாதானத்திற்கான முயற்சிகளை உடனே ஆரம்பிப்பது அவசியமென்று ஒரு செய்தி அனுப்பினர். புரட்சிதான் தம் வேலையே தவிர ராஜதந்திரமல்லவென்று லெனின் பதில் அனுப்பினர்.

## 10. வஸந்தத்தில் பேரிடி

**1917** ஏப்ரல் **16**-ம் தேதி அந்த பின்லாந்து ஸ்டேஷனில் லெனின் வந்து இறங்கினர். தொழிலாளர்களும் சிப்பாய்களும், மாலுமிகளும் புரட்சி ஸ்தாபனங்களின் பிரதிநிதிகளும் செங்கொடிகளுடன் ஸ்டேஷனுக்கு வந்து அவரை வரவேற்றனர். முன்பு மன்னரின் அறையாக இருந்த ''மக்கள் அறைக்கு'' அவரைத் தொழிலாளர்கள் தங்கள் தோள்மீது தூக்கிச் சென்றனர். கூட்டம் ஜயகோஷங்களை எழுப்பிக் கொண்டு பின்னல் சென்றது.

லெனின் அறையின் மத்தியில் சென்று, பெட்ரோக்ராட் சோவியத்தின் தலைவரான செகிட்ஸேக்கு எதிரே நின்ருர். செகிட்ஸே அவரை வரவேற்ருர். ''லெனின் தோழரே, பெட்ரோக்ராட் சோவியத்தின் பெயராலும், புரட்சியின் பெயராலும் உங்களை நாங்கள் ரஷியாவுக்கு வரவேற்கிறேம். நம்புரட்சியை உள்தாக்குதல் வெளித்தாக்குதல் முதலிய எல்லாவிதமான தாக்குதல்களிலிருந்தும் பாதுகாப்பதே நம்முடைய முதல் பொறுப்பென்று நாங்கள் நம்புகிறேம். இந்த லக்ஷியத்தை அடைய எங்களுடன் நீங்களும் சேர்ந்து உழைப்பீர்களென்று நம்புகிறேம்'' என்று செகிட்ஸே கூறினர்.

செகிட்ஸேயின் பேச்சு தம் காதில் விழாததுபோல லெனின் அங்கு நின்றிருந்தார். அறையின் ஒரு கோடியிலிருந்து மறு கோடிவரை கூட்டத்தின் மீது தம் பார்வையைச் செலுத்தினார். செகிட்ஸேயிடமிருந்தும்; பெட்ரோக்ராட் சோவியத் நிர்வாகக் கமிட்டி அங்கத்தினர்களிடமிருந்து அவர் தம் பார்வையை வேறுபக்கம் திருப்பி, கூட்டத்தை நோக்கிப் பேசத் தொடங்கினார் லெனின். "தோழர்களே, வெற்றிகரமான புரட்சி நடத்தியதற்காக உங்களைப் பாராட்டுகிறேன். தோழர் கார்ல் லீப்னெக்டின் (ஜெர்மன் தலைவர்) உத்தரவு வந்தவுடன் முதலாளித்துவ சரண்டல் காரர்களின் மீது நீங்கள் ஆயுதங்களைத் திருப்பும் காலம் வெகு தூரத்தில் இல்லை. உலக சோஷலிஸ்ட் புரட்சி நீடுழி வாழ்க" என்றார் லெனின்.

ஸ்டேஷனிலிருந்து அவர் க்ஷேஷின்ஸ்காயா அரண்மனையிலிருந்த போல்ஷ்விக் தலைமைக் காரியாலயத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டார்.

வெளியே சிப்பாய்களும் மாலுமிகளும் அடங்கிய பெருங் கூட்டம் கூடியிருந்தது. இரண்டாவது மாடி பால்கனியிலிருந்து லெனின் பேசினார். "ரஷியப் புரட்சி, உலகப் பாட்டாளி மக்களின் எழுச்சிக்கு ஆரம்பம்" என்று அவர் கூறினார்.

பிறகு போல்ஷ்விக் கட்சித் தலைவர்கள் கூடியிருந்த இடத்திற்குச் சென்றார். லேசான துவேஷச் சிரிப்புடன் அவர்களுடைய பிரசங்கங்களைக் கேட்டுக் கொண்டிருந்துவிட்டுப் பிறகு பேசத் தொடங்கினார். தாம் ஸ்விட்ஸர்லாந்தில் இருந்தபோது சர்க்காருக்குத் தற்காலிகமாக ஆதரவு அளித்ததற்காக அவர்களை வன்மையாகக் கண்டித்தார்.

"தற்காலிக சர்க்காரை ஆதரிக்கக் கூடாது" என்பதுதான் அவருடைய முதல் வார்த்தை. ஸ்டாலினும் காமனேவும் பின்பற்றிய பாதையிலிருந்து அவர் முற்றிலும் பிரிந்துபோனதைக் கண்டு அவருடைய சீடர்கள் திணறினர்.

தம்மைப் பின் பற்றியவர்களை அவர் விளாசியபின், சோவியத்தில் போல்ஷ்விக்குகளல்லாத பெரும்பான்மை யினரிலிருந்து பிரிந்து, அவர்களை விரோதி கோஷ்டியில் சேர்த்துவிட்டார்.

''ஸிம்மவால்டு இடது சாரியினர்தான் பாட்டா ளிப் புரட்சியைப் பாதுகாக்கின்றனர். மற்றவர்க ளெல்லாம் பழைய சந்தர்ப்பவாதிகள். இவர்கள் அழ காகப் பேசுகின்றனரே தவிர, உண்மையில் சோஷலி ஸத்திற்கும் பாட்டாளி மக்களுக்கும் துரோகம் செய் கின்றனர்'' என்று கோஷித்தார் லெனின்.

தயை தாக்ஷண்ய மற்ற தாக்குதலினுல் சோவியத் தலைமையே சுழன்றது. லெனின் தம் திட்டத்தின் அடிப்படை அம்சங்களை மீண்டும் வற்புறுத்தினுர். அவர் வார்த்தைகளைப் போட்டுக் குழப்பவில்லை. கூட் டத்திற்குத் தலைமை வகித்த காமனேவ, பேசுகையில், லெனின் பிரசங்கத்தைப் பற்றி போல்ஷ்விக்குகளின் கருத்தை எடுத்துக் கூறினுர். ''லெனின் கருத்தை நாம் ஒப்புக் கொள்ளலாம். அல்லது அவர் கொடுக்கும் மதிப்புக்களை நாம் ஏற்காமலிருக்கலாம். ஆனுல் நம் கட்சியின் அங்கீகாரம் பெற்ற தலைவர் அவர்தான். அவருடன் நாம் சோஷலிஸத்தை நோக்கி முன்னேறு வோம்'' என்று காமனேவ் கூறினுர்.

லெனின் முதலில் டாரைட் அரண்மனைக்குச் செல்ல வில்லை. தம் தாயின் சமாதிக்குத்தான் சென்ருர். க்ஷெஸின்ஸ்கி அரண்மனையில் அவர் நிலைத்தவுடன் ஒரு கார் கொண்டுவரச் சொல்லி டெலிபோன் செய்து நேராகச் சமாதி அருகே சென்ருர்.

லெனின் திரும்பி வந்தது பற்றிய விவரங்கள் தெரிந்தபோது பெட்ரோக்ராட் மாலுமிகள், சிப்பாய் கள், மாணவர்கள், தொழிலாளர் முதலியவர்களில் பெரும்பான்மையோரிடையே ஆத்திரம் ஏற்படுத்தி யது. இரண்டாவது பால்டிக் கடற் படை மாலுமிகள் ஏப்ரல் 17-ம் தேதி கூடி, ஜெர்மன் உதவியை ஏற்றுக் கொண்டதற்காக லெனினைக் கண்டித்து ஒரு தீர்மானம் நிறைவேற்றினர். வோலின்ஸ்கி பட்டாளப் பாசறை

யில் நடந்த கூட்டத்தில் லெனினைக் கைது செய்வது பற்றி ஆலோசிக்கப்பட்டது. ஜெர்மனி வழியே லெனின் வந்ததுபற்றி இடைக்கால சர்க்கார் விசாரணை நடத்த வேண்டுமென்று மற்றும் பல சிப்பாய்களின் கூட்டங்கள் வற்புறுத்தின.

க்ஷெஸின்ஸ்கி அரண்மனைக்கு முன்னால் லெனினை எதிர்த்து உடற் பயிற்சி மாணவர் யூனியன் ஆர்பாட்டம் நடத்தியது. காயமடைந்த சிப்பாய்கள், மாலுமிகளின் தூது கோஷ்டி ஒன்று, கண்டன வாசகங்கள் எழுதப்பட்ட அட்டைகளுடன் வந்து, "லெனின் கம்பெனியாரே ஜெர்மனிக்குத் திரும்பிப் போங்கள்" என்று கோஷித்து ஆர்ப்பாட்டம் செய்தனர்.

லெனின் திரும்பி வந்தபின் ரஷியாவில் நிலைமை ஸ்திரமாக இல்லை. முடியாட்சி வீழ்ந்த பின் ரஷியாவுக்குப் பெரிய மனோதத்துவ அதிர்ச்சி ஏற்பட்டது. "அளவற்ற சுதந்திரப் பெருக்கு ஏற்பட்டிருப்பதாக மக்கள் அனைவரும் கருதினர்" என்று கெரன்ஸ்கி கூறுகிறார். மனித சமூகத்திற்குத் தேவையான அடிப்படைக் கட்டுப் பாடுகளிலிருந்துகூட விடுபட்டு விட்டதாக ஜனங்கள் உணர்ந்தனர். அதே சமயத்தில் மூன்று வருஷ யுத்தத்தின் விளைவாக அவர்கள் அளவற்ற அலுப்பும் அடைந்திருந்தனர். மன உறுதி செயலற்றுப் போனதில் இது தெரிந்தது. தொழிற்சாலைகளில் தொழிலாளர்கள் வேலை செய்யவில்லை. போர் முனையிலிருந்த சிப்பாய்கள் போராடவில்லை. கீழ்ப் படிந்து நடக்கும் சக்தியையே மக்கள் இழந்துவிட்டனர். உத்தரவிட அதிகாரிகளால் முடியவில்லை விவசாயிகள் சர்க்கார் உத்தரவை எதிர்பாராமலே நிலங்களைப் பறித்துக் கொண்டனர். போர் முனையில் சிப்பாய்கள் பயங்கரமான அளவில் ராணுவத்தைத் துறந்துவிட்டுச்சென்றனர். சிப்பாய்கள் காலை முதல் இரவு வரை கூட்டங்கள் நடத்தினர். அதிகாரிகள் அவ்வளவு பேரும் சஸ்பெண்டு செய்யப்பட்டனர். மார்ச் 13-ம் தேதியன்று க்ரான்ஸ்டாட்டில் மாலுமிகள் பால்டிக் கடற்படைத் தலைவரையும் மற்றும் பல அதிகாரிகளையும் கொலை செய்து விட்டனர். மற்றும் பல அதிகாரிகள் கைது செய்யப்பட்டு சிறை

யில் · தள்ளப்பட்டனர். நகரங்களில் கொலைகளும் கொள்ளைகளும் அராஜகமும் தாண்டவமாடின. பூரண அழிவைத் தடுக்கப் புதிய அதிகாரிகள் பெரும் முயற்சி செய்ய வேண்டியிருந்தது.

லெனின் பெட்ரோக்ராடுக்கு வந்த மறுநாள் காலை பிரிந்து கிடக்கும் சக்திகளையெல்லாம் ஒரே கட்சியில் ஒன்று சேர்க்கக் கடைசி முயற்சியாக டாணட் அரண் மனையில் ஒரு மகாநாடு·நடத்தப்பட்டது. இந்தக் கூட் டத்தில் லெனின் விட்டுக் கொடுக்காத மனப்பான்மை காட்டி ஒரு பிரசங்கம் நிகழ்த்தினர். போல்ஷ்விக்கு களுக்காகத் தாம் வகுத்திருந்த கடுமையான கொள் கையை அவர் வற்புறுத்தினர். ஒற்றுமைக்கான நம் பிக்கையைச் சீக்கிரத்திலேயே தகர்த்து விட்டார்.

லெனின் பேசி முடித்தவுடன், போல்ஷ்விக் மத்திய கமிட்டியில் ஏற்கெனவே அங்கத்தினராக இருந்த ஜோஸப் கோல்டன் பர்க் பேசத் தொடங்கினர். வெளி நாட்டிலிருந்து அவர் அப்பொழுதுதான் திரும்பி வந் திருந்தார். லெனினை அவருக்கு நன்ருகத் தெரியும். அவருடன் சேர்ந்து வேலை செய்து அவருடைய மதிப் பைப் பெற்றிருக்கிருர். அவர் கஷ்டப்பட்டுத் தம் கோபத்தை அடக்கிக் கொண்டு பேசினர்.

"மாபெரும் அராஜக வாதியான பகுனின் இறந்த பின் வெகு காலமாகக் காலியாக இருந்த ஸ்தானத்தை நிரப்ப இப்பொழுது அவருக்கேற்ற ஒரு வாரிசு வந்து விட்டார். இப்பொழுது நாம் கேட்டது அவ்வளவும் சமூக ஜனநாயக தத்துவத்தை அடியோடு மறுப்பவை. அராஜகத்திற்கான தெளிவான வாதத்தை நாம் இப் பொழுது கேட்டோம். இதைப் பிரகடனம் செய்பவர் பகுனினின் வாரிசான லெனின். போராடும் நம்முடைய சமூக ஜனநாயகக் கட்சியின் தலைவரான லெனின், மார்க்ஸிஸ்டு லெனின் இப்பொழுது இல்லை. அராஜக வாதியான புதிய லெனின் இப்பொழுது பிறந்திருக் கிருர்" என்று கோல்டன் பர்க் கூறினர். வெளிநாட்டி லிருந்து வந்துள்ள நண்பர்களினுல் நாட்டிற்கு ஏற்பட் டுள்ள அபாயத்தை எதிர்த்துப் போராடுமாறு கூட்

டத்தினரை அவர் கேட்டுக்கொண்டார். பிற்காலத்தில் லெனின் ஆட்சியின் கீழ் "இஸ்வெஸ்தியா" பத்திரிகையின் ஆசிரியராக ஆன ஜார்ஜ் ஸ்டெக்லோவும் கிட்டத்தட்ட இதே போல்தான் பேசினார்.

லெனினுக்கெதிராகப் பேசப்பட்ட இந்தப் பேச்சுக்களைக் கண்டு தற்காலிக சர்க்காருக்கு தாங்கள் பத்திரமாக இருப்பதாக ஒரு போலி உணர்ச்சி ஏற்பட்டது. ஜெர்மன் உதவியுடன் அவர் ரஷியாவுக்குக் கொண்டு வரப்பட்டார் என்ற காரணத்தினால் மட்டும் போல்ஷ்விக்குகள் அழிந்து விடுவார்களென்று அவர்கள் நம்பினர். பெட்ரோக்ராடில் பிரெஞ்சு ஸ்தானீகராக இருந்த மாரிஸ் பாரியோ லோக், ஏப்ரல் 17, 18-ம் தேதிகளில் தம் டயரியில் எழுதியிருந்த குறிப்பிலிருந்து, லெனின் பலம் எவ்வளவு தவறாக மதிப்பிடப்பட்டது என்பது விளங்கும். "நேற்று லெனின், சோவியத்தில் படுதோல்வி அடைந்து விட்டதாக (அயல் நாட்டு மந்திரி) மிலியுகோவ் இன்று என்னிடம் கூறினார். அவர் பேச முடியாதபடி கூட்டத்தினர் சப்தமிட்டு விரட்டி விட்டதாகவும், இதிலிருந்து அவர் மீளவே முடியாதென்றும் மிலியுகோவ் சொன்னார். அப்படியே நாம் நம்புவோமென்று நான் பதில் சொன்னேன். மிலியுகோவின் இந்த நம்பிக்கைக்காக அவர் மறுபடியும் தண்டிக்கப்படுவாரென்று தோன்றுகிறது" என்று பாலியோலோக் எழுதினார்.

மார்ச் புரட்சிக்கு லெனினால் அபாயமில்லையென்ற பொதுக் கருத்திலிருந்து மாறுபட்டவர் அலெக்ஸாண்டர் கெரன்ஸ்கி ஒருவர் தானென்று வ்ளாடிமின்ஸென்ஸினேவ் கூறுகிறார். "இவன், (லெனின்) புரட்சியையே அழித்து விடுவான்" என்று கெரன்ஸ்கி அவரிடம் கூறியதாகச் சொல்கிறார்.

டாரைட் மாளிகைக் கூட்டம் முடிந்த சில தினங்களுக்குப் பின் லெனின் தம்முடைய பழைய போல்ஷ்விக் நண்பர்களின் கூட்டம் ஒன்றைக் கூட்டினார். இவர்களுடைய தற்போதைய கருத்து என்ன என்பது நிச்சயமாகத் தெரியவில்லை.

இந்தக் கூட்டத்தைப் பற்றி ஷகனேவ் பின் வருமாறு கூறுகிறார் :

"நிலைமை பற்றித் தம் தோழர்களுடன் விவாதிக்கவோ, விஷயங்களை எடுத்துக் கூறி அவர்களுக்குத் திருப்பி ஏற்படுத்தவோ லெனின் இந்தக் கூட்டத்தைக் கூட்டவில்லை; அவர்கள் தம் திட்டத்தை ஏற்றுக் கொள்கிறார்களா? அவர்கள் தமக்குப் பயன்படுவார்களா? என்பதை அறிவதற்காகவே இந்தக் கூட்டத்தைக் கூட்டினர். அவர்களில் ஒருவராவது அவர் கருத்துக்களை ஆதரிக்கவில்லை. இந்த 'துரோகிகளின்' பேச்சுக்களை அவர் மௌனமாகக் கேட்டுக்கொண்டிருந்துவிட்டு அனுப்பி விட்டார்.

இரண்டு நாளைக்குப் பின், லெனினின் பிரசித்தி பெற்ற ஏப்ரல் சித்தாந்தம் "ப்ராவ்தா" பத்திரிகையில் வெளியாயிற்று. நாடுகளிடையே யுத்தத்தை நிறுத்த உள்நாட்டு யுத்தம் ஒன்றுதான் வழி என்று அவர் பகிரங்கமாக இதில் கூறினர்.

இவ்வளவு காலமாக அவர் ஆதரித்து வந்த பார்லிமெண்டரி ஜனநாயக முறையை விட்டு சோவியத்தை ஆதரிக்கத் தொடங்கினர். கடந்த காலத் தொடர்பை முற்றிலும் விடும் பொருட்டு, சமூக ஜனநாயகக் கட்சி என்ற பெயரைக் கம்யூனிஸ்ட் கட்சி யென்று மாற்ற வேண்டுமென்றார்.

"சமூக ஜனநாயகத் தலைவர்களிலும் பெரும்பாலானவர்களும், பத்திரிகைகளிலும் பெரும்பாலானவர்கள் சோஷலிஸத்திற்கு துரோகம் செய்துவிட்டனர். மகா ஜனங்கள் இதைக் கண்டு ஆத்திரமடைகின்றனர். தாங்கள் ஏமாற்றப் பட்டுவிட்டதாக அவர்கள் நினைக்கின்றனர்.

"உலகத்தை முற்றிலும் மாற்றி அமைப்பது தான் நாம் இப்பொழுது செய்ய வேண்டிய வேலை. ஏகாதிபத்திய யுத்தத்தை நிறுத்தி, அதில் ஈடுபடுத்தப் பட்டுள்ள லக்ஷக்கணக்கான மக்களைக் காப்பாற்ற வேண்டும். பாட்டாளிப் புரட்சியில்லாமல் இதைச் செய்ய முடியாது. இந்தப் புரட்சி மனித ஜாதியின் சரித்திரத்

திலேயே மஹத்தானதாக இருக்கும்'' என்று லெனின் கூறினர்.

லெனின் சித்தாந்தம், குண்டு வெடித்தது போன்ற விளைவைத்தான் ஏற்படுத்தியதென்று பழைய போல்ஷவிக் ஒருவர் கூறுகிருர். அது பிரசுரமான சில தினங்களுக்குப் பின் "ப்ராவ்தா'' பத்திரிகையின் ஆசிரியர்கள் வெளியிட்ட ஒரு கட்டுரையில், "லெனின் சித்தாந்தம் ஏற்கத் தக்கதல்லவென்று நாங்கள் கருதுகிரேம்; பூர்ஷ்வா புரட்சி முடிந்துவிட்டதாகவும், இதை சோஷலிஸ்ட் புரட்சியாக உடனே மாற்ற வேண்டுமென்றும் அவர் கருதுகிருர்'' என்று குறிப்பிட்டிருந்தனர்.

லெனினின் நெருங்கிய சகாக்களே இந்த சித்தாந்தத்தை எதிர்த்தனர். லெனின் தம் கருத்துக்களை விளக்கிப் பல கட்டுரைகளும் துண்டுப் பிரசுரங்களும் வெளியிட்டார். போல்ஷ்விக் கட்சியைச் சேர்ந்தவர்கள் பிறகு சிறிது சிறிதாக அவரை ஆதரிக்கத் தொடங்கினர்.

லெனினுக்கு ஏற்கனவே இருந்த கஷ்டங்கள் போதாதென்று மாலிநேவ்ஸ்கி விவகாரம் மீண்டும் கிளம்பியது. ரகசியப் போலீஸ் தாஸ்தாவேஜுகளைத் தற்காலிக சர்க்கார் எடுத்துப் பார்த்த பொழுது உண்மை தெளிவாகத் தெரிந்தது. மாலிநேவ்ஸ்கி, போர்ட்னுய் என்ற மாறு பெயருடன் ரகசியப் போலீசுக்கு வேலை செய்து வந்தான். முக்கியமான எல்லா போல்ஷ்விக் கூட்டங்களையும் பற்றி அவன் ரகசியப் போலீசுக்குத் தகவல் கொடுத்தான். போலி பாஸ்போர்ட் வைத்திருந்த போல்ஷ்விக் தலைவர்கள் யார் யார் என்பதைக் காட்டிக் கொடுத்தான்; கட்சியின் ரகசிய அச்சுக்கூடம் இருந்த இடங்களைத் தெரிவித்தான். 1910-ல் போல்ஷ்விக் மத்தியக் கமிட்டி கைது செய்யப்பட்டதற்கு நேரடியான பொறுப்பு அவனுடையதே. "ப்ராவ்தா'' பத்திரிகை ஆசிரியர்களின் நடவடிக்கைகளைப் பற்றி அவன் விவரமாக அறிவித்தான்; பத்திரிகைக்கு நிதி உதவி அளிப்பவர்கள் யார், சந்தா

தாரர்கள் யார் என்பதையெல்லாம் ரகசியப்போலீசுக்கு அறிவித்தான். ஸ்டாலின், ஸ்வெர்ட் லோவ், ட்ரோய னேவ்ஸ்கியின் மனைவி ஆகியவர்கள் கைதியான தற்கும் அவன்தான் பொறுப்பு.

மாலினேவ்ஸ்கி டூமா பார்லிமெண்டில் நியமிக்கப் பட்ட போது அவனுடைய மாதச் சம்பளத்தை ஐநூறு ரூபிளிலிருந்து எழு நூறு ரூபிளாக ரகசியப் போலீஸ் தலைவரான பெலெட்ஸ்கி உயர்த்தினர். இதைத் தவிர நல்ல தகவல் கொடுக்கும் போதெல்லாம் அவனுக்கு ஏராளமான பணம் போனஸாகக் கொடுக்கப்பட்டது. பெலெட்ஸ்கியுடன் அவனுக்கு நேராகவே டெலிபோன் தொடர்பு இருந்தது. ஸெய்ண்ட் பீட்டர்ஸ்பர்க்கில் இருந்த உயர்ந்த ஹோட்டல்களில் அவரை அவன் அடிக்கடி சந்திப்பதுண்டு. டூமா பார்லிமெண்டில் இருந்த சமூக ஜனநாயகக் கட்சி கோஷ்டிகளின் மகஜர் களையும், "ப்ராவ்தா" பத்திரிகையில் வெளியான கட்டு ரைகளின் ப்ரூப்களையும் அவன் முன் கூட்டியே ரகசி யப் போலீசுக்கு அனுப்புவது வழக்கம். பெயரளவில் பத்திரிகையின் ஆசிரியராக இருந்த செர்னேமஸோவ் இதற்கெல்லாம் இடையூருக இல்லை. அவரும் ரகசியப் போலீஸ் ஏஜண்டே!

இந்த ஆபாஸமான உண்மைகளெல்லாம்வெளியே தெரிந்த பின், மாலினேவ்ஸ்கி ரகசியப் போலீஸ் ஏஜண்டே என்பதை லெனின் ஒப்புக்கொண்டார். ஆனல் பின் வருமாறு சமாதானம் கூறினர்.

"மாலினேவ்ஸ்கியினல் பல தனி நபர்களை அழிக்க முடிந்தது; அழிக்கவும் செய்தான். ஆனல் லக்ஷக் கணக்கான மக்களிடையே கட்சியின் செல்வாக்கு பரவியது அதைக் கட்டுப் படுத்தவோ மாற்றவோ மாலினேவ்ஸ்கியினல் முடியவில்லை" என்ருர் லெனின்.

மார்ட்டோவையும் மற்றவர்களையும் லெனின் தாக்கிய உக்கிரத்தைக் கவனிக்கும் பொழுது இது வெறும் நொண்டிச் சாமாதானம்தான். ஆனல் விவ காரம் இதோடு முடிந்து விடவில்லை.

இந்தப் புயல்கள் வீசிய போதிலும், 1917 மே 7-ம் தேதி முதல் 12-ம் தேதி வரை அகில ரஷிய போல்ஷ்விக் மகாநாடு நடைபெற்றபோது லெனின் பூரண அதிகாரம் பெற்றிருந்தார். மகா நாட்டில் நிறை வேற்றப் பட்ட முக்கிய தீர்மானங்கள் ஏப்ரல் சித்தாந் தத்தை அனுசரித்தவையாகவே இருந்தன.

கட்சியைப் பொறுத்த வரையில் சில பெரிய பிரச் னைகள் இதனால் லெனினுக்குச் சாதகமாகத் தீர்க்கப் பட்ட போதிலும், போல்ஷ்விக் தலைவர்களில் சிலர் லெனினை இன்னமும் எதிர்த்து வந்தனர். புரட்சியில் பிரத்யக்ஷ அனுபவம் பெற்றவர்களின் மாறுபட்ட கருத்தையும் கேட்க வேண்டுமென்று, ஜெர்ஷின்ஸ்கி (பிற்காலத்தில் சோவியத் ரகசியப் போலீசின் தலைவ ராக ஆனவர்) கோரினார். "பூர்ஷ்வா" ஜன நாயக ஆட்சியை ஆதரித்து லெனின் கருத்துக்கு மாறாகக் காமனேவ் பேசினார். டுமா பார்லிமெண்ட் மிதவாதி களை எதிர்த்து மென்ஷ்விக்குகளுடன் சேர்ந்து கூட்டு சர்க்கார் அமைப்பதைக் காலினின் ஆதரித்து வந்தார். "நாங்கள் பேசும்போதெல்லாம் இவர்கள் தோழர் லெனின் சித்தாந்தத்தைக் கிளப்புகின்றனர்" என்று ஸ்மிடோவிச் என்ற மாஸ்கோ போல்ஷ்விக் புகார் செய்தார். ஸ்டாலின் ஒன்றும் பேசவில்லை

முக்கிய போல்ஷ்விக்குகள் இத்தகைய கருத்துக் கொண்டிருந்த போதிலும், தற்காலிக சர்க்கார் "நிலப் பிரபுக்களாலும், முதலாளிகளாலும்" நடத்தப்படுவ தென்று மகாநாடு முடிவு செய்தது. "தேச பக்த மென்ஷ்விக்குகளுடன்" சேரும் யோசனையை அது நிரா கரித்தது. அதே சமயத்தில், ஜெர்மனியுடன் தனியாக சமாதானம் செய்து கொள்ள வேண்டுமென்பதை போல்ஷ்விக்குகள் ஆதரித்தார்கள், அல்லது ஆதரிப் பார்களென்பதையும் மகாநாடு மறுத்தது.

இந்தக் கொள்கை அறிவிப்புகளுக்குப் பின் கட்சி யிலிருந்து சிலர் ராஜிநாமாச் செய்தனர். லெனினின் பழைய நண்பரான விளாடிமின் வாய்டின்ஸ்கியும் ராஜி நாமா செய்தவர்களில் ஒருவர். காமனேவ் கருத்து

வேற்றுமை கொண்டிருந்த போதிலும் அவர் கட்சியி லிருந்து ராஜிநாமா செய்யவில்லை. "சோவியத்துகளுக் குப் பூரண அதிகாரம்" என்று லெனின் எழுப்பிய கோஷத்தின் பொருளைக் கட்சி அங்கத்தினர்கள் புரிந்து கொள்ளவில்லை. தொழிலாளர், விவசாயிகள், சிப்பாய்கள் ஆகியவர்களால் தேர்த்தெடுக்கப்பட்ட சோவியத்துகளே, ஜனநாயகப் புரட்சியின் கருத்தைப் பிரதிபலித்ததாகப் பாமர மக்கள் கருதினர். ஆனும் லெனினுக்கு, "எல்லா அதிகாரங்களும் சோவியத் துக்கே" என்ற கோஷம், போல்ஷ்விக் கட்சி சர்வாதி காரத்திற்கான சிறந்த போர்வையாக இருந்தது. பெட் ரோக்ராட் சோவியத்தில் க்ரான்ஸ்டாட் மாலுமிகளும் போல்ஷ்விக் சிப்பாய்களும் நிறைந்திருந்தனர். அதனுல் பதவியைக் கைப்பற்றுவதற்கான வசதியான நிலைமை தமக்குக் கிடைக்கு மென்று லெனின் நம்பினுர். லெனின் தம் நோக்கத்தை மக்களிடமிருந்து மாத்திர மின்றித் தம் சகாக்களிடமிருந்தும் மறைத்து வைத் திருந்தார்.

மகாநாட்டிற்குப் பின் போல்ஷ்விக்குகள் தங்கள் பிரசாரத்தை தீவிரப்படுத்தினர். மே மாதம் கடைசிக் குள் பெட்ரோக்ராட் சோவியத்தில் தொழிலாளர் பிரதி நிதிகளால் பெரும் பகுதியினர் போல்ஷ்விக் கட்சியை ஆதரிக்கத் தொடங்கி விட்டனர். பெட்ரோக்ராட் ராணு வத்தினரில் பலரும் லெனினுக்கு ஆதரவாகத் திரும்பத் தொடங்கியிருந்தனர்.

அயல் நாட்டு மந்திரி மிலியுகோவ் செய்த ஒரு பெரிய தவறினுல் லெனின் பலம் அதிகரித்தது. ஜெர் மனியின் மீது இறுதி வெற்றி கிடைக்கும் வரையில் ரஷிய மக்கள் நேச நாடுகளுடன் சேர்ந்து போராடுவார் களென்று ஒரு குறிப்பு அனுப்புமாறு ரஷிய ராஜ தந்திரிகளுக்கு மிலியுகோவ் மே 1-ம் தேதி ஓர் உத்தர விட்டார்.

இந்த உத்தரவு உடனே பலத்த கண்டனத்தை எழுப்பியது. மிலியுகோவ் ராஜிநாமாச் செய்ய வேண்டு மென்று ஆர்ப்பாட்டங்கள் நடத்தப்பட்டன. ஆங்

காங்கு தோன்றி வந்த ஸ்தலசோவியத்துகளை ஆதரிக்குமாறு மக்களை சோவியத் சபை கேட்டுக் கொண்டது. ஒவ்வொரு நாட்டு மக்களும் தங்கள் சர்க்கார்களை, நாடு பிடிப்போ நஷ்ட ஈடோ இல்லாமல் யுத்தத்தை நிறுத்துமாறு வற்புறுத்த முடியுமென்று சோவியத் தலைவர்கள் உறுதியாக நம்பினார்கள்.

மே 8-ம் தேதி சோவியத் நிர்வாகக் கமிட்டி கூடியது. சோவியத்தின் சமாதான யோசனையை ஏற்கும் எல்லாக் கட்சிகளும் அடங்கிய உலக சோஷலிஸ்ட் மஹாநாட்டைக் கூட்டுவதென்று அது முடிவு செய்தது. வெளிநாட்டுத் தலைவர்களைச் சந்தித்து மஹாநாட்டிற்கான ஏற்பாடுகளைச் செய்ய சோவியத் நிர்வாகக் கமிட்டியின் பிரதிநிதி கோஷ்டி ஒன்று நடுநிலைமை நாடுகளுக்கும் நேச நாடுகளுக்கும் செல்லவிருந்தது.

மிலியுகோவின் அறிவிப்பினால் எழுந்த கிளர்ச்சி, பெட்ரோக்ராடில் இரு ஆட்சிகள் இருக்கின்றனவென்பதைத் தெளிவு படுத்தியது. இந்த இரட்டை ஆட்சியின் விளைவாகப் போர் முனையிலும் உள்நாட்டிலும் நம்பிக்கைச் சீர்குலைவு அதிகரித்து வந்தது. தற்காலிக சர்க்காருக்கும் சோவியத்துக்கும் பிரதிநிதித்துவம் வகிக்கும் ஒரு கூட்டு சர்க்கார் ஏற்படுவது அவசியமாயிற்று. மே 12-ம் தேதி குச்கோவ் யுத்த மந்திரி பதவியை ராஜினாமாச் செய்தார். 6 நாளைக்குப் பின் மிலியுகோவ் தற்காலிக சர்க்காரிலிருந்து விலகினார். பிறகு மந்திரி சபையில் சேருமாறு சோவியத் தலைவர்களைப் பிரதம மந்திரி லுவோவ் கேட்டுக் கொண்டார்.

மே 17-ம் தேதியன்று லுவோவ் கூட்டு மந்திரி சபை அமைத்தார். அதில் கெரன்ஸ்கி யுத்த, கடற்படை இலாகா மந்திரியாக இருந்தார். புரட்சி சோஷலிஸ்ட் கட்சித் தலைவர். விக்டர் செர்னேவ், மென்ஷ்வாக் தலைவர் ட்ஸெரெடெல்லி ஆகியவர்கள் உள்பட 5 சோஷலிஸ்டுகள் மந்திரி சபையில் இருந்தனர்.

இந்தக் கலப்பு மந்திரி சபை முன்பு இருந்த ஆட்சியை விட அதிகப் பிரதிநிதித்துவம் வாய்ந்ததாக

இருந்தது. மத்தியதர வகுப்பு எதிர்ப்பு உணர்ச்சி அதிகரித்து வந்ததை இது பிரதிபலித்தது. ஆனால் உறுதியுடன் ஆட்சி நடத்துவதற்குத் தேவையான பலமோ அதிகாரமோ அதற்கு இல்லை. திறந்து விடப் பட்ட புரட்சி மடை இன்னமும் அப்படியே இருந்தது. சமாதான வாக்குறுதி, 1½ லக்ஷம் பேர் கொண்ட பெட் ரோக்ராட் ராணுவத்திற்குத் திருப்தி ஏற்படுத்தவில்லை. இவர்களைப் போர் முனைக்குப் போகுமாறு சொன்னால் போதும், மீண்டும் குழப்பம் மூண்டு விடும்.

சோஷலிஸ்ட் தலைவர்களும் மிதவாதத் தலைவர் களும்தான் இதை அணைபோட்டுக் கட்டுப்படுத்த முயன்று கொண்டிருந்தனர். அதிருப்தியடைந்த சிப் பாய்களும் க்ரான்ஸ்டாட் மாலுமிகளும், குடியானவர் களும் இந்த அணையைத் தாக்கிக் கொண்டிருந்தனர். மேலும் புரட்சி செய்வதன் மூலம் விமோசனம் அளிப்ப தாகக் கூறப்பட்ட வாக்குறுதிக்குத்தான் அவர்கள் செவிசாய்த்தனர். புரட்சியில் பலாத்காரத்தின் தேவை இன்னமும் தீர்ந்துவிடவில்லை. மக்களின் தீவிரமான புரட்சி உணர்ச்சியை அமைதியான ஜனநாயக சக்தி யாக மாற்ற சோஷலிஸ்ட் தலைவர்களும். தற்காலிக சர்க்கார் தலைவர்களும் வீண் முயற்சி செய்து வந்த னர். முன்னூறு வருஷமாக ருமானோவ் ஆட்சியையும், மூன்று வருஷங்களாக யுத்தக் கஷ்டங்களையும் அனுப வித்த ரஷிய மக்களின் காதில் ஏறுத பாஷையில் அவர் கள் பேசினர். பிரிட்டிஷ் தொழிற் சங்கத்தாரிடையே அவர்கள் இப்படி பேசியிருந்தால் அதிகப் பொருத்த மாக இருந்திருக்கும்.

பொறுமையிழந்த மக்கள் தங்கள் உள்ளக் குமுற லின் எதிரொலியை லெனின் போர்க் கோஷங்களில் கேட்டனர்.

**1917** ஜூன் 16-ம் தேதி பெட்ரோக்ராடில் ஆரம்ப மான அகில ரஷிய சோவியத் மகாநாட்டில் லெனினுக் கும் கெரன்ஸ்கிக்குமிடையே நடந்த வாதப் பிரதி வாதங்களில் இந்த மாறுபட்ட போக்குக்கள் தெளி வாகத் தெரிந்தன.

ரஷிய புரட்சி சோஷலிஸத்தில் புரையோடிப் போயிருந்த இருமை இந்த மகாநாட்டில் நன்ருக வெளிப்பட்டது.

ஜூன் 17-ம் தேதி இந்தக் கூட்டத்தில் லெனின் பேசினர். 1792-ல் கூடிய பிரெஞ்சுப் புரட்சி சபையின் மறு அவதாரமென்று சோவியத்தை அவர் வர்ணித்து விட்டு, அது தற்காலிக சர்க்காரிடமிருந்து எல்லா அதிகாரத்தையும் பறித்துக் கொள்ள வேண்டு மென்று வற்புறுத்தினர்.

பின்னர் கெரன்ஸ்கி பதிலளித்தார். லெனின் காட்டும் பாதை, ரஷிய மக்கள் புதிதாகப் பெற்ற சுதந்திரத்திற்கு முற்றுப் புள்ளி வைப்பதிலும், நாட்டைச் சீர் குலைப்பதிலும்தான் கொண்டு போய் விடுமென்று எச்சரித்தார்.

ஆனல் கூட்டத்திற்குப் பெரும்பான்மையாக வந்திருந்த சிப்பாய்களும் மாலுமிகளும் லெனினுக்குத் தான் கரகோஷம் செய்து தங்கள் பாராட்டுதலைத் தெரிவித்தனரே யன்றி கெரன்ஸ்கிக்குத் தெரிவிக்கவில்லை. சில தினங்களுக்குப் பின் போல்ஷ்விக்குகள் அளவு மீறிய ஒரு நடவடிக்கை எடுத்தனர்.

மஹா நாடு நடந்து கொண்டிருந்தபோதே, "எதிர்ப் புரட்சியை" எதிர்த்து, ஜூன் 22-ம் தேதி பிற்பகல் ஆர்ப்பாட்டங்கள் நடத்துமாறு, தொழிலாளர் வசித்த பகுதிகளில் நோட்டீஸ்கள் ஒட்டப்பட்டிருந்தன.

ஜூன் 22-ம் தேதி சோவியத் மாகநாட்டில் செகிட்ஸே பேசுகையில், இந்த ஆர்பாட்டத்திற்குப் பலதினங்களாக ரகசியமாக திட்டமிடப்பட்டதாக அறிவித்தார். யந்திரத் துப்பாக்கிப் படைகள் உள்படப் பல ராணுவப் படைகள் இதில் கலந்து கொள்ளப் போவதாகவும், இது காலா காலத்தில் தடுக்கப்படா விட்டால் பெட்ரோக்ராட் தெருக்களில் கொடிய போராட்டம் நடக்கு மென்றும் அவர் சொன்னர்.

போல்ஷ்விக் கட்சியின் மத்தியக் கமிட்டி இரவு முழுதும் யோசித்து, இந்த ஆர்பாட்டத்தை வாபஸ் பெறத் தீர்மானித்திருந்ததாக 23-ம் தேதி சோவியத்

மஹா நாடு கூடியபோது தெரிய வந்தது. அன்று காலை வெளிவந்த "ப்ராவ்தா'' பத்திரிகையின் முன்பக் கத்தில் பெரும் பகுதி இடம் காலியாக இருந்தது. ஆர் பாட்டம் நடத்துமாறு கோரும் போல்ஷ்விக் வேண்டு கோள் கடைசி நிமிஷத்தில் பத்திரிகையிலிருந்து எடுக் கப்பட்டுவிட்டது.

மஹா நாட்டின் காலைக் கூட்டத்திற்கு ட்ராட்ஸ்கி வந்திருந்தார். அவர் பேச வேண்டுமென்று பல பிரதி நிதிகள் கோரியும், தம் கருத்தை வெளியிட மறுத்து விட்டார். போல்ஷ்விக் கட்சியின் சார்பில் பேசுவது காமனேவின் விரும்பத்தகாத கடமையாகிவிட்டது. குழப்பம் விளைவிக்க வேண்டுமென்று போல்ஷ்விக்கு கள் விரும்பவில்லை யென்றும், சோவியத்தின் பெரும் பான்மைக் கருத்துக்கு கட்சி பணிந்ததாகவும் அவர் கூறினர்.

ட்ஸெரடெல்லி எழுந்து போல்ஷ்விக் கட்சியை உக்கிரமாகத் தாக்கினர். போல்ஷ்விக்குகளைச் சதிகாரர் களென்று அவர் இப்பொழுதுதான் முதல் முறையாக வர்ணித்தார்.

"ஆர்பாட்டத்தைப் பற்றிய உண்மை'' என்ற தலைப் புடன் ஜூன் 26-ம் தேதி "ப்ராவ்தா'' பத்திரிகை ஒரு கட்டுரை வெளியிட்டது. போல்ஷ்விக்குகளின் மீது ட்ஸெரடெல்லியின் குற்றச் சாட்டுகள் முழுப் பொய் யென்று அக் கட்டுரை கூறியது. ஆர்பாட்டம் பற்றிய விவரங்கள் பின்னர் தெரிந்தபோது, தற்காலிக சர்க் காரின் தலைமைக் காரியாலயமான மாரியென்ஸ்கி அரண்மனையைத் தாக்கவே போல்ஷ்விக்குகள் திட்ட மிட்டிருந்தனரென்பது தெரிந்தது. சில குறிப்பிட்ட கோஷ்டிகள் இலாகாக்களின்மீது படையெடுத்துச் செல்ல வேண்டுமென்றும், கட்சிப் பேச்சாளர்கள் வெளியே கூட்டத்தின் ஆத்திரத்தைக் கிளப்பிவிட வேண்டுமென்றும் சரியான சமயம் வந்தவுடனே தற்காலிக சர்க்கார் மந்திரிகளைக் கைது செய்ய வேண்டுமென்றும் உத்தேசித்திருந்தனர். பிறகு, போல்ஷ்விக் கட்சியின் மத்தியக்கமிட்டி சோவியத்தின்

பெயரால் தன்னைத்தானே ரஷியாவின் புதிய சர்க்காரென்று பிரகடனம் செய்துகொள்ள வேண்டுமென்பது திட்டம்.

போல்ஷ்விக்குகளின் இந்தச் சதி வெகுகாலத்திற்குப் பிறகுதான் வெளியே தெரிந்தது. 1917-ல் இவர்கள் மனம் புண்பட்டுவிட்ட பரம சாதுக்கள்போல் வேஷம் போட்டனர்.

ஜூன் மாதக் குழப்பத்திஞல் மென்ஷ்விக்குகளுக்கும் புரட்சி சோஷலிஸ்டுகளுக்கும் சோவியத்தில் தற்காலிகமாக ஆதிக்கம் கிடைத்திருந்தது. லெனின் கௌரவம் அப்போதைக்குக் கெட்டிருந்தது. அவருடைய கட்சி சாக்குகள் சொல்லிக்கொண்டு பின்வாங்க வேண்டியதாயிற்று. ஆனல் சோஷலிஸ்டுகள் தங்கள் பழைய தோழர்களின் மீது தீவிர நடவடிக்கை எடுக்கத் தயாராக இல்லை. இது அவர்களுக்கு ஒரு நல்ல பாடம்.

லெனின் அடுத்த நடவடிக்கைக்காகத் தம் பலத்தை மாற்றியமைப்பதற்கு முன்னல், தம் பழைய நண்பர் போஞ்ச் ப்ருயேவிச்சின் சொந்த ஊராகிய நீவோளாவில் ஒய்வெடுத்துக் கொள்ளச் சென்ருர். கடைசி மூன்று மாதத்தில் அவர் முற்றிலும் சளைத்துப் போய்விட்டார். பத்து வருஷ அரசியல் அக்ஞாத வாஸத்திற்குப்பின் பெட்ரோக்ராடின் புரட்சி வேகமும் போரின் பரபரப்பும் அவருடைய சக்தியை உறிஞ்சி விட்டன. மரநிழலில் ஜமக்காளத்தை விரித்துக் கொண்டு அவர் மணிக்கணக்கில் படுத்திருப்பார். தூக்கத்திஞலும் ஒய்விஞலும் அவருடைய ஆரோக்யம் சிறிது சிறிதாக அபிவிருத்தியடையத் தொங்கியது.

ஆர்பாட்டக்காரர் கூட்டங்கள் டூமா பார்லிமெண்டையும் டாணட் அரண்மனையையும் நோக்கிச் செல்வதாக ஸாவலீவ் அறிவித்தார். தெருக்களில் வெடி சப்தங்கள் கேட்டன. சர்க்கார் படைகளைத் திரட்டுவதாகவும், எந்த நிமிஷமும் ஆயுதப்போர் எதிர்பார்க்கப்படுவதாகவும் வதந்திகள் நிலவின.

லெனின் கஷ்டப்பட்டு தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்டார்.

இந்தச் செய்தியைக் கேட்டவுடன், “நான் போயாக வேண்டும்” என்ருர் அவர்.

முடிவு கட்டவேண்டிய காலம் வந்து விட்டது போலும்.

## 11. ஜூலைமாதக் கலவரம்

ஜூலை மாதக் கலகத்திற்குப் பல மாதங்களுக்கு முன்ஞலிருந்தே போர் முனைத் துருப்புக்களிடையேயும், பால்டிக் கடற் படை மாலுமிகளிடையேயும், முக்கிய நகரங்களில் நிறுத்தப் பட்டிருந்த படைகளிடையேயும் போல்ஷ்விக்கிளர்ச்சிக்காரர்கள் தீவிரமாக வேலை செய்து வந்தனர். ஜெர்மானியருடன் உறவு கொண்டாடுமாறு சிப்பாய்களிடமும், அரசியல் நிர்ணய சபைக்காகக் காத்திராமல் நிலத்தைக் கைப்பற்றுமாறு விவசாயிகளிடமும் கூறப்பட்டது. துப்பாக்கிகளைத் தூக்கி எறிந்துவிட்டு அவரவர் கிராமங்களுக்குத் திரும்பிச் செல்லுமாறு, துருப்புக்களிடையே விநியோகிக்கப் பட்ட பத்திரிகைகள் பிரசுரம் செய்தன.

தென் முனையில் பெருந் தாக்குதல் ஆரம்பித்து எதிரியைக் கடுமையாகத் தாக்குமாறு ஜூன் 29-ம் தேதி கெரன்ஸ்கி யுத்த மந்திரி என்ற முறையில் கேட்டுக் கொண்டார். சோவியத்துகளின் மத்திய நிர்வாகக் கமிட்டி ராணுவத்தினருக்கு ஒரு வேண்டுகோள் விடுத்து கெரன்ஸ்கியை ஆதரித்தது. 1917 ஜூலை 1-ம் தேதி ஜனரல் ப்ருஸிலோவ் காலீஷியப் போர் முனையில் தாக்குதலை ஆரம்பித்தார். ஆரம்பத்தில் ரஷியருக்குக் கணிசமான வெற்றிகள் கிடைத்தன. ஆனல் சீக்கிரத்திலேயே தாக்குதல் ஓய்ந்து போய்விட்டது. ஜூலை 19-ம் தேதிக்குள் ஜெர்மானியர் எதிர்த் தாக்குதல் ஆரம்பித்து விட்டனர். அவர்களுக்கு எதிர்ப்பும் முழு மனத்துடன் கூடியதாக இல்லை.

பெட்ரோக்ராட் துருப்புகளிடையேயும், க்ரான்ஸ்டாட் மாலுமிகளிடையேயும் கெரன்ஸ்கி தாக்

குதலுக்கு ஆரம்ப முதலே ஆதரவு இல்லை. ப்ரூஸிலோ வின் தாக்குதல் செய்வதற்கு முன்பே புதிய கலவரம் ஆரம்பமாகிவிட்டது.

ஜூலை 15-ம் தேதி இரவு போல்ஷ்விக் கட்சியின் மத்தியக் கமிட்டிக் கூட்டம் ஒன்று நடைபெற்றது. இரவு முழுதும் அதில் காரசாரமான விவாதம் நடந்தது. ஏற்கனவே கலகம் நெருங்கிக் கொண்டிருந்தது. இதற்கு போல்ஷ்விக்குகள் பூரண ஆதரவு அளிப்பதா அல்லது சோவியத்துக்குப் பணிவதா என்பதே இப் பொழுது போல்ஷ்விக்குகளின் பிரச்னை.

கலகத்திற்கு போல்ஷ்விக்குள் உத்தியோக பூர்வ மாகத் தலைமை வகித்து நடத்தலாமா என்பது பற்றி இரவு முழுதும் விவாதம் நடந்தது. நடத்தலாமென்று மாலையில் முடிவு செய்யப்பட்டு, அவ்விதமே ப்ராவ்தா வில் வெளியிட ஒரு பிரகடனம் தயார் செய்யப்பட்டது. ஆனால் கலகத்தை ஒடுக்க தற்காலிக சர்க்கார் சக்தி வாய்ந்த நடவடிக்கை எடுக்க ஏற்பாடுகள் செய்து வந்த தாகத் தகவல்கள் கிடைத்தன. ஆகையால் போல்ஷ்விக் தலைவர்கள் பின் வாங்கிவிட்டனர். அவர்களுடைய பிரகடனம் "ப்ராவ்தா" பத்திரிகையிலிருந்து கடைசி நிமிஷத்தில் நிறுத்தப்பட்டதால், பத்திரிகையில் அந்த இடம் காலியாகவே விடப்பட்டிருந்தது.

பின் வாங்குவதென்று மத்தியக் கமிட்டி தீர்மா னித்தபோதிலும், க்ரான்ஸ்டாட்டில் பலத்தைத் திரட்ட ஏற்கெனவே பிறப்பித்திருந்த உத்தரவை ரத்து செய்ய வில்லை. ஆயுதம் தாங்கிய க்ரான்ஸ்டாட் மாலுமிகள் பெட்ரோக்ராட் வந்திறங்கி, போல்ஷ்விக் கட்சிக் காரியாலயத்தை நோக்கி அணி வகுத்துச் சென்றனர்.

மாலுமிகளின் வருகையால் தலைநகரின் சூழ் நிலையே மாறிவிட்டது. பெட்ரோக்ராடுக்கு அவசர மாகத் திரும்பி வந்திருந்த லெனின் கேடிஸின்ஸ்கி அரண்மனைக்கு வெளியே கொந்தளித்துக் கொண்டு நின்ற மாலுமிகளைக் கண்டு தடுமாறத் தொடங்கினார். அவர்கள் கூட்டத்தில் அவர் பேசினார். அவர் பேச்சு பட்டும் படாமலிருந்தது. கலகம் செய்யு

மாறு மாலுமிகளிடம் அவர் சொல்லவில்லை. ஆர்பாட்டத்தை நீடிக்கும் படியும் அவர்களைத் தெளிவாகக் கேட்டுக் கொள்ளவில்லை. இதற்குப் பதிலாகத் தற்காலிக சர்க்காரைக் கடுமையாகத் தாக்கினார். "சமூகத் துரோகிகள்" என்று வர்ணித்து புரட்சியைப் 'பாது காக்கும் படியும்" போல்ஷ்விக்குகளிடம் விசுவாசமாக இருக்கும்படியும் மாலுமிகளை அவர் கேட்டுக் கொண்டார்.

க்ரான்ஸ்டாட்டில் செல்வாக்குப் பெற்றிருந்த லுனகார்ஸ்க்கியை இந்தச் சமயத்தில் லெனின் கண்டவுடன், அவரைப் பேசும்படி கேட்டுக் கொண்டார். லெனின் கருத்தை உணர்ந்த லுனகார்ஸ்க்கி, லெனின் பேசிய தோரணையிலேயே பேசிவிட்டு, மாலுமிகளின் அணிகளுக்கு முன்னால் நின்று அவற்றை டாணட் அரண்மனையை நோக்கி நடத்திச் சென்றார்.

சுமார் 20,000 பேர் கொண்ட அந்த மாலுமிகளின் அணிவகுப்பு சோவியத் தலைமைக் காரியாலயத்தை நோக்கிச் சென்ற போது ஆயுதம் தாங்கிய தொழிலாளர்களும் அதனுடன் சேர்ந்து கொண்டனர். கலகம் நடத்துமாறு உத்தரவிட போல்ஷ்விக் மத்தியக் கமிட்டி துணியவில்லை. ஆனால் கலகத்தின் வேகம் அதிகரித்தது.

சுமார் ஐந்து மணிக்கு மாலுமிகள் டாணுட் மாளிகையை அடைந்தனர். தற்காலிக சர்க்காரின சோஷலிஸ்ட் மந்திரிகள் வெளியே வர வேண்டுமென்று அவர்கள் ஆர்ப்பாட்டம் செய்தனர். புரட்சி சோஷலிஸ்ட் தலைவர் விக்டர் செர்னேவ் முதலில் வெளியே வந்தார். கூட்டத்தினர் அவரைக் கண்டவுடன், "அவனைச் சோதனை யிடுங்கள்; அவன் ஏதாவது ஆயுதம் வைத்திருக்கிறான பாருங்கள்" என்று கூச்சலிட்டனர்.

"அப்படியானால் நான் உங்களுடன் பேசுவதற்கு ஒன்றுமில்லை" என்று கூறிவிட்டு செர்னேவ் திரும்பிப் போக முயன்றார். அப்பொழுது கூச்சல் சற்றுத் தணிந்தது. செர்னேவ் அவர்களைச் சாந்தப் படுத்தும் முறை

யில் ஒரு சிறு பிரசங்கம் செய்தார். அவர் முடித்த வுடனே சில முறட்டு மாலுமிகள் அவரைப் பிடித்து ஒரு மோட்டாரில் அடைத்து பணயக் கைதியாக வைத்துக் கொண்டனர்.

இந்தச் செய்கையால் கூட்டத்தில் ஒரே குழப்பம் ஏற்பட்டது. சில தொழிலாளர்கள் மாளிகைக்குள் புகுந்து, செர்னேவ் தோழரைக் கூட்டம் கைது செய்து விட்டது. அவரை அக்கு அக்காகப் பிய்த்து விடுவார் கள்; அவரைக் காப்பாற்றுங்கள்" என்று கேட்டுக் கொண்டனர்.

மாளிகைக்குள்ளேயும் குழப்பம் மூண்டது. தலை வர் சிறிது அமைதி ஏற்படுத்தி, வெளியே சென்று, கூட்டத்தினரிடமிருந்து செர்னேவை விடுவிக்குமாறு காமனேவ், மார்ட்டோவ், ட்ராட்ஸ்கி ஆகியவர்களைக் கேட்டுக் கொண்டார். ட்ராட்ஸ்கி பேச முயன்றார். ஆனால் கூட்டத்தின் கூச்சல் குறையவில்லை.

கூட்டத்தினரின் கோரமான உணர்ச்சியைக் கண்டு ட்ராட்ஸ்கியே பயந்து போய் விட்டார். புரட்சி யைக் "காப்பாற்ற" வந்ததற்காக மாலுமிகளை அவர் பாராட்டினார். கூட்டத்தின் கூச்சலுக்கு மேல் அவர் தம் குரலை எழுப்பிப் பேசினார்.

"உங்கள் உறுதியை வெளியிடவும், பூர்ஷ்வாக் கள் பதவியில் இருப்பதைத் தொழிலாளிகள விரும்ப வில்லை யென்பதைச் சோவியத்துக்கு அறிவிக்கவும் நீங்கள் இங்கு வந்திருக்கிறீர்கள். தனி நபர்கள் மீது பலாத்காரச் செயல்கள் புரிவதன் மூலம் உங்கள் லக்ஷி யத்தைக் கறைப்படுத்திக் கொள்வானேன்? உங்கள் கவனத்தைப் பெற அவர்கள் தகுதியற்றவர்கள். புரட் சிக்காகத் தலையைக் கொடுக்கவும் தயாராக நீங்கள் ஒவ்வொருவரும் வந்திருக்கிறீர்கள் என்பதை நான் அறிவேன். இங்கே கை கொடுங்கள் நண்பரே! கை கொடுங்கள் தோழரே!" என்று ஒரு மாலுமியை நோக்கி அவர் கையை நீட்டினார். ஆனால் ட்ராட்ஸ்கியுடன் கை குலுக்க அவன் மறுத்து விட்டான்.

ஆனல் ட்ராட்ஸ்கியின் பேச்சைக் கேட்டபின் மாலுமிகளிடையே சிறிது அமைதி ஏற்பட்டது. செர்னேவை விடுதலை செய்தனர். அவர் ட்ராட்ஸ்கியுடன் கைகோர்த்துக்கொண்டு டாணட் மாளிகையில் பத்திர மான இடத்திற்குச் சென்ருர்.

சோவியத் தலைமைக் காரியாலயத்திற்கு வெளியே, க்ரான்ஸ்டாட். மாலுமிகளின் முன்னணியில், அடுத்த படி என்ன செய்வதென்பதைஅறியாமல் ராஸ்கோல்னி கோவ் நின்றிருந்தார். சந்தர்ப்பத்திற்கு ஏற்றபடி நடந்து கொள்ளுமாறு போல்ஷ்விக் மத்திய கமிட்டி அவருக்கு உத்தரவிட்டிருந்தது. சோவியத் மத்தியக் கமிட்டியைக் கைது செய்ய அவருக்கு இன்னமும் அதி காரம் இருந்தது. ஆனல் அவருக்கு நேரடியான உத் தரவு இல்லை. ட்ராட்ஸ்கி-செர்னேவ் சம்பவம் அவருக் குக் குழப்பம் விளைவித்திருந்தது. ஒன்றும் செய்யாம லிருப்பதும் அபாயம். ஏனெனில் க்ரான்ஸ்டாட் மாலுமி கள் கோரமான மனே நிலையில் இருந்தனர். அவர்கள் எந்த நிமிஷமும் அவருக்கெதிராகவே திரும்பினலும் திரும்பி விடுவார்கள்.

சிறிது நேரத்திற்குப் பின் மாலுமிகள் தாங்க ளாகவே கலைந்து சென்றனர். அவர்கள் சென்றவுடனே போல்ஷ்விக்குகளை ஆதரிக்கும் 176-வது ரிசர்வ் படை அங்கே தோன்றியது. புரட்சியைப் "பாதுகாக்கும்படி" தான் இவர்களுக்கும் உத்தரவு. ஆனல் அவர்களுக்கு மேற்கொண்டு உத்தரவிட போல்ஷ்விக்குகள் அருகில் இல்லை. அப்பொழுது மாலை மணி ஏழு. முதல் இரு போல்ஷ்விக் அலைகளும் ஓய்ந்தன.

சிறிது நேரத்திற்குப் பின் மூன்ருவது கூட்டம் ஒன்று டாணட் அரண்மனையை நோக்கி வந்தது. இது பிரம்மாண்டமான புடிலோவ் தொழிற்சாலைத் தொழி லாளர்களின் கூட்டம். அவர்களில் சிலர் தொழிற் சாலைக்குள் புகுந்து ட்ஸெரெடெல்லியைப் பார்க்க வேண்டுமென்றனர். அவர்களில் ஆயுதம் தாங்கிய ஒருவன் மேடை மீது ஏறிக் கத்தத் தொடங்கினன் செகீட்ஸே அவன் பேச்சை அமைதியாகக் கேட்டுக்

கொண்டிருந்துவிட்டு, பெட்ரோக்ராட் தொழிலாளருக்கு சோவியத் விடுத்த வேண்டுகோளை அவனிடம் கொடுத்தார். அமைதியாக வீடு திரும்புமாறு அது தொழிலாளரைக்கேட்டுக் கொண்டது. அதைப்படித்துவிட்டுக் குழப்ப மடைந்து நின்ற அவனை, மேடையிலிருந்து தள்ளினர். அவனுடைய தோழர்கள் அங்கிருந்து அகன்றனர்.

ஜூலைக் குழப்பம் அடங்கி விட்டது. போல்ஷ்விக் தலைவர்களின் தாமத புத்தியினாலும் க்ரான்ஸ்டாட் மாலுமிகள், 176-வது ரிசர்வ் படை, புட்லியோவ் தொழிலாளர் ஆகியவர்களின் ஒத்துழைப்பு போதிய அளவு இல்லாத தாலுமே அந்த எழுச்சி தோல்வியடைந்தது. ஜூலையில் கிடைத்த ஆரம்ப வெற்றிக்கு போல்ஷ்விக்குகளால் காரணம் கூறியிருக்க முடியுமா என்பதே சந்தேகம். அவர்களுக்கு ஜூலையில் இல்லாத பலம் பின்னர்தான் கிடைத்தது. ஆனால் அந்த சமயத்தில் அவர்கள் பெருந்தோல்வியடைந்தனர். கஸாக்குகளும் ஸ்தலப் படைகளும் சர்க்காருக்கு அளித்த ஆதரவு போல்ஷ்விக்குகளின் தோல்விக்கு ஒரு முக்கிய காரணம்.

லெனின், ஜினோவீவ், காமனேவ், லுனகார்ஸ்க்கி, ராஸ்கோல்னிகோவ், ஸ்ரீமதி கொல்லந்தாய் ஆகியவர்களைக் கைது செய்யுமாறு ஜூலை 10-ம் தேதி தற்காலிக சர்க்கார் உத்தரவிட்டது. ஜெர்மன் பண உதவியுடன் ஆயுதம் தாங்கிய கலகத்திற்குத் தூண்டியதாகக் குற்றச்சாட்டு. போல்ஷ்விக் காரியாலயத்தை சர்க்கார் துருப்புகள் ஆக்கிரமித்துக் கொண்டன.

"இப்பொழுது அவர்கள் நம்மைச் சுட்டுவிடுவார்கள்" என்று லெனின் ட்ராட்ஸ்கியிடம் கூறினார்.

"ஆனால் அதிருஷ்டவசமாக நம் எதிரிகளிடம் இதற்கு வேண்டிய ஒழுங்கோ, தைரியமோ இல்லை" என்று ட்ராட்ஸ்கி பதிலளித்தார்.

தற்காலிக சர்க்கார் வழக்கம் போல் தடுமாறியது.

ஜூலை 21-ம் தேதி லுவோவ் பிரதம மந்திரி பதவியை ராஜிநாமாச் செய்தார். கெரன்ஸ்கி பிரதம மந்திரி பதவியை ஏற்ருர்.

ஜூலை 19-ம் தேதி லெனினைக் கைது செய்யுமாறு தற்காலிக சர்க்கார் உத்தரவிட்ட போது அவரும் ஜினேவீவும், பழைய போல்ஷ்விக் ஊழியரான அலிலு யேவ் வீட்டில் சரண் புகுந்தனர். அலிலுயேவ்தான் பிற்காலத்தில் ஸ்டாலினின் மாமஞராக ஆஞர். 20-ம் தேதியன்று லெனின் தங்கை மேரியாவும், க்ரூப்ஸ் காயாவும் லெனினை அலிலுயேவ் வீட்டில் சந்தித்தனர். தப்பிச்செல்வதா, அல்லது விசாரணையை ஏற்பதா என்பது பற்றி லெனின் யோசித்து, இறுதியில் தப் பிச் செல்வதென்று தீர்மானித்தார்.

அன்று மாலை லெனின் அறை சோதனையிடப் பட்டது. 24-ம் தேதி, லெனின் வசித்து வந்த வீட்டில் ஒரு படை சோதனை நடத்தியது. லெனின் தங்கை, அன்ஞ, அவளுடைய கணவர், க்ரூப்ஸ்காயா ஆகிய வர்கள் கைது செய்யப்பட்டு மறுநாள் விடுதலை செய் யப்பட்டார்கள்.

பெட்ரோக்ராடின் நகர்ப்புறத்தில் ஒரு பழைய போல்ஷ்விக்கின் இல்லத்தில், லெனினும் ஜினேவீவும் தங்கியிருந்தனர். அவர்கள் தப்பிச் சென்ற இரு தினங் களுக்குப் பின் அவர்களுடைய கடிதம் ஒன்றை க்ரான்ஸ்டாட் போல்ஷ்விக் பத்திரிகையான "ப்ரால டேர்ஸ்காயீ டெலோ" பிரசுரித்தது.

"பொரவெர்ஸெவ்கள் கையிலும், மிலியுகோவ் களின் கையிலும் நாங்கள் சிக்குவது, ஆத்திரமடைந்த எதிர்ப் புரட்சிக்காரர்களின் கையில் சிக்குவதற்கு ஒப்பாகும். ஒழுங்கான பூர்ஷ்வா நாடுகளில் இருப்பது போன்ற அரசியல் சட்டபூர்வமான உத்தரவாதங் களைப்பற்றி அறிய இவர்கள் விரும்புவதில்லை...... எங்களைக் கைது செய்வதற்கு உத்திரவிட அரசியல் நிர்ணய சபைக்குத்தான் அதிகாரம் உண்டு" என்று அவர்கள் தங்கள் கடிதத்தில் எழுதியிருந்தனர்.

மறுநாள் ட்ராட்ஸ்கி லெனின் கட்சியை ஆதரித்து ஒரு கடிதம் பிரசுரித்தார். அக்கட்சியில் தாம் சேர, கடந்தகாலச் சரித்திரத்தின் காரணமாகவே இவ்வளவு நாள் தாமதித்ததாகவும், கடந்த காலச் சரித்திரம் இப் பொழுது அர்த்தமற்றதாகி விட்டதென்றும் அவர் தம் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார்.

லெனின் தப்பி ஓடிய பின் போலஷ்விக்குகளும் தற்காலிகமாக மறைந்திருந்தனர். சிறிது காலம்வரை அவர்களுடைய தலைவர்கள் பொதுக்கூட்டங்களுக்குக் கூட வர அஞ்சும் அளவுக்கு அவர்கள் மீது விரோதம் நிலவியது. "இஸ்வெஸ்தியா" பத்திரிகையின் எதிர் கால ஆசிரியரான ஸ்டெக்லோவ், தமக்கும் போல்ஷ்விக் கட்சிக்குமிடையே எவ்வித சம்பந்தமும் இல்லையென்று அறிவித்தார்.

அதே தினத்தில் போல்ஷ்விக் மத்தியக் கமிட்டி அங்கத்தினர்களில் பலரை ஷாட்மன் சந்தித்தார். லெனினையும் ஜினோவீவையும் பத்திரமான இடத்திற் குக் கொண்டு போகுமாறு அவரை மத்தியக் கமிட்டி அங்கத்தினர்கள் கேட்டுக்கொண்டனர்.

ஸெஸ்ட்ரோரெட்ஸ்க் தொழிலாளர்களைப்போல் அவர்கள் மாறு வேஷம் தரித்து, பினனிஷ் எல்லையைக் கடப்பதென்று கடைசியாக முடிவு செய்யப்பட்டது. இதற்கான தஸ்தாவேஜுகள் சுலபமாகத் தயாரிக்கப் பட்டன. லெனின் தம் மீசையையும் தாடியையும் க்ஷவரம் செய்துகொண்டு, தலையிலும் ஒரு டோபா வைத்துக்கொண்டார். ஜினோவீவ் தாடி வளர்த்துக் கொண்டு, அடர்த்தியான தம் தலை மயிரையும் குட்டை யாக வெட்டிக்கொண்டார். இந்த வேஷங்களுடன் எடுக்கப்பட்ட படங்கள் அவர்களுடைய போலி தஸ்தா வேஜுகளில் ஒட்டப்பட்டன.

லெனின் பின்லாந்துக்குச் செல்வதென்றும், ஜினோ வீவ் பின்னிஷ் ரயில்ரோடு அருகே லெஸ்னோயே என்ற இடத்தில் இருந்த ஒரு பின்னிஷ் தொழிலாளர் இல்லத் தில் தங்கியிருப்பதென்றும் திட்டம்.

ஃபின்னிஷ் பார்லிமெண்ட் அங்கத்தினர் ஒருவரின் உதவியுடன், ஹெல்ஸின்கி போலீஸ் கமிஷனரின் இல்லத்தில் லெனின் வசிக்க ஷாட்மன் ஏற்பாடு செய்தார். இதைவிட பத்திரமான இடம் வேறு எங்கே இருக்க முடியும்?

## 12. திருப்பம்

ஜுலை மாத மத்தியில் கலவரம் தோற்றதிலிருந்து செப்டம்பர் வரையில் போல்ஷ்விக் கட்சி செல்வாக்கை இழந்துகொண்டே வந்தது.

ஆனால் இந்த செல்வாக்குக் குறைவுக்குக் ஒரு முடிவு ஏற்படவிருந்தது. ஜுலை 30-ம் தேதி ஸாவிஸ்கோவை யுத்த இலாகா உதவி மந்திரியாகவும், ஜெனரல் கோர்னிலோவைச் சேனாதிபதியாகவும் கெரன்ஸ்கி நியமித்தார். ஜெனரல் கோர்னிலோவ் சிங்கத்தின் உள்ளமும், ஆட்டுக்குட்டியின் மூளையும் படைத்தவரென்று ஜெனரல் ப்ரூஸிலோவ் வர்ணித்திருந்தார். காலீஸியாவில் எட்டாவது ராணுவம் வாபஸானபோது கோர்னிலோவ் பிரபலமடைந்தார்.

கோர்னிலோவுக்கும் கெரன்ஸ்கிக்கு மிடையே மற்ற விஷயங்களில் பரஸ்பர நம்பிக்கை இல்லையென்றாலும் ராணுவ விஷயங்களில் அவர்களுக்கிடையே கருத்து ஒற்றுமை இருந்தது. போர் முனையில் சிப்பாய்களின் நம்பிக்கை சிதைவும், உள் நாட்டில் அதிகரித்து வரும் அமைதியின்மையும் இறுதியில் தோல்வியையும் பெருங் குழப்பத்தையுமே ஏற்படுத்துமென்று இருவரும் ஒப்புக்கொண்டனர். இதோடுகூட சோவியத்துக்களின் செல்வாக்கையும் போல்ஷ்விக் பெட்ரோக்ராடின் செல்வாக்கையும் அகற்ற வேண்டுமென்று கோர்னிலோவ் விரும்பினார். புரட்சியின் வலது கோடியில் இருந்த வியாபாரிகளுக்கும் ராணுவத்தினருக்கும் அவர், தாய் நாட்டுக்கு விமோசனமளிப்பவராகக் காட்சியளித்தார்.

ஆகஸ்ட் 19-ம் தேதியன்று அவர், மூன்றாவது குதிரைப் படையையும் மூர்க்கப் படையையும், மாஸ்கோ, பெட்ரோக்ராட் ஆகிய இடங்களுக்கருகே அவர் மாற்றினார். மற்றொரு கஸாக் படையை பெட்ரோக்ராடிலிருந்து நாற்பது மைலில் பின்லாந்தில் ஓரிடத்திற்கு மாற்றினார். இரண்டு வாரத்திற்குப்பின், ராணுவ காரியாலயத் தலைவர் ஜெனரல் லுகோம்ஸ்கியிடம், கோர்னிலோவ் தம் நடவடிக்கைகளைப்பற்றிப் பின்வருமாறு விளக்கிக் கூறினார்.

"லெனின் உள்பட, ஜெர்மன் உளவாளிகளையும் ஆதரவாளர்களையும் தூக்கிலிட்டு, சோவியத்தைக் கலைக்க வேண்டிய காலம் வந்துவிட்டது. குதிரைப் படையை ஆகஸ்ட் முடிவுக்குள் பெட்ரோக்ராடுக்குக் கொண்டுவர விரும்புகிறேன். மறுபடியும் ஆர்பாட்டம் நடந்தால் இந்த தேசத் துரோகிகளைத் தக்கபடி நடத்த வேண்டும். இந்த நடவடிக்கையை ஜெனரல் க்ரிமோவிடம் ஒப்படைக்க விரும்புகிறேன். அவசியம் ஏற்பட்டால் சோவியத் அங்கத்தினர் ஒவ்வொருவரையும் தூக்கிலிட அவர் தயங்கமாட்டாரென்பது நிச்சயம்" என்றார் கோர்னிலோவ்.

ஆகஸ்ட் 28-ம் தேதியன்று அகில ரஷிய ராஜாங்க மஹாநாடு ஒன்றை கெரன்ஸ்கி மாஸ்கோவில் கூட்டினார். எல்லாக் கட்சிகளையும் வகுப்புக்களையும் சேர்ந்த 2400 பிரதிநிதிகள் மஹாநாட்டிற்கு வந்திருந்தனர். போல்ஷ்விக்குகளும், மார்ட்டோவின் இடதுசாரி மென்ஷ்விக்குகளும், மஹாநாட்டை பஹிஷ்கரிக்குமாறு கோரியும், சோவியத் மத்திய நிர்வாகக் கமிட்டி தன் பிரதிநிதிகளை மஹாநாட்டுக்கு அனுப்புவதென்று தீர்மானித்தது.

மஹாநாடு ஆரம்பமான தினத்தன்றே ஸ்தல போல்ஷ்விக் ஸ்தாபனங்கள் கண்டன வேலை நிறுத்தம் நடத்துமாறு கேட்டுக்கொண்டன. வேலை நிறுத்தம் பூரண வெற்றியில்லாவிட்டாலும், மஹாநாட்டிற்குப் பொதுஜன ஆதரவு பூரணமாக இல்லையென்பதை அது காட்டியது.

கெரன்ஸ்கி நிகழ்த்திய முக்கிய பிரசங்கத்தில் சர்க்காரைக் கவிழ்க்க முயற்சிக்கும் புரட்சியின் விரோதிகள் ஒடுக்கப்படுவார்களென்று எச்சரித்தார். பிறகு கோர்னிலோவ் ராணுவத்தைப்பற்றிக் கவலையூட்டும் முறையில் பேசினார். ரஷியாவின் ராணுவ வீழ்ச்சியைத் தடுக்கக் கடுமையான நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று அவர் வற்புறுத்தினார். ராணுவத்தினர் அரசியல் கூட்டங்கள் நடத்துவதைத் தடுத்து, போர் முனையில் அமைக்கப்பட்டுள்ள சிப்பாய்க் கமிட்டிகளைக் கலைத்து, ராணுவத்தில் மீண்டும் கட்டுப்பாட்டை ஏற்படுத்த வேண்டுமென்று அவர் கோரினார்.

இவ்வளவு அழகான சொற்பொழிவுகள் நிகழ்த்தப்பட்டும் மாஸ்கோ மஹாநாடு ஒன்றையும் சாதிக்கவில்லை. கோர்னிலோவின் கோரிக்கைகளைக் கண்டு இடதுசாரிகள் திகிலடைந்தனர்; கெரன்ஸ்கியின் அழகான வாக்குறுதிகளைக் கேட்டுத் தாங்கள் அலுத்துவிட்டதாக வலது சாரிகள் கூறினர்.

செப்டம்பர் 3-ம் தேதியன்று ரீகாவை ஜெர்மானியர் கைப்பற்றினர். தலைநகருக்கு வரும் பாதைக்கு இதனால் அபாயம் ஏற்பட்டது. உடனே, பெட்ரோக்ராட் படையின்மீது தமக்கு நேரடியான அதிகாரம் வேண்டுமென்று கோர்னிலோவ் கேட்டார். அவ்விதமே அளிக்கப்பட்டது. ஆனால் பெட்ரோக்ராட் நகரம் மாத்திரம் தற்காலிக சர்க்கார் வசம் இருக்க வேண்டுமென்று கெரன்ஸ்கி வற்புறுத்தினார். பிற்போக்கு ஸ்தாபனமாகிய உத்தியோகஸ்தர் சங்கத்தையும் அரசியல் இலாகா தலைமைக் காரியாலயத்தையும் கலைக்க வேண்டுமென்று பிரதம மந்திரி கோரினார். கடைசியாகப் பெட்ரோக்ராடில் ராணுவச் சட்டத்தை அமல் நடத்தவும், தற்காலிகச் சர்க்காரைப் பாதுகாக்கவும் குதிரைப் படையை அனுப்புமாறு கெரன்ஸ்கி கேட்டார். காகேஷியத் துருப்புக்களைக் கொண்ட மூர்க்கப் படையோ, ஜெனரல் க்ரிமோவோ தலைநகருக்கு அனுப்பப்பட வேண்டாமென்று அவர் அறிவித்திருந்தார்.

மந்திரி சபை ராஜிநாமா செய்துவிட்டு, எல்லா ராணுவ, சிவில் அதிகாரங்களையும் சேனுதிபதியினிடம் ஒப்படைக்குமாறு செப்டம்பர் 7-ம் தேதியன்று கோர்னிலோவ் கோரினுர். 9-ம் தேதியன்று கெரன்ஸ்கி கோர்னிலோவை டிஸ்மிஸ் செய்து, பெடரோக்ராடுக்குத் திரும்பி வருமாறு உத்தரவிட்டார். கோர்னிலோவ் இதற்கு பதிலளிக்கும் முறையில் குதிரைப் படையைப் பெட்ரோக்ராடை நோக்கிச் செலுத்திஞர். அதிகாரத்தைக் கைப்பற்ற இது துணிச்சலான நடவடிக்கைதான். ஆனுல் இரவோடு இரவாக அது படுதோல்வியடைந்தது. புரட்சியைப் பாதுகாக்க சிப்பாய்களையும் தொழிலாளர்களையும் பெட்ரோக்ராட் சோவியத் கேட்டுக்கொண்டது. ரயில்வே தொழிலாளர்கள் கோர்னிலோவின் படைகளை ரயிலில் ஏற்றி அனுப்ப மறுத்தனர். தந்தி ஊழியர்கள் அவருடைய உத்தரவுகளை அனுப்ப மறுத்துவிட்டனர். கோர்னிலோவின் கஸாக் படைகள் போராடாதிருக்கும்படிக் கிளர்ச்சிக்காரர்கள் செய்துவிட்டனர், பெட்ரோக்ராட் தொழிலாளர்கள் சேர்ந்து ஒரு படை அமைத்துக் கொண்டனர். போல்ஷ்விக் புரட்சியின் காவற் செம்படையாக இது அமையவிருந்தது. உண்மையில் போரே நடக்கவில்லை. கோர்னிலோவின் படைகள் நகருக்கு வந்து சேர்வதற்குள் கரைந்துவிட்டது.

1917 செப்டம்பர் 12-ம் தேதி கெரன்ஸ்கி மஹா சேனுதிபதியானுர். கோர்னிலோவ் கைது செய்யப்பட்டார். செப்டம்பர் 14-ம் தேதி ரஷியா ஒரு குடியரசு நாடென்று பிரகடனம் செய்யப்பட்டது. ஆனுல் அதற்கு முந்தினநாள் பெட்ரோக்ராட் சோவியத், போல்ஷவிக்குகளால் கொண்டுவரப்பட்ட ஒரு தீர்மானத்தை முதல் முறையாக நிறைவேற்றியது.

கோர்னிலோவ் விவகாரத்திஞல் கெரன்ஸ்கிக்கும் ராணுவத் தலைமை, கன்ஸர்வெடிவ்கள் ஆகியவர்களுக்கு மிடையில் இறுதியாகப் பிளவு ஏற்பட்டுவிட்டது. ஆகையால் கெரன்ஸ்கி பெட்ரோக்ராட் சோவியத்தின் தயவையே நம்பியிருக்கவேண்டியதாகி

விட்டது. நம்பத் தகுந்த ராணுவம் அவரிடமில்லை. ஜூலையில் கைது செய்யப்பட்ட போல்ஷ்விக்குகள் புதிய நிலைமையில் விடுதலை செய்யப்பட்டனர். கோர்னிலோவின் வெற்றி பெருத முயற்சி, போல்ஷ்விக் நோக்கத்திற்கு ஒரு வரப்பிரஸாதமாகவே வந்தது. ஜூலையில் அவர்களுக்கு ஏற்பட்ட நஷ்டத்தைவிட இதனுல்அவர்களுக்கு அதிகலாபம் கிடைத்துவிட்டது. தொழிலாளர், சிப்பாய்கள், விவசாயிகள் ஆகியோரிடையே போல்ஷ்விக் செல்வாக்கு வேகமாக உயரத் தொடங்கியது.

கட்சியின் மத்தியக் கமிட்டிக்கு செப்டம்பர் 12-ம் தேதி லெனின் எழுதிய ஒரு கடிதத்தில் கெரன்ஸ்கியை எதிர்த்துப் போராடும் முறையை மாற்றவேண்டு மென்று குறிப்பிட்டிருந்தார். "கெரன்ஸ்கியை நாம் இப்பொழுது கவிழ்க்கக் கூடாது. அவரை எதிர்த்துப் போராட வேறு முறையை அனுஷ்டிப்போம். அதாவது, கெரன்ஸ்கியின் பலவீனத்தையும் தடுமாற்றத்தையும், கோர்னிலோவை எதிர்த்துப் போராடும் மக்களுக்கு எடுத்துக்காட்டுவோம். முன்புகூட இதைச் செய்திருக்கிருேம். ஆனுல் தற்சமயம் இதுவே முக்கியமாகிவிட்டது. அதுதான் மாறுதல்" என்று லெனின் தம் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார்.

கோர்னிலோவ் செய்த கலகம் பற்றிய செய்தி கிடைத்தவுடன் பல்வேறு நகரங்களிலும் ராணுவத்தினர் தங்கள் அதிகாரிகள் மீது வஞ்சம் தீர்த்துக் கொண்டனர். அவர்கள் பயங்கரமான முறையில் கொலை செய்யப்பட்டதாக சோவியத்துகளின் மத்திய நிர்வாகக் கமிட்டி வர்ணிக்கிறது. "முதல் மூன்று ஜெனரல்களையும் ஒரு கர்னலையும் சிப்பாய்கள் இழுத்துச் சென்று ஆற்றில் தள்ளி அவர்களைத் தண்ணீரிலேயே சுட்டுக் கொன்றனர். இதுபோல் 11 அதிகாரிகள் கொல்லப்பட்டனர்" என்கிறது கமிட்டி.

கோர்னிலோவ் சம்பவம் ராணுவத்தின் பலத்தின் மீது மிகவும் துரதிருஷ்டவசமான விளைவை ஏற்படுத்தியதாக ஒரு பார்வையாளர் கூறுகிருர். சிப்பாய்கள்

தங்கள் தலைவர்களிடமோ, சர்க்கார் பிரதிநிதி களிடமோ நம்பிக்கை கொள்ளவில்லை.

பெட்ரோக்ராட் தொழிலாளர்கள் ஏற்கனவே போல்ஷ்விக்குகளை ஆதரிக்கத் தொடங்கியிருந்தனர்.

அரசியல் நிர்ணய சபைக்கு நவம்பர் 25-ம் தேதி தேர்தல் நடத்துவதென்று தீர்மானிக்கப் பட்டிருந்தது. அரசியல் நிர்ணய சபை கூடும்வரை, இடைக்காலத்தில் வேலை செய்ய ஒரு தற்காலிகப் பார்லிமெண்டைக் கூட்டுவதென்று இடைக்கால சர்க்கார் தீர்மானித் திருந்தது. ஒற்றுமை ஏற்படுத்த கெரன்ஸ்கி செய்த கடைசி முயற்சி இது.

தம் கட்சி கலந்து கொள்கிறது என்பதை லெனின் கேள்விப்பட்டவுடன் பின்லாந்திலிருந்து மத்தியக் கமிட்டிக்கு ஆத்திரமாக ஒரு கடிதம் எழுதினார். அதன் கடுமையான பாஷையைக் கண்டு போல்ஷ்விக்குகள் ஆச்சரியமும் திகைப்பும் அடைந்தனர். "கட்சியின் சரித்திரத்திலேயே இந்த ஒரு முறைதான் லெனின் கடிதத்தை எரித்துவிடுவதென்று மத்தியக்கமிட்டி ஏகமனதாகத் தீர்மானித்தது. அப்பொழுது இந்த விஷயம் பிரசாரம் செய்யப்படவில்லை" என்று புகாரின் கூறியிருக்கிறார்.

ஆனால் லெனின் அதிகாரத்தைக் கைப்பற்ற வேண்டும் மென்பதையே வற்புறுத்திவந்தார். "போல்ஷ்விக்குகளுக்குச் சம்பிரதாய பூர்வமான பெரும்பான்மை கிடைக்கவேண்டுமென்று காத்திருப்பது அசட்டுத்தனம். எந்தப் புரட்சியும் அப்படிக் காத் திருப்பதில்லை. அதிகாரத்தை நாம் இப்பொழுது கைப் பற்றாவிட்டால் சரித்திரம் நம்மை மன்னிக்காது" என்று பெட்ரோக்ராடிலும் மாஸ்கோவிலும் இருந்த கட்சித் தலைவர்களுக்கு அவர் எழுதியிருந்த இரு கடிதங்களில் குறிப்பிட்டிருந்தார். அதிகாரத்தைக் கைப்பற்றுவதற்கான ராணுவ நடவடிக்கைகளையும் அக்கடிதங்களில் அவர் விவரித்திருந்தார்.

மாஸ்கோ மஹாநாடு தற்காலிக சர்க்கார் மீது அக் டோபர் 3-ம் தேதி நம்பிக்கை தெரிவித்தது. பூர்வாங்

கப் பார்லிமெண்டைக் கூட்டுவதையும் ஆதரித்தது அக்டோபர் 8-ம் தேதி தற்காலிக சர்க்கார் மாற்றி அமைக்கப்பட்டது. கெரன்ஸ்கி அதில் பிரதம மந்திரி யாக இருந்தார். எல்லா சோஷலிஸ்ட், மிதவாதக் கட்சிகளுக்கும் அதில் பிரதிநிதித்துவம் அளிக்கப் பட்டிருந்தது.

அதே தினத்தில் ட்ராட்ஸ்கி பெட்ரோக்ராட் சோவி யத்தின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். பழைய தலைவர் செகீட்ஸே, மென்ஷ்விக் தலைவர் ட்ஸெரடெல்லி புரட்சி சோஷலிஸ்ட்டுகளின் தலைவர் கோட்ஸ் ஆகிய வர்கள் சோவியத்தின் மத்தியக் குழுவிலிருந்து ராஜி நாமா செய்து விட்டனர்.

போல்ஷ்விக்குகளுக்கு ஆதரவு அதிகரித்து வருவ தாகச் செய்தி கேட்டவுடனே லெனின் பெட்ரோக் ராடுக்குத் திரும்பிவர வேண்டுமென்றார். ஆனால் அவர் திரும்பி வருவதைத் தள்ளிப் போடுமாறு போல்ஷ்விக் மத்தியக் கமிட்டி தீர்மானித்தது.

லெனின பொறுமையிழந்து, பெட்ரோக்ராட் செல் வதற்காக விபேக்குர்க்குப் போனார். லாடுக் என்ற பின்னிஷ் எழுத்தாளர் இல்லத்தில் லெனினை ஷாட்மன் சந்தித்தார். தாம் பெட்ரோக்ராட் வருவதை போல் ஷ்விக் மத்தியக் கமிட்டி தடை செய்வது உண்மையா என்பதுதான் அவருடைய முதல் கேள்வி. அவருடைய பத்திரத்திற்காகவே கமிட்டி இவ்விதம் தீர்மானித் திருப்பதாக ஷாட்மன் விளக்கிக் கூறினார். இதை எழுத்து மூலம் ஊர்ஜிதம் செய்யுமாறு லெனின் கேட் டார். ஷாட்மன் ஒரு காகிதத்தை எடுத்து, "வி. ஐ. லெனின் மறு அறிவிப்பு வரை பெட்ரோக்ராட் நகருக்கு வரக்கூடாதென்று ரஷிய சமூக ஜனநாயகத் தொழிற் கட்சி (போல்ஷ்விக் பிரிவின்) மத்தியக் கமிட்டி தீர்மா னித்திருக்கிறதென்பதை நான் ஊர்ஜிதம் செய்கிறேன்" என்று எழுதிக் கொடுத்தார்.

லெனின் அதை வாங்கி ஜாக்கிரதையாக மடித்து சட்டைப் பையில் வைத்துக்கொண்டு "இது இப் படியே போய்விட நான் விடப்போவதில்லை" என்று

சொல்லிக்கொண்டே அறையில் குறுக்கும் நெடுக்கு மாக அடிபோட்டு நடந்தார்.

அவருடைய ஆத்திரம் தணிந்தவுடன், தொழிலாள ரிடையேயும் கீழ் மத்தியதர வகுப்பினரிடையேயும் போல்ஷ்விக்குகளின் செல்வாக்கு அதிகரித்து வரு கிறது என்பதற்கான புள்ளி விவரங்களை ஷாட்மனிடம் காட்டினார். விவசாயிகள் குழப்பம் விளைவிப்பதாக கெரன்ஸ்கி புகார் செய்வது, கிராமாந்தரப் பகுதிகள் பஹிரங்கமாக போல்ஷ்விக்குகளின் பக்கம் திரும்பு கின்றன என்பதையே காட்டுகின்றன வென்றும், அதிகாரத்தைக் கைப்பற்றுவதற்கு ஏற்ற சமயம் இதுவேயென்றும் கூறினார்.

சர்க்காரை நடத்துவதற்கு வேண்டிய அனுபவம் வாய்ந்தவர்கள் போல்ஷ்விக்குகளிடையே இல்லையென் பதை ஷாட்மன் எடுத்துக் காட்டினார்.

"நிர்வாகத்தை நடத்துவதற்கு எந்தத் தொழிலா ளியும் சில தினங்களுக்குள்ளாகவே கற்றுக்கொண்டு விட முடியும். இதற்கு விசேஷத் திறமை ஒன்றும் தேவையில்லை. தொழில் நுட்பம் தெரிந்திருக்க வேண்டிய வேலைகளை கவனிப்பதற்கு, அவற்றிற் கேற்றவர்களை நிர்ப்பந்தித்து, அந்த வேலைகளை கவனிக்கும்படிச் செய்வோம்" என்று பதிலளித்தார் லெனின்.

விவரங்கள் பற்றி ஷாட்மன் கூறியவற்றிற்கெல் லாம் லெனின் பொறுமையாக பதிலளித்து வந்தார்.

"அதிகாரம் தங்களிடம் இருக்கிறது என்று ரஷிய மக்கள் நம்பும்படிச் செய்யும் சட்டங்களை இயற்றுவது தான் அடிப்படையான வேலை. இந்த உணர்ச்சி அவர் களுக்கு ஏற்பட்டுவிட்டால் புதிய ஆட்சியை அவர்கள் ஆதரிப்பார்கள். யுத்தத்தை முடிப்பதுதான் என் முதல் வேலை. இதைச் செய்தால் ராணுவத்தின் ஆதரவு கிடைக்கும். மன்னர், பிரபுக்கள், மாதா கோயில்கள் ஆகியவர்களின் நிலங்களைப் பறிமுதல் செய்து விவசாயிகளுக்குக் கொடுப்போம். தொழிற் சாலைகள் முதலாளிகளிடமிருந்து பறிக்கப்பட்டு

தொழிலாளரிடம் ஒப்படைக்கப்படும். இதையெல்லாம் செய்தால் பின்னர் போல்ஷ்விக்குகளை யார் எதிர்ப்பார்கள்? என்று லெனின் கேட்டார்.

செப்டம்பர் மாதக் கடைசியில், கலகத்திற்கு ஏற்பாடு செய்யுமாறு மத்தியக் கமிட்டிக்கு லெனின் ஒரு கடிதம் எழுதினார். கோர்னிலோவ் விவகாரத்திற்கு முன்னும் பின்னும் இருந்த நிலைமையை அவர் ஒப்பிட்டுக்காட்டி, இந்தத் தடவை கலகம் தோல்வியடையாது என்று எடுத்துக் கூறினார்.

தவிர, அகில ரஷிய சோவியத் காங்கிரஸ் மஹாநாட்டுக்காகக் காத்திருப்பது விரும்பத்தக்கதல்லவென்றும் லெனின் கருதினார்.

"மஹாநாட்டுக்காகக் காத்திருப்பது முட்டாள்தனம்; அதற்காகப் பல வாரங்கள் காத்திருக்க வேண்டும். இப்பொழுதெல்லாம் சில நாட்களுக்குள்ளாகவே எவ்வளவோ காரியங்கள் முடிந்துவிடுகின்றன" என்று அக்டோபர் 12-ம் தேதி அவர் ஒரு கடிதத்தில் எழுதினார்.

"முதலில் கெரன்ஸ்கியைத் தோற்கடியுங்கள்; பிறகு மஹாநாட்டை கூட்டுங்கள்" என்றார் அவர். இப்பொழுது கலகம் செய்தால் போல்ஷ்விக்குகளுக்கு வெற்றி நிச்சயமென்றும் கூறினார். "பெட்ரோக்ராட், மாஸ்கோ, பால்டிக் கடற்படை ஆகியவற்றிலிருந்து உடனே தாக்கினால் வெற்றி பெற முடியும். ஜூலையில் செய்யவேண்டியிருந்த அளவு தியாகங்கள்கூட இப்பொழுது செய்யவேண்டியிருக்காது" என்றார்.

"அதிகாரத்தைப் பாதுகாத்துக்கொள்ள போல்ஷ்விக்குகளால் முடியுமா?" என்ற பிரசுரத்தை அக்டோபரில் எழுதி முடித்தார் லெனின். அதிலிருந்த விஷயத்தைவிட அதன் தலைப்பு முக்கியமானதாகும். போல்ஷ்விக்குகளால் அதிகாரத்தைக் கைப்பற்ற முடியுமா என்ற பிரச்னை இப்பொழுது அவர் மனத்தில் இல்லை. அதிகாரத்தில் இருக்கத் தங்களால் முடியுமா என்பதைப் பற்றித்தான் யோசித்து வந்தார்.

அக்டோபர் 20-ம் தேதி பூர்வாங்கப் பார்லிமெண்டின் கூட்டம் ஆரம்பமாயிற்று. புரட்சி சோஷலிஸ்ட் தலைவர் நிகோலாய் ஆவ்கஸ்ஸென்ஸ்டீவ் தலைமை வகித்தார். லெனின் வற்புறுத்தலின்பேரில் அதை பகிஷ்கரித்து போல்ஷ்விக் மத்தியக் கமிட்டி ஒரு தீர்மானம் நிறைவேற்றியது. போல்ஷ்விக் வாபஸை அறிவிக்கும் செய்தியை ட்ராட்ஸ்கி படித்தார். "பூர்ஷ்வா வர்க்கத்தினர் அரசியல் சார்பு அற்றவர்கள்போல் தோன்றினாலும், அரசியல் நிர்ணய சபை ஏற்படாமல் செய்வதை நோக்கமாகக் கொண்டிருக்கின்றனர். இந்த தேசத்துரோக சர்க்காருக்கும் போல்ஷ்விககுகளாகிய எங்களுக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லையென்பதை இதன்மூலம் அறிவிக்கிறோம். அரசியல் நிர்ணய சபை நீடுழி வாழ்க" என்றார் ட்ராட்ஸ்கி. "அயோக்கியன்" என்று வலது சாரிகள் கோஷித்தனர்.

பின்லாந்தில் இருந்த துருப்புக்களையும் மாலுமிகளையும் திரட்டும் வேலையை, ஹெல்ஸிங்போர்ஸ் பிரதேசத் துருப்புகள் — மாலுமிகள் — தொழிலாளர் கமிட்டித் தலைவரான ஸ்மில்கஷிடம் லெனின் ஒப்படைத்தார். ராணுவத்தினர் பற்றிய சரியான தகவல்களைச் சேகரித்து, மிகவும் நம்பக்கமானவர்களை ஒன்று திரட்டுமாறும், புரட்சி சோஷலிஸ்ட்டுகளின் ஆதரவையும் பெறுமாறும் அவருக்கு லெனின் யோசனை கூறினார். தற்காலிக சர்க்காரிடமிருந்து பெட்ரோக்ராட் சோவியத்து அதிகாரத்தை மாற்ற உடனே கிளர்ச்சி ஆரம்பிக்க வேண்டுமென்றார். ஸ்தலக் கமிட்டித் தலைவரின் கையெழுத்துடன் தமக்கு ஓர் அடையாளப் பத்திரம் அனுப்பும்படியும், எல்லா விதத்திலும் தம்முடன் ஒத்துழைக்க அனைவருக்கும் உத்தரவிடுமாறும் அவர் கோரினார்.

சில தினங்களுக்குப் பின், ஷாட்மன், லெனினைச் சந்திப்பதற்காக விபோர்க் செல்லும் வழியில் ஸ்டேஷனில் ரகியாவைச் சந்தித்தார். "விபோர்க்குக்குப் போக வேண்டிய அவசியமே இல்லை" என்று ரகியா அறிவித்தார். லெனின் பெட்ரோக்ராடுக்குத் திரும்பி வந்துவிட்டார்.

# 13. லெனின் கையில் அதிகாரம்

லெனின் பெட்ரோக்ராடுக்குத் திரும்பி வந்தவுடனேயே ஆயுதம் தாங்கிய கலகத்திற்கு ஏற்பாடு செய்யத் தொடங்கிவிட்டார். 1917 அக்டோபர் 23-ம் தேதி போல்ஷ்விக் மத்தியக் கமிட்டியின் ரகசியக் கூட்டம் ஒன்று நடந்தது. ஜினோவீவ், காமனேவ், ஸ்டாலின், ட்ராட்ஸ்கி, ஸ்வெர்ட்லோவ் முதலியவர்கள் கூட்டத்திற்கு வந்திருந்தனர். அரசியல் நிர்ணய சபையைக் கூட்டும்வரையில் போல்ஷ்விக்குகள் நடத்தும் கலவரம் காத்திருக்கக் கூடாதென்று லெனின் வற்புறுத்தினர். "இப்பொழுது உள்ள சர்வதேச நிலைமையில் நாம் இப்பொழுதே ஆரம்பிக்க வேண்டும். பேச்சுக்களையும் தீர்மானங்களையும் கேட்டு அலுத்துவிட்டதால்தான் ஜனங்கள் அலக்ஷியமாக இருக்கின்றனர். பெரும்பான்மையோர் நம் பக்கம்தான் இருக்கின்றனர். அரசியல் நிர்ணய சபைக்காகக் காத்திருப்பது அபத்தம். அது நமக்கு பாதகமாகத் தான் இருக்கும். நம் வேலையை அது அதிக கஷ்டமாகவே செய்யும்" என்று லெனின் வாதித்தார்.

லெனின் கோரிக்கைபற்றி நீண்ட நேரம் கடுமையான விவாதம் நடந்தது. பொழுது விடியும் சமயத்தில் லெனின் இறுதியாக வெற்றி பெற்றுர்.

இதைப்பற்றி ட்ராட்ஸ்கி தம் சுய சரிதத்தில் பின் வருமாறு குறிப்பிட்டிருக்கிறுர். "ஒரு குழந்தையின் நோட்டுப் புத்தகத்திலிருந்து கிழிக்கப்பட்ட கட்டம் போட்ட காகிதத்தில் ஒரு பென்ஸில் துண்டால் தீர்மானத்தை லெனின் எழுதினுர். 'ஆயுதக் கலகத்திற்கு ஏற்பாடு செய்யுமாறு கட்சி கேட்டுக் கொள்ளுகிறது' என்பதுதான் தீர்மானம். இதற்குச் சாதகமாக 10 வோட்டுக்களும் எதிராக 2 வோட்டுக்களும் கிடைத்தன" என்று கூறுகிறுர் ட்ராட்ஸ்கி.

மேலும் தாமதிப்பது விபரீதமென்று லெனின் சில தினங்களுக்குப்பின் மீண்டும் எச்சரித்தார்.

"விவசாயிகளின் குழப்பங்கள் அதிகரித்து வருகின்றன. குடியானவர்களுக்கெதிராக சர்க்கார் மிருகத்தனமான நடவடிக்கைகள் எடுத்துவருகின்றன. ராணுவத்தில் நம் மீது அபிமானம் அதிகரித்து வருகிறது. மாஸகோ ராணுவத்தினரில் 99 சத விகிதம் பேர் நம் பக்கமிருக்கின்றனர். பின்லாந்தில் உள்ள ராணுவமும் கடற்படையும் சர்க்காரை எதிர்க்கின்றன.

"இந்த நிலையில் மேலும் 'காத்திருப்பது' குற்றமாகும். சோவியத்துகளின் காங்கிரஸ் கூடுவதற்காக போல்ஷ்விக்குகள் காத்திருக்க உரிமையில்லை. இவர்கள் உடனே அதிகாரத்தைக் கைப்பற்ற வேண்டும். இவ்விதம் செய்தால் இவர்கள் உலகப் புரட்சியைக் காப்பாற்றியவர்களாவார்கள். இல்லையானல் ஏகாதிபத்திய வாதிகள் நமக்கெதிராக ஒன்று சேர்ந்து விடுவார்கள்..." என்று லெனின் கூறினுர்.

இதற்கிடையில் லெனின் தொழிலாளர்களையும் சிப்பாய்களையும் கெரன்ஸ்கிக் கெதிராக கிளப்பிவிட்டுக் கொண்டேயிருந்தார். கெரன்ஸ்கியைக் கவிழ்த்தவுடனேயே போல்ஷ்விக்குகள் நிலங்களைக் குடியானவர்களுக்குப் பிரித்துக் கொடுத்து விடுவார்களென்றும் ஜனநாயக உரிமைகளையும் ஸ்தாபனங்களையும் புனர் நிர்மாணம் செய்வார்களென்றும், 'ஒருவராலும்' கவிழ்க்க முடியாத சர்க்காரை அமைப்பார்களென்றும் அவர் திரும்பத் திரும்பச் சொன்னுர்.

சில அங்கத்தினர்கள் இன்னமும் தடுமாறினுர்கள். ஆனுல் பெரும்பாலோர் உடனே நடவடிக்கை எடுக்கத் தீர்மானித்தனர். ட்ராட்ஸ்கியின் முயற்சியினுல் பெட்ரோக்ராட் சோவியத் கலகத்தை நடத்துவதற்காக ராணுவப் புரட்சிக் கமிட்டி ஒன்றை அமைத்தது. இறுதி ஏற்பாடுகளைச் செய்ய கட்சியின் மத்தியக் கமிட்டியும் ஏழு பேர் அடங்கிய ஒரு குழுவை (பாலிட் பீரோ) நவம்பர் 5-ம் தேதி அமைத்தது. ஆனுல் உண்மையில் கலகத்தை முன் நின்று நடத்தியது ராணுவப் புரட்சிக் கமிட்டிதான்.

ராணுவத்தின்மீது அதிகாரம் பெறுவதற்காக ராணுவப் புரட்சிக் கமிட்டி, பெட்ரோக்ராடிலும் அதன் சுற்றுப்புறங்களிலும், ஒவ்வொரு ராணுவப் படைக்கும் ஒவ்வொரு பிரதிநிதியை நியமித்தது. இந்தப் பிரதிநிதிகள் நவம்பர் 3-ம் தேதி இரவு பெட்ரோக்ராடுக்கு அனுப்பப்பட்டனர். "இனி பெட்ரோக்ராடில் எல்லா அதிகாரமும் ராணுவப் புரட்சிக் கமிட்டிக்கு மாறிவிட்டது" என்று அக் கமிட்டி ஓர் உத்தரவு பிறப்பித்தது. இந்த உத்தரவுப்படி ராணுவம் கமிட்டியின் உத்தரவுப்படிதான் நடக்க வேண்டும். கமிட்டியின் உத்தரவுகள், அதன் பிரதேசப் பிரதிநிதிகளின் மூலம் அறிவிக்கப்படும்.

இதற்கிடையில் நவம்பர் 6-ம் தேதியன்று மத்தியக் கமிட்டிக்கு லெனின் ஒரு கடிதம் எழுதினார்.

"இந்த விஷயத்தை இன்று மாலை அல்லது இரவே அவசரமாக முடிவு செய்தாக வேண்டும்.

"புரட்சிக்காரர்கள் வெற்றிபெறக் கூடிய சமயத்தில் கடமையைச் செய்யத் தவறினால் அவர்களைச் சரித்திரம் மன்னிக்காது. இன்று கலகம் செய்தால் வெற்றி நிச்சயம். நாளைவரை தள்ளிப்போட்டால் எல்லாவற்றையும் இழக்கக்கூடும்.

"அதிகாரத்தைக் கைப்பற்றுவது கலகத்தைப் பொறுத்திருக்கிறது. இதன் அரசியல் நோக்கம் அதிகாரத்தைக் கைப் பற்றிய பின் விளங்கும்.

"நவம்பர் 7-ம் தேதி வோட்டுக்காகக் காத்திருப்பது விபரீதமாக முடியக்கூடும். அல்லது அது வெறும் சம்பிரதாயமாக இருக்கும். இதுபோன்ற பிரச்னைகளை பலாத்காரத்தின் மூலம் முடிவு செய்ய மக்களுக்கு உரிமையும் கடமையும் உள்ளது. புரட்சியின் நெருக்கடியான கட்டங்களில் தங்கள் சிறந்த தலைவர்களுக்குக்கூட உத்தரவிட மக்களுக்குக் கடமையும் உரிமையும் உண்டு" என்று லெனின் எழுதினார்.

தற்காலிக சர்க்காரிடம் படை பலம் மிகக் குறைவாக இருந்ததென்பது தெரிந்தது. அது தாக்கும் வரை காத்திராமல் ராணுவப் புரட்சிக் கமிட்டியே தன்

னிடம் உள்ள வசதிகளைக் கொண்டு முதலில் தாக்கிச் சர்க்காரைக் கவிழ்ப்பதென்று தீர்மானிககப்பட்டது. குளிர்கால மாளிகையை ஆக்கிரமித்துக் கொண்டு, மந்திரிகளைக் கைது செய்ய திட்டமிடப்பட்டது. சர்க்கார் பணியமறுத்தால் "ஆரோரா" என்ற க்ருய்ஸர் கப்பலிலிருந்தும், ஸெய்ண்ட் பீட்டர், ஸெய்ண்ட்பால் கோட்டைகளிலிருந்தும் தாக்குவதென்று தீர்மானிக் கப்பட்டது.

இந்த நடவடிக்கைகளை நடத்தும் பொறுப்பு அண்டோனேவ், சுட்னேவ்ஸ்கி, போட் வாய்ஸ்கி ஆகியவர்களிடம் ஒப்படைக்கப்பட்டது. குளிர்கால மாளிகையை நவம்பர் 7-ம் தேதி இரவு தாக்க வேண்டுமென்பது திட்டம். இதற்கான தலைமைக் காரியாலயம் ஸெய்ண்ட் பீட்டர், ஸெய்ண்ட் பால் கோட்டைகளில் அமைக்கப்பட விருந்தன. தாக்குதலை ஆரம்பிப்பதற்கு முன்னுல் சர்க்காரிடம் ஒரு தூது கோஷ்டியை அனுப்பி, ஆயுதங்களை ஒப்படைத்து, மாளிகையைக் காலி செய்துவிட்டுச் சரணடையுமாறு கோருவதென்று கடைசிக் கூட்டத்தில் தீர்மானிக்கப் பட்டது. இருபது நிமிஷத்திற்குள் பதில் வரவில்லையானுல் ஆரோரா கப்பல் சுட வேண்டுமென்றும், மற்றப் படைகளும் மாளிகையைத் தாக்கவேண்டுமென்றும் திட்டமிடப்பட்டிருந்தது.

கலகம் நடத்த லெனின் திட்டமிட்டிருக்கிருர் என்பதற்கு மறுக்க முடியாத அத்தாட்சி கிடைத்திருப்பதாக நவம்பர் 6-ம் தேதியன்று கெரன்ஸ்கி அறிவித்தார். அதை ஒடுக்க சர்க்கார் நடவடிக்கை எடுத்து வருவதாகவும் ஆயுத பலத்தை உபயோகிக்க சர்க்கார் தயங்காதென்றும் கூறி, இதற்கு எல்லாக் கட்சிகளின் ஆதரவும் மக்கள் அனைவரின் ஒத்துழைப்பும் தேவையென்றும், பூர்வாங்கப் பார்லிமெண்ட் நம்பிக்கையும் ஒத்துழைப்பும் அளிப்பது அவசியமென்றும் கேட்டுக் கொண்டார்.

பூர்வாங்கப் பார்லிமெண்டில் தற்காலிக சர்க்காருக்குப் போதிய அளவு பெரும்பான்மை ஆதரவு இல்லை.

அவர்களில் முக்கியமானவர் தியோடார்டான் என்ற இடது சாரி மென்ஷ்விக். அவர் கொண்டுவந்த ஒரு தீர்மானத்தில் போல்ஷ்விக்குகளை வன்மையாகக் கண்டித்தார். ஆனால் அதே சமயத்தில், "சமாதானத்திற்கான போராட்டத்தில் திட்டமான நடவடிக்கைகள் எடுக்கவேண்டும்; எஸ்டேட் நிலங்களைக் குடியானவர்களுக்கு மாற்றித் தரவேண்டும்; எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் அரசியல் நிர்ணய சபையைக் கூட்டவேண்டும்" என்று ஒரு தீர்மானம் கொண்டுவந்தார். "போல்ஷ்விக்குகள் நடத்த உத்தேசித்துள்ள கலகத்தினால் நாட்டில் நிச்சயம் நெருக்கடி ஏற்படும். புரட்சி ஜனநாயகம் ஆயுதம் எடுத்து அதனுடன் போராட்முடியாது. போல்ஷ்விக் இயக்கத்தை ரத்த வெள்ளத்தில் மூழ்கடித்து விட்டால் மூன்றாவது சக்தி ஒன்றுக்குத்தான் உண்மையான வெற்றி கிடைக்கும். அந்த சக்தி போல்ஷ்விக்குகள், இடைக்கால சர்க்கார், ஜன நாயகம் எல்லாவற்றையும் சேர்த்து அடித்துக்கொண்டு போய்விடும்" என்று டான் கூறினார். வரும் கலகத்தின் பொறுப்பை போல்ஷ்விக்குகள் தற்காலிக சர்க்கார் இருவர்மீதுமே அவர் தீர்மானம் சுமத்தியது. ஜன நாயகப் புரட்சியைப் பாதுகாக்கும் பொறுப்பை பொதுப் பாதுகாப்புக் கமிட்டி ஒன்றினிடம் ஒப்படைக்குமாறு அவர் கேட்டுக் கொண்டார்.

தீர்மானம் நிறைவேறியவுடன் தற்காலிக மந்திரி சபையின் கூட்டத்திற்குச் சென்றார். உடனே யுத்தத்தை நிறுத்துமாறு யுத்தத்தில் ஈடுபட்டுள்ள நாடுகளை சர்க்கார் கேட்டுக் கொள்வதாகவும், எஸ்டேட் நிலங்கள் அனைத்தையும் இறுதியாகப் பைஸல் செய்யும் வரை ஸ்தல நிலக்கமிட்டிகளிடம் ஒப்படைப்பதாகத் தந்தி மூலம் உத்தரவிடப் பட்டிருப்பதாகவும், அரசியல் நிர்ணய சபையைக் கூட்டுவதை துரிதப்படுத்த சர்க்கார் தீர்மானித்திருப்பதாகவும், அறிவித்து அன்றிரவே நகரெங்கும் நோட்டீஸ் ஒட்டுமாறு தற்காலிக சர்க்காரைக் கேட்டுக் கொள்வதற்காக அவர் விரைந்தார். அதே சமயத்தில் கெரன்ஸ்கியிடம்,

பிற்போக்குத் தலைமைக் காரியாலயத்தினுல், அபாயத்தைத் தாம் மிகைப்படுத்தியதாகவும, பூர்வாங்கப் பார்லிமெண்டின் தீர்மானம் ஜனங்களின் மனோபாவத்தை மாற்றப் பெரிதும் பயன் படுமென்றும், இனி போல்ஷ்விக் பிரசாரம் வேகமாகத் தணியுமென்றும் டான் கூறினுர். போல்ஷ்விக்குகள், மென்ஷ்விக்குகளுடனும், சோஷலிஸ்ட் புரட்சிக்காரர்களுடனும் பேசுகையில், சோவியத்துகளில் பெரும்பான்மைக் கருத்துக்குப் பணியத் தயாராயிருப்பதாக ஒப்புக்கொண்டதாகவும் டான் சொன்ஞர்.

இந்த வாதங்களைக் கேட்டு கெரன்ஸ்கி எரிச்சல் தான் அடைந்தாரென்கிருர் டான். "இது நடவடிக்கை எடுப்பதற்கான காலமேயன்றிப் பேசுவதற்கான காலமல்ல'' என்று கெரன்ஸ்கி பதிலளித்தார்.

இதற்கிடையில், போல்ஷ்விக் சதியைப் பற்றிய பேச்சுக்கள் "எதிர்ப் புரட்சிக்காரர்களும்'' கோர்னிலோவிஸ்ட் கெரன்ஸ்கியும் கண்டு பிடித்த கற்பனையென்று போல்ஷ்விக்குகள் கூறிவந்தனர்.

கெரன்ஸ்கி டானுடன் தம் சம்பாஷணையை முடிப்பதற்குள்ளாகவே கஸாக் படையிலிருந்து ஒரு தூது கோஷ்டி வந்தது. "கலகத்தை அடக்க சர்க்காரிடம் எவ்வளவு பலம் இருக்கிறது என்பதை கஸாக் பட்டாளம் அறிய விரும்புகிறது; ஜூலையில் நடந்தது போலல்லாமல் இப்பொழுது கஸாக் ரத்தம் வீணுகச் சிந்தப்படாது என்று கெரன்ஸ்கியே வாக்குறுதி அளித்தால்தான் கஸாக் படைகள் சர்க்காரை ஆதரிக்கும். கெரன்ஸ்கியின் நேரடியான தலைமையின் கீழ்தான் கஸாக்குகள் போராடுவார்கள்'' என்று தூது கோஷ்டி அறிவித்தது. உடனே ஜில்லா ராணுவ தலைமைக் காரியாலயத்திற்குச் சென்று அதன் உத்தரவுகளுக்குக் கீழ்ப்படிந்து நடக்குமாறு கெரன்ஸ்கி கஸாக்குகளுக்கு உத்தரவிட்டார்.

கஸாக் பட்டாளத்தின் பிரதிநிதிகளுடன் கெரன்ஸ்கி நடுநிசியில் இந்தச் சம்பாஷணைகளை நடத்திக்கொண்டிருந்தபோது, இரவு முழுதும் கூடி ஆலோ

சித்த போராட்டத்தில் தலையிடாமலிருப்பதை ஆதரித்து கஸாக் துருப்புகளின் கவுன்சில் ஒரு தீர்மானம் நிறைவேற்றியது.

போல்ஷ்விக்குகள் தாக்கிய, 1917 நவம்பர் 7-ம் தேதியன்றே, அகில ரஷிய சோவியத் மத்திய நிர்வாகக் கமிட்டியின் பத்திரிகையாகிய "இஸ்வெஸ்தியா''வில் "பைத்தியக்காரத்தனம்'' என்ற தலையங்கம் வெளியாயிற்று. போல்ஷ்விக்குகள் வெற்றிபெற்றால் நாட்டில் குழப்பமும் உள்நாட்டு யுத்தமுமே ஏற்படுமென்று அது எச்சரித்தது.

நவம்பர் 7-ம் தேதி காலை லெனின் தம் அறையில் குறுக்கும் நெடுக்கும் உலாவிக் கொண்டிருந்ததாக ராகியா கூறுகிறார். 'ஸ்மோல்ஸி கழகத்திற்கு (போல்ஷ்விக், சோவியத் தலைமைக் காரியாலயம்) இப்பொழுது போகவேண்டும்' என்றார் லெனின். அங்கு போவதில் இருந்த அபாயத்தை எடுத்துக் கூறி, போக வேண்டாமென்று நான் எச்சரித்தேன். வாதங்களை யெல்லாம் ஒதுக்கித் தள்ளிவிட்டு, 'நாம் போய்த்தான் ஆகவேண்டும்' என்றார்''. என்கிறார் ராகியா.

லெனின் உடைகளை மாற்றிக் கொண்டு முகத்தில் ஓர் அழுக்கு கைகுட்டையைக் கட்டிக் கொண்டார். தலையில் ஒரு டோபாவை வைத்துக்கொண்டு குல்லாவையும் அணிந்தார். அவர்கள் மோல்னிக்குப் போய்ச் சேர்ந்தவுடன் ட்ராட்ஸ்கிக்கும் ஸ்டாலினுக்கும் ஆள் அனுப்பி அவர்களையும் வரச் சொன்னார். அவர்கள் நால்வரும் ஒரு தனி அறைக்குச் சென்றனர். நிலவரம் பற்றி ட்ராட்ஸ்கி கூறியவற்றையும் லெனின் கேட்டார்.

ராணுவப் புரட்சிக் கமிட்டி, பெட்ரோக்ராட் ஜில்லா ராணுவ அதிகாரிகளுடன் நடத்திவந்த சம்பாஷணைகள் சாதகமான முடிவை நெருங்கி வந்ததாகப் பத்திரிகைகள் கூறின. "நீங்கள் சமரசத்திற்குச் சம்மதிக்கிறீர்களா?'' என்று ட்ராட்ஸ்கியை லெனின் கேட்டார். அமைதி ஏற்படுத்தக்கூடிய இந்தச் செய்தியைத் தாம் வேண்டுமென்றேதான் பத்திரிகைகளுக்குக் கொடுத்த

தாகவும், பொதுத் தாக்குதலை ஆரம்பிப்பதற்கு முன்னால் இது தற்காலிகத் தந்திரமென்றும் ட்ராட்ஸ்கி பதிலளித்தார்.

லெனின் இரு கைகளையும் தேய்த்துக்கொண்டு அறையில் அடிபோட்டு நடந்தவாறு, "சரி; ரொ-ம்-ப-ச் சரி" என்றார்.

கலகம் நம்ப முடியாத வேகத்துடன் பரவியது. மத்திய தந்தி ஆபீஸ், தபாலாபீஸ், மற்ற சர்க்கார் காரியாலயங்கள் முதலியவற்றை செம்படையினர் கைப்பற்றினர். ஆயுதம் தாங்கிய போல்ஷ்விக்குகள் குளிர்கால மாளிகையையும் ஜில்லா ராணுவ தலைமைக் காரியாலயத்தையும் சூழ்ந்து கொண்டனர். கெரன்ஸ்கி, உதவிப் பிரதம மந்திரி கோனேவலோவுடன் தலைமைக் காரியாலயத்திற்குச் சென்றார். போர் முனையிலிருந்து படை பலம் வந்தால்தான் நிலைமையைச் சமாளிக்க முடியுமென்று தெளிவாகத் தெரிந்தது. கோனேவலோவ், மற்றொரு மந்திரியான குஷ்கின் முதலியவர்களுடன் கெரன்ஸ்கி கலந்தாலோசித்துவிட்டு, போல்ஷ்விக் அரண்களைப் பிளந்து கொண்டுபோய், படைகளை நேரில் சந்திக்கத் தீர்மானித்தார். திறந்த கார் ஒன்றில் அவர் போல்ஷ்விக் வரிசைகளைக் கடந்து சென்றார். பக்கத்தில் சென்றவர்களும் சிப்பாய்களும் அவரை நன்றாக அடையாளம் கண்டு கொண்டனர். ராணுவத்தினர் வழக்கம் காரணமாக நேராக நின்று மரியாதை செய்தனர். ஒரு கணத்திற்கு பிறகுதான் அவர்கள் நடந்ததை உணர்ந்தனர். இது எப்படி நடந்ததென்பது அவர்களுக்கே தெரியவில்லை. காட்சினாவை நோக்கிக் கார் விரைந்து கொண்டிருந்தது.

மற்ற மந்திரிகள் குளிர்கால மாளிகையில் கூடியிருந்தனர். சிறிது நேர விவாதத்திற்குப் பின், நெருக்கடி தீரும் வரை அந்த மாளிகையிலேயே இருப்பதென்று அவர்கள் தீர்மானித்தனர்.

ராணுவத்தினருக்கு போல்ஷ்விக்குகளின் மீது அனுதாபமில்லை. ஆனால் சர்க்கார்மீதும் உற்சாக

மில்லை. வெற்றி பெறுவோர் கட்சியில் சேரும் நடுநிலை மனப்பான்மையில் இருந்தனர்.

அகில ரஷிய தொழிலாளர், சிப்பாய்கள் பிரதிநிதிகளின் மகாநாடு அன்று மாலை கூடவிருந்தது. அதற்கு முன்னால் அதிகாரத்தைக் கைப்பற்றிவிட போல்ஷ்விக்குகள் விரைந்துகொண்டிருந்தனர். இரவு வந்தது. ஆனால் குளிர்கால மாளிகையை போல்ஷ்விக்குகள் இன்னமும் கைப்பற்றியாகவில்லை. ஸ்மோல்னியில் ஒரே பரபரப்பு.

இதற்கிடையில்பெட்ரோக்ராட்நகரசபையின்விசித்திரமான கூட்டம் ஒன்று நடந்து கொண்டிருந்தது. போராட்டம், குளிர்கால மாளிகையின் முன்னால் உள்ள மைதானம்வரை சென்றுவிட்டது என்பது அங்கத்தினர்களுக்குத் தெரியும். நகர சபை அங்கத்தினர்கள் அனைவரும் மாளிகைக்குச் சென்று, மந்திரிகளுடன் சேர்ந்து மடியவும் தயாராயிருக்க வேண்டுமென்று ஓர் அங்கத்தினர் பேசினார்.

நகர சபை அங்கத்தினர்களும், விவசாயிகள் பிரதிநிதி சோவியத் அங்கத்தினர்களும் "மார்ஸேல்ஸ்" என்ற பாட்டைப் பாடிக்கொண்டே குளிர்கால மாளிகையை நோக்கிச் சென்றனர் காஸான் மாதா கோயில் அருகே அவர்களைப் போல்ஷ்விக்குகள் தடுத்து நிறுத்தினர்.

மாளிகைக்குள் சிக்கிக் கொண்டவர்கள் இறுதியாக எதிர்த்து நிற்க ஏற்பாடு செய்தனர்.

வெளியே நேவா நதியில் பார்த்தால் "ஆரோரா" கப்பல் பீரங்கிகளை போல்ஷ்விக்குகள் இயக்குவது நன்றாகத் தெரிந்தது. எந்த சமயத்திலும் சுடுவதற்குத் தயாராக பீரங்கிகள் வைக்கப்பட்டிருந்தன. வெளி மைதானத்தில் போல்ஷ்விக்குகள் கவச மோட்டார்களையும் இயந்திர பீரங்கிகளையும் கொண்டுவந்து குவித்துகொண்டிருந்தனர்.

கிஷ்கின் ராணுவ தலைமைக்காரியாலயத்திலிருந்து வந்து "ராணுவ புரட்சிக் கமிட்டியிலிருந்து எனக்கு

ஓர் இறுதி எச்சரிக்கை வந்திருக்கிறது. அதைப்பற்றி யோசிப்போம் ” என்ருர்.

சர்க்கார் இருபது நிமிஷத்திற்குள் சரணடைய வேண்டுமென்றும், இல்லையானல் அவர்கள் “ஆரோரா” கப்பலிலிருந்தும், ஸெய்ண்ட் பீட்டர், ஸெய்ண்ட் பால் கோட்டைகளிலிருந்தும் தாக்கப்படுவார்களென்றும் இறுதி எச்சரிக்கை கூறியது.

இந்த எச்சரிக்கையை நிராகரிப்பதென்று முடிவு செய்யப்பட்டது.

மணி எட்டு அடித்தது; மந்திரிகள் விளக்கை அணைத்தனர். திடீரென்று ஒருபெரிய வெடிசப்தம் கேட்டது. பிறகு மற்ருெரு வெடி சப்தம் கேட்டது. பின்னர் கடியாரத்தின் முட்கள் நிதானமாக நகர்ந்து ஒன்பது மணியைக் கடந்தன. மாளிகைக்குள் சிக்கிக்கொண்டிருந்தவர்களில் சிலர் உட்கார்ந்திருந்தனர்; சிலர் சாய்ந்துகொண்டிருந்தனர்; மற்றவர்கள் சத்தமில்லாமல் உலாவிக்கொண்டிருந்தனர்.

இப்பொழுது ஒரு புது விதமான சப்தம் கேட்டது. இதற்குமுன் கேட்ட சப்தங்களிலிருந்து இதுமுற்றிலும் வேருக இருந்தது.

“ அது என்ன ?” என்று யாரோ கேட்டார்கள்.

“ அது ‘ ஆரோரா ’ கப்பலிலிருந்து வந்த சப்தம் ” என்ருர் கடற்படை மந்திரி வெர்டெரெவ்ஸ்கி.

இதற்குமுன் கேட்டவை ஸெய்ண்ட் பீட்டர், ஸெய்ண்ட் பால் கோட்டைகளிலிருந்தும் “ ஆரோரா ” விலிருந்தும் வெடிக்கப்பட்ட வெத்து வேட்டுக்கள். ஒரு மணி நேரமாக நடந்து வந்த சிறு ஆயுத தாக்குதல் தீவிரப்படுத்தப்பட்டதற்கு அவை அடையாளம். பிறகு “ ஆரோரா ” கப்பலிலிருந்து ஆறு அங்குல குண்டு ஒன்று வெடிக்கப்பட்டது. அது மாளிகைத் தாழ்வாரத்தில் வீழ்ந்து வெடித்து, மாளிகைய்யைப் பாதுகாத்துக் கொண்டிருந்தவர்களிடையே குழப்பத்தை ஏற்படுத்தியது.

முப்பது, நாற்பது போல்ஷ்விக்குகள் துப்பாக்கி, கத்தி முதலிய ஆயுதங்களுடன் மாளிகைக்குள் பிரவேசித்தனர். கோட்டைக்குள் இருந்தவர்கள் அவர்களைப் பிடித்து, அவர்களிடமிருந்த ஆயுதங்களைக் கைப்பற்றினர். அவர்கள் தங்கள் ஆயுதங்களை எதிர்ப்பின்றி ஒப்படைத்தனர்.

உடனே பல மாலுமிகள் மாளிகைக்குள் புகுந்து இரு வெடி குண்டுகளை வீசினர். இவர்களிடமிருந்த ஆயுதங்களும் கைப்பற்றப்பட்டன.

பின்னர் வெளியே பிரம்மாண்டமான இரைச்சல் கேட்டது. அது வரவர அதிகரித்து, நெருங்கி வந்து கொண்டிருப்பதுபோலிருந்தது. "இனி எதிர்த்துப் பயனில்லை" மாளிகைக்குள் இருந்தவர்களுக்குத் தோன்றியது. கதவை உடைத்துத் திறந்து கொண்டு குள்ளமான ஒருவன் உள்ளே பாய்ந்து வந்தான். அவனுக்கு பின்னால் ஒரு பெருங்கூட்டம் நுழைந்தது.

"தற்காலிக சர்க்கார் மந்திரிகள் எங்கே?" என்று அந்தக் குள்ளன் கேட்டான்.

"இங்கேதான் இருக்கிறோம். உங்களுக்கு என்ன வேண்டும்?" என்று உட்கார்ந்தபடியே கேட்டார் கோனோவலோவ்.

"நீங்கள் எல்லாரும் கைது செய்யப்பட்டிருக்கிறீர்கள்; நான் ராணுவப் புரட்சிக் கமிட்டியின் தலைவன் அண்டோனோவ்" என்றான் வந்தவன்.

"ரத்தப் பெருக்கைத் தவிர்ப்பதற்காக தற்காலிக சர்க்கார் மந்திரிகள் பலாத்காரத்திற்குப் பணிந்து சரணடைகின்றனர்" என்றார் கோனோவலோவ்.

"ரத்தப் பெருக்கைத் தவிர்ப்பதற்கா! நீங்கள் எவ்வளவு ரத்தத்தைச் சிந்தியிருக்கிறீர்கள்?" என்றது ஒரு குரல் கூட்டத்திலிருந்து. பல திசைகளிலிருந்தும் மற்றும் பல குரல்கள் அதை ஆமோதித்தன.

அண்டானோவ் அவர்களைத் தடுத்து, "போதும் தோழர்களே! இதையெல்லாம் பின்னர் சரிப்படுத்திக்

கொள்ளலாம். இப்பொழுது நாம் ஒரு நகல் உடன்பாட்டை எழுதவேண்டும்'' என்றான். பிறகு மாளிகையில் இருந்தவர்களைப் பார்த்து, ''உங்களிடம் உள்ள ஆயுதங்களையெல்லாம் கொடுத்துவிடுங்கள்'' என்றான். சிப்பாய்கள் ஆயுதங்களை ஒப்படைத்தனர். மற்றவர்கள் தங்களிடம் ஆயுதம் எதுவுமில்லையென்று அறிவித்தனர்.

கெரன்ஸ்கி தப்பிச் சென்றுவிட்டார் என்பது தெரிந்தவுடன் கூட்டத்தினர் ஆத்திரமடைந்தனர். ''இவர்களும் தப்பி ஓடி விடுவார்கள்; இவர்களைக் கொல்லுங்கள், வெட்டுங்கள், குத்துங்கள்'' என்று கூட்டத்தினர் கூச்சலிட்டனர். வாய்க்கு வந்தபடியெல்லாம் திட்டினர்.

அவர்களுடைய கூச்சல்களுக்கு மேல் அண்டோனேவ் தன் குரலை எழுப்பி, ''தோழர்களே அமைதியாயிருங்கள்; தற்காலிக சர்க்கார் மந்திரிகள் எல்லாரும் கைது செய்யப்பட்டிருக்கின்றனர். ஸெய்ண்ட் பீட்டர் ஸெய்ண்ட் பால் கோட்டைகளில் இவர்கள் சிறை வைக்கப்படுவார்கள். பலாத்காரம் எதையும் நான் அனுமதிக்க முடியாது. அமைதியாகவும் ஒழுங்காகவும் நடந்துகொள்ளுங்கள்; அதிகாரம் இப்பொழுது உங்கள் கையில் இருக்கிறது. நீங்கள் ஒழுங்கைப் பாதுகாக்க வேண்டும்'' என்றான்.

பிறகு தற்காலிக சர்க்கார் மந்திரிகள் ஸெய்ண்ட் பீட்டர், ஸெய்ண்ட் பால் கோட்டைக்கு அழைத்துச் செல்லப்பட்டனர். தெரு நெடுக ஜனங்கள் அவர்களைக் கேலி செய்யவும் பயமுறுத்தவும் செய்தனர்.

நகல் உடன்பாட்டை அண்டோனேவ் எழுதி முடித்துவிட்டு, அதன்மீது உள்ளங்கையை வைத்துக் கொண்டு, ''சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த பத்திரம்'' என்று கனவு காண்பவன்போல் சொன்னான்.

தற்காலிக சர்க்கார் மந்திரிகள் கைதியான செய்தி ஸ்மோல்னிக்கு அறிவிக்கப்பட்டது. லெனின் தன் முகத்தில் பாதியை மூடிக்கொண்டிருந்த கைகுட்டை

யையும் தலை டோபாவையும் அகற்றி வேஷத்தைக் கலைத்தார். சோவியத் மஹாநாடு நடந்துகொண்டிருந்த ஹாலை நோக்கி ஒரு பெரிய கூட்டம் விரைந்தது.

மேடைமீது லெனின் தோன்றியவுடன் பிரம்மாண்டமான ஆரவாரம் எழுந்தது. லெனின் தம் சட்டைப் பைகளில் கையை விட்டுக்கொண்டு தலையைச் சாய்த்தபடி நின்றார். ஆரவாரம் அடங்கியவுடன் தலையை நிமிர்த்திப் பேசத் தொடங்கினார்.

"தோழர்களே, போல்ஷ்விக்குகள் பல முறை வற்புறுத்திய தொழிலாளர், விவசாயிகள் புரட்சி வந்துவிட்டது. இதன் விசேஷம் என்ன? நாம், பூர்ஷ்வா கலப்பில்லாத சோவியத் சர்க்கார் ஏற்படுத்திக் கொள்வோம் என்பதுதான் இதன் விசேஷம். நசுக்கப்பட்ட மக்கள் தாங்களாகவே சர்க்கார் அமைத்துக்கொள்வார்கள். பழைய நிர்வாக இயந்திரம் துண்டு துண்டாக உடைத்து எறியப்பட்டுப் புதிய ஆட்சி ஏற்படுத்தப்படும். இப்பொழுது முதல் ரஷியாவின் சரித்திரத்தில் புதிய சகாப்தம் ஆரம்பமாகிறது. இந்த மூன்றுவது ரஷியப் புரட்சி இறுதியில் சோஷலிஸத்தின் வெற்றியில் முடியும்.

"நாம் நேசபாவத்துடன் ஒன்று சேர்ந்து உழைக்கக் கற்றுக்கொண்டு விட்டோம் என்பது இந்தப் புரட்சியிலிருந்து தெரிகிறது. எல்லாவற்றையும் வென்று, பாட்டாளி மக்களை உலகப் புரட்சிக்கு அழைத்துச் செல்லக்கூடிய மக்கள் ஸ்தாபனத்தின் பலம் இப்பொழுது நம்மிடம் உள்ளது.

"இனி நாம் ரஷியாவில் பாட்டாளியின் சோஷலிஸ்ட் ஆட்சியை ஏற்படுத்துவதில் முனையவேண்டும். உலக சோஷலிஸ்ட் புரட்சி நீடூழி வாழ்க" என்று லெனின் கூறி முடித்தார்.

இரவு வெகு நேரத்துக்குப்பின் அவர், போஞ்ச் ப்ருயேவிச்சின் இல்லத்திற்கு, அலுப்படைந்து போய்ச் சேர்ந்தார். இரவு யாராவது லெனினைக் கொல்லவோ, கைது செய்துவிடவோ வருவார்களோ என்று அஞ்சி

போஞ்ச் ப்ரூயேவிச் துப்பாக்கிகளைத் தயாராக எடுத்து வைத்துக்கொண்டார். லெனின் தூங்கிய பிறகே தாம் தூங்கச் செல்வதென்று தீர்மானித்துக் கொண் டார்.

கடைசியில் லெனின் விளக்கை அணைத்தார். போஞ்ச் ப்ரூயேவிச்சுக்குத் தூக்கம் வரும் சமயத்தில் லெனின் மறுபடியும் விளக்கை ஏற்றிக்கொண்டு எழுதத் தொடங்கினார். தாம் எழுதியதை அடித்துத் திருத்தி இறுதியில சுத்தமான நகல் தயாரித்தார். உதயமாகும் சமயத்தில்தான் அவர் தூங்கச் சென்றார்.

உதயமாகி வெகு நேரத்திற்குப் பிறகுதான் குடும் பத்தார் தேநீர் அருந்துவதற்காகக் கூடினர். லெனின் எழுந்து வந்து அவர்களுக்கு வணக்கம் செலுத்தி விட்டு, "புரட்சியின் முதல் நாள் வாழ்த்துக்கள்" என்று வாழ்த்துக் கூறினர். பிறகு தம் சட்டைப் பையிலிருந்து, இரவு எழுதிய காகிதத்தை எடுத்து, எஸ்டேட் நிலங்களைப் பறிமுதல் செய்யும் அவருடைய பிரசித்தி பெற்ற உத்தரவைப் படித்தார்.

"இப்பொழுது இந்த உத்தரவை நாடெங்கும் பரப்ப ஏற்பாடு செய்ய வேண்டும். பின்னர் இந்த உத்தரவை மாற்றி நிலத்தைப் பிரபுக்களிடம் திருப்பிக் கொடுக்க உலகத்தில் எந்த சக்தியினுலும் முடியாது. இதுதான் நம் புரட்சியின் மிக முக்கியமான சாதனை. விவசாயிகள் புரட்சி இன்று நடக்கப் போகிறது. பின்னர் இது மாற்ற முடியாததாகி விடும்" என்ருர் லெனின்.

புதிய சர்க்காரின் அமைப்பு எப்படி இருப்பது என்பது அடுத்தபடி உடனடியாக கவனிக்கப்பட வேண்டிய பிரச்னை. மந்திரிகளை என்னவென்று அழைப்பது? "அவர்களுக்கு 'மந்திரிகள்' என்பதைத் தவிர வேறு என்ன பெயர் வேண்டுமானுலும் வைக்க லாம்" என்ருர் லெனின்.

"காமிஸார்கள் என்று அழைக்கலாம். ஆனுல் காமிஸார்கள் ஏராளமாக இருக்கிருர்கள். மஹா

காமிஸார்கள் என்று அழைக்கலாமா? ஆனால் மஹா என்ப்.தும் சரியாக ஒலிக்கவில்லை. மக்கள்-காமிஸார் கள் என்று அழைப்போமே?'' என்றார் ட்ராட்ஸ்கி.

"மக்கள் காமிஸார்களா? சரி, அப்படியே இருக்க லாம். ஆனால் சர்க்கார் முழுவதற்கும் என்ன பெயரிடு வது?'' என்று கேட்டார் லெனின்.

"சோவியத் என்றுதான் பெயர் வைக்கவேண்டும். மக்கள்—காமிஸார்களின் சோவியத்'' என்றார் ட்ராட்ஸ்கி.

"மக்கள் - காமிஸார்களின் சோவியத்! அற்புத மான பெயர். இதில் புரட்சி மணம் பலமாக வீசு கிறது'' என்று ஆமோதித்தார் லெனின்.

குளிர்கால மாளிகை கைப்பற்றப்பட்ட போதிலும், அகில ரஷிய சோவியத் காங்கிரஸிலிருந்து சுமார் 100 பிரதிநிதிகள், இந்த நடவடிக்கைகளைக் கண்டித்து வெளியேறினர். போல்ஷ்விக்குகளும் அவர்களுடைய ஆதரவாளர்களும் மட்டும், நிர்வாகத்தை ஏற்றுக் கொள்வதாகச் சம்பிரதாய பூர்வமான ஒரு தீர்மா னத்தை நிறைவேற்றினர்.

சமாதானம், நிலம், சிப்பாய்களுக்கும் தொழிலாளர் களுக்கும் உரிமை, உணவு, அத்யாவசியப் பொருள் கள், ரஷியாவில் உள்ள எல்லா இனங்களும் தங்களைத் தாங்களே அபிவிருத்தி செய்து கொள்வதற்கான எல்லாவற்றையும் அளிப்பதாக சோவியத் வாக்குறுதி அளித்தது. கெரன்ஸ்கி, கோர்னிலோவ் ஆகியவர்கள் விஷயத்தில் எச்சரிக்கையாக இருக்குமாறு ராணுவத் தினரை எச்சரித்துவிட்டு நவம்பர் 8-ம் தேதி காலை 6-மணிக்கு காங்கிரஸ் கலைந்தது.

அன்று பிற்பகல் காங்கிரஸ், பெட்ரோக்ராட் சோவியத் அங்கத்தினர்கள், பட்டாளப் பிரதிநிதிகள் ஆகியோர் அடங்கிய கூட்டுக் கூட்டத்தில் லெனினும் ஜினோவீவும் தோன்றியபோது பிரம்மாண்டமான கரகோஷத்துடன் அவர்கள் வரவேற்கப்பட்டனர். ரஷிய சோஷலிஸ்ட் பெடரல் சோவியத் குடியரசின்

அடிப்படைச் சட்டத்தை அக்கூட்டம் அன்று மாலை வகுத்தது.

அகில ரஷிய தொழிலாளி, சிப்பாய், விவசாயி பிரதிநிதிகள் காங்கிரஸ் பின் அறிவிப்பது யாதெனில்:

அரசியல் நிர்ணய சபை வேறு அரசியல் அமைக்கும் வரையில், தொழிலாளர் விவசாயிகளின் தற்காலிக சர்க்காரை இது ஏற்படுத்துகிறது. இது 'மக்கள்-காமிஸார்களின் சோவியத்' என்று அழைக்கப்படும். சர்க்காரின் பல்வேறு வேலைகளும் ஒவ்வொரு இலாகாவிடம் ஒப்படைக்கப்படும். காங்கிரஸ் அறிவித்துள்ள கொள்கைகளை தொழிலாளர், சிப்பாய்கள், மாலுமிகள், விவசாயிகள் முதலியவர்களுடன் நெருங்கிய தொடர்புடன் காமிஸார்கள் நிறைவேற்றுவார்கள். மக்கள் காமிஸார்களின் சோவியத் தலைவரிடம் சர்க்கார் நிர்வாக அதிகாரம் இருக்கும்.

" தற்போதைக்கு, மக்கள் காமிஸார்களின் சோவியத்தில் கீழ்க்கண்டவர்கள் இருப்பார்கள் :

மக்கள் காமிஸார்கள் சோவியத்தின் தலைவர். வ்ளாடிமின் உலியனேவ் (லெனின்).
உள்நாட்டிலாகா மக்கள் காமிஸார் — ஏ. ஐ. ரிகோஷ்;
விவசாய இலாகா ,, ,, — டி. பி. மிலியுடின்
தொழிலாளர் இலாகா ,, ,, — ஏ. ஆர். ஷ்ரியாப்னிகோவ்;
யுத்த கடற்படைக் கமிட்டி; வி. அண்டோனேவ் ஓவ்ஸீன்கோ, என். வி. க்ரிலென்கோ, டிபெங்கோ.

வர்த்தக, கைத்தொழில் இலாகா மக்கள் காமிஸார் —ஷ. பி. நோகின்;

கல்வி இலாகா மக்கள் காமிஸார் — ஏ. வி. லுனகார்ஸ்கி;

நிதி இலாகா மக்கள் காமிஸார்-ஐ. ஐ. ஸ்க்வோர்ட்ஸோவ் (ஸ்டெபனேவ்).

வெளிநாட்டிலாகா மக்கள் கமிஸார் — எல். டி ப்ரோன்ஸ்டீன் (ட்ராட்ஸ்கி).

நீதி பரிபாலன இலாகா மக்கள் கமிஸார்—ஜி. ஈ. அபோகோவ் (ஓ. ஓ. லோமோவ்)

சப்ளை இலாகா மக்கள் கமிஸார்—ஐ. எப். தியோடாரோவிச்.

தபால் தந்தி இலாகா—என். பி. அவிலோவ் (க்ளி யெபோவ்)

இனவிவகார இலாகா மக்கள் கமிஸார்—ஜே. வி. ட்ஜுகாஷ்விலி (ஸ்டாலின்).

(மக்கள் கமிஸார்களின் சோவியத் என்பது பின்னர் "ஸோவ்னுர்கோம்" என்று சுருக்கிக் கூறப் பட்டது.)

சோவியத்துகளின் மத்தியக் கமிட்டி அங்கீகாரத் தைப் பெருமலே, போர்முனையில் ஜெர்மானியருடன் உறவு கொண்டாடுமாறு லெனின், ஸ்டாலின், க்ரி லெஸ்கோ ஆகியவர்கள் சிப்பாய்களுக்கு உத்தரவிட் டனர். ரஷியாவின் சமாதான கோரிக்கையை ஜெர் மனி நிராகரித்தால், ரஷியாவின் எதிர்ப்புச் சக்திக்கு இதனுல் பாதகம் ஏற்படுமென்று பல போல்ஷ்விக்கு களே கருதினர்.

ஜெர்மானியருடன் போர் நிறுத்தப் பேச்சு ஆரம் பிக்கத் தூதர்கள் அனுப்பப்பட்டனர்.

ப்ரெஸ்ட் லிடோவ்ஸ்கில் போர் நிறுத்தப் பேச்சு ஆரம்பிக்கத் தயாராயிருப்பதாக நவம்பர் 27-ம் தேதி ஜெர்மன் தளபதியிடமிருந்து சோவியத் சர்க்காருக்குப் பதில் வந்தது.

ஜெர்மானியர் என்ன நிபந்தனை விதித்தாலும் ஏற்குமாறு பேச்சு நடத்தச் சென்ற சோவியத் பிரதி நிதிகளுக்கு லெனின் உத்தரவிட்டார். லெனின் சமா தான உத்தரவுக்குப் பின் ரஷிய ராணுவம் வேலை செய்யவே இல்லை. முதல் சாமாதானத் தூதுகோஷ்டி யில் ராணுவ நிபுணர்களும், பிரசார மதிப்புக்காக ஒரு

தொழிலாளி, ஒரு மாலுமி, ஒரு விவசாயி, ஒரு ஸ்திரீ ஆகியவர்களும் சேர்க்கப்பட்டிருந்தனர்.

## 14. சர்வாதிகாரம்

போல்ஷ்விக்குகளுக்கும் தற்காலிக சர்க்காரின் ஆதரவாளர்களுக்குமிடையில் தெருக்களில் சண்டை நடந்துகொண்டிருந்த போது "சர்வ சோஷலிஸ்ட்" மந்திரிசபை அமைப்பதற்காக இடதுசாரி மென்ஷ் விக்குகளுடனும், புரட்சி சோஷலிஸ்டுகளுடனும் போல்ஷ்விக்குகள் சம்பாஷணைகள் ஆரம்பித்தனர். சம்பாஷணை நடத்திய போல்ஷ்விக் கோஷ்டிக்கு காமனேவும் ரிகோவும் தலைமை வகித்தனர். இத்தகைய கூட்டு மந்திரிசபை அமைப்பதை இவர்கள் மனப்பூர்வமாக ஆதரித்தனர். ஆனால், கெரன்ஸ்கியின் படைகளுக்கு எதிராக எடுக்கப்பட்ட ராணுவ நடவடிக்கைகளுக்காகவே இந்த சம்பாஷணைகளை உபயோகிக்க விரும்பினார் லெனின்.

தற்காலிக சர்க்கார் வீழ்ச்சிக்கான முக்கிய காரணங்களில் ஒன்று, முடியாட்சி ஆதரவாளர் படை அதிகாரிகளின் நடத்தையாகும். ஸ்ட்ரோக்ராடிலும் வடக்கத்தி முனையிலும் இருந்த இவர்கள், மிகவும் நெருக்கடியான சமயத்தில், குறுகிய மனப்பான்மையுடன் சும்மா இருந்துவிட்டனர். கெரன்ஸ்கி குறுக்கே இல்லாததால் போல்ஷ்விக்குகளையும் சுலபமாக ஒழித்துவிடலாமென்று இவர்கள் மனப்பால் குடித்தனர்.

கலகம் வெற்றி பெற்ற பிறகுகூடப் பழைய போல்ஷ்விக்குகள் கலகத்தை எதிர்த்தனர். 1905-ம் வருஷப் புரட்சியின்போது போல்ஷ்விக் தலைவர்களாக இருந்த ஓ. ஓ. போக்டனேவ், லியேனீட் க்ராஸீன் பஸாரோவ், கிரிகரி அலெக்ஸின்ஸ்கி, பேராசிரியர் ரோஸ்கோவ், மாக்ஸிம் கார்க்கி முதலியவர்கள்கூட இந்தக் கலகத்தை எதிர்த்தனர்.

போல்ஷ்விக் புரட்சி நடந்த இரண்டு வாரத்திற்குப் பின், நவம்பர் 21-ம் தேதியன்று மாக்ஸிம் கார்க்கி தம் பத்திரிகையில் பின் வருமாறு எழுதினுர்.

“குருட்டு வெறியர்களும், கொள்கையற்ற சாகஸக் காரர்களும் ‘சமூகப் புரட்சியை’ நோக்கி அத்துமீறி செல்கின்றனர். உண்மையில் அது அராஜகத்திற்கும் பாட்டாளி வர்க்கத்தின் அழிவுக்கும் புரட்சியின் அழி வுக்குமான பாதையேயாகும்.

தொழிலாளர் வர்க்கத்தின் ரத்தத்தைக் கொண்டு லெனின் சோதனை நடத்துகிருர் என்பதையும் பாட் டாளி வர்க்கத்தின் புரட்சி உணர்ச்சியைக் கெடுக் கிருர் என்பதையும் பாட்டாளி மக்கள் அறியாம லிருக்க முடியாது.

“ வெட்கப்படத்தக்க, அறிவற்ற, ரத்தப் பெருக்கு எடுத்து ஓடும் குற்றங்களுக்கான பொறுப்பைப் பாட் டாளிகளின் மீது வெறியர்கள் சுமத்தத் தொழிலாளர் வர்க்கம் அனுமதிக்கக்கூடாது. இந்தக் குற்றங்கள் பற்றி லெனின்ஜவாப் சொல்ல வேண்டியிராது. பாட் டாளி வர்க்கமே சொல்ல வேண்டியிருக்கும்” என்று மாக்ஸிம் கார்க்கி எழுதினுர்.

எல்லா சோஷலிஸ்ட் கட்சிகளையும் சேர்த்து லெனின் கூட்டு மந்திரிசபை அமைக்க மறுத்ததைக் கண்டித்து 1917 நவம்பர் 17-ம் தேதியன்று ரிகோவ் தலைமையில் பல போல்ஷ்விக் காமிஸார்கள் ராஜினுமா செய்தனர். அதே சமயத்தில் அகில ரஷிய சோவியத் மத்திய நிர்வாகக் கமிட்டித் தலைமைப் பதவியிலிருந்து காமனேவும் ராஜினாமா செய்தார்.

காமனேவ் ராஜினாமா செய்தவுடன் ஸ்வெர்ட் லோவை லெனின் அழைத்து, சோவியத் மத்திய நிர் வாகக் கமிட்டித் தலைமைப் பதவியை ஏற்குமாறு கேட் டுக்கொண்டார்.

ஸ்வெர்ட்லோவ் தயங்கினுர். இறுதியில் வற் புறுத்தலின் பேரில் சம்மதித்தார்.

“ஏதாவது ஒரு வித ஒழுங்கு ஏற்படுதத உடனே ஆரம்பியுங்கள்” என்று லெனின் அவரிடம் கூறினர். “மத்தியக் கமிட்டியில் உள்ள போல்ஷ்விக்குகளின் கூட்டத்தை முதலில் கூட்டுங்கள். தொழிலாளர்களிலிருந்தும், முடிந்தால் விவசாயிகளிலிருந்தும் பொறுக்கி எடுக்கப்பட்ட கட்சித் தொடர்பற்றவர்களின் ஸ்தாபனம் ஒன்றை அமையுங்கள். பிறகு நம் சகாக்களில் மிகவும் நம்பத் தகுந்தவர்களைப் பொறுக்கி எடுத்து, கட்சித் தொடர்பற்றவர்களிடையே அமர்த்துங்கள். நம் ஆட்கள் கட்சி சார்பற்றவர்களுடன் எல்லாப் பிரச்னைகளையும் பற்றி விவாதிக்க அடிக்கடி சந்தர்ப்பங்களை ஏற்படுத்துங்கள். எல்லாவற்றிற்கும் மேலாக இவர்கள் அனைவரின் மனப்பான்மையையும் அறிய வேண்டும். அங்கு ஒவ்வொருவரும் என்ன நினைக்கின்றனர் என்பது நமக்குத் தெரிய வேண்டும். அங்கு நடப்பதையெல்லாம் எனக்குத் தெரிவியுங்கள். நீங்கள் ஏற்கனவே தலைவராக இருப்பதுபோல், உடனே நடவடிக்கை எடுங்கள். மத்தியக் கமிட்டியைக் கூட்டி, தலைவராக உங்கள் நியமனத்தை ஊர்ஜிதம் செய்யுமாறு நான் பிரேரிக்கிறேன். உங்கள் நியமனத்தை ஊர்ஜிதம் செய்ய மத்தியக் கமிட்டி மறுக்காதென்று நினைக்கிறேன். பிறகு அதை சோவியத்தில் நம் கோஷ்டியினரிடையே நிறைவேற்றி, உங்களைத் தலைவரென்று பிரகடனம் செய்து விடுவோம். கமிட்டியில் நமக்கு எவ்வளவு வோட் இருக்கிறது என்பதைக் கணக்கிடுங்கள்; கூட்டத்திற்கு நம் கோஷ்டியினர் அனைவரும் வரும்படி பார்த்துக்கொள்ளுங்கள்” என்று லெனின் கூறினர்.

லியோனீட் க்ராஸீன், ஸ்வீடனில் இருந்த தம் மனைவிக்கு எழுதிய கடிதத்தில் பின் வருமாறு குறிப்பிட்டிருந்தார்:

போல்ஷ்விக்குகள் கெரன்ஸ்கியை ஒழித்துவிட்டு, மாஸ்கோவை ஆக்கிரமித்துக் கொண்டபின், மற்றக் கட்சிகளுடன் ஓர் உடன்பாட்டுக்கு வரத் தவறிவிட்டனர். தங்கள் சொந்தப் பொறுப்பின்பேரில் தினமும்

பல உத்தரவுகள் பிறப்பித்து வருகின்றனர். எல்லா வேலைகளும் ஒரு முடிவுக்கு வந்துக்கொண்டிருக்கின்றன. உற்பத்தியும் போக்குவரத்தும் அழிந்து விட்டன என்பதே இதன் பொருள். இதைத் தவிர, போர்முனையில் துருப்புகள் பட்டினியால் சாகின்றன. காமனேவ், ஜினோவீவ், ரிகோவ் முதலிய எல்லா முக்கியமான போல்ஷ்விக்குகளும் தங்கள் கருத்துக்களை மாற்றிக்கொண்டு விட்டனர். லெனின், ட்ராட்ஸ்கி ஆகியவர்கள் தான் எப்பொழுதும்போல் பிடிவாதமாக இருக்கின்றனர். அவர்களுடைய மனோபாவத்தைத் தான் மாற்ற முடியவில்லை. எதிர்காலம் இருள் சூழ்ந்திருக்கிறது. பெட்ரோக்ராடில் வாழ்க்கையே ஸ்தம்பித்துவிட்டது'' எழுதி கூறினார்.

ஸ்டாக்ஹோமிலிருந்து பெட்ரோக்ராடுக்குத் திரும்பி வந்த ஸாலமனுடன் க்ராஸீன் பின்னர் ஒரு சமயம் பேசிக்கொண்டிருக்கையில், இந்தக் கருத்துக்களை விஸ்தரித்தார். ''இது, சோஷலிஸத்தை உடனே புகுத்துவதற்காக எல்லாவற்றையும் பணயம் வைப்பதாகும். இது தவறின் சிகரம்; இங்கு லெனின் உள்பட எல்லாரும் அறிவை இழந்துவிட்டனர். சமூக ஜனநாயக வாதிகள் உபதேசித்து வந்ததை யெல்லாம் மறந்துவிட்டனர். லெனின் விஷயம் மாத்திரமென்ன? அவர் முற்றிலும் பொறுப்பில்லாமல் நடந்து கொள்கிறார். தற்போதைய நிலைமை முழுவதுமே அபாயகரமான ஜன்னிபோல் உள்ளது. சோஷலிஸம் ரஷியாவில் வெற்றி பெறுவதை மாத்திரமின்றி, உலகப் புரட்சி வருவதையும் நாங்கள் நம்பியிருக்கிறோம். லெனினைச் சுற்றி யிருப்பவர்கள் மிகவும் சந்தேகப்படுகின்றனர். அவருக்கெதிராக அவர்கள் ஒரு வார்த்தைகூடச் சொல்வதில்லை. பழைய எதேச்சாதிகாரத்திற்கு நாங்கள் இப்படித்தான் திரும்பி வந்திருக்கிறோம்'' என்று க்ராஸீன் கூறினார்.

பிற்காலத்தில் பெரிய ராஜ தந்திரிகளில் ஒருவராக ஆன வோரோவ்ஸ்கியும் இவ்விதமே கருதினார். போல்ஷ்விக் சர்க்கார் நிலைக்குமென்று வோரோவ்ஸ்கி

நம்பவில்லையென்று ஸாலமன் எழுதியுள்ளார். புத்தி சாலித்தனமாக எந்தக் காரியத்தையும் செய்யும் திறமையே போல்ஷ்விக்குகளுக்கு இல்லையென்றும், இந்தக் காரியங்கள் அனைத்தும் அசட்டுத்தனமான சாகஸமென்றும் வோரோவ்ஸ்கி நினைத்ததாக ஸால மன் கூறுகிறார்.

ஸாலமன் ஒரு சமயம் லெனினை பேட்டி கண்ட பொழுது, "வ்ளாடிமின் இல்லிச், பழைய தோழன் என்ற முறையில் கேட்கிறேன். இங்கு நடப்பதெல் லாம் என்ன? இது உடோபியா என்ற கனவு உலகத் தில் நடக்கும் சோஷலிஸத் சூதாட்டமா? எனக்குப் புரியவில்லை" என்று கேட்டார்.

"உடோபியா தீவு ஒன்றும் இங்கு இல்லை" என்று லெனின் பதிலளித்தார். "சோஷலிஸ்ட் ஆட்சியை ஏற்படுத்தும் பிரச்னை இது. இப்பொழுது முதல் ரஷியாவே, சோஷலிஸ்ட் ஆட்சியைப் பெற்ற முதல் நாடாக இருக்கும். நீங்கள் தோளைக் குலுக்கிக் கொள்ளுகிறீர்கள். இருக்கட்டும். உங்களுக்கு ஆச்சரி யம் ஏற்படுத்தக்கூடிய மற்றொரு விஷயம் இருக்கிறது அது ரஷியாவைப்பற்றிய விஷயம் மாத்திரமல்ல...... நான் ரஷியாவைக் காறி உமிழ்ந்து விடுகிறேன். உலகப் புரட்சிப் பாதையில் இது ஒரு கட்டம்தான்" என்றார் லெனின்.

ஸாலமன் புன்முறுவல் செய்தார். லெனின் தம் சிறிய கண்களைச் சிமிட்டிக்கொண்டு தொடர்ந்து பேசினார்.

"சிரிக்கிறீர்களா? இதெல்லாம் வெறும் கனவு, கற்பனை என்று நினைக்கிறீர்கள் போலும்! நீங்கள் என்ன சொல்லப்போகிறீர்கள் என்பது எனக்குத் தெரி யும். கையிருப்பில் உள்ள ஒரே மாதிரியான மார்க் ஸிஸ்ட்டு சொற்றொடர்கள் எனக்குத் தெரியும். உண்மையில் அவை அற்ப பூர்ஷ்வாச் சரக்கே ஆனால் அவற்றை ஒதுக்கிவிடவும் முடியாது. மற்றொரு விஷயம்: வோரோஸ்கியுடன் நீங்கள் நடத்திய சம்பா ஷணையைப்பற்றி அவர் எனக்கு எழுதியிருந்தார்.

இதெல்லாம் பகற்கனவென்று நீங்கள் சொன்னதாக வும் அவர் குறிப்பிட்டிருந்தார். அந்தக் கட்டமெல் லாம் கடந்துவிட்டது என்பதை உங்களிடம் தெரிவித் துக்கொள்ள விரும்புகிறேன். அவை யெல்லாம் மார்க் ஸிய ஆராய்ச்சி. ஒவ்வொரு சமூகமும் வர்க்கமும் அனுபவித்தாக வேண்டிய பாலாரிஷ்டம் என்ற ரீதியில் அதை ஒதுக்கித் தள்ளிவிடுகிறோம். நான் சொல்வதை மறுக்க முயற்சிக்காதீர்கள். அதனால் பயனில்லை. எங்களாலோ, உங்கள் க்ராஸீனாலோ அல்லது அவருடைய இயற்கைப் பரிணாம வாதத்தாலோ என்னை மாற்ற முடியாது. நாங்கள் மேன்மேலும் இடதுசாரி களாக மாறி வருகிறோம்.

"ஆமாம்; நாங்கள் எல்லாவற்றையும் அழித்து அந்த அழிவின் மீது எங்கள் கோயிலைக் கட்டப் போகிறோம். அது அனைவருக்கும் இன்பமளிக்கும் கோயிலாக இருக்கும். ஆனால் நாங்கள் பூர்ஷ்வா சமூகம் முழுவதையும் அழித்துப் பொடியாக்குவோம். நீங்களும் உங்கள் நண்பர் நிகிடிச்சும் (க்ராஸீனும்) இதை ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள். யார் விஷயத்திலும் நாங்கள் எந்தவிதமான சம்பிரதாயமும் பார்க்கமாட்டோம். பத்து வருஷத்திற்கு முன் நீங்கள் அறிந்திருந்த லெனின் இப்பொழுது இல்லையென்பது ஞாபகமிருக்கட்டும். அவன் இறந்துவிட்டான்" என்று லெனின் கூறினார்.

ஸாலமன் ஆக்ஷேபித்தபோது, லெனின் குறுக் கிட்டு, "எல்லா எதிர்ப் புரட்சிக்காரர் விஷயத்திலும் நாங்கள் தயை தாக்ஷண்யமில்லாமல் நடந்து கொள் வோம். அவர்கள் யாராக யிருந்தாலும் அவர்களுக் கெதிராக நடவடிக்கை எடுக்க தோழர் உரிட்ஸ்கியை (பெட்ரோக்ராட் ரகசியப் போலீஸ் தலைவர்) நியமிக்கப் போகிறேன். அவரைப் பரிச்சயம் செய்துகொள்ள வேண்டாமென்று உங்களுக்கு யோசனை கூற விரும்பு கிறேன்" என்றார் லெனின்.

இதற்கிடையில், குழப்பத்திலிருந்து ஏதாவது ஒரு விதமான ஒழுங்கு ஏற்படுத்தும் முயற்சி தொடர்ந்து

நடந்துவந்தது. கேட்டுப் பெறுதல், பறிமுதல் செய்தல் முதலிய நடவடிக்கைகள் முழு வேகத்தில் நடந்தன. ஆனால் பாங்குகளின் மீது ஆதிக்கம் பெறுவது அவசிய மாக இருந்தது. இதற்கான ஓர் உத்தரவு பிறப்பிக்கப் பட்டது. இதை நிறைவேற்ற, நிதிமந்திரி முன்ஷின்ஸ்கி நியமிக்கப்பட்டார். "நீங்கள் நிதி வசதி உள்ளவரல்ல; ஆனால் காரியவாதி" என்று அவரிடம் லெனின் கூறினார்.

லண்டன் சர்வகலாசாலையில் படித்துப் பட்டம் பெற்ற பெட்கோவ்ஸ்கி என்பவரை ராஜாங்க பாங்க் டைரக்டராக மென்ஷின்ஸ்கி நியமித்தார். இந்த நியமனத்தை ரத்து செய்யுமாறு மென்ஷின்ஸ்கியை பெட்கோவ்ஸ்கி மன்றாடிக் கேட்டார். "எங்களுக்குப் பணம் மிகவும் அவசரமாகத் தேவை; சில லக்ஷங்களா வது வேண்டும். ராஜாங்க பாங்கும், கஜானாவும் வேலை நிறுத்தம் செய்கின்றன. சட்டபூர்வமான முறையின் மூலம் நாங்கள் பணம் பெற முடியாது. பாங்க் தலைவரை மாற்றிப் பணத்தை எடுத்துக்கொள் வது ஒன்றுதான் அதற்கு வழி" என்று மென்ஷின்ஸ்கி பதிலளித்தார். இரண்டு நாளைக்குப்பின் பெட்ஸ் கோவ்ஸ்கியை மென்ஷின்ஸ்கி விடுவித்தார். அவரு டைய ரஷிய ராஜாங்க பாங்க் டைரக்டர் உத்தியோகம் முடிவடைந்தது.

சோவியத் சர்க்காரின் ஆரம்பகால நடவடிக்கை களெல்லாம் அனேகமாக இப்படியே நடந்தன. ரஷியா வின் சமூக, பொருளாதார அமைப்புக்களை மாற்றி "மக்கள் காமிஸார்கள் சட்டங்கள் இயற்றி வந்த போது, அதன் முக்கிய நாடக பாத்திரங்கள் இடத்திற் காகவும், மேஜை நாற்காலிகளுக்காகவும் ஸ்மோல்னி யின் தாழ்வாரங்களில் சுற்றிக்கொண்டிருந்தனர்.

28 பாங்குகள் கைப்பற்றப்பட்டு, அவற்றின் டைரக்டர்களும் கைது செய்யப்பட்டனர். இந்த பாங்கு களில் வேலை செய்ய மிகக் குறுகிய நேரத்தில் புதிய ஊழியர்களை நிதி மந்திரி அனுப்பி வைத்தார். கைதி

யான டைரக்டர்களில் பலர் சோவியத் ஆட்சியின் கீழ் வேலை செய்யச் சம்மதம் தெரிவித்ததன்பேரில் அவர்கள் விடுதலை செய்யப்பட்டனர். ஒவ்வொரு பாங்குக்கும் ''காமிஸார்கள்'' நியமிக்கப்பட்டனர். இந்த நடவடிக்கைகளுக்கு திட்டம் வகுத்து நிறைவேற்றியவர் பாஞ்ச் ப்ருயேவிச்.

''நாம் அதிகாரத்தைக் கைப்பற்றுவோம்; பாங்குகளை தேசீய மயமாக்க முயற்சிப்போம்; அடுத்தபடி என்ன செய்ய வேண்டுமென்பதைப் பிறகு பார்த்துக் கொள்வோம். அனுபவத்திலிருந்து நாம் விஷயங்களைக் கற்றுக் கொள்வோம்'' என்று கலகத்திற்கு முன்னால் லெனின் யோசனை கூறினார்.

இந்த சித்தாந்தத்தின் படித்தான் அவர் இப்பொழுது நடவடிக்கைகள் எடுத்தார்.

புரட்சி நடந்த மறுநாள் போல்ஷ்விக்குகள் இரு உத்தரவுகளைப் பிறப்பித்தனர். ஓர் உத்தரவு பெரிய எஸ்டேட்டுகளை ஒழித்து, நிலங்களை ஸ்தல நிலக் கமிட்டிகளிடம் விட்டது. மற்றொன்று பாங்குகளை தேசீய மயமாக்கியது.

தனிப்பட்டவர்களின் சொத்து உரிமை ரத்து செய்யப்படவில்லை; சிறு நிலச் சொத்துக்களையும் தொடவில்லை. பாங்குகளில் பணம் போட்டிருந்தவர்கள், மாதம் 1500 ரூபிள் வரை பணம் அனுமதிக்கப்பட்டனர்.

தொழிற் சாலைகளை உடனடியாக தேசீய மயமாக்க லெனின் தயங்கினார். தொழிலாளர் வர்க்கம் தலைமை வகிக்கவும், தன் உரிமைகளைச் செலுத்தவும் கற்றுக்கொள்ளும் வரை சோஷலிஸத்தைப் முடியாதென்று லெனின் சொன்னார். அவருடைய நடவடிக்கைகள் பூர்த்தியாகாமலும் முரணாகவும் இருப்பது போல் தோன்றுவதற்கு அவர் இவ்விதம் காரணம் கூறினார்.

''அடங்கி நடக்கவே மனித சுபாவம் விரும்புகிறது. சோஷலிஸம் வரும்வரையில், சர்க்கார் சுதந்திரத்தை

நிலைநாட்டுவதைப் பாட்டாளிகள் விரும்பவில்லை; பகைவர்களை ஒழிப்பதையே விரும்புகின்றனர்'' என்று “அரசாங்கமும் புரட்சியும்'' என்ற நூலில் லெனின் எழுதினார்.

இதற்கிடையில் பின்பற்ற வேண்டிய பாதை தெளிவாகத் தெரிந்தது. “அரசாட்சி என்பது, நம் எதிரிகளை ஒழிப்பதற்காக, நாம் உபயோகிக்க வேண்டியிருக்கும் தற்காலிக ஸ்தாபனமே. ஆகையால் சுதந்திர மக்கள் ஆட்சியைப் பற்றிப் பேசுவது வீணாகும். பாட்டாளி வர்க்கத்திற்கு அரசாட்சி இன்னமும் தேவையாக இருக்கும் நிலையில், சுதந்திரத்திற்காக அரசாட்சி இருக்கவேண்டுமென்று அது விரும்பவில்லை. எதிரிகளை ஒழிப்பதற்காகவே சர்க்காரை விரும்புகிறது. எதிரிகளை ஒழிப்பதே பாட்டாளி சர்வாதிகாரத்தின் நோக்கம். எப்படியும் இதை அடைந்தாக வேண்டும்'' என்று லெனின் எழுதினார்.

**1917**, நவம்பர் **10**-ம் தேதி, பத்திரிகைகளின் சுதந்திரத்தைக் குறித்து ஓர் உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. இது தற்காலிகமானதே யென்றும், புதிய சர்க்கார் பலப்பட்டவுடன் ரத்தாகிவிடுமென்றும் கூறப்பட்டது.

மிதவாதப் பத்திரிகைகள் அடக்கப்பட்டன.

எதிர்க் கட்சிப் பத்திரிகைகள் படிப்படியாக அடக்கி மூடப்பட்டன.

பத்திரிகைகள் இவ்விதம் வாயடைக்கப் பட்டதை ஆதரித்து, **1917** நவம்பர் **17**-ம் தேதி லெனின், அகில ரஷிய சோவியத் மத்தியக் கமிட்டியில் பேசினார். “இப்பத்திரிகைகளை அனுமதிப்பது சோஷலிஸ்டாக இல்லாமலிருப்பதேயாகும். பலாத்காரம் செலுத்த ஏற்பட்ட ஸ்தாபனமே சர்க்கார். முன்னர் இந்த பலாத்காரத்தை மக்கள் மீது ஒரு சில பணமூட்டைகள் செலுத்தின, இப்பொழுது நாம், மக்கள் நலனுக்காக பலாத்காரம் செலுத்த விரும்புகிறோம்......'' என்று லெனின் கூறினார்.

மூன்று மாதத்திற்குப் பின், சோவியத்துகளின் 4-வது காங்கிரஸ் மஹா நாட்டில், ''எங்கள் பத்திரிகைகள் அடைக்கப்பட்டு விட்டன'' என்று சோஷலிஸ்டுகள் கூச்சலிட்டபோது லெனின் பின்வருமாறு பதிலளித்தார்: ''துரதிருஷ்ட வசமாக எல்லாப் பத்திரிகைகளும் அடைக்கப்படவில்லை; கூடிய சீக்கிரம் எல்லாப் பத்திரிகைகளும் நிறுத்தப்படும். வெட்கக்கேடான பூர்ஷ்வா அபினியை பாட்டாளி சர்வாதிகாரம் ஒழித்துக்கட்டும்'' என்றார் லெனின்.

ப்ரெஸ்ட்லிடோவ்ஸ்க் ஒப்பந்தத்திற்குப்பின் ஜெர்மன் துருப்புக்கள் ரஷியப் பிரதேசத்தில் பெரும் பகுதிகளை ஆக்கிரமித்துக் கொண்டிருந்தன. என்ன விபரீதம் வேண்டுமானாலும் ஏற்படக் கூடுமென்று அப்பொழுது லெனின் அஞ்சினார். அப்பொழுது தணிக்கை சிறிது தளர்த்தப்பட்டு, சில பத்திரிகைகள் வெளிவர அனுமதிக்கப்பட்டன. ஆனால் சர்க்கார் உத்தரவுகளையும், மந்திரிகளின் அறிக்கைகளையும் அவை முதல் பக்கத்தில் பிரசுரிக்க வேண்டுமென்று நிபந்தனை விதிக்கப்பட்டது. அதிகாரிகளுக்குப் பிடிக்காத ஒரு சிறு செய்தி பிரசுரமானாலும் பெருந்தொகை அபராதம் விதிக்கப்பட்டது. மாக்ஸிம் கார்க்கியின் ''நேவாயா ஜிஸன்'' என்ற பத்திரிகை கூட, ஒரு ''பாதகமான'' செய்தியைப் பிரசுரித்தபோது அதற்கு 35,000 ரூபில் அபராதம் விதிக்கப்பட்டது.

ஆனால் இந்தச் சிறு சலுகைகூட அதிக நாள் நீடிக்கவில்லை. 1918 மேயில் பல பத்திரிகைகள் மூடப்பட்டன. சிறிது காலத்திற்குப்பின் கார்க்கியின் பத்திரிகை உள்பட எல்லா எதிர்க் கட்சிப் பத்திரிகைகளும் மூடப்பட்டுவிட்டன. கார்க்கி லெனினுடன் சமாதானம் செய்து கொண்டபோது கூட, அவர் தம் பத்திரிகையை மீண்டும் ஆரம்பிக்க அனுமதிக்கப் படவில்லை.

எந்தப் பேச்சுச் சுதந்திரத்திற்காகவும் பத்திரிகைச் சுதந்திரத்திற்காகவும் ரஷியப் புரட்சி வாதிகள் பல தலைமுறைகளாகப் போராடி வந்தார்களோ அந்த சுதந்

திரங்கள் சில மாதங்களுக்குள்ளாகவே முற்றிலும அழிக்கப்பட்டு விட்டன.

## 15. அரசியல் நிர்ணய சபையின் வாயடைப்பு

"அரசியல் நிர்ணய சபையை உடனே கூட்ட வேண்டும்'' என்பது 1917 ஏப்ரல் முதல் நவம்பர் வரை லெனினின் முக்கிய கோஷங்களில் ஒன்ருக இருந்தது. போல்ஷ்விக்குகள் அதிகாரத்தைக் கைப்பற்றிஞல் அரசியல் நிர்ணய சபை உடனே கூட்டப்படுமென்று லெனின் திருப்பித் திருப்பிக் கூறிவந்தார்.

போல்ஷ்விக் வாக்குறுதி தெளிவாகவே இருந்தது. ஆஞல் நவர்பர் 25-ம் தேதி தற்காலிக சர்க்கார் ஏற்பாடு செய்திருந்த தேர்தலில், தங்களுக்கு அரசியல் நிர்ணய சபையில் பெரும்பான்மை ஆதரவு கிடைக்காதென்பதை போல்ஷ்விக்குகள் அறிந்திருந்தனர்.

புரட்சி நடந்த மறு நாளே லெனின் அரசியல் நிர்ணய சபைப் பிரச்னையை எழுப்பியதாக ட்ராட்ஸ்கி கூறுகிருர். ''லெனின் அரசியல் நிர்ணயப்பிரச்னையை எழுப்பிஞர். 'தேர்தலை ஒத்திவைக்க வேண்டும்; வோட்டுரிமையை விஸ்தரித்து, 18 வயதான அனைவருக்கும் வோட்டுரிமை அளிக்க வேண்டும்; கோர்னிலோவ் ஆதரவாளர்களையும் சட்ட விரோதமானவர்களாகச் செய்ய வேண்டும்' என்று லெனின் கூறியதாக ட்ராட்ஸ்கி குறிப்பிடுகிருர்.

தேர்தலில் வாக்காளர்களை போல்ஷ்விக்குகள் எவ்வளவோ நிர்ப்பந்தித்தும், தேர்தல் முடிவுகள் லெனின் எதிர்பார்த்ததைவிட இன்னமும் மோசமாகவே இருந்தது. ஆறு கோடியே அறுபது லக்ஷம் ரஷிய வாக்காளர்கள் தேர்தலில் வோட்டுப் போட்டனர். அவர்களில் 90 லக்ஷம்தான் போல்ஷ்விக்குகளுக்கு வோட் செய்தனர். சுமார் 2 கோடியே 10 லக்ஷம் பேர்—அதாதது 58 சதவிகிதம் வாக்காளர்கள் புரட்சி சோஷலிஸ்ட் கட்சிக்கு வோட் செய்தனர். மொத்தம் இருந்த

707 பிரதிநிதிகளில் புரட்சி சோஷலிஸ்ட் பிரதிநிதிகள் 370 பேர். இவர்கள் பெரும் பான்மைக் கட்சியினர். போல்ஷ்விக் பிரதிநிதிகள் 175 பேர்தான். லெனினை ஆதரித்த இடதுசாரி புரட்சி சோஷலிஸ்ட்டுகள் 40 பேர்; மென்ஷ்விக்குகள் 16 பேர்; பாபுலிஸ்ட் சோஷலிஸ்ட்டுகள் 2 பேர்; காடெட்டுகள் 17 பேர்; தேசீய சிறுபான்மை கோஷ்டிகளின் பிரதிநிதிகள் 86 பேர்; எந்தக் கட்சியிலும் சேராத சுயேச்சை அங்கத்தினர்கள் 11 பேர்.ரஷியாவின் சரித்திரத்திலேயே மிகச் சுதந்திரமாக நடந்த தேர்தலில் லெனினுக்கும் பூர்ஷ்வா வகுப்பினருக்கும் எதிராக மிதமான சோஷலிஸத்தை ஆதரித்துத் தீர்ப்புக் கூறிவிட்டனர்.

சோவியத் பொது உறவைப் பொறுத்த வரையில் இதை விட விபரீதமான முடிவு இருக்க முடியாது. ஆனுல் இதற்கும் லெனின் தயாராகவே இருந்தார்.

அரசியல் நிர்ணய சபை கூடும் தேதி பல முறை தள்ளிப்போடப்பட்டு, 1918, ஜனவரி 18-ம்தேதி கூடுவதென்று முடிவு செய்யப்பட்டது. இதற்கிடையில், புரட்சி சோஷலிஸ்ட்டுகளுக்கு விரோதமான உணர்ச்சியைத் தொழிலாளர்களிடையே ஏற்படுத்துவதற்காக போல்ஷ்விக்குகள் சாதுரியமான பிரசாரம் நடத்தி வந்தனர். நவம்பர் கலவரத்திற்கு திட்டம் வகுப்பதில் அவர்கள் எவ்வளவு திறமை காட்டினுர்களோ அவ்வளவு திறமை, அரசியல் நிர்ணய சபையைக் கலைப்பதற்கான திட்டம் வகுப்பதிலும் காட்டினுர்கள்.

தொழிலாளர், சிப்பாய்கள், மாலுமிகள் முதலியோரிடையே அதிகத் தீவிரமாகப் பிரசாரம் நடந்தது. அரசியல் நிர்ணய சபையைப் பட்டாளத்தினர் ஆதரித்தனர். அதற்கெதிராக நடப்பதில்லையென்று மாலுமிகள் பிரதிக்ஞை செய்து கொண்டனர்.

ஜனவரி 18-ம் தேதி காலை அரசியல் நிர்ணய சபை கூட விருந்தது. லெட்டிஷ் துருப்புகளை பெட்ரோக்ராடுக்கு லெனின் வரவழைத்திருந்தார். இந்தத் துருப்புக்களுக்கு ரஷிய மக்கள் மீது சிறிதும் அபிமானமில்லை.

இதற்கிடையில் அரசியல் நிர்ணய சபை ஆரம்பத்தைக் கொண்டாட, புரட்சி சோஷலிஷ்டு கட்சியால் ஏற்பாடு செய்யப்பட்ட அரசியல் நிர்ணய சபை பாதுகாப்பு லீக் ஒரு பெரிய ஊர்வலத்திற்கு ஏற்பாடு செய்தது. இதை எதிர்ப்புரட்சி நடவடிக்கை யென்று போல்ஷ்விக்குகள் கூறினர்.

லெட்டிஷ் துருப்புக்களைத் தவிர க்ரான்ஸ்டாட்டிலிருந்து கடற்படையும், க்ரூய்ஸர்கள், சப்மரீன்கள் முதலியவையும் நேவா நதியில் கொண்டுவரப்பட்டன. அரசியல் நிர்ணய சபை கூட விருந்த டாணட் மாளிகையின் வாசற்படிகளில் மாலுமிகளும் செம்படையினரும் நிறுத்தப்பட்டிருந்தனர். நடவடிக்கைகளைப் பார்க்க விரும்பிய பொது மக்களுக்கு பெட்ரோக்ராட் அரசியல் போலீஸ் தலைவர் உரிட்ஸ்கியே அனுமதிச் சீட்டுகள் வழங்கினுர்.

ஜனவரி 18-ம் தேதி காலை சுமார் 11 மணிக்கு நகரின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் நிராயுதபாணிகளான தொழிலாளர்கள், செங்கொடிகளையும், "உலகத் தொழிலாளர்களே ஒன்று படுங்கள்," "நிலம், சுதந்திரம்" "அரசியல் நிர்ணய சபை நீடூழிவாழ்க" என்ற வாசகங்கள் பொறிக்கப்பட்ட அட்டைகளையும் ஏந்திக் கூட்டம் கூட்டமாக வந்தனர். அவர்கள் மார்ஸ்பீல்டுக்குச் சென்றனர். விவசாயிகள் சோவியத் நிர்வாகக் கமிட்டி அங்கத்தினர்கள் அங்கு அவர்களுடன் சேர்ந்து கொண்டனர்.

டாணட் மாளிகைக்குச் செல்லும் ஒரு தெருவில் ஊர்வலம் திரும்பியவுடன் அதன் மீது போல்ஷ்விக்குகள் துப்பாக்கிகளாலும் இயந்திர துப்பாக்கிகளாலும் திடீரென்று தாக்கினர். அரசியல் நிர்ணய சபைக்குச் செல்லும் எல்லாத் தெருக்களையும் போல்ஷ்விக் துருப்புகள் அடைத்துக் கொண்டிருந்தனர். தோட்டாக்களை உபயோகிப்பதில் சிக்கனம் பார்க்க வேண்டாமென்பது அவர்களுக்குப் பிறப்பிக்கப்பட்டிருந்த உத்தரவு, அன்று நடந்த துப்பாக்கிப் பிரயோகத்தில் ஆண்

களும் பெண்களுமாக மாண்டவர்களும் காயமடைந்த வர்களும் மொத்தம் நூறு பேர்.

டாணட் அரண்மனை விசித்திரமாகக் காட்சி யளித்தது. ஹால்களிலும் அரசியல் நிர்ணய சபைக் கூட்டம் நடந்த இடத்திலும் ஆயுதம் தாங்கிய சிப்பாய் கள் நிறைந்திருந்தனர். ஒவ்வொரு வாசற்படியிலும் ஆயுதம் தாங்கிய சிப்பாய்களும் செம்படையினரும் நின்று உள்ளே செல்ல விரும்பியவர்களிடம் அனுமதிச் சீட்டைக் கேட்டனர். பொதுமக்கள் உட்காருமிடங் களில் உரிட்ஸ்கியின் போல்ஷ்விக் கும்பலே நிறைந் திருந்தது.

அரசியல் நிர்ணய சபைக் கூட்டம் காலையில் ஆரம்பமாவதற்குப் பதில் மாலை நாலுமணிக்கு ஆரம்ப மாயிற்று. ஹாலின் இடது கோடியில் போல்ஷ்விக்கு களும் இடதுசாரி புரட்சி சோஷலிஸ்ட்களும் அமர்ந் திருந்தனர். அவர்களுக்கு அடுத்தபடியாக புரட்சி சோஷலிஸ்ட் கட்சி அங்கத்தினர்களின் பெருங் கூட்டம் அமர்ந்திருந்தது. அவர்களுக்கு அடுத்தபடி யாக மென்ஷ்விக்குகள் அமர்ந்திருந்தனர். வலது பக்கத் தில் இருந்த ஆசனங்கள் காலியாக இருந்தன. காடட் பிரதிநிதிகளில் பலர் ஏற்கனவே கைது செய்யப்பட் டிருந்தனர். மற்றவர்கள் கூட்டத்திற்கு வரவில்லை. கூட்டம் சோஷலிஸ்ட் கட்சி மயமாக இருந்தது. அதில் போல்ஷ்விக்குகள் சிறு பான்மையினரே.

லெனின் தம் மனைவி, தங்கை, போஞ்ச் ப்ரூயேவிச் ஆகியவர்களுடன் பக்கத்து வாசற்படி ஒன்றின் வழியே உள்ளே வந்தார். அப்பொழுது சபை ஏற் கனவே நிறைந்து விட்டிருந்தது. லெனினும் அவ ருடன் வந்தவர்களும் பக்கத்து அறை ஒன்றுக்குச் சென்று நிம்மதியாக உட்கார்ந்து பேசிக்கொண்டே விருந்து சாப்பாடு சாப்பிட்டனர்.

லெனின் குறும்புச் சிரிப்புடன், “சபையைக் கூட்டுவதாக வாக்களிக்கும் அசட்டுக் குற்றத்தை நாம் செய்து விட்டதால் கூட்டத்தை இன்று ஆரம்பித்தாக

வேண்டும் '' என்ருர். "ஆனுல் கூட்டத்தை முடிப்பது சம்பந்தமாக சரித்திரம் இன்னமும் மௌனமாக இருக்கிறது '' என்று அவர் குறிப்பிட்டார்.

ஸ்வெர்ட்லோவ் அங்கு வந்து நிகழ்ச்சி நிரல் பற்றி லெனினுடன் கலந்தாலோசித்தார். சிறிது நேரத்திற்கு பின் லெனின், "சரி, கூட்டத்தை ஆரம்பிக்க நேரமாகிவிட்டது '' என்ருர். எழுந்து, நீண்ட தாழ்வாரத்தின் வழியே ஹாலுக்குச் சென்ருர். அவர் போவதற்குள் கூட்டம் ஆரம்பமாகிவிட்டது. லெனின் திட்டப்படி அது நடக்கவில்லை.

வயதில் முதிர்ந்த பிரதிநிதிதான் கூட்டத்தை ஆரம்பித்து வைப்பது வழக்கம். புரட்சி சோஷலிஸ்ட் கட்சி பெஞ்சியிலிருந்து ஷ்வெட்ஸோவ் எழுந்தார். பழைய "மக்கள் கருத்து'' கட்சியைச் சேர்ந்த பழுத்த அரசியல்வாதி. அவர் மேடையில் ஏறியபோது போல்ஷ்விக்குகள் மேஜைகளைத் தட்டி கலாட்டா செய்தனர். சோல்ஜர்கள் துப்பாக்கிகளைக் கொண்டு தரையில் இடித்தனர். இடதுசாரி சோஷலிஸ்டுகளில் சிலரும் இந்தக் காலித்தனங்களில் கலந்துகொண்டனர். காலரியில் உட்கார்ந்திருந்த ஒரு சோல்ஜர் ஷ்வெர்ட்ஸோவை நோக்கித் துப்பாக்கியை நீட்டிக் குறி பார்த்தான்.

இறுதியில் சப்தம் அடங்கியபோது, "அரசியல் நிர்ணய சபைக் கூட்டம் ஆரம்பமாகி விட்டது'' என்று ஷ்வெர்ட்ஸோவ் அறிவித்தார். கூட்டத்தினர் மறுபடியும் கூச்சலிட்டுக் குழப்பம் விளைவித்தனர்.

பின்னர் ஸ்வெர்ட்ஸோவ் மேடை மீது ஏறி அந்தக் கிழவரைத் தூர தள்ளிவிட்டு அரசியல் நிர்ணய சபைக் கூட்டத்தை ஆரம்பிக்க சோவியத் மத்தியக் கமிட்டி தமக்கு அதிகாரம் அளித்திருப்பதாகத் தம் உரத்த குரலில் கூறிஞர். பிறகு கமிட்டியின் சார்பில், பாட்டாளி மக்கள், சுரண்டப்படும் மக்களின் உரிமைப் பிரகடனத்தைப் படித்தார். லெனின், ஸ்டாலின், புகாரின் ஆகியவர்களால் எழுதப்பட்டது இது. அரசியல்

நிர்ணய சபையின் பொருளேயே அழித்து, ஆட்சிப் பொறுப்பு முழுவதையும் சோவியத்துகளிடமே ஒப் படைக்க வேண்டுமென்று அந்தப் பிரகடனம் கோரி யது. போல்ஷ்விக் ஆதிக்கத்தில் இருந்த சோவியத் மத்திய நிர்வாகக் கமிட்டி இதை அங்கீகரித்திருந்தது. "எந்தத் தனி நபராவது ஸ்தாபனமாவது சர்க்கார் வேலேகளே மேற்கொள்ள முயன்ருல் அது எதிர்ப் புரட்சி நடவடிக்கையாகக் கருதப்படும்; அத்தகைய முயற்சிகள் சர்க்காரின் முழு பலத்தையும் கொண்டு ஒடுக்கப்படும்" என்றும் அக்கமிட்டி ஒரு தீர்மானம் நிறைவேற்றியிருந்தது.

"ஸோவ்நோர்காமின்" வேலேத் திட்டத்தை ஏற்க தயாரா என்பது பற்றி முடிவு செய்யுமாறு சபையை ஸ்வெர்ட்லோவ் கேட்டுக்கொண்டார். இதற்கு பதிலாக, சபையில் நிலவிய கலாட்டாவையும் மீறி, சபைக்கு ஒரு தலேவரைத் தேர்ந்தெடுக்குமாறு கோரும் தீர்மானத் தைப் பிரேரிப்பதில் பெரும்பான்மைக் கட்சியினர் வெற்றி பெற்றனர். புரட்சி சோஷலிஸ்ட் கட்சித் தலேவர் ஸ்ரீ விக்டர் செர்னேவ் பெரும்பான்மை வோட் டுக்கள் பெற்றுத் தலேவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார்.

செர்னேவ் தம் துவக்க உரையில், ரஷியாவில் ஸ்திரமில்லாமலிருந்த இடைக்கால நிலேமை, அரசியல் நிர்ணய சபை கூட்டப்பட்டதால் முடிவடைந்துவிட்ட தாகக் கூறினுர். "நிலப்பிரச்னே ஏற்கனவே தீர்க்கப் பட்டுவிட்டது. உழுவதற்குத் தயாராக உள்ள அனே வருக்கும் நிலம் சொந்தமாகி விட்டது. பொதுவான ஜனநாயக சமாதானத்திற்கு முயற்சி செய்யும் தீவிர அயல் நாட்டுக் கொள்கையை அரசியல் நிர்ணய சபை அனுஷ்டிக்கும். ஆனுல் ஏகாதிபத்திய ஜெர்மனி யுடன் அது தனியாக சமாதான ஒப்பந்தம் செய்து கொள்ளாது."

"அரசியல் நிர்ணயசபை, சுயேச்சையாகத் தேர்ந் தெடுக்கப்பட்ட பார்லிமெண்ட் என்ற முறையில் சட்ட மியற்றும் பூரண உரிமையும் இதற்கு உண்டு. ஆனுல்

அடிப்படையான விஷயங்களை சர்வஜன வாக்கெடுப் புக்குவிட அது தயாராக இருக்கிறது. சோவியத்து களும் அரசியல் நிர்ணய சபையுடன் சேர்ந்து மக்கள் கருத்தை மதித்து நடந்தால் ரஷியாவில் அமைதியும் சுதந்திரமும் நிலவும். இல்லையானால் உள்நாட்டு யுத்தம் தவிர்க்க முடியாது" என்று செர்னேவ் கூறினர்.

நடுநடுவே பலர் இடைமறுத்துத் தொல்லை கொடுத்தும் பொருட்படுத்தமாமல் செர்னேவ் பேசி முடித்தார். சோவியத் பிரசங்கிகளான புகாரினும் ஸ்க்வோர்ட்ஸோவும் அவருக்குப் பின் பேசினர். அரசி யல் நிர்ணய சபை, மில் முதலாளிகளையும் பாங்கிக் காரர்களையும் வர்த்தகர்களையும் ஆ த ரி க் கி ற தா அல்லது தொழிலாளர், சிப்பாய்கள், மாலுமிகள் முத லிய பாட்டாளி மக்களை ஆதரிக்கிறதா என்பதை அறியும் பொருட்டு சோவியத் பிரகடனம் முதலில் நிறைவேற்றப்பட வேண்டுமென்று புகாரின் கூறினர். தொழிற்சாலை தொழிலாளிகள், பாங்க் டைரக்டர்கள், வியாபாரிகள் ஆகியவர்களின் பெயரைப் பிரஸ்தாபித்த வுடன் பெரும்பான்மையினரான சோஷலிஸ்டுகள் பரிகாசச் சிரிப்புச் சிரித்தனர்.

ஸ்க்வோர்ட்ஸோவ் புரட்சி சோஷலிஸ்டுகளை நோக்கி, "நமக்கிடையே எல்லாம் தீர்ந்துவிட்டன. பூர்ஷ்வாக்களுக்கு எதிரான அக்டோபர் புரட்சியை இறுதிவரை நாங்கள் தொடர்ந்து நடத்தப்போகிறேம். போர் அணியில் நாம் ஒருவரை ஒருவர் எதிர்த்து நிற்கி றேம்" என்று கூறினர்.

போல்ஷ்விக் பிரதிநிதிகள் பேசியவற்றை புரட்சி சோஷலிஸ்டுகள் அமைதியுடன் கேட்டுக்கொண்டிருந் தனர். போல்ஷ்விக்குகள் வசைமாரி பொழிந்த பொழுது கூட இவர்கள் இடைமறித்துத் தொல்லை கொடுக்க வில்லை.

ட்ஸெரெடெல்லி பதிலளிக்க எழுந்த போது அவர் தலைக்கு நேரே துப்பாக்கிகள் குறி பார்த்துப் பிடிக்கப் பட்டன. மாலுமிகள் கைத்துப்பாக்கிகளை அவர் முகத் திற்கு எதிரே ஆட்டினர். அமைதியாக இருக்குமாறு

தலைவர்கள் கேட்டுக் கொண்டபொழுது கூச்சலும் ஆபாஸமான கோஷங்களும் இன்னும் அதிகரிக்கத் தான் செய்தன. ஆனால் ட்ஸெரடெல்லி தம் பேச்சு வன்மையினாலும் சிவில் உரிமைக்கான கேளிக்கையி னாலும், உள்நாட்டு யுத்த எச்சரிக்கையினாலும் சபை யோரின் கவனத்தைக் கவர்ந்தார். அவருக்குப் பின் பேசிய புரட்சி சோஷலிஸ்ட் பிரதிநிதி அரசியல் நிர்ணய சபையின் சமாதான திட்டத்தை விளக்கினார்.

லெனின் பேசவில்லை. புன்முறுவல் செய்து கொண்டு மேடைக்குச் செல்லும் படியில் தமாஷ் பண்ணிக்கொண்டு உட்கார்ந்திருந்தார். ஒரு துண்டுக் காகிதத்தில் ஏதோ எழுதுவதுபோல் எழுதினார். பிறகு ஒரு பெஞ்சில் காலை நீட்டிப் படுத்துக்கொண்டு தூங்கு வதுபோல் பாசாங்கு செய்தார். சோஷலிஸ்ட் பிரதி நிதிகளை நோக்கி மாலுமிகள் துப்பாக்கியை நீட்டிப் பிடிப்பது நீடித்தது. காலரிகளில் இருந்தவர்கள் கூச்சலிட்டு கலாட்டா செய்துகொண்டே யிருந்தனர்.

போல்ஷ்விக் பிரதிநிதிகள், தங்கள் பிரகடனத்தை ஏற்குமாறு மீண்டும் வற்புறுத்தினர். நீண்ட விவாதத் திற்குப் பின் அதை அரசியல் நிர்ணய சபை நிராகரித் தது. யுத்தம், நிலச் சீர்திருத்தம், ரஷியாவின் அரசியல் அமைப்பு ஆகியவை சம்பந்தமான தங்கள் கருத்தைப் பெரும்பான்மைக் கட்சியினர் பதிவு செய்தனர். பின்னர் போல்ஷ்விக்குகள் அனைவரும் எழுந்து வெளியே சென்றனர்.

மற்ற பிரதிநிதிகள் தங்கள் பிரகடனங்களைப் படித்தபோது உதயமாகத் தொடங்கிவிட்டது. காலரிகள் காலியாகி விட்டன. பெரும்பான்மைக் கட்சியினரும் லெனினின் சிப்பாய்களும் மாலுமிகளும் மட்டும்தான் சபையில் இருந்தனர். தங்களுக்கு இருந்த நேரம் குறைவு என்பது புரட்சி சோஷலிஸ்டுகளுக்கும் மென்ஷ்விக்குகளுக்கும் தெரியும். நிலம் சம்பந்தமான உத்தரவை செர்னோவ் படித்துக்கொண்டிருந்த பொழுது, ஒரு மாலுமி அவர் கையைப் பிடித்துக்

கொண்டு, "முடிக்க நேரமாகிவிட்டது; மக்கள் க்ாமிஸாரிடமிருந்து எங்களுக்கு உத்திரவு வந்திருக்கிறது" என்ருன்.

"எந்த மக்கள் காமிஸார்?" என்று செர்ஞேவ் கேட்டார்.

"உத்தரவு—நீங்கள் இனி இங்கு இருக்கக் கூடாது. காவற்காரர்கள் அலுத்துப் போயிருக்கின்றனர். விளக்குகளை அணைத்து விடுவார்கள்" என்று பதிலளித்தான் அந்த மாலுமி.

"அரசியல் நிர்ணய சபை அங்கத்தினர்களும் அலுப்படைந்துதான் இருக்கின்றனர். ஆனல் சமாதானம், நிலம், சர்க்கார் ஆகியவை சம்பந்தமாக முடிவு செய்ய மக்கள் கொடுத்துள்ள அதிகாரத்தை நிறைவேற்றும் வரையில் அவர்கள் ஓய்வு கொள்ள முடியாது" என்ருர் செர்ஞேவ்.

மாலுமி தொடர்ந்து பேசச் சந்தர்ப்பம் அளிக்காமல், உத்தரவுகளைச் செர்ஞேவ் தொடர்ந்து படித்தார். ரஷியா பெடரல் குடியரசாகப் பிரகடனம் செய்யப்பட்டது. தேசிய இனங்களுக்குச் சுயவாட்சி உரிமை வழங்கப்பட்டது. "சீக்கிரம் முடியுங்கள். நேரமாகிவிட்டது" என்று காவற்காரர்கள் கூச்சலிட்டுக்கொண்டேயிருந்தனர். விளக்குகளை அணைத்து விடுவதாகவும் பயமுறுத்தினர். ஆனல் பிரதிநிதிகளைப் பொருட்படுத்தாமல் தங்கள் வேலையைத் தொடர்ந்து கவனித்தனர். நிலத்தை விவசாயிகளுக்கு மாற்றும் திட்டமும், செர்ஞேவின் பிரசங்கத்தில் குறிப்பிட்டபடி ஜனநாயக சமாதான திட்டமும் அங்கீகரிக்கப்பட்டன. சபைத் தலைவர் கூட்டத்தை ஒத்தி வைத்தபோது உதயமாகி விட்டது.

கூட்டம் மறுபடியும் பகலில் கூடியிருக்க வேண்டும். ஆனல் அசெம்பிளி கட்டிடத்திற்குப் போகும் வழியை துப்பாக்கிகளும் இயந்திரத் துப்பாக்கிகளும் தாங்கிய ராணுவத்தினர் அடைத்துக்கொண்டு நின்றனர். அன்றைய தினமே, அதாவது 1918 ஜனவரி 19-ம் தேதி அரசியல் நிர்ணய சபையை ரத்து செய்து

"ஸோவ்நார்கோம்" ஓர் உத்தரவு பிறப்பித்தது. முந்தின நாள் அரசியல் நிர்ணய சபை நடவடிக்கைகளைப் பிரசுரித்திருந்த பத்திரிகைகள் கடைகளிலிருந்தும் பத்திரிகை விற்கும் பையன்களிடமிருந்தும் பறித்து எரிக்கப்பட்டன.

19-ம் தேதி நடந்த அகில ரஷிய மத்திய சோவியத் நிர்வாகக் கமிட்டிக் கூட்டத்தில் லெனின் பேசுகையில் பின்வருமாறு சொன்னார்:

"அரசியல் நிர்ணய சபையைக் கூட்டவேண்டுமென்று மக்கள் விரும்பினர்; நாம் கூட்டினோம். இந்த மகத்தான அரசியல் நிர்ணய சபை எதற்குப் பிரதிநிதித்துவம் வகிக்கிறது என்பதை அவர்கள் உடனே உணர்ந்துவிட்டனர். சோவியத்துக்களுக்கு பூரண பலம் அளிக்கும் மக்கள் விருப்பத்தை இப்பொழுது நாம் உணர்ந்துவிட்டோம். சதிகாரர்களின் முதுகெலும்பை முறிப்போம்......"

"அதிகாரத்தை அரசியல் நிர்ணய சபையிடம் ஒப்படைப்பது பூர்ஷ்வாக்களுடன் சமரசம் செய்துகொள்வதாகும். புதிய போர்வையில் வந்துள்ள சதியான சமரசத்தைவிட பாட்டாளி மக்களின் நலம் உயர்ந்ததென்று சோவியத்துக்கள் கருதுகின்றன. சோவியத்துக்கள் சமர்ப்பித்த அவசரப் பிரச்னைகளை ஒத்தி வைப்பதென்று அரசியல் நிர்ணய சபை தீர்மானித்தபொழுது, அவற்றை ஒரு கணம்கூடத் தள்ளிப் போடக்கூடாதென்று நாம் அதனிடம் சொன்னோம். மக்கள் சக்தியை அங்கீகரிக்க மறுத்த அரசியல் நிர்ணய சபை, சோவியத்துக்களின் விருப்பத்திற்கிணங்க கலைக்கப்படுகிறது."

"அரசியல் நிர்ணய சபை கலைக்கப்பட்டுவிட்டது. என்ன நேர்ந்தாலும் சோவியத் புரட்சிக் குடியரசு வெற்றி பெறும்" என்று லெனின் கூறினார்.

இந்தப் பிரசங்கம் தஸ்தாவேஜுகளுக்காக ஏற்பட்டது. ஆனால், அரசியல் நிர்ணய சபை கலைக்கப்பட்டவுடன் ட்ராட்ஸ்கியுடன் லெனின் பேசிக்கொண்

டிருக்கையில், " அரசியல் நிர்ணய சபையைக் கூட்டு வதை நாம் தள்ளிப் போடாதது தவறு. மிகவும் அஜாக்கிரதையுடன் நாம் நடந்துகொண்டு விட்டோம். ஆனால் அதுவும் நல்லதாகவே முடிந்துவிட்டது. அரசியல் நிர்ணய சபையை சோவியத் சர்க்கார் கலைத்த தானது ஜனநாயகக் கருத்தை சர்வாதிகாரக் கருத்து அடியோடு ஒழித்ததாக ஆகும். இது நல்ல பாடமாக இருக்கும்" என்றார்.

## 16. ப்ரெஸ்ட் - லிடோவ்ஸ்க்

சர்வாதிகாரத்தை பலப்படுத்திக் கொள்ள, என்ன நேர்ந்தாலும் சமாதானத்தை நிலை நாட்டுவது லெனினுக்கு அவசியமாக இருந்தது. ஆனால் ஜெர்மனியிலும் உடனே புரட்சி வந்துவிடுமென்று அவர் நம்பினார். அதனால் ஜெர்மன் நிபந்தனைப்படி சமாதானம் செய்து கொள்வதால் தமக்கு அபாயமில்லை யென்று அவர் கருதினார். ஆகையால் சமாதானத்தை அடைவதற்காக எதை வேண்டுமானாலும் செய்யுமாறு, பேச்சு வார்த்தைகள் நடந்து கொண்டிருந்தபோது தம் சகாக்களை அவர் வற்புறுத்தி வந்தார்.

ஜோப், ட்ராட்ஸ்கி ஆகியவர்கள் தலைமையில் ரஷிய சமாதானத் தூது கோஷ்டி நவம்பர் மாதக் கடைசியில் ப்ரெஸ்ட்-லிடோவ்ஸ்குக்கு அனுப்பப்பட்டது. டிசம்பர் 27-ம் தேதி பெட்ரோக்ராட் பத்திரிகைகள் ரஷிய சமாதானத் தூது கோஷ்டியின் அறிக்கை ஒன்றைப் பிரசுரித்தன. "ஆக்கிரமிப்பில்லாமல் ஜன நாயக சமாதானம் செய்து கொள்ளும் கருத்தை மத்திய வல்லரசு நாடுகள் ஒப்புக் கொண்டிருக்கின்றன ; ஜெர்மனிக்கும் அதன் நேச நாடுகளுக்கும் மண்ணாசை இல்லை. அதே போல் எந்த நாட்டின் அரசியல் சுதந்திரத்தையும் அழிக்கவோ குறைக்கவோ அவை விரும்பவில்லை" என்று அந்த அறிக்கை கூறியது.

* * *

ஜெர்மன் நிபந்தனைகளை ரஷியத் தூது கோஷ்டி கேட்டவுடன், ரஷிய நிபுணர்களில் ஒருவரான ஜெனரல்

ஸ்கால‌ன் தாம் இருந்த இடத்திலேயே தற்கொலை செய்து கொண்டார். "சுமார் 18 மாகாணங்களுக்குச் சமமான பிரதேசம் ரஷியாவிலிருந்து பறிக்கப்படும் பொழுது "ஆக்கிரமிப்பு இல்லாத சமாதானம் என்று எப்படிச் சொல்ல முடியும்?" என்று மற்றொரு ரஷியப் பிரதிநிதியான ப்ரொபஸர் போக்ரோவ்ஸ்கி கண்ணில் நீர் ததும்பக் கேட்டார்.

பின்னர் ட்ராட்ஸ்கியையும் புகாரினையும் தலைவர்களாகக் கொண்டிருந்த ரஷியத் தூது கோஷ்டியில் பெரும்பாலானவர்கள் ஜெர்மன் நிபந்தனைகளை எதிர்த்தனர். சோவியத் சர்க்காரிலேயே பிளவு ஏற்படுத்தும் அளவுக்கு இந்த வேற்றுமை கடுமையாக இருந்தது.

*1918* ஜனவரி *21*-ம் தேதி போல்ஷ்விக் மத்தியக் கமிட்டியினரும் மூன்ருவது சோவியத் காங்கிரஸின் போல்ஷ்விக் பிரதிநிதிகளும் சந்தித்து, ஜெர்மன் நிபந்தனைகள் பற்றிப் பேசினர். கணிசமான அளவு பிரதேசத்தை விட்டுக் கொடுப்பதாக இருந்தால் கூட சமாதான ஒப்பந்தம் செய்துகொள்வதை ஆதரித்து லெனின் பேசினுர். ஒப்பந்தத்தில் கையெழுத்திடாமலே யுத்தம் முடிந்து விட்டதாக அறிவிக்கலாமென்று ட்ராட்ஸ்கி சிபாரிசு செய்தார். இப்படிச் செய்தால் ஜெர்மன் ராணுவம் தன் சர்க்காரையே எதிர்த்து நடக்குமென்று அவர் கருதினுர். ஜெர்மனியையும் அதன் நேச நாடுகளையும் எதிர்த்துப் "புரட்சி யுத்தம்" நடத்த வேண்டுமென்பது மற்ருெரு யோசனை. லெனின் யோசனையை ஆதரித்து 15 பேரும் ட்ராட்ஸ்கி யோசனையை ஆதரித்து 16 பேரும், புரட்சி யோசனையை ஆதரித்து 32 பேரும் வோட் செய்தனர்.

மூன்று நாளைக்குப் பின் மத்தியக் கமிட்டி மறுபடியும் சமாதானப் பிரச்னையை ஆலோசனைக்கு எடுத்துக் கொண்டது. ஜெர்மன் நிபந்தனைகளை ஏற்குமாறு லெனின் மறுபடியும் வற்புறுத்தினுர்.

* * *

ஜெர்மன் நிபந்தனைகளை ஏற்பது போல்ஷ்விக் திட்டம் முழுவதையுமே விடுவது போலாகுமென்று

புகாரின், ட்ராட்ஸ்கி, உரிட்ஸ்கி, லோமோவ், ட்ஸெர் ஷின்ஸ்கி முதலியவர்கள் கருதினர். கடைசியில், "யுத்தம் நின்று விட்டதாக அறிவிப்பது; சமாதான ஒப்பந்தத்தில் கையெழுத்திடக் கூடாது; ராணுவத்தைக் கலைத்து விடுவது" என்ற ட்ராட்ஸ்கியின் திட்டம் ஏற்றுக் கொள்ளப்பட்டது. அதற்குச் சாதகமாக 9 வோட்டுக்களும், எதிராக 7 வோட்டுக்களும் கிடைத்தன.

ஜெர்மனியைப் பற்றி யோசிக்காமலே இவர்கள் இந்த முடிவு செய்திருந்தனர். பிப்ரவரி 16-ம் தேதி ஜெர்மன் சோவியத் சர்க்காருக்கு இறுதிக் கடிதம் அனுப்பியது. தாக்குதலை மீண்டும் ஆரம்பிக்க ஜெர்மன் ராணுவம் தயாராயிற்று. ஜெர்மன் எச்சரிக்கைக் கடிதம் கிடைத்தபின் பிப்ரவரி 17-ம் தேதி மத்தியக் கமிட்டி கூடியது. ஜெர்மன் நிபந்தனைகளை உடனே ஏற்கவேண்டுமென்று லெனின், ஸ்டாலின், ஸ்வெர்ட்லோவ், ஸோகோல்னிகோவ், ஸ்மில்கா ஆகிய ஐவரும் வற்புறுத்தினர். புகாரின், லோமோவ், ட்ராட்ஸ்கி, உரிட்ஸ்கி, ஜோவ், கொரன்ஸ்கி ஆகிய அறுவரும் அதை எதிர்த்து வோட் செய்தனர். ஜெர்மன் தாக்குதலின் விளைவு என்ன ஆகிறதென்று கவனிப்பதென முடிவு செய்யப்பட்டது. ஜெர்மன் சோல்ஜர்கள் போராட மறுக்கக்கூடும் என்ற நம்பிக்கை.

பதினெட்டாம் தேதி ஜெர்மனி மறுபடியும் தாக்கியது. மத்தியக்கமிட்டி மறுபடியும் கூட்டப்பட்டது. சமாதான ஒப்பந்தத்தில் உடனே கையெழுத்திட வேண்டுமென்று லெனின் வற்புறுத்தினார். இப்பொழுதும் அவருக்குச் சிறுபான்மையினரின் ஆதரவுதான் கிடைத்தது. ஜெர்மன் வெற்றி பற்றிய செய்தி மாலையில் கிடைத்தது. பொதுக் கருத்து அப்பொழுது மாறத் தொடங்கியது. ஒப்பந்தத்தில் கையெழுத்திடவேண்டுமென்பதை லெனின் எப்பொழுதையும் விட பலமாக வற்புறுத்தினார். "ரஷியப் பிரதேசத்தில் சிறிது அளவை" விட்டுக் கொடுக்க தம் தோழர்கள் ஏன் கவலைப் படுகிறார்களென்பது விளங்கவில்லை

யென்று லெனின் கூறினர். ஜெர்மன் நிபந்தனைகள் சோவியத் அதிகாரத்திற்குத் தீங்கு விளைவிக்கின் றனவா என்பதே லெனின் கவலை.

''சோவியத் சர்க்காரைக் கவிழ்க்க வேண்டுமென்று ஜெர்மானியர் கோரினல் யுத்தத்தைத் தொடர்ந்து நடத்த வேண்டியதுதான்; வேறு எந்த நிபந்தனை விதித்தாலும் அவற்றை போல்ஷ்விக்குகள் ஏற்கலாம்; ஏற்கவும் வேண்டும்'' என்ருர் லெனின்.

கடைசியாக வோட் எடுக்கப்பட்டபோது மொத்த மிருந்த 13 வோட்டுக்களில் 7 வோட் பெற்று லெனின் வெற்றி பெற்ருர். ப்ரெஸ்ட்லிடோவ்ஸ்கில் விதிக்கப் பட்ட ஜெர்மன் நிபந்தனைகளை சோவியத் சர்க்கார் ஏற்பதாகவும், புதிய நிபந்தனைகளுக்கு உடனே பதில் அளிப்பதாகவும் ஜெர்மன் சர்க்காருக்கு ஒரு தந்தி அனுப்பப்பட்டது.

பிப்ரவரி 22-ம் தேதி ஜெர்மனியின் பதில் கிடைத் தது. இப்பொழுது இன்னும் கடுமையான நிபந்தனை கள் விதிக்கப்பட்டிருந்தன. பின்லாந்து உள்பட பால் டிக் பிரதேசம் முழுவதையும் தன்னிடம் ஒப்படைக்க வேண்டுமென்றும், ஜெர்மனியினுல் ஏற்படுத்தப்பட்ட சுதந்திர உக்ரேனை சோவியத் சர்க்கார் அங்கீகரிக்க வேண்டுமென்றும் ஜெர்மனி கோரியது.

சர்க்காரிலிருந்தும், மத்தியக் கமிட்டியிலிருந்தும் ராஜினமாச் செய்து விட்டு இவற்றை எதிர்த்துப் பிர சாரம் செய்வதாக லெனின் பயமுறுத்தி, ஜெர்மன் நிபந் தனைகளைக் கமிட்டி ஏற்கும்படிச் செய்தார். 1918 மார்ச் 3-ம் தேதி ப்ரெஸ்ட்லிடோவ்ஸ்க் ஒப்பந்தத்தில் ரஷியப் பிரதிநிதிகள் கையெழுத்திட்டனர்.

* * *

தாம் ஏற்றுக் கொண்டிருந்த நிபந்தனைகளின் உண்மை ஸ்வரூபம் லெனினுக்குத் தெரியும். நகல் ஒப் பந்தம் அவரிடம் காட்டப்பட்ட பொழுது, "அதை நான் படிக்கவும் விரும்பவில்லை; அதன்படி நடக்கவும் விரும்பவில்லை'' என்று கூறினர்.

ப்ரெஸ்ட்லிடோவ்ஸ்க் ஒப்பந்தத்தினுல் உக்ரேனின் மூலப் பொருள் வசதிகள் அனைத்தும் ஜெர்மனிக்குக் கிடைத்தன. ரஷிய முனையில் உபயோகிக்கப்பட்ட ஜெர்மன் ராணுவத்தின் பல டிவிஷன்களை நேச நாடுகளுக் கெதிராகத் திருப்பவும் வசதி ஏற்பட்டது. ஆனுல், அதற்குப்பின் ஆறு அல்லது ஏழு மாதத்திற்குள் அமெரிக்க, பிரெஞ்சு, பிரிட்டிஷ் படைகள் ஜெர்மனியைத் தாக்கத் தொடங்கின. இதனுல் ஹிண்டன்பர்க் அரண் பிளவுண்டு, ஜெர்மனி சமாதானம் கோர வேண்டிய நிலை ஏற்பட்டது. லெனினுடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தினுல் கிடைத்த பிரதேசங்களை, நேச நாடுகளின் வெற்றியினுல் ஜெர்மனி கைவிட வேண்டிய தாயிற்று.

## 17. பயங்கரத்தின் ஆரம்பம்

போல்ஷ்விக் கலகம் நடந்தவுடன், போர்முனையில் ராணுவத்தைத் துறப்பதற்கான மரண தண்டனை ரத்து செய்யப்பட்டது.

"இது தவறு; சமாதானவாதிகளின் மன்னிக்க முடியாத பலவீனம்" என்று கூறி, அந்த உத்தரவை உடனே ரத்து செய்யுமாறு லெனின் சிபாரிசு செய்தார். இதனுல் ஏற்படக்கூடிய பிரதிகூலத்தை உணர்ந்து, "புதிய சட்டத்தைப் புறக்கணித்து, ராணுவத்தைத் துறந்து ஓடுகிறவர்களைச் சுட்டுவிடுவது" என்ற சமரச ஏற்பாட்டை அவர் ஏற்ருர்.

"அப்பொழுது, 'பயங்கரச் செயல் தவிர்க்க முடியாதது' என்று லெனின் ஒவ்வொரு கட்டத்திலும் தம் சகாக்களிடம் சொல்லி வந்ததாக ட்ராட்ஸ்கி கூறுகிருர். "நாசவேலை செய்பவனை நாம் சுட்டுக்கொல்ல முடியாதென்ருல் இது என்ன புரட்சி. உங்கள் சர்வாதிகாரம் எங்கே இருக்கிறது? அதை எனக்குக் காட்டுங்கள்; நமக்கு இப்பொழுது தேவைப்படுவது சர்வாதிகாரமல்ல; குழப்பம்தான்" என்ருர் லெனின். "எதிர்ப் புரட்சிக்காரர்களுக்கு புத்தி கற்பிக்க, புகியேர் டின்வில்

போன்ற ஒருவர்கூட நம்மிடம் இல்லையா?'' என்று லெனின் கேட்டார். அதே லக்ஷணங்களுடன் கூடிய பெலிக்ஸ் ட்ஸெர்ஷின்ஸ்கி லெனினுக்குக் கிடைத்தார்:

அவர் பார்ப்பதற்கு லக்ஷணமாக இருந்தார். அவர் நேசமாகப் புன்முறுவல் செய்தாலும் சில சமயங்களில் கடுகடுப்பாகக் காட்சி அளிப்பார். அச்சமயங்களில் பேய்போல் இருக்கும் அவர் தோற்றம். கடுமையான சுயகட்டுப்பாடும் அளவுகடந்த யோக்கியப் பொறுப்பும் படைத்தவர். மற்றவர்களின் கருத்தை பொருட்படுத்துவதில்லை. அடக்கத்திலும் அமைதியான நடையுடை பாவனைகளிலும் அவர் அலாதியாகக் காணப்பட்டார். புரட்சியின் "முனிவராக'' அவர் விளங்கினர்.

ட்ஸெர்ஷின்ஸ்கி ஒரு பெரிய போலிஷ் நிலப் பிரபுவின் மகன். அவர் மாணவராக இருந்தபோதே லிதுவேனியா சமூக ஜனநாயகக் கட்சியில் சேர்ந்தார். அவர் வாழ்க்கையில் பெரும்பகுதியைச் சிறையிலும் ஸைபீரியாவிலும் கழித்தவர். புரட்சிக்குப் பின் மாஸ்கோ சிறையிலிருந்து அவர் விடுவிக்கப்பட்டார்.

ஸ்மோல்னி கழகத்தின் மாடியில் லெனினும் அவருடைய சகாக்களும் புதிய சமுதாயத்திற்கு திட்டம் வகுத்துக்கொண்டிருந்தனர். இதற்குத் தேவையான சொல்லை லெனின் சப்ளை செய்தார்; ஆனல் சோவியத் அதிகாரத்தை நிலைநாட்ட வாள் அவசியமாக இருந்தது. கீழே ஓர் இருண்ட அறையில் ட்ஸெர்ஷின்ஸ்கி அமர்ந்திருந்தார். ஸ்மோல்னி படையின் தலைவராக அப்பொழுதுதான் அவர் நியமிக்கப்பட்டிருந்தார். லெட்டிஷ் துருப்புக்கள் பல அவருடைய அதிகாரத்தின் கிழ் இருந்தன. இயந்திரப் துப்பாக்கிகளுக்கு எண்ணெய் போட்டு, ஜன்னல்களுக்கு நேரே தயாராக வைத்திருப்பதுதான் இவர்களுடைய வேலை.

சில தினங்கள் வரை எல்லாரும் சுறுசுறுப்பாக இருந்தனர். போல்ஷ்விக் புரட்சியின் எதிரிகள் இருக்

கும் வரை லெனின் பதவிக்கு ஆபத்துத்தான் என்பது ட்ஸெர் ஷின்ஸ்கிக்குத் தெரியும்.

''ஸோவ்னுர் கோம்'' கூட்டம் நடந்துகொண்டிருந்தபோது, ஸ்மோல்னியில் இருந்த அனைவரும் சோதனைக்கு ஆஜராக வேண்டுமென்று தலைவரின் அறையிலிருந்து ஒரு கண்டிப்பான உத்தரவு வந்தது ஆஜராகத் தவறியவர்கள கைது செய்யப்பட்டனர். ஒவ்வொரு வாசற்படியிலும் மாடிப்படி வழிகளிலும் சிப்பாய்கள் நிறுத்தப்பட்டிருந்தனர்.

வந்தவர்கள் உத்தியோக தோரணையில் விசாரிக்கப்பட்டனர். சந்தேகத்திற்கிடமில்லாதவர்கள் கட்டிடத்திற்குத் திரும்பிவர அவர்களுக்கு அனுமதிச் சீட்டுகள் வழங்கப்பட்டன. சிலர் திரும்பி வரக்கூடாதென்று எச்சரித்து அனுப்பப்பட்டனர். மற்றவர்கள் மேற்கொண்டு விசாரணைக்காகக் கைது செய்யப்பட்டனர். ஒரு காலத்தில் பெண்களின் நாகரீகமான பள்ளிக்கூடமாக இருந்த அந்தக் கட்டிடத்தில் வேவுகாரர்களின் வலை விரிக்கப்பட்டுவிட்டது.

எதிர்ப் புரட்சியை எதிர்த்துப் போராட ஒரு விசேஷக் கமிஷன் அமைக்குமாறு ட்ஸெர்ஷின்ஸ்கிக்கு **1917**, டிசம்பர் **20**-ம் தேதி லெனின் உத்தரவிட்டார். இதன்படி "செகா" என்ற பெயருடன், உலகம் கண்டிராத பயங்கரச் செயல்கள் புரியும் சோவியத் ரகசியப் போலீஸ் அமைக்கப்பட்டது. பிற்காலத்தில் இதன் பெயர் ஓ.ஜி.பி.யு., என்.கே.வி.டி., எம்.வி.டி. என்றெல்லாம் மாறியது. ஆனால் இதன் வேலை என்னவோ ஒன்றேதான். ட்ஸெர்ஷின்ஸ்கி ''செகா''வின் முதல் தலைவராக ஆனார்.

இதைத் தொடர்ந்து போல்ஷ்விக்குகளுக்கெதிராக பல சதிகள் வெளியாயின. இவற்றில் சில உண்மையான சதிகள் ; மற்றவை பொய். ட்ஸெர்ஷின்ஸ்கி தம் அறையில் உட்கார்ந்து சோவியத் சர்வாதிகாரத்தின் ஆயுதத்தை இடைவிடாமல் கூர்மைப்படுத்திக் கொண்டேயிருந்தார். பெட்ரோக்ராடின் பல்வேறு பகுதிகளிலும் நிலவிய வதந்திகள் ட்ஸெர்ஷின்ஸ்கிக்கு

அறிவிக்கப்பட்டன. செக்கிஸ்ட் படைகளின் உதவியுடன் நகரை "சுத்தப்படுத்தும்" வேலையை ட்ஸெர்ஷின்ஸ்கி மேற்கொண்டார்.

இந்த இரவுச் சோதனையில் கைது செய்யப்பட்டவர்கள் சம்பந்தமான சாட்சியங்களைப் பரிசீலனை செய்வதில் அதிக காலம் செலவாகவில்லை. சந்தேகத்தை உடனே போக்காதவர்களின் கதி அதோ கதிதான். குளிர்கால மாளிகைக்கு அருகிலிருந்த பழைய போலீஸ் ஸ்டேஷனில் கைதிகள் அடைக்கப்பட்டிருந்தனர். அங்கு விசாரித்தோ விசாரிக்காமலோ கைதிகளை சுவர் அருகேநிறுத்தி சுட்டுவீழ்த்தினார்கள். செத்துக்கொண்டிருந்தவர்களின் மரண வேதனைக்குரல் வெளியே கேட்காமலிருக்கும் பொருட்டு வெளியே பேரிரைச்சலுடன் ஓடும் லாரிகள் இடைவிடாமல் ஓடவிடப்பட்டன.

பழைய சமுதாயத்திலிருந்து ஒரு புதிய சமுதாயத்தை உண்டாக்கத் தேவையான கருவியை ட்ஸெர்ஷின்ஸ்கி அளித்து விட்டார். பெருத்த அளவில் கட்டுப்பாடான பயங்கரச் செயல்கள் புரியும் கருவி அது. ட்ஸெர்ஷின்ஸ்கிக்கு வர்க்கப் போராட்டம் என்பது "பாட்டாளி வர்க்கத்தின் எதிரிகளை" ஒழிப்பதுதான். அவர் கருத்துப்படி போல்ஷ்விக் சர்வாதிகாரத்தை எதிர்த்தவர்களெல்லாம் "பாட்டாளி வர்க்கத்தின் பகைவர்கள்"தான்.

ஸோவ்னார்கோம் கூட்டங்களில் லெனின் தம் சகாக்களுக்குச் சீட்டுகள் அனுப்புவது வழக்கம். ஒரு சமயம் "நம் சிறைகளில் கொடிய எதிர்ப் புரட்சிக்காரர்கள் எவ்வளவு பேர் இருக்கிறார்கள் ?" என்று கேட்டு, டஸெர்ஷின்ஸ்கிக்கு லெனின் ஒரு சீட்டு அனுப்பினார். சுமார் 1500 பேர் இருப்பதாக ட்ஸெர்ஷின்ஸ்கி பதில் எழுதிக் கொடுத்தார். லெனின் அதைப் பார்த்துவிட்டு, தாமே ஏதோ முணுமுணுத்துக் கொண்டார். அந்த எண்ணுக்கு எதிரே ஒரு சிலுவைக்குறி போட்டு, ட்ஸெர்ஷின்ஸ்கிக்கே திருப்பி அனுப்பினார். ட்ஸெர்ஷின்ஸ்கி ஒரு வார்த்தைகூட பேசாமல் எழுந்து

அந்த அறையிலிருந்து வெளியே சென்றுவிட்டார் லெனின் சீட்டையோ, ட்ஸெர்ஷின்ஸ்கி எழுந்து போனதையோ ஒருவரும் கவனிக்கவில்லை. ஆனல் மறுநாள் பரபரப்புடன் அனைவரும் ரகசியமாகப் பேசிக் கொண்டனர். சிறையிலிருந்து 1500 "கொடிய எதிர்ப் புரட்சிக்காரர்களையும்" கொன்றுவிடுமாறு ட்ஸெர் ஷின்ஸ்கி முந்தின நாள் இரவு உத்தரவிட்டிருந்தார். லெனின் போட்ட சிலுவைக் குறியை அந்த 1500 பேருக்கும் விதிக்கப்பட்ட கூட்டு மரண தண்டனை யாக அவர் நினைத்துவிட்டார்.

லெனின் அவ்விதமே அவ்வளவு பேரையும் கொல்ல உத்தரவிட்டிருந்தாலும் பேச்சு இருந்திராது. ஆனல் ஒரு தவறு நடந்துவிட்டதாக லெனின் காரிய தரிசி போடியேவா கூறுகிருர். "அவர்களைக் கொல்ல வேண்டுமென்று வ்ளாடிமின் இலிச் விரும்பவில்லை. அவரை ட்ஸெர்ஷின்ஸ்கி புரிந்து கொள்ளவில்லை. குறிப்புக்களைத் தாம் படித்துப் புரிந்துகொண்டு விட்ட தற்கு அடையாளமாக அவற்றில் சிலுவைபோல் குறுக்குக் கோடு போடுவது லெனின் வழக்கம்" என் கிருர் அவருடைய காரியதரிசி.

1918-ம் வருஷ ஆரம்பத்தில் சர்க்கார் தலைமைக் காரியாலயத்தை சோவியத் தலைவர்கள் மாஸ்கோ வுக்கு மாற்றினர்.

இந்தப் புராதன நலைநகருக்கு ட்ஸெர்ஷின்ஸ்கி வந்தவுடன் தம் ஸ்தாபனத்திற்குத் தக்க இடம் தேடு வதில் முனைந்தார். லுபியாங்கா தெருவில் 22-ம் நம்பர் இடப்பட்ட ரோனியா இன்ஷ்யூரென்ஸ் கம்பெனி கட்டி டத்தை அவர் தேர்ந்தெடுத்தார். அதில் ஏராளமாக அறைகளும் பக்க வாசற்படிகளும் விசாலமான கூடங் களும், பரந்த முன் மைதானமும் இருந்தன. "செகா" வின் தலைமைக் காரியாலயம் என்ற முறையில், ரஷியா விலேயே மிக பயங்கரமான விலாசமென்று லுபியாங்கா தெரு 22-ம் நம்பர் கட்டிடம் பிரசித்தி பெற்றுவிட்டது.

# 18. க்ரெம்லினில்

மே மாதம் முதல் தேதியன்று க்ரெம்லின் சுவர் மீது நின்று கொண்டு, செஞ் சதுக்கத்தில் நடந்த மே தினக் கொண்டாட்டத்தை லெலின் பார்வையிட்டார். ஒரு காலத்தில் நெப்போலியன் நின்று கொண்டு மாஸ்கோ எரிவதைப் பார்த்ததும் இதே இடத்தி லிருந்துதான்.

பல நூற்ருண்டுகளாக ரஷிய எதேச்சாதிகாரிகள் முடிசூட்டிக் கொண்ட அதே இடத்தில்தான் லெனின் வசித்தார். ஆனுல் இந்தப் புதிய எஜமான் மிகவும் சிக்கனமான வாழ்க்கை நடத்த வேண்டியிருந்தது. அவர் அறையை அடுத்திருந்த அறைகளில் பூனையின் நாற்றமும் கார்பாலிக் ஆஸிட் வாடையும் வீசின. க்ரூப் ஸ்காயா, மேரியா, அவர்களுடைய வேலேக்காரி ஆகிய வர்கள் அதே அறையில் வசித்தனர். மன்னர்கள் உணவு அருந்திய அதே வெள்ளி, பீங்கான் பாத்திரங் களில் இவர்களும் உண்டனர். ஆனுல் இவர்களுடைய உணவில் தான் ருசியில்லே; உணவின் அளவும் போத வில்லே. புரட்சிக்கு முன் ஒரு சாதாரண மனிதன் சாப் பிடும் சாப்பாட்டைவிட இது மோசமாக இருந்தது. அறைகளுக்குச் சூடேற்ற கணப்புகளுக்குப் போதிய விறகு கூட இல்லே. விருந்தினர் வந்தால் சாப்பிடு வதற்குப் போதிய கரண்டிகள் கூட இல்லே. “நாம் நல்ல புரட்சிக்காரர்கள்; ஆனுல் நாம் ஏன் அந்நிய கலா சாரத்தைப் பின்பற்ற வேண்டுமென்று தெரியவில்லே; என்னேப் பொறுத்தவரையில் ‘நான் காட்டுமிராண்டி’ என்று அறிவிக்கத் தயார்” என்ருர் லெனின் ஒரு சமயம்.

* * *

விவசாயிகளிடம் கொடுத்து, பதிலுக்கு உணவுப் பொருள்கள் வாங்குவதற்கு, சோவியத் சர்க்காரிடம், ஆலேகளில் உற்பத்தி செய்யப்பட்ட உபயோகமான பொருள் ஒன்றுமில்லே. ஆகையால், 1918, மே, 10-ம் தேதி, விவசாயிகளிடமிருந்து தானியங்களேக் கைப் பற்றுமாறு சர்க்கார் உத்தரவிட்டது. ஒவ்வொரு கிரா

மத்திலும் இந்த உத்தரவை அமல் நடத்த ஒரு மாதத் திற்குப்பின், அதாவது ஜூன் 11-ம் தேதி "ஏழைக் கமிட்டிகள்" என்பவை அமைக்கப்பட்டன. சந்தேகம், வேவுபார்த்தல், துரோகம் முதலியவை நிறைந்த கேவல மான சூழ்நிலை விவசாயிகளிடையே ஏற்படுத்தப் பட்டது. ஒவ்வொருவரும் தங்கள் அண்டை வீட்டுக் காரர்கள் மீது வேவுபார்த்தனர். விவசாயிகள் தங்கள் ஆடு மாடுகளைக் கொன்றுவிட்டு நிலங்களைச் சாகுபடி செய்ய மறுத்தனர் தங்கள் உணவுப் பொருள்களை சர்க்காருக்குக் கொடுப்பதை விட பயிரிடாமலிருப்பது மேலென்று அவர்கள் நினைத்தனர். கிராமாந்திரப் பகுதிகளில் ஆங்காங்கு குழப்பங்கள் நடந்தன. செகா துருப்புக்கள் இவற்றை தயை தாக்ஷண்யமின்றி நசுக்கின.

சிவில் உரிமைகள் பூரணமாகப் பறிக்கப்பட்டது. அரசியல் நிர்ணய சபைக்கலைப்பு, செகா பயங்கரச் செயல்கள், ப்ரெஸ்ட்-லிடோவ்ஸ்க் ஒப்பந்தம் முதலிய காரணங்களால், எல்லா ரஷிய மக்களிடையேயும் சோவியத் சர்க்காருக்கு எதிர்ப்பு அதிகரித்தது.

கெரன்ஸ்கியைக் கவிழ்த்த பெட்ரோக்ராட் படை கலகம் செய்யத் தயாராக இருந்தது. மற்ற படை களைப்போல் இதையும் நிராயுதபாணியாக்க வேண்டிய தாயிற்று. லெட்டிஷ் சுடு படை மட்டுமே லெனின் நம் பிக்கைக்குப் பாத்திரமாக இருந்தது.

அரசியல் நிர்ணய சபை கலைக்கப்பட்டபின் இடது சாரி சோஷலிஸ்ட் புரட்சிக்காரர்களைத் தவிர மற் றெல்லா அரசியல் கட்சிகளும் லெனின் சர்வாதி காரத்தை எதிர்ப்பது அதிகரித்தது.

1918-ம் வருஷ இளவேனிற் காலத்தில் "வலது கேந்திரம்" என்ற ஸ்தாபனம், லெனினைக் கவிழ்த்து விட்டு மீண்டும் முடியாட்சியை ஏற்படுத்த ஜெர்மானிய ருடன் ரகசியமாக முயற்சி செய்து. "ரஷியப் புனர் ஜென்மலீக்" என்ற ஸ்தாபனம் இங்கிலாந்து, பிரான்ஸ், அமெரிக்கா ஆகிய நாடுகளின் உதவியை நாடியது.

ரஷியாவில் ஒரு நேச முன்னனி அமைக்குமாறு அந் நாடுகளே இந்த ஸ்தாபனம் உத்தியோக பூர்வமாகக் கேட்டுக் கொண்டது.

ஜெர்மனிக் கெதிராக சோவியத் சர்க்கார் மீண்டும் யுத்தத்தை ஆரம்பிக்க வற்புறுத்தப் படுமென்று ப்ரெஸ்ட்-லிடோவ்ஸ்க் ஒப்பந்தம் வரை நேச நாடுகள் எதிர்பார்த்தன. ப்ரெஸ்ட் - லிடோவ்ஸ்க் ஒப்பந்தத் திற்குப் பின் ரஷியப் புனர் ஜென்ம லீகின் யோசனே யில் நேச நாடுகள் அக்கரைகாட்டின. இந்த சமயத் தில் "தேசீய கேந்திரம்" என்ற ஒரு புதிய ஸ்தாபனம் அமைக்கப்பட்டது. இந்த போல்ஷ்விக் எதிர்ப்பு ஸ்தா பனங்கள் ஜெர்மனியையும் சோவியத் ஆட்சியையும் எதிர்த்துப் போராடப் படைகள் அனுப்புவதற்கு 1918 ஜூனில் நேசநாடுகள் ஒப்புக்கொண்டன.

இதற்கு முன்னுல் ஜப்பான் தன் படைகளே வ்ளாடி வாஸ்டாக்கிலும் ஸைபீரியாவில் மற்றும் பல முக்கிய மான இடங்களிலும் இறக்கியது. அங்கு ஏராளமான நேச தளவாடங்கள் குவித்து வைக்கப் பட்டிருந்தன. தவிர, ஏராளமான ஜெர்மன், ஆஸ்ட்ரிய யுத்தக் கைதி களும் அங்குதான் வைக்கப்பட்டிருந்தனர். ஜப்பானே எதிர்த்து 1918 ஜூலேயில் பிரிட்டிஷ், பிரெஞ்சு அமெரிக்கப் படைகள் வ்ளாடிவாஸ்டாக்கில் இறக்கப் பட்டன. இதே சமயத்தில் முர்மான்ஸ்கிலும் ஆர் கேஞ்சலிலும் பிரிட்டிஷ், அமெரிக்கத் துருப்புக்கள் இறங்கின.

ப்ரெஸ்ட்லிடோவ்ஸ்க் ஒப்பந்தத்திற்குப் பின், ரஷிய சேனேயில் சேவை செய்த ஜெக்கோஸ்லேவேகிய யுத்தக் கைதிகள் படையை ஸைபீரியா வழியாகவும் பஸிபிக் வழியாகவும் பிரான்ஸுக்கு அனுப்ப நேச நாடு கள் உத்தரவிட்டன. இதன் பேரில், ஜெக்குகளே அனுப்புவதை ஒப்பந்தத்திற்கு விரோதமான செய்கை யாக ஜெர்மனி கருதுமென்று சோவியத் சர்க்காருக்கு ஜெர்மன் சர்க்கார் அறிவித்தது.

அந்தப் படையை நிராயுதபாணியாக்குமாறு யுத்த மந்திரி ட்ராட்ஸ்கி உத்திரவிட்டார். ஆனுல் ஜெக்

படைகள் எதிர்த்துக் கலகம் செய்து ஸ்தல சோவியத் அதிகாரிகளைக் கைது செய்தன.

ஜெக் துருப்புக்களின் கலகம் பற்றிய தந்தி லெனினுக்குக் கிடைத்தவுடன் அவர் பெரிதும் பரபரப் படைந்தார். மந்திரி சபைக் கூட்டம் ஒத்தி வைக்கப் பட்டது; உறுதி படைத்த போல்ஷ்விக்கான ரோஸென் கோல்ட்ஸ் என்பவர் பூரண அதிகாரத்துடன் ஜெக் படைகள் இருந்த இடத்திற்கு அனுப்பப்பட்டார்.

ஜூன் 8-ம் தேதி தொழிலாளரும் சிப்பாய்களும், புரட்சி சோஷலிஸ்ட்டுகளும் ஜெக்குகளுடன் சேர்ந்து கொண்டனர். "அகில ரஷிய அரசியல் நிர்ணய சபை அங்கத்தினர்கள் கமிட்டி" என்ற ஸ்தாபனம் ஒன்று ஏற்பட்டு, மக்கள் ராணுவம் ஒன்றை அமைக்கத் தொடங்கியது. யூரல் பகுதியைச் சேர்ந்த கஸாக்கு களும் ஜெக்குகளுடனும், மக்கள் படையுடனும் சேர்ந்து கொண்டனர். சிறிது காலத்திற்குள்ளாகவே வோல்கா நதிப் பிரதேசத்திலிருந்து பஸிபிக் கடற்கரை யில் உள்ள வ்ளாடிவாஸ்டாக் வரை உள்ள பெரும் பகுதி போல்ஷ்விக் எதிர்ப்புப் படைகள் வசமாகி விட் டது. அப்பொழுது உக்ரேனும், தென் ரஷியாவின் மற்றப் பகுதிகளும் ஜெர்மன், ஆஸ்ட்ரியப் படைகள் வசம் இருந்தன.

டான் நதிப் பகுதியில் ரஷிய ராணுவத்தின் மாஜி சேனாதிபதிகளான ஜெனரல் அலெக்ஸீயேவும் ஜெனரல் கோனிலோவும் வெண்சேனை ஒன்றை அமைத்தனர். 1918 ஜனவரியில் இவர்களுடைய சேனையில் 3000 பேர் இருந்தனர். இந்தப் படையை அழிக்க போல்ஷ்விக்கு கள் 10,000 பேர் கொண்ட படையை அனுப்பினர். அப் பகுதியில் இருந்த விவசாயிகளின் ஆதரவு ஜெனரல் களுக்கு இல்லாததால் அவர்களுடைய படை பின் வாங்க நேர்ந்தது. ஜெனரல் கோர்னிலோவ் போரில் மாண்டார்.

2 மாதத்திற்குப் பின் அந்தத் தொண்டர்படையில் ஆயிரம் பேர் மட்டுமே மிச்சமிருந்தனர். இவர்கள் ஒரு புதிய தாக்குதலை ஆரம்பித்தனர். இந்தத் தடவை பல

கஸாக்குகளும் அவர்களுடன் சேர்ந்து கொண்டனர். ஜூன் மாதத்திற்குள் அவர்களுடைய எண்ணிக்கை 12,000 ஆகவும் ஜூலையில் 30,000 ஆகவும் உயர்ந்தது. 1918 அக்டோபருக்குள் இந்தப் படையில் இருந்த துருப்புக்களின் எண்ணிக்கை ஒரு லக்ஷமாகப் பெருகி விட்டது. ஜெனரல் டெஸ்கின் தலைமையில் இப் படை 200 மைல் நீளப் போர் முனையில் பரவி யிருந்தது.

1918 கோடை காலத்தில் இடதுசாரி புரட்சி சோஷலிஸ்ட் கட்சியும் லெனினை எதிர்க்கத் தொடங்கிவிட்டது. இதுவரை லெனினை ஆதரித்துவந்த போல்ஷ்விக் அல்லாத கட்சி இது ஒன்றுதான். சோவியத் காங்கிரஸ் மஹாநாட்டின் முன் இவர்கள் ஐந்து அம்ச திட்டம் ஒன்றைச் சமர்ப்பித்தனர். அதன் கோரிக்கைகளாவன: (1) தானியப் பறிமுதல் படையைக் கலைத்துவிட வேண்டும். (2) நிரந்தர செஞ்சேனையைக் கலைக்கவேண்டும். (3) ட்ஸெர்ஷின்ஸ்கியின் ரகசிய போலீஸையும் செகாவையும் கலைக்க வேண்டும். (4) ஜெகோஸ்லோவேகிய சேனையுடன் சமாதானம் செய்துகொள்ள வேண்டும். (5) ஜெர்மனியை எதிர்த்து கொரில்லா யுத்தம் நடத்த வேண்டும் என்பவை அக் கோரிக்கைகள்.

லெனின் இவற்றை நிராகரித்துவிட்டு சில இடதுசாரி புரட்சி சோஷலிஸ்ட் தலைவர்களைக் கைது செய்யுமாறு உத்தரவிட்டார். ஜெர்மன் எதிர்ப்பு செக்கிஸ்ட்டுகள் பலரின் உதவியுடன், ஆயுதம் எடுத்துக் கலகம் செய்யவும், ஜெர்மன் ஸ்தானீக அதிகாரிகளுக்கெதிராக ஆயுதம் எடுத்துக் கலகம் செய்யவும் இடதுசாரி புரட்சி சோஷலிஸ்டுகள் திட்டம் வகுத்தனர். 1918 ஜூலை 6-ம் தேதி ப்ளம்கின் என்ற இடதுசாரி புரட்சி சோஷலிஸ்ட் ஜெர்மன் ஸ்தானீகரான மிர்பாக் பிரபுவைக் கொலை செய்தார்.

பல ராணுவப் படைகள், ஒரு செகா போலீஸ் படை ஆகியவற்றின் உதவியுடன் இடதுசாரி புரட்சி சோஷலிஸ்ட்டுகள் ட்ஸெர்ஷின்ஸ்கியைக் கைது செய்து, மாஸ்கோ தந்தி ஆபீஸ் உள்பட பல சர்க்கார்

கட்டிடங்களைக் கைப்பற்றினர். புரட்சி செய்யு மாறு பொதுமக்களைக் கேட்டுக்கொள்ளும் தந்திகள் நாடெங்கும் அனுப்பப்பட்டன.

டெலிபோன் இலாகா லெனின் அதிகாரத்தின்கீழ் இருந்ததால் அவர் துரிதமாக நடவடிக்கை எடுத்தார். மாஸ்கோவில் இருந்த கம்யூனிஸ்ட் தொழிலாளரை, லெட்டிஷ் படைகளின் தலைமையில் அவர் ஒன்று திரட்டினுர். மாஸ்கோவில் அமைதி நிலைநாட்டப்பட்டு, ட்ஸெர்ஷின்ஸ்கி தீங்கில்லாமல் விடுவிக்கப்பட்டார். வெளி மாகாணங்களில் இடதுசாரி புரட்சி சோஷலிஸ்ட்டுகளுக்கு விவசாயிகளின் ஆதரவு இருந்ததால் இன்னமும் அபாயம் இருந்தது. ட்ஸாரிட்ஸின்னில் (ஸ்டாலின்க்ராடில்) இருந்த ஸ்டாலினுக்கு லெனின் அனுப்பிய செய்தியில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார் :

"கலகத்தை இன்றிரவே நாம் தயை தாக்ஷண்யமின்றி அடக்கவேண்டும்; 'எதிர்ப் புரட்சிக்காரர்களின் கைபொம்மைகளாகிவிட்ட இந்த வெறியர்களை இரக்கமின்றி நசுக்குவது அவசியம்' என்ற உண்மையை மக்களிடம் சொல்லிவிடவும்" என்று லெனின் அறிவித்தார்.

"வெறியர்களைப் பொறுத்தவரை எங்கள் கை தளராது என்று நீங்கள் நிச்சயமாக நம்பலாம். பகைவர்களை நடத்தவேண்டிய விதத்தில் நடத்துவோம்" என்று ஸ்டாலின் பதில் அனுப்பினுர்.

மிர்பாக் பிரபுவின் கொலையை ஜெர்மன் சர்க்கார் கடுமையாகக் கண்டித்தது. இதை விசாரித்து குற்றவாளிகளைச் சீக்கிரம் தண்டிப்பதாகச் சோவியத் சர்க்கார் வாக்குறுதியளித்தது. ஆனுல் ப்ளம்கின் பிடிபடவில்லை. ஜெர்மன் சர்க்காரைத் திருப்திப் படுத்துவதற்காக இடதுசாரி புரட்சி சோஷலிஸ்ட் கட்சியைச் சேர்ந்த சுமார் இருபது பணயக் கைதிகளைக் கொலை செய்யுமாறு லெனின் உத்தரவிட்டார்.

யூரல் பகுதியில் செஞ்சேனைத் தலைவராக இருந்த இடதுசாரி புரட்சி சோஷலிஸ்டான முராவீவ் 1918

ஜூலை 11-ம் தேதி ஜெர்மனிமீது "போர்" தொடுத்தார்; மாஸ்கோவை நோக்கி முன்னேறுமாறு தம் படைகளுக்கு அவர் உத்தரவிட்டார். அவருடைய உத்தர்வு நிறைவேறுமுன் அவரை ஒரு போல்ஷ்விக் கொலை செய்துவிட்டான். அவர் இறந்ததோடு இந்தக் கலகமும் அடங்கிவிட்டது. ஆனால் மாஸ்கோவும் பெட்ரோக்ராடும் மத்திய ரஷியாவில் பெரும் பகுதி ஸைபீரியா, உக்ரேன், க்ரிமியா காகேஸஸ் ஆகிய, வற்றிலிருந்து இன்னமும் துண்டிக்கப்பட்டே யிருந்தன.

யூரல் பகுதியில் ஜெக்குகளும் போல்ஷ்விக்குகளும் போராடிக் கொண்டிருந்தபொழுது மாஜி மன்னர் நிகோலஸும் அவருடைய குடும்பத்தாரும் எகாடரின் பர்கில் 1918 ஜூலை 16-ம் தேதி கொல்லப்பட்டனர். மார்ச் புரட்சி நடந்தவுடனேயே அரச குடும்பத்தினர் கைது செய்யப்பட்டனர். 1917-ல் பெட்ரோக்ராடில் போல்ஷ்விக் கை ஓங்கத் தொடங்கியபோது அரச குடும்பத்தினரை ஸைபீரியாவில் டோபோல்ஸ்க் என்ற இடத்திற்கு இடைக்கால சர்க்கார் அனுப்பியது. 1918 மார்ச்சில் அவர்களை எகாடரின்பர்குக்கு அனுப்புமாறும், அங்கு அவர்கள் "பத்திரமாக" இருப்பார் களென்றும் யூரல் போல்ஷ்விக் ஸ்தாபனம் கூறியது.

நிகோலஸ், அவர் மனைவி, குழந்தைகள் ஆகியோர் எகாடரின்பர்குக்கு வந்தவுடன் அவர்களைக் கொல்வது பற்றி அவ்வூர் சோவியத் தலைவர்கள் யோசிக்கத் தொடங்கினர். ஆனால் மாஸ்கோவின் அங்கீகாரமில்லாமல் இந்தப் பொறுப்பை ஏற்கப் பெரும்பான்மையினர் சம்மதிக்கவில்லை. அவர்களுடைய விதியை நிர்ணயிக்க ஸ்தல போல்ஷ்விக் தலைவரான கோலோஸ் சோகின் அனுப்பப்பட்டார்.

அரச குடும்பத்தினரை எகாடரின்பர்கில் பகிரங்க விசாரணை நடத்துவதுபற்றி மத்தியக் கமிட்டி ஆலோசித்தது. ஆனால் அப்பொழுது இருந்த ராணுவ நிலைமையில் அவ்விதம் விசாரணை நடத்துவது உசிதமல்லவென்று அந்த யோசனை கைவிடப்பட்டது.

ஜெகோஸ்லேவேகியப் படை எகாடரின்பர்கை நோக்கி வந்துகொண்டிருந்தது. நீகோலஸ் மன்னரையும் அவருடைய குடும்பத்தினரையும் கொன்று, உடல் களையும் அழித்து விடுவதென்று முடிவு செய்யப்பட்டது. "பாமர ஜனங்களின் மூடநம்பிக்கையையும் அறியாமையையும் பயன்படுத்திக்கொண்டு அவர் களைக் கிளப்பிவிட அரச குடும்பத்தாரின் எலும்புகளை எதிர்ப் புரட்சிக்காரர்கள் உபயோகிக்காமலிருக்கும் பொருட்டு அவர்களின் உடல்களை உருத் தெரியாமல் அழித்து விடுவதென்று முடிவாயிற்று.

அரச குடும்பத்தினரைக் கொன்ற வரலாற்றை பிகோவ் என்ற யூரல் பிரதிநிதி பின் வருமாறு வர்ணிக் கிருர்.

"அரச குடும்பத்தினரைக் கொல்வதற்காக நிய மிக்கப்பட்டவர்கள் ஜூலை 16-ம் தேதியன்று. அக் குடும்பத்தார் வைக்கப்பட்டிருந்த வீட்டில் வந்து கூடி னர். மன்னர் குடும்பத்தைச் சேர்ந்த அனைவரையும் பாதாள அறைக்குக் கொண்டு போய் அங்கு கொன்று விடுவதென்று தீர்மானித்திருந்தனர். மன்னர் குடும்பத் தாருக்குத் தாங்கள் கொல்லப்பட விருந்தது கடைசி நிமிஷம் வரை தெரியாது. கொலையாளிகள் நடுநிசியில் மன்னர் குடும்பத்தாரை எழுப்பி, உடையணிந்து பாதாள அறைக்குச் செல்லுமாறு கூறினர். அவர் களுக்குச் சந்தேகம் ஏற்படாமலிருக்கும் பொருட்டு வெண்படையினர் அந்தக் கட்டிடத்தைத் தாக்க வருவதாகக் கொலையாளிகள் கூறினர். பாதாள அறை யில் வந்து கூடுமாறு அந்த வீட்டில் இருந்த அனை வருக்குமே உத்தரவிடப்பட்டது. எல்லாரும் அங்கு போய்க் கூடியவுடன் மரண தண்டனை படிக்கப்பட் டது. நிகோலஸ் மன்னர், அவர் மனைவி, அவருடைய குமாரன் அலெக்ஸீ, நாலு பெண்கள், அவருடைய பணியாளர்கள் ஆக பதினேரு பேர் அந்த இடத்தி லேயே சுட்டுக் கொல்லப்பட்டனர்.

உடல்களை ஜமக்காளங்களில் சுற்றி, லாரியில் ஏற்றி, நகரிலிருந்து பல மைல்களுக்கப்பால் இருந்த

பாழ்டைந்த ஒரு சுரங்கத்திற்குக் கொண்டு போனுர்/ கள். அன்று இரவு அவை அங்கு தற்காலிகமாக வைக் கப்பட்டிருந்தன. மறுநாள் காலை அவற்றை அழிக்கும் வேலை ஆரம்பமாயிற்று. ஜுலை 18-ம் தேதி பிற்பகல் வரை இந்த வேலை முடிவடையவில்லை.

யூரல் சோவியத்தின் அங்கத்தினரான யுரோவ்ஸ்கி தலைமையில் லெட்டிஷ் செக்கிஸ்ட்டுகளின் கோஷ்டி ஒன்று இந்த வேலையைச் செய்து முடித்தது. உடல் கள் கோடரியால் துண்டு துண்டாக வெட்டப்பட்டு, பென்ஸீன் எண்ணெயிலும் ஸல்ப்யூரித் ஆஸிடிலும் நனைத்து எரிக்கப்பட்டன. கருகிப்போன அந்தத் துண்டுகள் சுரங்கத்திலிருந்து சிறிது தூரத்தில் இருந்த சேற்றில் புதைக்கப்பட்டு, புதைந்த இடம் தெரியாதபடி அதன் மீது பாசிகளும் இலைகளும் போட்டு மூடப்பட்டன.

"மன்னர் குடும்பத்தை சோவியத் ஆட்சி மிகவும் அசாதாரணமான முறையில் ஒழித்தது. இந்த சம்பவத் தில் சோவியத் ஆட்சி தன் ஜனநாயகத் தன்மை முழு வதையும் காட்டியது. அகில ரஷியக் கொலைகாரனை அது வேறு விதமாக நடத்தவில்லை. ஒரு சாதாரண கொள்ளைக்காரனை எப்படிச் சுட்டுக் கொல்வோமோ அப்படியே அவனையும் சுட்டுக் கொன்றது" என்று பிகோவ் எழுதியிருக்கிறுர்.

மாஜி மன்னர் கொல்லப்பட்ட செய்தி ஜுலை 18-ம் தேதி உத்தியோக பூர்வமாக அறிவிக்கப்பட் டது.

புதிய பொது சுகாதார உத்தரவு பற்றி "ஸோவ் நார்கோம்" விவாதித்துக்கொண்டிருந்தது. சுகாதாரக் கமிஷனர் ஸெமாஷ்கோ பேசிக்கொண்டிருந்தார். அப் பொழுது ஸ்வெர்ட்லோவ் அங்கு வந்து லெனின் பக் கத்தில் அமர்ந்தார். ஸெமாஷ்கோ பேசி முடிந்தவுடன் ஸ்வெர்ட்லோ லெனினிடம் ரகசியமாக ஏதோ சொன் ஞர்'

"தோழர் ஸ்வெர்ட்லோவ் ஒரு விஷயம் அறிவிக்க விரும்புகிருர்" என்று லெனின் அறிவித்தார்.

"எகாரின்பர்க்கில் ஸ்தல சோவியத்தின் முடிவுப் படி நிகோலஸ் சுடப்பட்டு விட்டதாகச் செய்தி கிடைத் திருக்கிறது. நிகோலஸ் தப்பியோட முயன்றார்; ஜெக் கோஸ்லேவேகியர் நகரை நெருங்கி வந்து கொண் டிருந்தனர். மத்திய நிர்வாகக் கமிட்டியின்பிரெஸிடியம் இதை அங்கீகரிக்க முடிவு செய்திருக்கிறது" என்று ஸ்வெர்ட்லோவ் அறிவித்தார்.

இதைப் பற்றி யாரும் ஒரு வித அபிப்பிராயமும் தெரிவிக்கவில்லை.

"இனி நகல் விதியை ஷரத்து வாரியாக கவனிப் போம்" என்று கூறி லெனின் மறுபடியும் பழைய விஷயத்திற்குத் திரும்பினார். மக்கள் பிரதிநிதிகள் சபை ஸெமாஷ்கோவின் சுகாதார உத்தரவு பற்றி மறு படியும் ஆலோசிக்கத் தொடங்கியது.

1918 ஜூலை 19-ம் தேதி "இஸ்வெஸ்தியா" வெளி யிட்ட செய்தி, நிகோலஸின் மனைவியும் மகனும் பத்திர மான இடத்திற்கு அனுப்பப்பட்டிருப்பதாகக் கூறி யது. மாஜி ராணி, இளவரசன், அவனுடைய 4 சகோதரிகள் ஆகியோர் கொல்லப்பட்டு விட்டனர் என்ற செய்தி பொது மக்களுக்குப் பிடித்திராதோ என்னவோ. தவிர, எந்தச் சட்டமும், உடனுக்குடன் பைசல் செய்யும் புரட்சி நீதி கூட, மாஜி மன்னரின் டாக்டர். சமையற்காரன், வேலைக்காரி, பணியாள் ஆகியவர்கள் கொல்லப் படுவதற்கு இடமளிக்க வில்லை.

மாஜி மன்னர் இறந்த மறுநாள் இரவு யூரல் பிர தேசத்தில் இருந்த, மன்னரின் குடும்பத்தைச் சேர்ந்த மற்றும் 7 பேர் கொல்லப்பட்டனர். இதற்கு முன்னால் மைகேல் கோமகன் பெர்மில் சுட்டுக் கொல்லப்பட் டார்.

எதிரிகளை இறக்கமின்றி அழிப்பது சகஜமாகி விட்டது. லெனின், தம் கீழ் வேலை செய்து வந்தவர் களுக்குப் பிறப்பித்திருந்த உத்தரவுகளில் சந்தேகத் திற்கு இடம் வைக்கவேயில்லை. 1918 ஆகஸ்ட் 9-ம் தேதி அவர் பிறப்பித்த ஓர் உத்தரவு வருமாறு:

"நம்பக்கமானவர்களின் அதிகப்படிப்படை ஒன்று அமைப்பது அவசியம். குலக்குகள், பாதிரிகள், வெண் படையினர் ஆகியவர்களுக்கெதிராக இவர்கள் பெருத்த அளவில் பயங்கர நடவடிக்கைகள் எடுக்க வேண்டும். சந்தேகாஸ்பதமானவர்கள் அனைவரும் நக ருக்கு வெளியே ஒரு கைதி முகாமில் வைக்கப்பட வேண்டும். தண்டனைப் படைகளை உடனே அனுப்ப வேண்டும். இந்த உத்தரவு நிறை வேற்றப்பட்டது பற்றித் தந்தி மூலம் பதில் அனுப்பவும்.

லெனின்,

ஸோவனார்கோம் தலைவர்

சோவியத் ஆட்சியின் ஆரம்பம் முதலே, லெனி னைக் கொல்லச் சதி நடப்பதாக வதந்திகள் நிலவின. அவருடைய சர்க்கார் அடக்கு முறைகளை அதிகரித்த தால் அவருடைய பத்திரத்தைப் பற்றிய பயமும் அதி கரித்தது. *1918* ஜனவரியில் அடையாளம் தெரியாத ஒருவன் லெனின் கார்மீது சுட்டான். ஆனால் குறி தவறி விட்டது.

*1918* ஆகஸ்ட் *30*-ம் தேதி மாஸ்கோவில் தொழி லாளர் கூட்டம் ஒன்றில் லெனின் பேசி விட்டுப் போகும் போது ஒரு ஸ்திரீ அவரை நோக்கிச்சுட்டாள். அவர் கழுத்தில் ஒரு குண்டும், தோள் எலும்பில் ஒரு குண்டும் பாயந்தும் லெனின் உயிர் தப்பினார். செகா வில் நடந்த விசாரணையில் அவள் பின் வருமாறு வாக்கு மூலம் கொடுத்தாள்.

"என் பெயர் பான்யா காப்லான், இன்று நான் லெனினை நோக்கிச் சுட்டேன். (பிறர் தூண்டுதலின்றி) நானாகவேதான் சுட்டேன். நான் யாரிடமிருந்து ரிவால் வரைப் பெற்றேன் என்பதைச் சொல்ல மாட்டேன். மற்ற விவரங்களையும் சொல்லப் போவதில்லை. லெனி னைக் கொல்ல வேண்டுமென்று நெடு நாளைக்கு முன்பே நான் தீர்மானித்தேன். அவர் புரட்சியின் துரோகியென்று நான் கருதுகிறேன். கீவில் மன்னர் சர்க்காரின் அதிகாரி ஒருவரைக் கொலை செய்ய

முயன்றதற்காக என்னை பிரஷ்டம் செய்து அகாடாய்க்கு அனுப்பினர். பதினேரு வருஷகாலம் கடுங்காவல் தண்டனை அனுபவித்தேன். புரட்சிக்குப் பின் நான் விடுதலை யானேன் அரசியல் நிர்ணய சபையை நான் ஆதரித்தேன். இப்பொழுதும் ஆதரிக்கிறேன். என் பெற்ருேர்கள் அமெரிக்காவில் இருக்கிருர்கள்; 1911-ல் அவர்கள் அமெரிக்காவுக்குச் சென்றனர். எனக்கு நாலு சகோதரர்களும் இரண்டு சகோதரிகளும் இருக்கின்றனர். அவர்கள் எல்லாரும்தொழிலாளர்கள். நான் ரஷியாவிலேயே படித்தவள். நான் லெனினைக் கொலை செய்யவே சுட்டேன்'' என்று அவள் தன் வாக்கு மூலத்தில் சொன்னுள்.

அதே தினத்தில் பெட்ரோக்ராடில், லியோனீட் கானேகீஸர் என்ற யூதமாணவன், பெட்ரோக்ராட் செகா ஸ்தாபனத் தலைவரான யுரிட்ஸ்கியைக் கொலை செய்தான்.

இந்த இரு சம்பவங்களையும் தொடர்ந்து சர்க்கார் கொடுமைகள் கட்டவிழ்த்து விடப்பட்டுவிட்டன. செஞ்சேனை கோஷ்டிகள் தெருத் தெருவாகச் சுற்றி மத்தியதர வகுப்பினரையும் அறிவாளிகளையும் வேட்டையாடினர். கம்யூனிஸ்டுகளும் பெரிய அதிகாரிகளும் மட்டும்தான் பத்திர உணர்ச்சி பெற்றிருந்தனர். திடீர் திடீரென்று கைதுகள் நடந்தன ; கேள்வி முறை கிடையாது.

“பூர்ஷ்வா வர்க்கம் தனி நபர்களைக் கொல்கிறது ; நாம் வர்க்கங்களை மொத்தமாகக் கொல்கிருேம்'' என்று ஜினேவீவ் சோல்ஜர்களிடம் கூறினர். இது போன்ற சூத்திரங்களால் ஆவேசம் கொண்ட சோல்ஜர்கள் இரட்டிப்பு வேகத்துடன் தங்கள் படுகொலை வேலையில் முனைந்தனர். கானேகீஸ்ஸர் விசாரணையின்றிக் கொல்லப்பட்டார். எரியும் உள்நாட்டு யுத்தத் தீயில் எண்ணெய் வார்ப்பதுபோல், பணயக் கைதிகளாக வைக்கப்பட்டிருந்த பூர்ஷ்வாக்களில் சுமார் 500 பேரை க்ராண்ஸ்டாட் மாலுமிகள் சுட்டுக்கொன்றனர்.

உள்நாட்டு இலாகா மந்திரி ஜி. பெட்ரோவ்ஸ்கி ஸ்தல சோவியத்துகளுக்கு ஒலிபரப்பிய உத்தரவில் கூறியதாவது :

"ஸ்தல சோவியத் அதிகாரிகளுக்குத் தெரிந்த எல்லா வலதுசாரி புரட்சி சோஷலிஸ்டுகளும் உடனே கைது செய்யப்படவேண்டும். பூர்ஷ்வாக்களிலிருந்தும் அதிகாரிகளிலிருந்தும் கணிசமான அளவு பேரைப் பணயக் கைதிகளாக வைத்துக்கொள்ள வேண்டும். சிறிது எதிர்ப்பு இருந்தாலும், வெண்படையினர் சிறிது நடவடிக்கை எடுத்தாலும் கைதிகளைக் கூட்டம் கூட்டமாகக் கொல்ல வேண்டியதுதான் என்று அவர் உத்தரவிட்டார்.

லெனினைக் கொல்ல முயற்சி நடப்பதற்கு முன்பே, 1918 ஆகஸ்ட் 4-ம் தேதி "ப்ராவ்தா" பிரசுரித்த, "வர்க்க உணர்ச்சி பெற்ற தொழிலாளர்களுக்கு உபதேசம்" என்ற கட்டுரையில் சோவியத் ஆட்சியை எதிர்ப்பவர்கள்மீது பயங்கர ஆட்சி நடத்த வேண்டுமென்று கூறியது. சோவியத் ஆட்சிக்கெதிராகக் கையை உயர்த்தும் ஒவ்வொருவர் உடலிலும் பத்து குண்டுகளைச் செலுத்துமாறு தொழிலாளர்களுக்கு அது உபதேசம் செய்தது.

சில தினங்களுக்குள்ளாகவே 512 பணயக் கைதிகளை பெட்ரோக்ராட் செகா சுட்டுக்கொன்றது.

அக்டோபர் 19-ம் தேதி வெளியான "இஸ்வெஸ்த்தியா" பத்திரிகையில், விசேஷக் கமிஷன் கூட்ட நடவடிக்கைகள் பிரசுரிக்கப்பட்டிருந்தன. அதன் ஒரு பகுதி வருமாறு; "அகில ரஷிய விசேஷக் கமிஷன் மாஸ்கோவுக்குச் சென்ற பின் பெட்ரோக்ராட் ஜில்லா கமிஷன் செய்த வேலைகள் பற்றிய விவரங்களை தோழர் போகீ அறிவித்தார். கைது செய்யப்பட்டவர்களின் மொத்தத் தொகை 6220; சுட்டுக் கொல்லப்பட்டவர்களின் தொகை 800" என்று "இஸ்வெஸ்தியா" கூறுகிறது. பெட்ரோக்ராட் ஜில்லாவில் மாத்திரம் ஒரு குறுகிய காலத்திற்குள் நடந்த படுகொலை பற்றிய பூர்வமான புள்ளி விவரம் இது.

பூர்ஷ்வா வர்க்கத்தை அடியோடு அழிப்பதே சோவியத் பயங்கர ஆட்சியின் நோக்கமென்று கூறப் பட்டது. ஆனால் செகா ஸ்தாபனம் கூறிய வியாக்கி யானப்படி போல்ஷ்விக் கட்சியைச் சேராத எல்லாருமே பூர்ஷ்வாக்கள்தான். சோவியத் ஆட்சியின் பயங்கரச் செயல்களை எம். லாட்ஸிஸ் என்ற செக்கா அதிகாரி பின் வருமாறு விளக்கி எழுதினர்: "பூர்ஷ்வாக்களை நாம் வர்க்கத்தோடு ஒழிக்கிறோம். எதிரிகள் சோவியத் சர்க்காருக்கெதிராகப் பேசவோ நடக்கவோ செய்தனர் என்று நிரூபிக்க சாட்சியத்திற்காகக் காத்திருக்க வேண்டாம்; எதிரி எந்த வர்க்கத்தைச் சேர்ந்தவன், அவன் பிறப்பென்ன, அவன் கற்ற கல்வி என்ன, அவன் வேலையென்ன? இவற்றைக்கொண்டே அவ னுடைய விதியை முடிவு செய்ய வேண்டும். செஞ் சேனை பயங்கரத்தின் சாராம்சம் இதுதான்" என்று அவர் விளக்கினர்.

யுக்ரேனில் நடந்த பயங்கரங்களை ஏஞ்சலிகா பாலபனேவ் கண்டித்த பொழுது, "போல்ஷ்விக் லக்ஷியத்திற்கு உன் உபயோகம் தீர்ந்துவிட்டது" என்று லெனின் பதிலளித்தார். செக்கா ஸ்தாபனம் பாட்டாளி சர்வாதிகாரத்தை நடைமுறைக்கு கொண்டு வந்து கொண்டிருப்பதாக லெனின் ஒரு கூட்டத்தில் கூறினர். பயங்கர ஆட்சி பற்றிய குற்றச்சாட்டை 1918 அக்டோபரில் லெனின் மறுத்தார்.

1915-ல் இறந்துவிட்டதாக லெனின் அறிவித்த ரோமன் மாலினேவ்ஸ்கி திடீரென்று மாஸ்கோவில் தோன்றினன்.

பல வருஷங்களுக்கு முன் எந்தக் குற்றச் சாட்டு களை வெறும் அவதூறு என்று லெனின் கூறினரோ அதே குற்றச் சாட்டுகளுக்காக விசாரிக்க அவன் போல்ஷ்விக் புரட்சிக் கோர்ட்டின் முன் ஆஜர்படுத்தப் பட்டான். மாலினேவ்ஸ்கியின் விசாரணை ரகசியமாக நடந்தது. விசாரணை முழுவதிலும் லெனின் பிரசன்ன மாகியிருந்தார். தன்மீது ஆதாரபூர்வமாகக் கூறப் பட்ட குற்றச்சாட்டுகளை மாலினேவ்ஸ்கி மறுக்க வில்லை. தான் டூமாவைவிட்டு வெளியேறியவுடனேயே

எல்லா விஷயங்களையும் லெனினிடம் தெரிவித்துவிட்ட தாக அவன் சொன்னான்.

மாலினோவ்ஸ்கிக்கு எதிரே லெனின் அமர்ந்திருந் தார். ஒரு மேஜையின்மீது அவர் தலையைக்குனிந்து கொண்டு ஏதோ எழுதிக்கொண்டிருந்தார். லெனின் உள்ளத்தில் உணர்ச்சிப் போராட்டம் நடந்துகொண் டிருந்ததாக ஓல்கா அனிக்ஸ்ட் என்ற போல்ஷ்விக் சாட்சி கூறுகிறார். லெனின் அதே மாதிரி வெகுநேரம் உட்கார்ந்திருந்தார். "மாலினோவ்ஸ்கிக்கு வழிகாட்ட நண்பர்கள் இருந்திருந்தால் அவர் உளவாளியாகி யிருக்க மாட்டார்" என்று எதிரியின் வக்கீல் சொன்ன போது லெனின் நிமிர்ந்து மாலினோவ்ஸ்கியை நோக்கி பலமுறை தலையை அசைத்தார்.

மாலினோவ்ஸ்கிக்கு மரணதண்டனை விதிக்கப் பட்ட போது அவன் பயத்தினால் முகம் கோணி நடுங்கி னான். லெனின் தலையிட்டுத் தன்னைக் காப்பாற்றுவா ரென்று அவன் எதிர் பார்த்தான் போலும். அவனுக்கு மன்னிப்பு அளிப்பதாக முன் கூட்டியே வாக்குறுதி அளிக்கப்பட்டிருக்கலாம். இதுபற்றி லெனினே ஒரு விதமான முடிவுக்கும் வரவில்லை. இந்த உளவாளி கொல்லப்படுவதைத் தாங்கள் காணவேண்டுமென்று பெட்ரோக்ராட் தொழிலாளர் கோஷ்டி கேட்டுக் கொண்டது. தண்டனையை லெனின் குறைத்துவிடுவா ரென்று அவர்கள் அஞ்சினர். மறுநாள் மாலினோவ்ஸ்கி சுட்டுக் கொல்லப்பட்டதாக "இஸ்வெஸ்த்தியா" பத்திரிகை அறிவித்தது.

## 19. கம்யூனிஸ்ட் அகிலம்

போல்ஷ்விக்குகள் அதிகாரத்தைக் கைப்பற்றிய வுடன் உலகப் புரட்சிக்கு ஏற்பாடு செய்யத் தொடங் கினர். வெளிநாடுகளில் புரட்சி இயக்கத்தின் தேவை களுக்காக, வெளிநாட்டு இலாகா பிரதிநிதிகளுக்கு 1917 டிசம்பர் 24-ம் தேதி ஸோவ்நார்கோம் 20 லக்ஷம் ரூபிள் ஒதுக்கியது. லெனின், ட்ராட்ஸ்கி, போஞ்ச்-ப்ருயேவிச் கோர்பனோவ் ஆகியவர்கள் கையெழுத்திட்ட ஓர் உத்

தரவு 2 தினங்களுக்குப் பின் "இஸ்வெஸ்த்தியா"வில் பிரசுரமாயிற்று. எல்லா நாட்டுத் தொழிலாள வர்க்க இயக்கங்களின் இடதுசாரி சர்வதேசப் பிரிவுக்கும் பணம் உள்பட சாத்தியமான எல்லாவிதமான உதவி யும் அளிப்பது அவசியமென்று அந்த உத்தரவில் ஸோவ்னுர்கோம் கூறியது.

ரஷியா உள்நாட்டு யுத்தத்தின் மத்தியில் இருந்த போதிலும், உலகம் முழுவதிலும் மார்க்ஸீயப் புரட்சி லட்சியத்தை லெனின் ஒரு கணமும் மறக்கவில்லை. சமாதான உடன்பாட்டிற்குப்பின் மத்திய ஐரோப்பா விலும் கிழக்கு ஐரோப்பாவிலும் நிலைமை குழப்பமாக இருந்தது. போர்முனையிலிருந்து திரும்பி வந்த சிப்பாய் கள் அலுத்துப்போய் மனக்கசப்பும் ஆசாபங்கமும் அடைந்திருந்தனர். ஜெர்மனியிலும் ஆஸ்ட்ரியா-ஹங் கேரியிலும் முடியாட்சிகள் ஒழிக்கப்பட்டன. ஆஸ்ட்ரோ ஹங்கேரிய சாம்ராஜ்யம் நொறுங்கியது. போலந்தும் பால்க்கன் நாடுகளும் கொந்தளித்துக்கொண்டிருந்தன நேச நாடுகளிலும் தொழிலாளர் பொறுமை இழந் திருந்தனர். கம்யூனிஸம் வளர நாடு பக்குவமாக இருந்தது.

போல்ஷ்விக்குகள் ரஷியாவுக்கு வெளியே உலகப் புரட்சிக் கருத்தை முதல் முதலாக அமலுக்குக் கொண்டுவர முயன்றது ஜெர்மனியில்தான். புரட்சிப் பிரசாரத்தையும் துண்டுப் பிரசுரங்களையும் இவை போன்ற மற்ற பொருள்களையும் சோவியத் ராஜதந்திர பிரதிநிதிகள் கொண்டு வந்தனர். ஜோப், ராக்கோவ்ஸ்கி ராடேக், புகாரின் இக்னுடோவ் ஆகியவர்கள் அடங்கிய தூதுகோஷ்டியை போல்ஷ்விக்குகள் அனுப்பினர். இந்தத் தூதுகோஷ்டியை ஜெர்மன் ராணுவம் தடுத்து விட்டது. ராடேக் மட்டுமே மாறுவேஷத்தில் செல் வதில் வெற்றி பெற்றுர்.

ராடேக் முதலில் சுயேச்சை சோஷலிஸ்ட் கட்சி யிடம்தான் முயற்சி செய்தார். எபெர்ட், ஷீட்மன் ஆகியவர்கள் தலைமையில் இருந்த சமூக ஜன நாயகக் கட்சி சர்க்காரை சோவியத் ரஷியாவின் பெயரால் அவர்

கண்டித்து, உண்மையான புரட்சி சர்க்காரை அமைக்கு மாறு அவர் கேட்டுக் கொண்டார். இந்த சர்க்கார் சோவியத் ரஷியாவுடன் ரைனில் சேர்ந்து ஏகாதிபத்திய நேச·நாடுகளின் மீது போர் தொடுக்கு மென்று அவர் கூறினர்.

ஸ்பார்ட்டாளிஸ்ட் தலைவரான கார்ல் லீப்னெக்ட் டுடன் ரகசிய ஒப்பந்தம் செய்து கொள்ளுமாறு பின்னர் ராடேக்குக்கு உத்தரவிடப் பட்டது. இந்த ஒப்பந்தத்தின்படி ஸ்பார்ட்டாளிஸ்ட் பிரசாரத்திற்குப் பணம் கொடுக்கவும், ஆயுதங்கள் அனுப்பவும், லீப் னெக்டை ஜெர்மன் சோவியத் குடியரசின தலைவராக அங்கீகரிக்கவும் லெனின் ஒப்புக்கொண்டார். 1919 ஜன வரியில் பெர்லினில் ஸ்பார்ட்டாளிஸ்ட்டுகள் கலகம் செய்தனர். இது உடனே அடக்கப்பட்டு விட்டது, இதில் லீப்னெக்ட்டும், ரோஸா லக்ஸம்பர்கும் கொல்லப் பட்டனர்.

ஹங்கேரியில் கம்யூனிஸ்ட் புரட்சிக்குப்பின் கம்யூ னிஸ்ட் சர்வாதிகாரியான பேலாகுன்னுடன் லெனின் இதேபோன்ற ஒப்பந்தம் செய்துகொண்டார். ரஷியா வும் ஹங்கேரியும் ஒன்றுக் கொன்று பொருளாதார உதவியும் ராணுவ உதவியும் பரிமாறிக்கொள்ள இந்த ஒப்பந்தம் வசதி அளித்தது.

பெர்லினில் போல்ஷ்விக் பிரசார ஸ்தாபனத்தில் ராடேக், 1919 பெப்ருவரி 12-ம் தேதி கைதியானர். அந்த வருஷ இளவேனிற் காலத்தில் மத்திய ஐரோப் பாவில் பொதுக் கம்யூனிஸ்ட் தாக்குதல் நடத்துவதற் கான நகல் திட்டத்தை அப்பொழுது அவரிடமிருந்து போலீசார் கைப்பற்றினர். போலந்து வழியே ஜெர் மனிக்குள் செஞ்சேனை பிரவேசிக்கும் பொழுது ஜெர் மன் கம்யூனிஸ்ட்டுகள் கலகம் செய்ய ஏற்பாடாகி யிருந்தது.

மூன்ருவது கம்யூனிஸ்ட் அகிலத்தை ஏற்படுத்து மாறு கோரி ஐரோப்பிய, அமெரிக்கத் தொழிலாளர் களுக்கு 1919-ல் லெனின் ஒரு பஹிரங்கக் கடிதம் எழுதினர். மார்ச்சில் மாஸ்கோவில் கூடவிருந்த சர்வ

தேச மஹாநாட்டுக்கு சோவியத் அயல்நாட்டு மந்திரி சிகேரின் ஜனவரி 24-ம் தேதி அழைப்புகள் அனுப் பினுர். பிரிட்டிஷ் தொழிற் கட்சி கூட்ட உத்தேசத் திருத்த மஹாநாடு, "தொழிலாளர் வர்க்க எதிரிகளின் கூட்டம்" என்று கண்டிக்கப்பட்டது. "மூன்ருவது சர்வதேசப் புரட்சி ஸ்தாபனத்தின் நண்பர்கள்" அனை வரும் அதில் சேராதிருக்குமாறு கேட்டுக்கொள்ளப் பட்டனர். ட்ராட்ஸ்கி எழுதிய பிரகடனத்தின் முடிவில், "தொழிலாளர் சோவியத்தின் கொடியின் கீழ் அதி காரத்திற்கான புரட்சிப்போராட்ட,பாட்டாளி சர்வாதி காரக் கொடியின் கீழ், மூன்ருவது அகிலக் கொடியின் கீழ் உலகத் தொழிலாளர்களே, ஒன்று படுக" என்று குறிப்பிடப் பட்டிருந்தது.

கம்யூனிஸ்ட் அகிலத்தின் (கோமிண்டெர்ன்) முதல் மஹநாடு 1919, மார்ச் 2-ம் தேதி க்ரெம்லினில் நடைபெற்றது.

"இந்த மஹாநாட்டுக்கு வந்திருந்த 35 பிரதிநிதி களிலும் 15 பார்வையாளர்களிலும் பெரும்பாலானவர் கள், ரஷ்ய சம்ராஜ்யத்தில் இருந்த எஸ்தோனியா, லாட்வியா, லிதுவேனியா, பின்லாந்து ஆகிய சிறு நாடுகளைச் சேர்ந்த கம்யூனிஸ்ட் கட்சிகள் என்று கூறப்படும் ஸ்தாபனங்களிலிருந்து பொறுக்கி எடுக்கப் பட்டவை" என்று ஜிம்மர்வால்டு யூனியனின் மாஜி காரியதரிசியான ஏஞ்சலிகா பாலபனேப் கூறுகிருர். மற்றவர்கள் ரஷியாவில் இருந்த யுத்தக் கைதிகளும் வெளி நாட்டுத் தீவிரவாதிகளுமாவர். ஹாலந்து அமெரிக்க சோஷலிஸ்ட் பிரசார லீக் (இதில் பெரும் பாலும் ஸ்லோவக் அகதிகளே இருந்தனர்). ஜப்பானிய கம்யூனிஸ்ட் கட்சி ஆகியவற்றின் பிரதிநிதியாக, ரட்ஜர்ஸ் என்ற டச்சு-அமெரிக்க எஞ்சினீயர் ஒருவர் வந்திருந்தார். இங்கிலாந்திலிருந்து ஒரு ரஷிய அகதி யான பீன்பர்க் என்பவர் மஹாநாட்டுக்கு வந்திருந்தார். இவர் சோவியத் அயல் நாட்டு இலாகாவில் வேலை செய்து வந்தவர். ஏராளமான பணத்துடன் தப்பிச் சென்ற யுத்தக் கைதியான ஜாக்வெஸ் ஸடோல் என்ப

வர் ஹங்கேரியப் பிரதிநிதி. இவர் யுத்தத்தின்போது பிரெஞ்சு ராணுவ கோஷ்டியுடன் ரஷியாவுக்கு வந்து ரஷியாவிலேயே தங்கி லெனினை ஆதரிக்கத் தொடங்கியவர். இவரைப் பிரெஞ்சுப் பிரதிநிதியாக வைத்துக் கொள்ளலாமென்று யோசனை கூறப்பட்டது. ஆனால் வேறு பிரதிநிதி ஒருவர் வந்து விட்டார். யுத்தத்தை எதிர்த்துப் பிரசாரம் செய்து வந்த பிரெஞ்சுப் பத்திரிகாசிரியராக கில்ப்யூக்ஸ் ரஷியாவுக்கு வந்து கொண்டிருப்பதாகத் தகவல் கிடைத்தது. உடனே ஒரு பிரத்யேக ரயிலை எல்லை ஓரத்திற்கு அனுப்பி, வோட் எடுப்பதற்குள், பிரான்ஸின் சார்பில் வோட் எடுப்பதற்காகக் கொண்டு வரப்பட்டார். பிரெஞ்சு இடது சாரிகளின் பிரதிநிதி என்று அவருக்குப் பெயர் வைத்து, அவருக்கு 5 வோட்டுகள் கொட்டுக்கப்பட்டன.

ப்ளேட்டன் என்பவர் ஸ்விஸ் பிரதிநிதி, லெனின் பெட்ரோக்ராட் திரும்புவதற்கு உதவி செய்தவர் இவர் தான். ஜெர்மனி வழியே ரஷியாவுக்கு வந்து ரஷியாவிலேயே தங்கிவிட்டவர். 1917-ல் ரஷியாவுக்கு வந்த அமெரிக்க சோஷலிஸ்ட் தொழிற் கட்சியைச் சேர்ந்தவரான போரிஸ் ரீன்ஸ்டீன், தமக்குத் தம் கட்சியின் அனுமதி இல்லை யென்பதால் அவர் அமெரிக்கப் பிரதிநிதியாக இருக்க மறுத்து விட்டார். ரஷியாவுக்கு வெளியிலிருந்து உண்மையான முறையில் தேர்ந்தெடுத்து அனுப்பப்பட்ட ஒரே பிரதிநிதி ஜெர்மன் ஸ்பார்ட்டாஸிஸ்ட் பிரதிநிதியான எபர்லேன் ஒருவர் தான் வெறும் சகோதரப் பிரதிநிதியாக மட்டுமே இருக்க இவர் ஒப்புக் கொண்டார். இந்தக் கூட்டம் மூன்றுவது அகிலத்தின் முதல் மஹாநாடு என்று அழைக்கப் படுவதை இவர்தான் ஆக்ஷேபித்தார்.

கம்யூனிஸ்ட் கட்சியின் வெளி நாட்டுப் பிரிவை ராடேக் அமைப்பதாகக் கேள்விப்பட்டு தாம் போய்ப் பார்த்ததாகவும், இது வெறும் மோசடி என்று கண்டதாகவும் பாலபனேவ் கூறுகிறார். இந்தப் பிரிவுகளில் இருந்த அனைவரும் ரஷியாவில் யுத்தக் கைதிகளாக இருந்தவர்கள். கட்சி அங்கத்தினர்களுக்குக் கிடைக்

கும் வசதிகளை அனுபவிப்பதற்காகக் கட்சியில் சேர்ந்தவர்கள்; சோஷலிஸ்ட் கொள்கைகளைப் பற்றி அவர்களுக்கு ஒன்றுமே தெரியாது. அவரவர்களுடைய தாய் நாடுகளுக்குத் திரும்பிச் சென்று சோவியத் யூனியனுக்காக வேலை செய்ய அவர்களை ராடேக் தயார் செய்து கொண்டிருந்தார். இவர்களில் இருவர் லெனினின் அத்தாட்சிப் பத்திரங்களுடனும் ஏராளமான பணத்துடனும் இத்தாலிக்குச் சென்றனர். இவர்கள் பணத்தைச் சாராயக் கடைகளிலும் விபசார விடுதிகளிலும் செலவிட்டு விட்டதாக சில வாரங்களுக்குப் பின் ரஷியாவுக்குத் தகவல் கிடைத்தது.

1920-க்குள் இத்தாலியில் ஜன நாயக ஆட்சிக் கலக கிளர்ச்சியைத் தடுப்பதில் கம்யூனிஸ்ட் அகிலம் வெற்றி பெற்றது. அப்பொழுது பாஸிஸ்ட்டுகள் பலம் பெறவில்லை. ஆனால் மாஜி பிரதம மந்திரி பிரான்ஸிஸ்கோ நிட்டி அபாயத்தை உணர்ந்தார். விக்டர் மொன்யுவலைக் கவிழ்த்து விட்டு ஜன நாயகக் குடியரசைப் பிரகடனம் செய்யலாமென்று அவர் யோசனை கூறினார். இந்த யோசனையை டியோகாட் தகர்த்து விட்டார். அப்பொழுது தனிப்பெருங் கட்சியாக இருந்த சோஷலிஸ்ட் கட்சி மற்றக் கட்சிகளுடன் கூட்டுச் சேர மறுத்துவிட்டது. ஜன நாயகக் கட்சிகள் அமைத்த கூட்டு மந்திரி சபைகளையும் அது எதிர்த்து வந்தது. 1921-ல் அக் கட்சி பிளவுண்டபின் மற்ற சோஷலிஸ்ட் கோஷ்டிகளைத் தாக்குவதில் கம்யூனிஸ்ட்டுகள் கவனம் செலுத்தினர். பாஸிஸ்ட் அபாயத்தை மே மாதத்தில் அவர்கள் முற்றிலும் ஒதுக்கி விட்டனர். சமூக ஜன நாயக வாதிகளின் செல்வாக்கை அழிக்கத் தற்காலிக "வெள்ளைப் பிற்போக்கு" அவசியமென்று அவர்கள் குறிப்பிட்டனர். அந்த "வெள்ளைப் பிற்போக்கை" 1922 அக்டோபரில் பெனிடோ முஸோலினி அளித்தார். அது ஒரு தலைமுறை வரை நீடித்தது.

ஐரோப்பாவின் மற்றப் பகுதிகளிலும் புரட்சித் தீயை மூட்டினாலொழிய சோவியத் ஆட்சி நிலைக்கா

தென்று லெனின் கருதினுர். பாதகங்களையும் உள் நாட்டு யுத்தத்தையும் பொருட்படுத்தாமல் லெனின் கம்யூனிஸ்ட் அகில வேலையில் தொடர்ந்து கவனம் செலுத்தி வந்தார்.

1920 ஜூனில் கம்யூனிஸ்ட் அகிலத்தின் இரண்டாவது மஹாநாடு பெட்ரோக்ராடில் கூடியது. பிறகு கூட்டம் மாஸ்கோவில் ஆகஸ்ட் வரை நடைபெற்றது. இந்தத் தடவை மஹாநாட்டிற்கு 37 நாடுகளிலிருந்து கம்யூனிஸ்ட் பிரதிநிதிகளும் இடதுசாரி சோஷலிஸ்டு கோஷ்டிகளின் பிரதிநிதிகளும் வந்திருந்தனர்.

லெனின் சமர்ப்பித்த திட்டப்படி, உலகெங்கும் கம்யூனிஸ்ட் பிரசாரத்தைப் பரப்புவதற்கான வழிவகைகளை 2-வது மஹாநாடு வகுத்தது. ஒவ்வொரு நாட்டிலும் கலகங்களைக் கிளப்புவதற்காக ரகசிய கம்யூனிஸ்ட் ஸ்தாபனங்களை அமைக்க அது திட்டமிட்டது. ஆனுல் அதே சமயத்தில், சாத்தியமான இடங்களில் சட்டபூர்வமான அரசியல் நடவடிக்கைகளிலும் அவை ஈடுபட வேண்டுமென்று முடிவு செய்யப்பட்டது. “பூர்ஷ்வா சர்க்கார் ஸ்தாபனங்களை அவற்றை அழிப்பதற்காகவே உபயோகிக்க வேண்டும்” என்று மஹாநாடு அறிவித்தது.

கம்யூனிஸ்ட்டுகள் அடிப்படையிலேயே ஜனநாயகத்தை எதிர்ப்பவர்கள் என்பதை இந்த அறிவிப்பு ஒப்புக்கொண்டது.

மூன்ருவது மஹாநாட்டின் திட்டத்தைப் பூரணமாக ஏற்று, சர்வதேச கம்யூனிஸத்திற்கு லெனின் வகுத்த தந்திரங்களை அனுஷ்டிக்கத் தயாராக இருந்த ஸ்தாபனங்கள் மட்டுமே கம்யூனிஸ்ட் அகிலத்தில் சேர்த்துக்கொள்ளப்பட்டன.

“இனி மஹாநாட்டுக்கு வரும் பிரதிநிதிகள், எப்படி வோட் செய்ய வேண்டுமென்பது பற்றித் தங்கள் கட்சிகளிடமிருந்து எவ்வித உத்தரவும் பெருமல் வர வேண்டும்” என்று 4-வது மஹாநாடு அறிவித்தது.

* * *

லெனின் கம்யூனிஸ்ட் அகிலத்தின் கர்த்தாவாக இருந்ததோடு நிற்கவில்லை. அரசியல் போராட்டத்தில்

பொய்யையும் பித்தலாட்டத்தையும் உபயோகிக்கலாம் என்ற "புரட்சி தர்மத்தையும்" அவர் ஆதரித்து வந்தார்.

"கம்யூனிஸ்ட்டுகள் எல்லாவிதமான தியாகத்திற்கும் தயாராக இருக்க வேண்டும். எல்லாவிதமான தந்திரங்களையும் அனுஷ்டிக்கவும், தொழிற்சங்கங்களுக்குள் நுழைந்து வேலை செய்வதற்காக உண்மையைப் புறக்கணிக்க, அல்லது மறைக்கவும், சட்ட விரோதமான முறைகளை அனுஷ்டிக்கவும் தயாராக இருக்க வேண்டும்" என்று லெனின எழுதினுர்.

லெனின் மரணத்திற்குப் பின் கம்யூனிஸ்ட் அகிலம் தன் நடவடிக்கைகளைப் பெரிதும் விஸ்தரித்து, உலகெங்கும் தன் ஏஜெண்டுகளின் தொகையையும் அதிகரித்தது. ஆனுல் அது அனுஷ்டித்த முறைகளும் தந்திரங்களும் பெரிதும் லெனினுல் வகுக்கப் பட்டவையே.

## 20. க்ரான்ஸ்டாட்

க்ரான்ஸ்டாட், போல்ஷ்விக் புரட்சியின் பெருமை வாய்ந்த ஸ்தலம்.

1921 மார்ச் 1-ம் தேதி க்ரான்ஸ்டாட் மாலுமிகள் கலகம் செய்தனர். பல்வேறு கப்பல்களையும் படைகளையும் சேர்ந்த 15,000 பேர் கூடி, "சோவியத்துக்கு ரகசிய வோட் முறை மூலம் தேர்தல் நடத்த வேண்டும்; எல்லா இடதுசாரி சோஷலிஸ்ட் கட்சிகளுக்கும் பேச்சுச் சுதந்திரமும் பத்திரிகைச் சுதந்திரமும் அளிக்க வேண்டும்; எல்லாத் தொழிற் சங்கங்களுக்கும் விவசாய சங்கங்களுக்கும் கூட்டம் கூடும் சுதந்திரம் வேண்டும்; கடற்படையிலும் ராணுவத்திலும் உள்ள கம்யூனிஸ்ட் அரசியல் ஏஜென்ஸிகளை ரத்து செய்ய வேண்டும்; தானியக் கொள்முதல் படைகளை உடனே வாபஸ் பெறவேண்டும்; விவசாயிகளுக்குச் சுதந்திரமான மார்க்கெட்டை மீண்டும் ஏற்படுத்த வேண்டும்" என்று கோரித் தீர்மானங்கள் நிறைவேற்றியது.

மத்திய ரஷியாவில் பல விவசாயக் கலகங்களும் பெட்ரோக்ராட் முதலிய நகரங்களில் வேலை நிறுத்தங்களும் நடந்த பின் க்ரான்ஸ்டாட் ஆர்பாட்டம் நடந்தது. பழைய தலைநகரில் பட்டினி கிடந்த தொழிலாளர்கள் பண்டகசாலைகளைச் சூறையாடினர்.

**1921** மார்ச்சில் பொருளாதார அழிவு, புதிய உள்நாட்டு யுத்தம் ஆகியவற்றின் தலை வாசலில் ரஷியா நின்றது. இதில் வெளி நாடுகளின் தலையீடே இல்லை. தேசீய மயமாக்கப்பட்ட தொழில்கள் ஸ்தம்பித்து விட்டன; தொழிலாளரிடையே கட்டுப்பாடு மறைந்து வந்தது; தொழிலாளர்கள் நகரங்களைத் துறந்து கிராமங்களுக்குச் சென்றனர்.

பண்டங்களின் விலைவாசிகள் வானளாவி உயர்ந்தன. **1921-ல்** ஒரு தங்க ரூபிள் நாணயத்தின் மதிப்பு **26,529** காகித ரூபிளாக இருந்தது. தானியக் கொள்முதலின் கடுமை அதிகரித்தது.

“சமாதானம், உணவு, நிலம்” என்ற கோஷங்களின் மூலம் லெனினுல் கவரப்பட்ட அதே தொழிலாளர்களும், சிப்பாய்களும், மாலுமிகளும் சோவியத் ஆட்சியை எதிர்த்துக் கலகம் செய்தனர்.

**1921** மார்ச் **5-ம்** தேதி க்ரான்ஸ்டாட் மாலுமிகள், **15** பேர் கொண்ட புரட்சிக் கமிட்டி ஒன்றை அமைத்தனர். **6-ம்** தேதியன்று, ஜெனரல் துஹாசெவ்ஸ்கி கலகத்தை அடக்குவதற்காக மாஸ்கோவிலிருந்து விரைந்து வந்து கொண்டிருந்தார். நம்பத்தகுந்த **60,000** பேரை அவர் திரட்டினுர். கலகம் பரவாமல் தடுக்கும் பொருட்டு எல்லாத் துருப்புக்களையும் நிராயுத பாணிகளாக்கினுர்.

* * *

ஆனுல் க்ரான்ஸ்டாட்டில் கலகக் கொடி உயர்த்தப் பட்டுவிட்டது. அதிகாரம் புரட்சிக் கமிட்டியினிடம் இருந்தது.

பெட்ரோக்ராட் தொழிலாளரும் சிப்பாய்களும் கலகத்தில் கலந்து கொள்வார்களென்று க்ரான்ஸ்டாட்

எதிர்பார்த்தது. ஆனால் ஜினோவீவ் தூங்கிக்கொண்டிருக்கவில்லை. எல்லாக் கூட்டங்களையும் கலைக்குமாறும், ஆர்பாட்டங்களை இயந்திர பீரங்கிகளைக் கொண்டு கலைக்குமாறும் அவர் உத்தரவிட்டார். பெட்ரோக்ராட்மீது தாக்குதல் நடத்துமாறு க்ரான்ஸ்டாடில் மாலுமிகளுக்கு அதிகாரிகள் யோசனை கூறினர். ஆனால் மாலுமிகள் அனுவசியமாக ரத்தம் சிந்த மறுத்து, ட்ராட்ஸ்கி மக்கள் ரத்தத்தைச் சிந்தத் துணிந்தால் தற்காத்துக் கொள்வதாகக் கூறினர்.

ட்ராட்ஸ்கி காத்திருக்கவில்லை. கலகக்காரர்கள் பணிய மறுத்தால் அவர்களைத் தனித்தனியே சுடுமாறு உத்தரவிட்டார். மாலுமிகள் பணிய மறுத்தனர். மார்ச் 6-ம் தேதி மாலை டுகாசெவ்ஸ்கியின் விமானங்கள் பின்லாந்து குடாமீது பறந்து க்ரான்ஸ்டாட்டில் இருந்த வீடுகள் மீதும் தளங்கள் மீதும் குண்டு வீசின.

பிறகு கோட்டையைத் தாக்குமாறு டுகாசெவ்ஸ்கி உத்தரவிட்டார். அதிகாலையில் செக்கா, கம்யூனிஸ்ட் துருப்புகளின் முன்னேற்றம் ஆரம்பமாயிற்று.

பக்கத்திலிருந்த ஜரானியன்பாம் என்ற நகரில் பல செஞ்சேனைப் படைகள் கலகம் செய்து, மாலுமிகளை எதிர்த்துப் போராட மறுத்துவிட்டன. செக்கா படைகள் அங்கு விரைந்து சென்று, செஞ்சேனையைச் சேர்ந்த 5-வது சிப்பாய் ஒவ்வொருவரையும் சுட்டுத் தள்ளின.

க்ரான்ஸ்டாடில் மாலுமிகளின் எதிர்ப்பு மிகக் கடுமையாக இருந்தது. சோல்ஜர்களின் மனோதிடத்தை உயர்த்த போல்ஷ்விக் கட்சித் தலைவர்கள் போர் முனைக்கு வரவேண்டுமென்றுகூட டுகாசெவ்ஸ்கி கேட்டுக்கொண்டார். மாஸ்கோவில் நடந்துகொண்டிருந்த கம்யூனிஸ்ட் கட்சியின் பத்தாவது மஹாநாட்டிலிருந்து 300 உயர்தர அதிகாரிகள் போர்முனைக்கு அனுப்பப்பட்டனர். அதே மஹாநாட்டில் 1921, மார்ச், 8-ம் தேதி லெனின் பேசுகையில், "இந்தக் கலகம் அடுத்த சில மணி நேரத்திற்குள் இல்லாவிட்டாலும் சில தினங்

களுக்குள்ளாவது ஒடுக்கப்படும் என்பதில் சந்தேக மில்லை'' என்று கூறினர்.

மார்ச் 16-ம் தேதி இரவு டுகாசெவ்ஸ்கி விமானங்களைக் கொண்டு கடுமையாகத் தாக்கினர். 17-ம் தேதியன்று க்ரான்ஸ்டாட் ஓய்ந்துவிட்டதாக மாஸ்கோவுக்கு அறிவித்தார். ஆயிரக்கணக்கான சிப்பாய்களின் உடல்களும் மாலுமிகளின் உடல்களும் தெருக்களில் சிதறிக் கிடந்தன.

மாலுமிகளில் சிலர் பின்லாந்துக்குத் தப்பிச் சென்றனர். ஆனல் உயிரோடு பிடிபட்டவர்களில் பெரும்பாலானவர்கள் செக்கா கொலையாளி கோஷ்டியினரால் சுட்டுக் கொல்லப்பட்டனர். மற்றவர்கள் வெகு தூரத்திலிருந்த சிறை முகாம்களுக்கு அனுப்பப்பட்டனர்.

க்ரான்ஸ்டாட் துப்பாக்கிகள் இன்னமும் ஒலித்துக் கொண்டிருந்தன. அந்த நிலையில், போல்ஷ்விக்குகள் பதவியில் இருக்க வேண்டுமானல் அவர்கள் விட்டுக் கொடுப்பது அவசியம் என்பதை லெனின் உணர்ந்தார். "இடதுசாரிகளின்" ஆக்ஷேபத்தையும் பொருட்படுத்தாமல், 1921-ம் வருஷ இள வேனிற் காலத்தில் அவர் புதிய பொருளாதாரக் கொள்கையை அறிவித்தார்.

1918-ல் லெனின் தனிப்பட்டவர்களின் முயற்சியை எதிர்த்தார். ஆனல் ரஷியாவுக்கு மீண்டும் 'பொருளாதார ஆரோக்கியம்' ஏற்படுத்துவதற்கு தனிப்பட்டவர்கள் நடத்தும் வர்த்தகம் அத்யாவசியமென்று ஒப்புக்கொண்டார். சம்பள முறை மறுபடியும் அமலுக்குக் கொண்டு வரப்பட்டது. விவசாயிகளுக்கு, அவர்கள் உற்பத்தி செய்யும் பொருள்களில் மீண்டும் சொத்துரிமை அளிக்கப்பட்டது.

புதிய பொருளாதாரக் கொள்கை புகுத்தப்பட்ட பின்,சோவியத் தொழில் நிபுணர்கள் கம்யூனிஸ்ட் சித்தாந்தத்தை விட்டு பொருளாதாரத் திறமையையே முக்கிய நோக்கமாகக் கொண்டனர். தொழிலாளருக்கு அவர்களுடைய உழைப்பின் மதிப்புக்கேற்ப சம்பளம் கொடுக்கப்பட்டது.

"இந்த நிலையில் கம்யூனிஸத்தைப் புகுத்த முயன்றது தவறு" என்பதை 1921 அக்டோபரில் நடந்த மாஸ்கோ கம்யூனிஸ்ட் மஹாநாட்டில் லெனின் ஒப்புக்கொண்டார். "அப்பட்டமான கம்யூனிஸ்ட் கொள்கைகளைத் தாம் விட்டுக் கொடுத்ததற்குக் காரணம், தொழிலாளருக்கு விவசாயிகள் போதிய அளவுஉணவு அளிக்கத் தவறி விட்டதே" என்ருர்.

இந்தப் புதிய ஏற்பாட்டுக்கு "அரசாங்க முதலாளித்துவம்" என்று லெனின் பெயர் வைத்தார். இதன்படி சோஷலிஸப் பாதையில் ரஷியா முன்னேறுவதாக ஒரு வருஷத்திற்குப் பின் லெனின் கருதினுர். ஆனுல் சிறிது காலத்திற்குப் பின் அவருடைய நம்பிக்கை குறைந்தது.

**1921** கோடை காலத்தில் நடந்த கம்யூனிஸ்ட் அகிலத்தின் 3-வது மஹா நாட்டில் லெனின் பேசுகையில், உலகப் புரட்சியின் முன்னேற்றத்திற்குப் புதிய பொருளாதாரக் கொள்கை அவசியமென்று கூறினுர்.

**1921** முடிவுக்குள் போக்கு வரத்து, சுரங்கத் தொழில், சிறு வர்த்தகம் ஆகிய துறைகளில் பொதுவான பொருளாதார உயர்வை லெனின் காட்ட முடிந்தது. ஆனுல் பயிர்கள் நாசமானதாலும், 1918 முதல் கம்யூனிஸ்ட்டுகள் அனுஷ்டித்த கொள்கையினுல் கையிருப்பு இல்லாததாலும் ஏற்பட்ட பஞ்சத்தைத் தவிர்க்க முடியவில்லை. 1921 22-ம் வருஷங்களில் 50 லக்ஷம் மக்கள் பட்டினியால் மாண்டதாக உத்தியோக பூர்வமான சோவியத் புள்ளி விவரங்கள் கூறுகின்றன.

லெனின் தம் பொருளாதாரக் கொள்கையை மாற்றிக் கொண்ட போதிலும் அரசியல் எதையும் விட்டுக் கொடுக்க வில்லை. உண்மையில் கொஞ்ச நஞ்சம் எதிர்ப்பும் தயை தாக்ஷண்யமின்றி அழிக்கப்பட்டது. "பயங்கர நடவடிக்கைகளை விட முடியாது" என்று லெனின் எழுதினுர்.

லெனின் அரசியல் போலீஸ் உள்நாட்டில் உள வறியும் முறையை ஒழுங்கு படுத்தியது. ஜார் மன்னரின் ரகசியப் போலீஸைவிட அதகத் திறமை வாய்ந்த ஏஜெண்டுகள் நாடெங்கும் பரவியிருந்தனர். கடுமையான தணிக்கையின் மூலம் லெனின் கொள்கைகளை யாரும் குறை கூற முடியாதபடிச் செய்யப்பட்டது. பத்திரிகைகள், ரேடியோ, சினிமா, நாடக மேடை முதலிய சாதனங்கள் சரித்திரத்தில் முதல் முறையாக, சர்க்காருக்காக மட்டுமே பிரசாரம் செய்யும் சாதனங்களாயின. அதிக சம்பளத்திற்காகவும், வேலை நிலை உயர்வுக்காகவும் பேரம் பேசும் உரிமைகளைத் தொழிற் சங்கங்கள் அடியோடு இழந்து விட்டன. சிறைகளிலும் சிறை முகாம்களிலும் மன்னர் ஆட்சிக்காலத்தில் இருந்ததைவிட பன் மடங்கு அதிக அரசியல் கைதிகள் நிறைந்திருந்தனர். க்ரான்ஸ்டாட் சம்பவம் தான் ரஷிய மக்களின் உண்மையான கடைசி எதிர்ப்பு. அதன் பின் லெனின் சர்வாதிகாரம் பலப்பட்டு விட்டது. சர்வாதிகார ஆட்சி உருவாகி வந்தது.

## 21. கர்வமில்லாத சர்வாதிகாரி

லெனினைப்போல் கர்வமில்லாத சர்வாதிகாரி சரித்திரத்திலேயே வேறு ஒருவரும் இருந்ததில்லை. அவருடன் இருந்தவர்கள் அவரை உயர்த்தி வைக்க முயன்றதை அவர் எதிர்த்தார். "எந்த அந்நிய பாஷையிலாவது உங்களால் சரளமாகப் பேசமுடியுமா?" என்று கம்யூனிஸ்ட் அகிலம் கேட்டபோது, "தெரியாது?" என்று அவர் பதிலளித்தார். ஆனால் 3-வது கம்யூனிஸ்ட் அகில மஹாநாட்டில் ஜெர்மன் பாஷையில் நன்ருகப் பேசியிருக்கிருர். 1921-ல் கூடிய கட்சியின் 10-வது மஹாநாட்டுக் கேள்வித்தாளில், "உங்களுடைய விசேஷ அம்சங்கள் என்ன?" என்பது ஒரு கேள்வி. அதற்கு லெனின், "ஒன்றுமில்லை" என்று பதிலளித்தார்.

நாதன் ஆல்ட்மன் என்ற சிற்பி அவருடைய சிலை ஒன்று தயாரிக்க வந்தபோது, அது இயற்கையாக

இராதென்று கருதி, தம்மைப் பார்த்துச் சிலை செய்வதற்கு உட்கார மறுத்துவிட்டார்.

மனிதன் என்ற ரீதியிலும், தலைவர் என்ற முறையிலும் அவரிடம் காணப்பட்ட முரண்பாடுகளின் புதிரை விடுவிக்க மாக்ஸிம் கார்க்கி முயன்றும் முடியவில்லை.

ஆனால் அதே லெனின் தம் அரசியல் எதிரிகள்மீது விசித்திரமான குற்றங்களைச் சாட்ட அறியாமையைப் பயன்படுத்திக் கொள்ளத் தயங்கவில்லை. ரஷிய மக்களின் முன் தம் எதிரிகளை இழிவுபடுத்த எதையும் செய்யலாமென்று அவர் நினைத்தார். மார்ட்டோவை அவர் "துரோகி" என்றும் "அயோக்கியன்" என்றும் தூஷித்தார். ஆனால் அவர் உயிர் விடுவதற்கு முன், "மார்ட்டோவ் நம்முடன் இல்லையே! அவர் எவ்வளவு அற்புதமான தோழர்!" என்று மாக்ஸிம் கார்க்கியிடம் கூறினார். மற்ற சகாக்களைவிட மார்ட்டோவிடம் அவர் அதிக அன்பு கொண்டிருந்தார். ஆனால் தம் சொந்த உணர்ச்சிகள் தம் செயல்களில் குறுக்கிட அவர் அனுமதிக்கவில்லை. "நம்மை ஆதரிக்காதவர்கள் நம் எதிரிகள்" என்பதுதான் அவர் சித்தாந்தமென்று மாக்ஸிம் கார்க்கி எழுதினார்.

ஒழுக்கம் பற்றிய எல்லாக் கருத்துக்களும் வர்க்க நலனுக்குப் பயன்படுத்தப்பட வேண்டுமென்று அவர் இடைவிடாமல் பிரசாரம் செய்துவந்தார். "நம் கருத்தில் வர்க்கப் போராட்டத்திற்கு உட்பட்டதுதான் ஒழுக்கம்" என்று இளம் கம்யூனிஸ்ட்டுகளின் கூட்டம் ஒன்றில் பேசுகையில் அவர் சொன்னார்.

மதத்தையும் இதே நிலையில்தான் அவர் வைத்திருந்தார். "மதம் ஓர் அபினி; ஒரு வித ஆத்மீக மது. முதலாளித்துவத்தின் அடிமைகள் வசதியான வாழ்க்கைக்காக மனித ஜாதியை மூழ்கடிக்க இது பயன்படுகிறது" என்று புரட்சிக்கு வெகு காலத்திற்கு முன்பே அவர் எழுதினார்.

லெனின் தம் வாழ்க்கை முழுவதிலும், முதலில் வேத வாக்காகப் பிரசாரம் செய்த கோஷங்களை

பின்னர் மறுத்து வந்திருக்கிறுர். கெரன்ஸ்கிக்கு எதிரான ஒரு கோஷமாக உபயோகிக்க முடிந்தவரையில் அரசியல் நிர்ணய சபையை ஆதரித்தார். ஆனுல் அதே அரசியல் நிர்ணய சபை அவருக்கெதிராக நடந்தபொழுது அதைக் கலைத்துவிட்டார். சோவியத்திலேயே தமக்குப் பெரும்பான்மை இல்லையென்று தோன்றிய பொழுது போல்ஷ்விக் கட்சி சர்வாதிகாரத்தை ஏற்படுத்தினுர். பிறகு அது பாலிட் பீரோ சர்வாதிகாரமாயிற்று. எதிரிகளின் கருத்துக்களை அவர் உடனே புரிந்துகொண்டு, புது நலன்களுக்குப் பயன்படுத்திக் கொண்டார். ஆனுல் பெரும் அளவுக்கு அவர் ஒரே கருத்தை அல்லது நோக்கத்தைத்தான் கடைப்பிடித்தார். புரட்சியையே அவர் தொழிலாகக் கொண்டது முதல், தம் அறிவுக்கு எட்டியவரை பாட்டாளி சர்வாதிகாரத்திற்காகவே அவர் வாழ்க்கையை அர்ப்பணித்தார். ஆனுல் நெசெயேவையும், ட்காசேவையும் போல் லக்ஷியத்திற்கேற்ற முறையை அனுஷ்டிக்க வேண்டுமென்று லெனின் கருதவில்லை. லக்ஷியத்தை நோக்கிச் செல்லும் எல்லா மார்க்கங்களுமே நியாயம் தானென்றும், லக்ஷியமே அதிக முக்கியமென்றும் அவர் கருதினுர். ட்காசெவ்வுக்கும் நெசயேவுக்கும் அவர் அதிக மதிப்புக் கொடுத்தார்.

கம்யூனிஸத்தைச் சோதிக்க ரஷியாவை பிரம்மாண்ட சோதனைக்கூடமாகவே அவர் உபயோகித்தார். ரஷிய மக்களின் உடனடியான நலனை அவர் இரண்டாம் பக்ஷமாகவே மதித்தார். தயை என்பது பூர்ஷ்வா குணமென்று கருதினுர்.

தம் எதிரிகளிடம் அவருக்கு தயை இல்லையென்றுலும், மோசமான அயோக்கியர்கள்கூட அவருக்குப் பயன்படுவார்களென்ருல் அவர்களைச் சகித்துக்கொண்டார். "அரசியலில் தர்மம் என்பதே கிடையாது" என்று அவர் அடிக்கடி சொல்வது வழக்கம்.

பேச்சாளர் என்ற முறையில் பாமர மக்களின் மனேதர்மத்தை அவர் நன்ருக அறிந்திருந்தார். ஜனங்களை இழுக்கும் வாக்கு வன்மை பெற்றிருந்

தார். அவருடைய மனத்தில் அரசியல் உலகம் முழுவதும் பலாத்கார அச்சில்தான் சுழன்றது. முதலில் அதிகாரத்தைக் கைப்பற்றுவது, அதைக் காப்பாற்றிக்கொள்வது, சிவில் உரிமைகளை அழிப்பது பயங்கரச் செயல்கள் புரிவது இவைதான் அவருக்கு நம்பத் தகுந்த முறைகள். இப்படிப் போனால் இறுதி லக்ஷியமாகிய வர்க்க பேதமற்ற சமுதாயம் என்றாவது ஏற்படும்.

அவர் ஏற்படுத்திய இந்த ஆட்சியின் அடக்கு முறை சாதனங்கள் என்றாவது ஒழியும் என்று லெனின் தம் கடைசிக் காலத்தில் எதிர் பார்த்தாரா என்பது தெரியவில்லை.

மார்க்ஸீயத்தை அளவுக்கு மீறி அவர் வெளிப் படுத்தி, பூர்ஷ்வா ஜனநாயகம் அளித்த உரிமைகளைக் கூட அவர் மறுத்துவிட்டார்.

## 22. சாஸனம்

1921-ம் வருஷக் கடைசியில் லெனின் உடல்நிலை மிகவும் சீர்கெட்டுவிட்டது. தூக்கமின்மையும் அசதி யும் அதிகரித்து வருவதாகக் கூறினார். அவருடைய தலைவலி அடிக்கடி வரத் தொடங்கியது. 1922 ஆரம் பத்தில் தலை சுற்றல் வரத் தொடங்கியது. விழாம லிருக்க அருகிலுள்ள பொருளைப் பிடித்துக்கொண்டு நிற்பார்.

டிசம்பர் ஆரம்பத்தில் பாலிட் பீரோ அங்கத்தினர் களுக்கு ஒரு சீட்டு எழுதி வைத்து விட்டு கோர்க்கி கிராமத்தில் இருந்த தம் இல்லத்திற்குச் சென்றார்.

1922-ல் நடந்த கட்சியின் 11-வது மஹாநாடுதான் லெனின் கலந்துகொண்ட கடைசி மஹாநாடு. இந்த மஹாநாட்டிற்குப் பிறகுதான் ஸ்டாலினைக் கம்யூ னிஸ்ட் கட்சியின் பொதுக் காரியதரிசியாக மத்தியக் கமிட்டி தேர்ந்தெடுத்தது.

லெனினைப் பரிசோதிக்க ரஷியாவையும் ஜெர்மனி யையும் சேர்ந்த பிரபல டாக்டர்கள் வரவழைக்கப்பட்

டனர். உடல் கூற்றில் எவ்வித கோளாறும் இல்லையென்று 1922 மார்ச்சில் டாக்டர்கள் கருதினர். ஆனால் மே மாதத்தில் முதல் முறையாக அவருக்கு நோய் கண்டது. சிறிது நேரம் பேச முடியாமல் இருந்தது; வலது கை, வலது கால் ஆகியவற்றின் ஸ்வாதீனத்தையும் இழந்திருந்தார். சில வாரங்களுக்குள் அவரால் பேசவோ நடமாடவோ முடியாமல் போய்விட்டது. அவருடைய அறிவு தெளிவாக இருந்த போதிலும், தம் கருத்தை ஜாடையின் மூலம்கூட வெளியிட அவரால் முடியவில்லை. தம் முடிவு காலம் நெருங்கிவிட்டதா என்று அவர் டாக்டர்களைக் கேட்டார். அவருடைய அந்திய காலம் இன்னும் வரவில்லையென்று டாக்டர்கள் கருதினர்.

லெனினுக்கு வேண்டிய பணி விடைகளை அவருடைய தங்கை மேரியா செய்து வந்தாள். அவர் இடது கையால் எழுதவும் பேசவும் க்ருப்ஸ்காயா போதித்தாள்.

இணையற்ற மன உறுதியினால் லெனின் உடல் சாதாரண நிலையை அடைய அபார முயற்சி செய்தது. எழுத்துடன் ஒலியை இணைக்கும் சக்தியை அவருடைய மூளை இழந்து விட்டிருந்தது. அச்சக்தியை அவர் சிறிது சிறிதாகத் திரும்பப் பெற்றுக் கொண்டிருந்தார். குளிர் காலத்தின் நீண்ட இரவுகளில் அவர் அரைத்தூக்கத்தில் இருப்பார். அது போன்ற சமயங்களில் அவர் சங்கீதம் கேட்க் விரும்பினார். பியாடாகோவ் நன்றாகப் பியானோ வாசிப்பார். அவர் அடிக்கடி அழைக்கப்பட்டு, ஷாபின், ப்ராம்ஸ், பாக் ஆகியவர்களின் இசைகளை வாசிப்பார். சங்கீதம் வாசித்துக் கொண்டிருக்கும் பொழுது லெனின் முகம் முற்றிலும் மாறி விடுவதை அவர் காண்பார். அவர் முகம் அமைதியாகவும் குழந்தையின் தெளிவுடன் காணப்படும். அவர் கண்களில் சூழ்ச்சியின் ஜொலிப்பு இராது.

ஜூலையில் லெனின் மறுபடியும் நடமாடத் தொடங்கினார். புரட்சி சோஷலிஸ்ட் கட்சி மத்தியக் கமிட்டி அங்கத்தினர்களின் விசாரணை அப்பொழுது

நடந்தது. மந்திரிகளின் மீது பயங்கரச் செயல்கள் புரிய திட்டமிட்டதாகவும், 1918-ல் சோவியத் ஆட்சிக் கெதிராகக் கலகம் செய்ய திட்டமிட்டதாகவும் அவர்கள் மீது குற்றம் சாட்டப்பட்டிருந்தது. அந்தத் தலைவர்களில் சிலர் அப்பொழுது முதல் சிறையில் இருந்தனர். சோவியத் கோர்ட் அவர்களுக்கு மரண தண்டனை விதித்தபோது நாடெங்குமிருந்த சோஷலிஸ்ட்டுகளும் சில கம்யூனிஸ்ட்டுகளும் மாக்ஸிம் கார்க்கியும் கூட அதைக் கண்டித்து, தண்டனையை ரத்து செய்ய வேண்டுமென்று வற்புறுத்தினர். ஆனால் இவர்களை நிரந்தரமான பணயக் கைதிகளாக வைத்திருக்க லெனின் முடிவு செய்தார். சோவியத் ஆட்சிக்கு விரோதமாக ஏதாவது காரியங்கள் நடக்குமானல் அவர்கள் சுடப்படுவார்கள். உண்மையில் இது நிறுத்தி வைக்கப்பட்ட மரண தண்டனையே யாகும். தண்டனை பெற்ற கைதிகள் சிறையிலேயே இருந்து வந்தனர். பின்னர் இவர்களை ஸ்டாலின் கொன்ருர்.

இவர்களுடைய விசாரணை சம்பந்தமாக நீதிபரிபாலன இலாகா மந்திரி டி. ஐ. குர்ஸ்கிக்கு லெனின் ஒரு குறிப்பு அனுப்பினுர். அது 1922 மே மாதத்தில் ஆலோசிக்கப்பட்டு வந்த சோவியத் கிரிமினல் சட்டத்தின் ஒரு ஷரத்து சம்பந்தமானது.

“மென்ஷ்விக்குகள், சமூகப் புரட்சி வாதிகள் முதலியவர்களின் நடவடிக்கைகளுக்கு மரண தண்டனையை விஸ்தரிக்க வேண்டுமென்பது என் கருத்து; இந்த நடவடிக்கைகளை யெல்லாம் சர்வதேச பூர்ஷ்வா வர்க்கத்துடனும், நம்மை எதிர்த்து அது நடத்தும் போராட்டத்துடனும் இணைக்க வேண்டும்” என்று லெனின் எழுதினுர்.

இந்தக் குறிப்பு எதிர் காலத்தில் எப்படி உபயோகிக்கப்படுமென்பதை அவர் முன் கூட்டி உணர்ந்திருக்க முடியாது. இது மாஸ்கோ “போல்ஷ்விக்கில்” 1937 ஜனவரி 15-ம் தேதி, ஸோகோல்னிகோவ், ராடேக் முதலிய பழைய போல்ஷ்விக்குகளின் விசாரணைக்கு முன்னுல் பிரசுரிக்கப்பட்டது.

ட்ராட்ஸ்கீய வாதிகள், ஜினேவீவ் ஆதரவாளர்கள் முதலியவர்களுக்கும் இது பொருந்து மென்று வியாக்கி யானம் செய்யப்பட்டது.

லெனினை மீண்டும் மாஸ்கோவுக்கு அழைத்து வரும் அளவுக்கு அவருடைய உடல் நிலை அபிவிருத்தி யடைந்தது. அவர் பகல் 11 மணியிலிருந்து 2 மணி வரையிலும் மாலை 6 மணியிலிருந்து 8 மணி வரையி லும் வேலை செய்ய டாக்டர்கள் அனுமதித்தனர். ஆனால் வாரத்தில் 2 தினங்கள் அவர் ஓய்வு எடுத்துக்கொள்ள வேண்டுமென்று அவர்கள் நிபந்தனை விதித்தனர். பாலிட் பீரோ, ஸோவ்னார்கோம் கூட்டங்களுக்கு அவர் தலைமை வகிக்கத் தொடங்கினர். டெலிபோன் மூலமும், தம்மைக் காணவருபவர்களுடனும் அவர் மணிக் கணக்கில் பேசத் தொடங்கினர். கடிதங்களை யும் கட்டுரைகளையும் வேறு யாராவது எழுத அவர் சொல்லிக் கொண்டு போவார். கம்யூனிஸ்ட் அகிலத் தின் 4-வது கூட்டத்திற்கு வரக்கூட அவர் துணிந் தார். தம்முடன் வழக்கமாக வரும் கோஷ்டியுடன் ஹாலுக்கு வந்தார். நேராக மேடைக்குச் சென்றார். நட வடிக்கைகளைத் தீவிரப்படுத்துமாறு வெளி நாட்டுக் கம்யூனிஸ்டுகளைக் கேட்டுக் கொண்டு, சோவியத் உதவி அளிக்குமென்றும் வாக்குறுதி அளித்தார்.

“எங்களை நம்புங்கள்; எங்களுக்குப் பரந்த தோள் கள் உள்ளன. நீங்கள் ஒற்றுமையுடன் உங்களைத் தயார் செய்து கொள்ளுங்கள், போராட்டத்தைச் சீக் கிரம் ஒப்புக் கொள்ளாதீர்கள்; பலம் தேடிக்கொண்டு பூர்ஷ்வா வர்க்கத்தைத் தாக்குங்கள். உங்களுக்கு வெற்றி கிடைக்குமென்று தோன்றும் பொழுது அதை மார்பில் தாக்குங்கள்” என்று லெனின் கூறி னார்.

பேசிக் கொண்டிருந்தபோதே அவருடைய பலம் குன்றி விடத் தொடங்கியது. அவருடைய குரல் தாழ்ந்தது; பேசி முடித்த போது உடலெல்லாம் வேர்த்துக் கொட்டியது. க்ளாரா ஜெட்கின் ஓடிப்போய்

அவர் கையை முத்தமிட்டாள். லெனின் கண்ணியத்துடன் அதற்கு பதில் கொடுத்தார்.

அவர் அசௌக்கிய முற்றிருந்த போது நடந்த ஒவ்வொரு விஷயத்தையும், அவருக்குப் பணிவிடை செய்த போடியேவா குறித்து வைத்திருந்தார். "இன்று பூரண ஓய்வு எடுத்துக்கொள்ளுமாறு டாக்டர்கள் சிபாரிசு செய்திருக்கின்றனர்'' என்று நவம்பர் 25-ம் தேதி அவள் எழுதியிருந்தாள்.

அன்று முதல் லெனினின் வழக்கமான வேலைகள் நின்று விட்டன. முன்போல் அவ்வளவு பேர் தம்மை வந்து பார்க்கவும் அவர் அனுமதிக்கவில்லை. ஆனால் முன் எப்பொழுதையும் விட ஏராளமாகப் படித்தார்.

லெனின் 1918-ல் சொன்னது போல் சோஷலிஸ்ட் நடைமுறையில் வந்து கொண்டிருப்பதாக இப்பொழுது சொல்லவில்லை. "உலகாயத, பொருளாதார, தொழில் ரீதிகளில் சோஷலிஸத்தின் தலை வாசலுக்குக் கூட நாம் வரவில்லை என்பது தெளிவாகத் தெரியவில்லையா?'' என்று அவர் கேட்டார்.

தனியார் வர்த்தக வளர்ச்சியைத் தடுப்பது "தவறுதலும் தற்கொலைக்கு ஒப்பானதுமாகும்'' என்று கூறி அவர் கண்டித்தார். "வர்த்தகம் செய்யக் கற்றுக் கொள்ளுங்கள்'' என்ற உத்தரவின் மூலம் வைதிகக் கம்யூனிஸ்ட்டுகளுக்கு தர்ம சங்கடம் ஏற்படுத்தினர். நாணயச் செலாவணி முறையை அவர் சீர் படுத்தி வந்தார். "ரூபிளை நாம் ஸ்திரப்படுத்தி விட்டால் நமக்கு வெற்றிதான்'' என்று அவர் கூறினர்.

"கூட்டுப் பண்ணைகள் விஷயத்தில் நாம் பல முட்டாள் தனங்கள் செய்தோம். கூட்டுப் பண்ணை இப்போதைய பிரச்னையல்ல. தனிப்பட்ட விவசாயிகளை நாம் நம்ப வேண்டும். விவசாயி தன் போக்கிலிருந்து சமீபத்தில் மாறப் போவதில்லை. விவசாயிகள் சோஷலிஸ்டுகளல்ல. அவர்களைச் சோஷலிஸ்டுகளாகப் பாவித்து, சோஷலிஸ்டுத் திட்டங்களை வகுப்பது மணலின்மீது கட்டிடம் கட்டுவது போலத்தான்.

விவ்சாயிகளின் மனேபாவத்தையும் பழக்க வழக்கங்களையும் மாற்றுவதற்குப் பல தலைமுறைகள் ஆகும். பலாத்காரம் பயன்படாது. விவசாயிகளின் மனத்தை தார்மீக முறையில் மாற்றுவதுதான் நம் முன் உள்ள பிரச்னே. திறமை வாய்ந்த விவசாயி நம் பொருளாதார மீட்சியின் பிரதான பாத்திரமாக இருக்க வேண்டுமென்ருர் லெனின். (அடிக்கோடுகள் லெனினுல் இடப்பட்டவை.

1922 டிசம்பரில் அவர் 2-ம் முறையாக நோய்வாய்ப் பட்டார். முன்னேவிட இது அதிகக் கடுமையாக இருந்தது. மஹத்தான முயற்சியின்மூலம் அவர் குணமடைந்தார். பூரண ஓய்வு எடுத்துக்கொள்ளுமாறு அவரை டாக்டர்கள் வற்புறுத்தினர். ஒரு மாதத்திற்குப் பிறகு சோவியத் பொருளாதார முறையில் கூட்டுறவு ஸ்தாபனங்களின் ஸ்தானம் பற்றி அவர் ஒரு கட்டுரை எழுதத் தொடங்கினுர். "சோஷலிஸம் என்பது நாகரிகமான கூட்டுறவினங்களின் அமைப்பே. அதில் உற்பத்தி சாதனங்களெல்லாம் சமூக சொத்தாக இருக்கும்" என்று அவர் விளக்கினுர். இதோடு கூடவே, "ரஷியாவில் அரசியல், பொருளாதாரப் புரட்சிகள் கலாசாரப் புரட்சிக்கு முன் வந்துவிட்டன" என்றும் கூறினுர். "பாமர மக்களுக்குப் பண்பை ஊட்டுவதில் தான் இப்பொழுது அதிக கவனம் செலுத்தவேண்டும்" என்ருர். ஒரு மாதத்திற்குப் பின், "முதலில் உண்மையான ஏதாவது பூர்ஷ்வா கலாசாரத்துடன் ஆரம்பிக்கலாம்" என்று அவர் கூறியபோது பலர் திகைத்துப் போயினர்.

இவை அவருடைய கடைசிக் கட்டுரைகள். டிசம்பர் 12-ம் தேதிதான் லெனின் தம் வாழ்க்கையிலேயே கடைசி முறையாக மேஜை அருகே உட்கார்ந்து எழுதினுர்.

சோவியத் மஹாநாட்டில் பேசுவதென்று செய்திருந்த யோசனையை டிசம்பர் 16-ம் தேதி அவர் கைவிட்டார். காரில் பிரயாணம் செய்தால் அலுப்பு

ஏற்படும் என்பதால் அன்று கிராமத்திற்குச் செல்லாமல் நகரிலேயே இருக்கவும் தீர்மானித்தார்.

சிறிது காலத்திற்குள் லெனினை மறுபடியும் நோய் தாக்கியது. கடுமையான நோய்வாய்ப்பட்டிருந்த போதிலும் முடிந்த வரையில் அவர் வேலை செய்தார். மற்றவர்களுக்குத் தம் கருத்தை வெளியிட முடியாமற் போகும் வரை உழைத்தார்.

கட்சியின் காரியதரிசியாகவும், தொழிலாளர், விவசாயிகள் மேற்பார்வை இலாகா மந்திரியாகவும் ஸ்டாலின் நியமிக்கப்பட்ட 2 மாதத்திற்குப் பின் லெனின் அசௌக்கியம் பற்றிய முதல் அறிக்கை "ப்ராவ்தா" பத்திரிகையில் வெளியாயிற்று. அரசியல் அரங்கத்திலிருந்து லெனின் சிறிது சிறிதாக விலகிய பொழுது, ஜிநோவீவ், ட்ராட்ஸ்கி, ஸ்டாலின் ஆகியவர்களுக்கிடையே பதவிப் போட்டி ஏற்பட்டது. ஜிநோவீவ் கம்யூனிஸ்ட் அகிலத்தின் தலைவராகவும், பெட்ரோக்ராட் ஸோவியத்தின் தலைவராகவும் இருந்தார். ட்ராட்ஸ்கி ராணுவப் புரட்சிக் கவுன்சிலின் தலைவராகவும் யுத்த மந்திரியாகவும் இருந்தார். ஸ்டாலின் கட்சியின் பொதுக்காரியதரிசி.

லெனின் தம் தலைமை பதவியைவிட்டபின் ஜிநோவீவ், காமனேவ், ஸ்டாலின் ஆகிய மூவரிடமும் அதிகாரம் சென்றது. இந்த மூவரையும் எதிர்த்து ட்ராட்ஸ்கி பிரசாரம் செய்யத் தொடங்கினார். அவர் வகித்து வந்த புரட்சிக் கவுன்சில் தலைமைப் பதவி கௌரவப் பதவியேயாகும். கட்சியின் பொறுப்பான வேலை ஒன்றும் அவருக்குக் கொடுக்கப்படவில்லை. 1923-ல் நடந்த போல்ஷ்விக் மஹாநாட்டில் ட்ராட்ஸ்கி பேசுகையில், தாம் ஒதுக்கப்படுவதாகவும், தம் சக்திகள் சரியானபடி உபயோகித்துக்கொள்ளப்படவில்லை என்றும் கூறினார்.

சிறிது காலம் வரை போலிட் பீரோவில் ஜிநோவீவ் ஆதிக்கம் செலுத்தினார். மத்தியக் கமிட்டியில் அவருக்

குப் பெரும்பான்மை ஆதரவு இருந்தது. பாலிட் பீரோவில் இருந்த 6 அங்கத்தினர்களில் லெனினைத் தவிர மற்றவர்கள் அனைவரும் ட்ராட்ஸ்கியை எதிர்த்தனர். டாம்ஸ்கியின் பங்கு குறைவு. ஆகையால் ஜினோவீவ், காமனோவ், புகாரின் ஆகியவர்கள் ஸ்டாலினுக்கெதிராகப் பெரும் பான்மையாக இருந்தனர். ஆனால் ஜினோவீவைத் தலைமைப் பதவிக்கு உயர்த்துவது பற்றிப் பாலிட் பீரோவோ, மத்தியக் கமிட்டியோ யோசிக்கவில்லை. கட்சி ஸ்தானங்களிலும் இவர் தம் ஆதரவாளர்களைக் காரியதரிசிகளாக நிறுத்தினார். கட்சியைத் தம் அதிகாரத்தின் கீழ் கொண்டுவர அவர் எதைச் செய்யவும் தயங்கவில்லை.

1922 முடிவுக்குள் லெனின் உடல்நிலை நம்பிக்கைக்கு இடமில்லாமல் மோசமாகிவிட்டது. சர்க்கார் அமைப்பில் ஸ்டாலின் பல மாறுதல்கள் செய்யத் தொடங்கினார். அடுத்த மஹாநாட்டுக்கு அவர் அசாதாரணமான ஏற்பாடுகள் செய்துவந்தாரென்பதை ஸ்டாலினே மறுக்கவில்லை. "மஹாநாட்டுக்கு மத்தியக் கமிட்டி இப்பொழுது செய்வதுபோன்ற ஏற்பாடுகளை சென்ற ஆறு வருஷங்களில் செய்ததில்லை" என்று ஸ்டாலின் கூறினார்.

தாம் இறந்துவிடப் போவதை உணர்ந்த லெனின் 1923 ஜனவரியில் ஓர் அரசியல் சாஸனம் எழுதினார். பல்வேறு போல்ஷ்விக் தலைவர்களையும் அவர் அதில் மதிப்பிட்டு தமக்குப் பின் தலைமைப் பதவியை ஏற்கத் தகுதியானவரைக் கண்டுபிடிக்க முயன்றிருக்கிறார். தலைமைப் பதவியை ஸ்டாலினும் ட்ராட்ஸ்கியும் பகிர்ந்துகொள்ள வேண்டுமென்று அதில் குறிப்பிட்டிருக்கிறார். ஆனால் அது எவ்வளவு தூரம் சாத்தியம் என்பது பற்றியும் சந்தேகம் தெரிவித்திருக்கிறார். இந்தக் கூட்டு சாத்தியமில்லையானால் கட்சியில் பிளவு ஏற்படுமென்று அவர் கருதினார். இதற்குப் பயந்து ஸ்டாலினை பொதுக்காரியதரிசி பதவியிலிருந்தே நீக்கிவிட வேண்டுமென்று லெனின் தம் அரசியல் சாஸனத்தில் கூறியிருக்கிறார்.

" சாஸன,த்தில்" லெனின் கூறியிருப்பதாவது:

"தோழர் ஸ்டாலின் கட்சியின் பொதுக் காரிய தரிசி ஆனதன் மூலம் ஏராளமான அதிகாரத்தைத் தம்மிடம் வைத்துக் கொண்டிருக்கிறார். இந்த அதிகாரத்தை ஜாக்கிரதையுடன் உபயோகிக்க அவருக்குத் தெரியுமென்று நான் நம்பவில்லை. தற்போதைய மத்தியக் கமிட்டியில் ட்ராட்ஸ்கி நான் அதிக திறமை வாய்ந்தவர்.

"இந்த இரு தலைவர்களுக்கு மிடையில் பிளவு ஏற்படலாம். அதைத் தவிர்க்க கட்சி நடவடிக்கை எடுக்க வில்லையானால் எதிர்பாராத விதமாகப் பிளவு ஏற்படும்.

"மத்தியக் கமிட்டியின் மற்ற அங்கத்தினர்களின் குணங்களைப் பற்றி நான் விவரிக்க விரும்பவில்லை. ஜினோவீவ், காமனேவ் ஆகியவர்களுக் கெதிரான அக்டோபர் சம்பவம் தற்செயலாக நேர்ந்ததல்ல வென்பதை மாத்திரம் ஞாபகப் படுத்த விரும்புகிறேன். அவர்களுக்கெதிராக அது உபயோகிக்கப் படக் கூடாது.

"கமிட்டியில் உள்ள இளம் அங்கத்தினர்களில் பியாடாகோவையும் புகாரினையும் பற்றி ஒரு வார்த்தை கூற விரும்புகிறேன். இளைஞர்களுக்குள் இவர்கள் மிகவும் திறமை வாய்ந்தவர்கள். புகாரின் கட்சியின் பெரிய தத்துவ வாதியல்ல.......

"பியாடாகோவ் திறமையிலும் மன உறுதியிலும் சிறந்து விளங்குபவர். ஆனால் நிர்வாக விஷயங்களில் அளவுக்கு மீறி கவனம் செலுத்துபவர். அரசியல் பிரச்னைகளில் அவரை நம்புவதற்கில்லை.

"தற்போதைய நிலைமையைக் கொண்டே நான் இவர்களைப் பற்றி இந்தக் கருத்துக்களைக் கூறுகிறேன். திறமைசாலிகளான இந்த ஊழியர்கள் தங்கள் அறிவை வளர்த்துக் கொண்டு ஒரே திசையில் கவனம் செலுத்தும் தங்கள் போக்கைத் திருத்திக் கொள்ள சந்தர்ப்பம் ஏற்படாது என்ற நம்பிக்கையில் இவற்றைக் கூறுகிறேன்.

டிசம்பர் 25, 1922.

"பின் குறிப்பு: ஸ்டாலின் மிகவும் முரட்டு சுபாவம் உள்ளவர். பொதுக் காரியதரிசிக்கு இந்தக் குறை இருப்பதை ஆதரிக்க முடியாது. ஆகையால் ஸ்டாலினைப் பொதுக் காரியதரிசி பதவியிலிருந்து விலக்கிவிட்டு, அவரைவிட மேலான ஒருவரை அதாவது அவரை விட அதிகப் பொறுமையும் அதிக விசுவாஸமும், அதிக மரியாதையும், தோழர்களின் கருத்துக்களுக்குச் செவி சாய்க்கும் தன்மையும் உள்ளவராகவும், அவரவ்வளவு பேராசை இல்லாதவராகவும் உள்ள ஒருவரை அந்த ஸ்தானத்தில் நியமிக்கக் கட்சி வழிகோல வேண்டும். இது அற்ப விஷயமாகத் தோன்றலாம். ஆனால் பிளவைத் தவிர்ப்பதும், ஸ்டாலினுக்கும் ட்ராட்ஸ்கிக்கு மிடையே இருக்க வேண்டிய உறவும் அற்ப விஷயங்களல்ல. இப்பொழுது அற்ப விஷயங்களாகத் தோன்றினாலும் பின்னர் மிகுந்த முக்கியத்துவம் பெற்றுவிடும்."

ஜனவரி 4, 1923

**1923,** மார்ச் 5-ம் தேதி லெனின் தம் காரியதரிசியை ஒரு குறிப்பு எழுதச் சொன்னார். ஸ்டாலினுடன் தமக்கு இருந்த எல்லா சொந்த நேசமும் தோழமையும் அற்றுவிட்டதாக அந்தக் குறிப்பின் மூலம் அறிவிக்கச் சொன்னார்.

"லெனின் தஸ்தாவேஜுகளுக்குள் கடைசியாக மிஞ்சியுள்ளது இதுதான்" என்று ட்ராட்ஸ்கி கூறினார்."

என்ன நடந்து வந்தது என்பதை லெனின் ஒருவாறு உணர்ந்தார். அவர் யாருடனும் பேசக் கூடாதென்று தடுக்கப்பட்டிருந்ததால் ஒருவரிடமும் தம் கருத்தைச் சொல்ல முடியவில்லை. அதிகாரம் தம் கையை விட்டு நழுவி வருவதாக மாத்திரமின்றி க்ரூப்ஸ்காயாவை ஸ்டாலின் அவமரியாதையாக நடத்தி வந்ததாகவும் லெனின் உணர்ந்தார். இதைக் கண்டு ஆத்திரமடைந்த லெனின், ஸ்டாலினுடன் தம் தோழமை உறவைத் துண்டிப்பதாகக் குறிப்பு எழுதி அனுப்பினார். அதனால் விசேஷம் எதுவும் ஏற்பட

வில்லை. *1923* மார்ச்சில் லெனினுக்கு மூன்றும் முறை யாக வலிப்பு வந்தது.

*1923* மே மாத மத்தியில் அவர் க்ரெம்லினிலிருந்து கடைசியாக கோர்த்தி கிராமத்திற்கு எடுத்துச் செல்லப் பட்டார். அவர் பிழைப்பார் என்ற நம்பிக் கைக்கு இடமில்லை. ஆனால் இருக்கும்வரை அவரை சௌகரியமாக வைத்துக் கொள்வது ஒன்றுதான் செய்யக்கூடியது. ஜூலை மாதக் கடைசியில் அவர் குணமடைவதுபோல் காணப்பட்டார். ஆனால் அவ ருடைய நோய் தன் வழியில் வளர்ந்து கொண்டு வந்தது. மூளை கெட்டு வந்தது.

*1924* ஜனவரி **20**-ம் தேதி நடுநிசியில் அவர் உற் சாகத்துடன் தூங்கச் சென்றார். மறு நாள் காலை **6-50** மணிக்கு கடைசி முறையாக வலிப்பு வந்தது. வலிப்பு மிகவும் கோரமாக இருந்தது. மூச்சுத் திணறி யது; கைகால் இழுப்பும், கடுமையான ஜுரமும் கண் டன. *1924* ஜனவரி **21**-ம் தேதி அவருடைய ஆவி பிரிந்தது.

அவருடைய உடல் தைலமிட்டுப் பாதுகாத்து வைக்கப்பட்டது. மாஸ்கோவிலிருந்து அவருடைய தோழர்கள் வரிசையாக வந்து அவர் உடலைப் பார்த் துச் சென்றனர். ஜனவரி **23**-ம் தேதி அவர் உடல் மாஸ்கோவுக்குக் கொண்டுபோகப்பட்டது. மாஸ்கோ வில் தொழிற் சங்கங்களின் காரியாலயத்தில் அவர் உடல் பொதுமக்களின் தரிசனத்திற்காக வைக்கப்பட் டிருந்தது. லக்ஷக்கணக்கான மக்கள் வந்து தங்கள் இறுதி மரியாதையைத் தெரிவித்தனர்.

லெனின் தன் வாழ்நாள் முழுவதும் மதத்தையும் நரபூஜையையும் எதிர்த்தார். ஆனால் சோவியத் அரசிய லின் நலனுக்காக அவரே ஒரு தெய்வீகப் பிறவியாகப் போற்றப்படுகிறார். அவருடைய வாக்கு வேத வாக் காகக் கருதப்படுகிறது. லெனின் மறைந்தாலும் லெனின் சித்தாந்தம் ஜீவித்திருக்கிறது.

---